# தொல்காப்பியம்

## எழுத்ததிகாரம்

(உரைவிளக்கக் குறிப்புக்களுடன்)





சுன்னாகம்

தனலக்ஷுமி புத்தகசாலை

# தொல்காப்பியம்

## எழுத்ததிகாரம்

ராவ்பகதூர் சி. வை. தா
மோதரம்பிள்ளை அவர்கள்
ஞாபகார்த்த வெளியீடு
க.

கணேசையர் பதிப்பு

# தொல்காப்பியம்

## எழுத்ததிகார மூலமும்

மதுரையாசிரியர் பாரத்துவாசி

நச்சினார்க்கினியருரையும்.

இவை

தமிழ் வித்துவான்

புன்னாலைக்கட்டுவன், பிரமஸ்ரீ சி. கணேசையர்

எழுதிய

உரைவிளக்கக் குறிப்புக்களுடன்

"ஈழகேசரி" அதிபதி

நா. பொன்னையா அவர்களால்

தமது

சுன்னாகம், திருமகள் அழுத்தகத்தில்

பதிக்கப்பட்டன.

1937

PRINTED AT
THE THIRUMAKAL PRESS
CHUNNAKAM



# பொருளடக்கம்


| | | | |
|---|---|---|---|
| பதிப்புரை | | | |
| ராவ்பகதூர் சி. வை. தாமோதரம்பிள்ளை அவர்கள் வரலாற்றுச் சுருக்கம் | .... | .... | ix |
| உரைவிளக்கக்குறிப்பின் முகவுரை | | .... | xiii |
| தொல்காப்பியர் வரலாறு | .... | .... | xvii |
| நச்சினார்க்கினியர் வரலாறு | .... | .... | xx |
| எழுத்ததிகார மூலமும் நச்சினார்க்கினியருரையும், உரைவிளக்கக் குறிப்பும் | | | |
| சிறப்புப்பாயிரம் | .... | .... | க |
| க. நூன்மரபு | .... | .... | உரு |
| உ. மொழிமரபு | .... | .... | சுசு |
| ங. பிறப்பியல் | .... | .... | க00 |
| ச. புணரியல் | .... | .... | கக0 |
| ரு. தொகைமரபு | .... | .... | கசச |
| சு. உருபியல் | .... | .... | கஎங |
| எ. உயிர்மயங்கியல் | .... | .... | ககூஉ |
| அ. புள்ளிமயங்கியல் | .... | .... | உசஎ |
| கூ. குற்றியலுகரப்புணரியல் | .... | .... | ஙகஉ |
| சூத்திர அகராதி | | | |
| உதாரண அகராதி | | | |
| அரும்பதவிளக்கமுதலியன | | | |
| முற்பதிப்புக்களில் விளக்கப்படாத மேற்கோள் விளக்கம் | | | |
| விஷயஅகராதி | | | |
| பிழைதிருத்தம் | | | |
| அநுபந்தம் | | | |

## கடவுள் வணக்கம்

“நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய் நிராமயமாய்
நிறைவாய் நீங்காச்
சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிறை
சுடராய் எல்லாம்
வைத்திருந்த தாரகமாய் ஆனந்த மயமாகி
மனவாக் கெட்டாச்
சித்துருவாய் நின்றவொன்றைச் சுகாரம்பப் பெருவெளியைச்
சிந்தை செய்வாம்”

—தாயுமானசுவாமிகள்.

ஓம்.

# பதிப்புரை

“ஆதியிற் றமிழ்நூ லகத்தியற் குணர்த்திய
மாதொரு பாகனை வழுத்துதும்
போதமெய்ஞ் ஞான நலம்பெறற் பொருட்டே”

செந்தமிழ் இலக்கணநூலாகிய தொல்காப்பியம் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரமென மூன்று அதிகாரங்களை உடையது. அவற்றுள், முன் ஐந்தியலும் நச்சினார்க்கினியர் உரையும், பின் நான்கியலும், பேராசிரியர் உரையுமாயுள்ள பொருளதிகாரத்தையும், சொல்லதிகாரம் நச்சினார்க்கினியர் உரையையும், பல ஏட்டுப் பிரதிகளை ஒப்புநோக்கி ஆராய்ந்து அச்சிற் பதிப்பித்து முதலில் வெளியிட்டவர்கள், யாழ்ப்பாணம் ராவ்பகதூர் சி. வை. தாமோதரம்பிள்ளை B. A., அவர்களே. எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியர் உரை, மழவை மகா வித்துவான் ஸ்ரீமத் மகாலிங்கையர் அவர்களால் முன் அச்சிடப்பட்டதாயினும் பின், தென்னாட்டுப் பிரதிகளோடும், ஒப்பு நோக்கி அச்சிட்டு வெளிப்படுத்தினவர்களும் பிள்ளையவர்களே. இவைகளையன்றி வீரசோழியம் இலக்கண விளக்கம் என்னும் இலக்கண நூல்களையும், தொகை நூல்களில் ஒன்றாகிய கலித்தொகையையும், சூளாமணி, தணிகைப்புராணம் முதலியவற்றையும், முதலில் அச்சிட்டு வெளிப்படுத்தியவர்களும் பிள்ளையவர்களே. இவைகள், இக்காலத்துப் பிறரால் அச்சிட்டு வெளிப்படுத்தப் படுதலின் பிள்ளையவர்கள் தமிழ் நாட்டிற்குச் செய்த அரும் பெருந் தொண்டு எவர்களாலும் மறக்கக் கூடிய நிலைமையை உடையதாயிற்று. ஆதலால் அந்நிலையை ஒழித்து, பிள்ளையவர்கள் தமிழ் உலகிற்குச் செய்த நன்றியையும், அவர்களையும் ஞாபகப்படுத்தற் பொருட்டே இத்தொல் - எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியர் உரையை முன்னர் அச்சிட்டு வெளிப்படுத்தினோம்.

இதனை யாம் அச்சிடுதற்கு முன், எமது எண்ணத்தை முற்றுவிப்பான் விழைந்து, தமிழ்வித்துவான், பிரமஸ்ரீ சி. கணே

சையர் அவர்களிடஞ் சென்று, தொல் - எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியர் உரையை யாம் பதிப்பதாகவும், அவ்வுரைக்கு மாணாக்கர்கள் இடர்ப்பாடின்றிப் படித்தற் பொருட்டு, ஓர் விரிவான விளக்கவுரையைத் தாங்கள் எழுதி உதவின், அதனையும் அவ்வுரையோடு சேர்த்துப் பதிப்பேம் என்பதாகவும் தெரிவித்தேம். அதற்கு அவர்கள் தாம் உடல் நலமில்லாதிருப்பதால் அவ்வாறு செய்ய முடியாதென்றும், "யாம் படித்த காலத்தும், படிப்பித்த காலத்தும், குறித்து வைத்த குறிப்புக்களைத் தருகின்றேம்; அவற்றைக் கொண்டு சென்று, அவ்வுரையோடு சேர்த்துப் பதித்துத் தமிழ் உலகிற்குப் பயன் படுத்துக" என்றுஞ் சொல்லி, அவ்வுரைக் குறிப்புக்களை எமக்கு உதவினார்கள். அவ்வுரைக் குறிப்புக்களும், அவ்வுரையோடு சேர்த்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. அன்றியும் நூலாசிரியர் வரலாறு, உரையாசிரியர் வரலாறு, உதாரண அகராதி, அரும்பதவிளக்கம் முதலியனவற்றின் அகராதி, மேற்கோள் விளக்கம், முதலியவற்றையும் தம் மாணவர்களைக் கொண்டு எழுதுவித்து அவர்களே உதவினார்கள். ஆதலால் இது கணேசையர் அவர்கள் பதிப்பாக எம்மால் வெளியிடப் படுகின்றது.

"கைம்மா றுகவாமற் கற்றறிந்தோர் மெய்வருத்தித்
தம்மா லியலுதவி தாஞ்செய்வார்" என்றாங்கு ஐயர் அவர்கள் செய்தவுதவி எம்மாலன்றித் தமிழ் உலகத்துள்ளார் எவர்களாலும் பெரிதும் போற்றற் குரியதேயாம்.

உடலோம்பும் ஒன்றனையே குறிக்கோளாகக் கொண்ட நமக்கும், பூவுடன் கூடிய நாரும் மணம் பெற்றவாறு போல பல பேரறிஞர்களின் சேர்க்கையால் இப்பெரும் பணியில் ஈடுபடுமாறு அருள் செய்த அருட் பெருஞ் சோதியை — ஆனந்த வாரியை — உண்மைப் பொருளை — ஊக்கமளிப்பானை — எண்ணற்கரியானை — ஏறுடைய பெம்மானை — ஐயாறுடையானை — ஒப்பற்ற கண்ணுதலை — ஓங்காரத்துட்பொருளை — எப்பற்றுமின்றி இறைஞ்சுவதே கடனும்.

"திருமகள் நிலையம்"
மயிலிட்டிதெற்கு,
தாது–தை–க-ம் நாள்

நா. பொன்னையா



ராவ்பகதூர் சி. வை. தாமோதரம்பிள்ளை.

# ராவ்பகதூர் சி. வை. தாமோதரம்பிள்ளை அவர்கள் வரலாற்றுச் சுருக்கம்



இவர், சிறுப்பிட்டி வைரவநாதபிள்ளை குமாரர். 1832-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 12-ந் தேதி பிறந்தவர். தமது 12-ம் வயதில் வட்டுக்கோட்டைச் செமினாரி யெனவழங்கிய பல்கலைக் கழகத்தில் படித்துச் சிறந்த மாணாக்கராக விளங்கினார் தமிழ் நூல்களைக் கல்லூரியிற் படித்ததனோ டமையாது முத்துக்குமாரக் கவிராயரிடமும் முறையே கற்றுணர்ந்தார். ஆங்கிலக் கல்வியறிவையும் வளர்த்து 1857-ம் ஆண்டு முதன்முதல் சென்னைப் பல்கலைக் கழகத்தாரால் நடாத்தப்பட்ட பிரவேச பரீட்சையிற் றேறியதோடு, அடுத்த நான்கு திங்கள் கழித்து இக்கழகத்தினரால் நடாத்தப்பட்ட பீ. ஏ. பரீட்சையிலும் சிறந்த சித்தியடைந்தார்.

பிள்ளையவர்கள் முதலில் 1852-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 23-ந் தேதி கோப்பாய் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் ஆசிரியராயும், பின்பு "தினவர்த்தமானி" எனும் தமிழ் வெளியீட்டின் ஆசிரியராயும், 1857-ம் ஆண்டு கள்ளிக்கோட்டை அரசினர் கல்லூரித் தலைமையாசிரியராயும், சென்னை அரசியல் வரவு செலவுக் கணக்குநிலைய முதல்வராயும், சிறிதுகாலம் வழக்கறிஞராயும், 1887-ம் ஆண்டு தொடக்கம் புதுக்கோட்டைப் பெருமன்றத்து நீதிபதியாயும் கடமைபுரிந்துள்ளார்கள்.

பிள்ளையவர்கள் பல உத்தியோகங்களி லிருந்தும் இடர்ப்பாடு நோக்காது, தமது பிறப்புரிமைத் தமிழ்க் கல்வியைக் கைவிட்டாரில்லை. தமக்குள்ள ஓய்வு நேரம் தமிழுக்குழைக்கும் நேரமென முடிவு செய்து ஒழுகிவந்தார். தலைசிறந்த தமிழ் நூல்கள் பலவும் போற்றுவாரின்றி மறைந்து போவதைக் கண்ணுற்று அவலக்கண்ணீ ருகுத்தார். எங்ஙனமாயினும் தமிழ்நூல்களை அச்சூர்தியேற்ற வேண்டுமெனத் துணிவு கொண்டார். பலவிடங்களில் முயன்று தேடியும் தேடுவித்தும் ஏடுகளைப் பெற்றார். அவை எடுக்கும் போதே ஓரந்தேய்ந்தும், கட்டு

அவிழ்க்கும்போது இதழ் முரிந்தும், ஒற்றை புரட்டும்போது துண்டு துண்டாய்ப் பறந்தும், அறிஞர்கள் மிகவும் கவனத்திற்குரிய நிலையிற் காணப்பட்டன. இத்தகைய நிலைமையினையடைந்த ஏட்டுச் சுவடிகளைத் தம்முள் ஒப்பு நோக்கி, அல்லும் பகலும் உழைத்துச் செப்பஞ் செய்து வெளிப்படுத்துக் காத்தோம்புதலை நோன்பென மேற்கொண்டார். இதன் பயனாக, முதலில் நீதிநெறிவிளக்கவுரையும், பின்னர் 1881-ம் ஆண்டில் வீரசோழியமும், 1883இல் தணிகைப்புராணமும் 1885இல் தொல்காப்பியம் பொருளதிகாரமும், 1887இல் கலித்தொகையும், 1889இல் இலக்கணவிளக்கமும் சூளாமணியும், 1901இல் தொல்: எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியமும் அடுத்தவாண்டில் தொல்: சொல்: நச்சினார்க்கினியமும் அச்செழுத்துச்சுவடியாக நாம் கண்டின்புறக் கிடைத்தன.

தொல்காப்பிய முற்றும் பதிப்பித்த தனிச்சிறப்புப் பிள்ளையவர்கட்கே யுரித்தாதல் கண்டின்புறுக. எழுத்ததிகாரம் முன்னரே மழவை மகாலிங்கையர் அவர்களாற் பதிப்பிக்கப்பட்டதெனினும், எஞ்சிய சிறந்த பாகங்கள் பிள்ளையவர்களாலேயே முதன்முதல் அச்சில் வெளிப்போந்தன. ஏட்டுச் சுவடிகளிருந்தும் அவற்றைப் பயின்ற புலவர்களிருந்தும் தங்கள் பட்டத்திற் கிழுக்குண்டாகுமென் றஞ்சி அழுக்கெழுத்திற்பொறித்து வெளியிடப் பின்னிட்டுக் கரந்திருந்தனர். தான்பெற்ற இன்பம் தமிழுலகம் பெறவேண்டுமென்ற தலைப்பெரு நோக்கொன்றேயுடைய வெற்றிவீரர் பிள்ளையவர்களேயன்றோ யானென்று முன்வந்து தொல்காப்பியத்தைப் பதிப்பித்தலால் தமிழன்னைக்குத் தொன்மையான இயற்றமிழ்ப் பொன்முடியைச் சூட்டி மகிழ்வித்தாராயினர். நட்சத்திரமாலை, ஆதியாகமகீர்த்தனம், ஆரும் ஏழாம் வாசக புத்தகங்கள், கட்டளைக் கலித்துறை, சூளாமணிவசனம், சைவமகத்துவம் முதலிய நூல்கள் பிள்ளையவர்கள் தாமாகவெழுதி யச்சியற்றப்பட்டனவாம்.

பிள்ளையவர்கள் சென்னைப் பல்கலைக்கழகப் பரீட்சகராகவும் கடமை புரிந்து வந்தார்கள். இவர் செய்த நன்மையைப் பாராட்டிச் சென்னை அரசாட்சியார் "ராவ் பகதூர்" எனும் பட்டத்தை யளித்துப் பெருமைப் படுத்தினர்.



'அகநானூறு'' எனும் பனுவலை ஆராய்ந்து வந்தார்கள். ஆனால் தமிழ் மக்கள் இழைத்த தவக்குறையால் 1901-ம் ஆண்டு ஜனவரி மாதம் 1-ந் தேதி தமிழன்னை தலைகுனிய இவ்வுலக வாழ்வை நீத்து இறைவன் திருவடி நீழலிற் குளிர்ந்தனர் இவரை நீத்த கையாற்றுமிகையான் தமிழ்ப் புலவர் பலர் இரங்கற் பாக்களால் தங் துயர்வெப்பத்தை ஒருவாறு ஆற்றுவாராயினர். அவற்றுள் இரு செய்யுளை மாத்திரம் இங்கே குறிப்பிடுகின்றோம்.

மகாமகோபாத்தியாய தக்ஷிணாத்தியகலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் கூறியது:

"தொல்காப் பியமுதலாந் தொன்னூல்க ளைப்பதிப்பித்
தொல்காப் புகழ்மேவி யுய்ந்தபண்பி—னல்காத
தாமோ தரச்செல்வன் சட்டகநீத் திட்டதுன்பை
யாமோ தரமியம்ப வே."

பிள்ளையவர்களை நன்கறிந்தவரும் சிறந்த ஆராய்ச்சி வல்லுநருமாய திரு. வி கோ. சூரியநாராயண சாஸ்திரியார் அவர்கள் கூறியது:

"காமோதி வண்டர் கடிமலர்த்தேன் கூட்டுதல்போ
லாமோது செந்தமிழி னன்னூல் பலதொகுத்த
தாமோ தரம்பிள்ளை சால்பெடுத்துச் சாற்றவெவர்
தாமோ தரமுடையார் தண்டமிழ்ச்செந் நாப்புலவீர்"

# உரைவிளக்கக் குறிப்பின் முகவுரை

இந்நூற் பதிப்பாசிரியர் ஸ்ரீமாந் நா. பொன்னையா அவர்கள் சென்ற வைகாசித் திங்களில் எம்மிடம் வந்து, ராவ்பகதூர் சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கள் பதித்த நூல்களுட் சிலவற்றை அவர்கள் பெயரை ஞாபகப்படுத்தும் பொருட்டுத் தாம் பதிப்பதாகவும், அவைகளுள், தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியருரையே முன்னர்ப் பதிப்பதாகவும், அந் நச்சினார்க்கினியருரைக்குத் தாங்கள் விரிவான ஒரு விளக்கவுரை எழுதி உதவினால் அதனை நச்சினார்க்கினியர் உரையோடு சேர்த்து யாம் பதிப்பேமென்பதாகவுஞ் சொன்னார்கள். அப்பொழுது இதுவே, யாம் எழுதிவைத்த பழைய விளக்கவுரைக் குறிப்புக்கள் வெளிவந்து தமிழ் மக்களுக்கு மரபு மரபாகப் பயன்படுதற்கு ஏற்ற காலம் என்று கருதி, அவர்களை நோக்கி, உடம்பு நலமில்லாமையால் தாங்கள் விரும்பியவாறு புதிதாகவும் விரிவாகவும் ஒரு விளக்கவுரை எழுதுதல் எமக்கு முடியாது; நச்சினார்க்கினியர் உரையில் விளங்காதவற்றிற்கு யாம் முன் எழுதிவைத்த சில குறிப்புக்களிருக்கின்றன; அவற்றைத் தருகின்றோம், தாங்கள் கொண்டு போய் அவ்வுரையோடு அச்சிட்டு வெளிப்படுத்தித் தமிழ் மக்களுக்குப் பயன்படுத்துக என்று கூறி, அவற்றை அவர்களிடம் கொடுத்தேம். அவையே இவையாம்.

இவ் விளக்கவுரைக் குறிப்புக்கள், யாம் படிக்குங் காலத்தில் எமது ஆசிரியர்களாகிய வித்துவசிரோமணி ந. ச. பொன்னம்பலபிள்ளை, சுன்னாகம், அ. குமாரசுவாமிப்புலவர் என்பவர்களிடங் கேட்டுக் குறித்தனவும், யாம் படிப்பிக்குங் காலத்தில் பலமுறை யாராய்ந்து குறித்து வைத்தனவுமாகும்.

இவ் விளக்கவுரைக் குறிப்புக்கள் நச்சினார்க்கினியருரையில் அதிகம் புலப்படாதவற்றிற்கே எழுதப்பட்டுள்ளன. சில பகுதிகள் விளங்கற்கரியனவாயினு மவற்றை, அவர் உதாரணமாகக் காட்டிய சூத்திரங்களையும், உதாரணங்களையும், அவருரைப் போக்கையும், நன்கு ஆராய்ந்து விளக்கியுள்ளேம். குறிப்புள் விளக்காதன அரும்பத விளக்க முதலியன என்பதன்கண்ணும் விளக்கப்பட்டுள்ளன.

யாமெழுதிய இக்குறிப்புக்களெல்லாந் திருத்தமுடையனவென்று எம்மாற் சொல்லுதல் கூடாது. ஏனெனில், முற்கணத்து எமக்குச் சரியாகத் தோன்றியதே பிற்கணத்துப் பிழையாகத் தோன்றுகின்றதாகலின். ஆதலால் இவற்றுள் வரும் பிழையைப் பேரறிஞர் திருத்திக் கொள்வார்களாக. அன்றியும் இவற்றுள் தாங்கண்ட பிழைகளை நேரே எமக்கு அறிவிப்பின் அவற்றை நோக்கி உண்மையென்று கண்டவற்றை அவர்கள் பெயருடனே இரண்டாவது பதிப்பில் வெளியிடுவேம். அதற்கு ஒருபோதும் நாணமாட்டேம். ஏனெனில், சிற்றறிவையே இயற்கையாகவுடைய மக்களுள் யாமும் ஒருவேமாதலின்.

இன்னும் இக்குறிப்புக்களை யாராய்ந்து பிழைகளை எமக்கு அறிவிக்குங்கால், அடிப்பட்டு வந்தமையால் உண்மையாகத் தோன்றுந் தமதுகருத்திலேயே உண்மையெனக் கொண்டு, புதிதாகக் காணப்படும் எங்கருத்தினை இது பிழையென இகழாது எங்கருத்தினையு நன்கு நோக்கி எது வுண்மையென ஆராய்ந்து உண்மையான பிழைகளையே அறிவிப்பதும் பேரறிஞர் கடனாகும். அங்ஙன மறிவிக்குங்கா லிக்குறிப்புத் திருத்தமுற்றுத் தமிழ்மக்களுக்கு மரபு மரபாகப் பயன்படுமென்பதற் கையமேயில்லை.

இவ்வுரைக் குறிப்பிலே சிற்சிலவிடங்களில் எமது அபிப்பிராயமான உரைகளும் உள்ளன. அவற்றை ஆராய்ந்து பொருத்தமாயிற் கொள்ளுமாறும், அன்றேற் றள்ளுமாறும் பேரறிஞர்களை வேண்டிக்கொள்ளுகின்றேம்.

எமக்கு உதவியாளரா யிருந்து யாமெழுதிய இக்குறிப்புக்களைப் பலமுறை படித்துப்பார்த்து, எமது மறதி முதலியவற்றால் நேர்ந்த பிழைகளை எமக்கு அறிவித்தும் சில திருத்தியும் பலவாறு துணை புரிந்த, திருநெல்வேலி ஆசிரியர்கலாசாலைத் தமிழாசிரியரும், சுன்னாகம் அ. குமாரசுவாமிப் புலவரவர்களுக்கு மாணாக்கரும், பண்டிதருமாகிய ஸ்ரீமத் சி. கணபதிப்பிள்ளை அவர்களுக்கும் எமது பேரன்பு என்றும் உரியதாகுக.

இன்னும் இக்குறிப்புகளை அச்சிட்டு வெளிப்படுத்துமாறு பலமுறை ஊக்கப்படுத்தியவர்களும், அச்சிட்டபின் இக்குறிப்புக்



களைப் படித்துப் பார்த்துச் சில திருத்தங்கூறி யுதவியவரும், சுன்னாகம், அ. குமாரசுவாமிப்புலவரவர்களுக்கு மாணாக்கரும், பண்டிதருமாகிய 'வித்தக'ப் பத்திராதிபர், ச. கந்தையபிள்ளை அவர்களுக்கும் எமது பேரன்பு உரியதாகுக.

இவ் விளக்கவுரைக் குறிப்புக்களை பிழைகள் வாராவண்ணம் அச்சிடுதற்கு ஏற்றவாறு நன்கிதாக எழுதியும், உதாரண அகராதி, அரும்பதவிளக்கம் முதலியன என்னுமிவற்றை எழுதியும் உதவிய எமது மாணவர் சிறுப்பிட்டி, தி. சுப்பிரமணியபிள்ளைக்கும் எமது அன்பு உரியதாகுக.

இன்னும், நூலாசிரியர் வரலாறு, உரையாசிரியர் வரலாறு என்பவற்றையும், மேற்கோள்விளக்கம் ஆதியவற்றையும் எழுதி உதவிய மற்றும் மாணவர்களுக்கும் எமது அன்பு உரியதாகுக.

இன்னும், கதம்பமுள நியாயம், வீசிதரங்க நியாயம் என்பவைகளை, தருக்கசங்கிரகத்தின் உரைக்குரையாகிய நீலகண்டீயத்தின் உரைகளை நோக்கி, விளக்கமுற எழுதி உதவிய சுன்னாகம் பிராசீன பாடசாலைச் சமஸ்கிருத வாசிரியரும், சமஸ்கிருத வித்துவானுமாகிய பிரமஸ்ரீ வி. சிதம்பரசாஸ்திரி யவர்களுக்கும் எமது வணக்கம் உரியதாகுக.

இன்னும் இக்குறிப்புக்களை யச்சிட்டு வெளிப்படுத்திய இந்நூற் பதிப்பாசிரியருக்கும் எமது பேரன்பு உரியதாகுக.

புன்னாலைக்கட்டுவன்,
தாது—தை—க.

சி. கணேசையர்,

# தொல்காப்பியர் வரலாறு

தொல்காப்பியமென்னும் இப்பேரிலக்கணநூலைச் செய்த தொல்காப்பியர், சமதக்கினி முனிவர் புதல்வர் என்பதும், இவரியற்பெயர் திரணதூமாக்கினியார் என்பதும் இந்நூற் பாயிரத்துள் "சமதக்கினியாருழைச்சென்று அவர் மகனார் திரணதூமாக்கினியாரை வாங்கிக்கொண்டு," என்று நச்சினார்க்கினியர் கூறுதலானே அறியக்கிடக்கின்றன. இன்னும், அப்பாயிரத்துள் 'தொல்காப்பியன்' என்பதற்குப் 'பழைய காப்பியக் குடியிற் பிறத்தலின் தொல்காப்பியன் என்று பெயராயிற்று' என்று கூறுதலானே காப்பியக் குடியிற் பிறந்தவரென்பதும், சமதக்கினி புதல்வரென்பதனானே அந்தணகுலத்தவரென்பதும் அறியத்தக்கன. சமதக்கினி புதல்வரென்றதனானே பரசுராமர் இவர் சகோதரராவாரென்பதும் பெறப்படும். இராமாயணத்துள்ளே பரசுராமர் இராமரோடு போரை விரும்பிச் சென்று அவருக்குத் தோற்றதாகவும், அவருக்கு மிக முந்தினவராகவும் அறியப்படுதலினாலும், இராமராற் சீதையைத் தேடும்படி அனுப்பப்பட்ட குரங்குப்படை இடைச்சங்க மிருந்த கபாடபுரத்தை யடைந்து சென்றதாக அறியப்படுதலினாலும், இடைச்சங்கப் புலவர்களா யிருந்தோர் அகத்தியருந் தொல்காப்பியரும் முதலாயினோர் என்று இறையனா ரகப்பொருளுரை முதலியவற்றா னறியப்படுதலினாலும், தொல்காப்பியரும் இராமர் காலத்துக்கு மிக முந்தியவரென்பதும், தொல்காப்பியரிருந்து பல்லாயிரம் யாண்டுகள் சென்றனவென்பதும் அறியத்தக்கன. ஆயினும் இக்காலத்துச் சரித்திர ஆராய்ச்சிக்காரருட் சிலர், மூவாயிரம் ஆண்டு என்றும் ஆறாயிரம் ஆண்டு என்றும் இப்படிப் பலவாறாகக் கூறுகின்றனர். தொல்காப்பியப் பொருளதிகாரப் பதிப்பாளர், ராவ்பகதூர் சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கள் அப்பொருளதிகாரப் பதிப்புரையில் பன்னீராயிரம் ஆண்டுகளுக்குக் குறையாதென்று கூறியிருக்கின்றனர். தமிழ் இலக்கிய வரலாறு எழுதிய சுப்பிரமணியபிள்ளையவர்கள் கி. மு. 700 ஆண்டுகளுக்குப் பிற்படாதென்கின்றனர். எவ்வாறு கூறினும் இவர்காலம் 12000 ஆண்டுகளுக்கு மிக முற்படுமன்றிப பிற்படாது.

இனி, இடைச்சங்கத்தார்க்கு இந்நூல் இலக்கணமாக இருந்ததாக அறியப்படுதலானே முதற்சங்கத் திறுதியில் இத்தொல்காப்பியம் இயற்றப்பட்டிருத்தல் வேண்டும் என்பது ஆராய்ந்துணரத் தக்கது.

இவர் வடமொழியையும் நன்கு கற்றவர் என்பது 'ஐந்திர நிறைந்த தொல்காப்பியன்' என்பதனா னறியத் தக்கது. இவர் அகத்தியரோடு தென்னாடு புக்கபின் அவர்பால் செந்தமிழ் இலக்கிய விலக்கணங்களைக் கற்று அவருடைய முதன் மாணாக்கராய் விளங்கினர். அகத்தியர்பால் இவருடன் கற்றவர்கள் அதங்கோட்டாசிரியர் பனம்பாரனார் செம்பூட்சேய் வையாபிகர் அவிநயனார் காக்கைபாடினியார் துராலிங்கர் வாய்ப்பியர் கழாரம்பர் நற்றத்தர் வாமனர் என்னும் பதினொருவருமாவர். தொல்காப்பியர் முதலாகப் பன்னிருவர் அகத்தியர்பால் ஒருங்கு கற்றனர் என்பது,

"மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சான் முனிவரன்
தன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த"

என்னும் புறப்பொருள் வெண்பாமாலைச் செய்யுளானும்,

"வீங்குகட லுடுத்த வியன்கண் ஞாலத்துத்
தாங்கா நல்லிசைத் தமிழ்க்கு விளக்காகென
வானோ ரேத்தும் வாய்மொழிப் பல்புக
ழானாப் பெருமை அகத்திய னென்னு
மருந்தவ முனிவ னாக்கிய முதனூல்
பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்தோர்
நல்லிசை நிறுத்த தொல்காப் பியனும்"

என்னும் பன்னிரு படலச் செய்யுளானு மறியப்படும்.

இவராலியற்றப்பட்ட இத்தொல்காப்பியமென்னும் நூலுக்கு உரைசெய்தோராகத் தெரியப்பட்டவர் இளம்பூரணர், கல்லாடர், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் என்னும் அறுவராவர். சேனாவரையரும் தெய்வச்சிலையாரும் சொல்லதிகாரத்திற்குமாத்திரமே உரை செய்தனர்.



இத்தொல்காப்பியமொன்றே முன்னோரால் எமக்குக் கிடைத்த மிகப் பழையதொரு நிதியாம். இதன்கண் சில சூத்திரங்களுக்குக் கடைச்சங்க நூல்களிற்கூட உதாரணமில்லாமையை நோக்கும்போது இதன் பழைமை எத்துணை என்பதை நாம் அறிந்துகொள்ளலாம். பன்னிரு படலத்துள் ஒரு படலமும் இவராற் செய்யப்பட்டதென்பர். இவரைப்பற்றிய பழைய உண்மைச் சரிதங்கள் கிடையாமையால் இஃது மிகச் சுருக்கி எழுதப்பட்டது என்க.

# நச்சினார்க்கினியர் வரலாறு.

செந்தமிழ்ப் புலமையிற் சிறந்து விளங்கிய உரையாசிரியராகிய நச்சினார்க்கினியர் பாண்டிவளநாட்டிலே மதுராபுரியிலே பிறந்தவர். அஃது, "கரைபெற்றதோர் பஞ்சலட்சணமான" என்னும் பாண்டிமண்டல சதகச் செய்யுளானும், "வண்டிமிர் சோலை மதுரா புரிதனி—லெண்டிசை விளங்க வந்த வாசான்" என்னும் உரைப்பாயிரச் செய்யுளடிகளானுந் தெளிவாகும்.

இவர் பாரத்துவாச கோத்திரத்தவர். பார்ப்பன மரபினர். அஃது, இவர் எழுதிய உரைகளின் இறுதியில், "பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று" எனக் கூறப்பட்டலானும், "மதுரை நச்சினார்க்கினியன் மாமறையோன்" என்னும் உரைப்பாயிரச் செய்யுட்பகுதியானும் உணரப்படும்.

இவர் சமயம் சைவமாகும் "ஒரெழுத்தொருமொழி" (தொல்—மொழிமரபு-கஉ) என்னுஞ் சூத்திரவுரைக்கண், "திருச்சிற்றம்பலம்," "பெரும்பற்றப்புலியூர்" என்னுஞ் சிவஸ்தலங்களின் பெயரைக் குறிப்பிடலானும், தம்முரையகத்துத் திருவாசகம், திருக்கோவையார் முதலிய சைவநூல்களிலிருந்து மேற்கோள் காட்டலானும், திருமுருகாற்றுப்படை யுரையகத்துக் கூறிய சிலபகுதிகளானும் அது துணிதலாகும்.

இவர் தந்தையார் பெயர் இதுவெனத் துணிதற்குத் தக்க ஆதாரம் யாதுமில்லை.

இவர் பெயர் நச்சினார்க்கினியர் என்பதாகும். அது சிவபெருமானுக்குரிய திருநாமங்களுளொன்றாகக் கருதப்படுகிறது. அக்கூற்றிற்கு, "இச்சையான் மலர்கடூவி யிரவொடு பகலுந் தம்மை— நச்சுவார்க் கினியர் போலு நாகவீச் சுரவ னாரே" (திருநா—திருநாகேச்சுரம்—தே.) "நச்சினார்க் கினியாய் போற்றி யெனத்துதி நவிலுங் காலை" (காஞ்சிபுராணம் - சத்ததான-கக) என்பனவாதாரமாம்.

இவர் தமிழ்மொழியை நன்கு கற்றுத் தேறிப் புலமை வாய்க்கப்பெற்றவர். இலக்கண விலக்கியங்களிலன்றி யேனைய கலைகளிலும் நிரம்பியவறிவு படைத்தவர். ஆரியமொழிப் பயிற்சியுமுடையவர் அது, தொல்காப்பிய முதலியவற்றிற்கு இவர் எழுதிய வுரைகளிடையே ஏனைக் கலைகள் சம்பந்தமாக வரும் பகுதிகட்கு எழுதியுள்ள விசேடவுரைகளானும், இன்னும் அவ்வுரையகத்து வேதவேதாங்கங்களிலிருந்து பல பொருள்களையெடுத்துக்காட்டிச் சேறலானும் நன்குதெளிவாகும். இவரைக் கற்பித்தவாசிரியர் யாவரெனத் தெரிந்துகொள்ள முடியவில்லை.

இவர் புதுவதாகத் தாமோர் நூலியற்றியிருப்பதாகத் தெரியவில்லை. இவரின் வாணாள் முழுவதும் பண்டைத்தமிழ் நூல்கட்கு உரையெழுதுவதிலேயே கழிவதாயிற்று. இவரா னுரைகாணப்பட்டன தொல்காப்பியம், பத்துப்பாட்டு, கலித்தொகை, சீவகசிந்தாமணி, குறுந்தொகை யிருபதுசெய்யுள் என்பனவாம். அது, "பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியு—மாரக் குறுந்தொகையு ளைஞ்ஞான்குஞ் - சாரத்—திருத்தகு மாமுனி செய் சிந்தா மணியும்—விருத்திநச்சி னார்க்கினிய மே" என்னு முரைப்பாயிரச் செய்யுளாலறியலாகும்.

இவர் பதசாரமெழுதுவதினும், முடிபுகாட்டுவதினும், விளங்காத பகுதிகளை நன்கு விளக்குவதினும், போதிய மேற்கோள்களை யெடுத்தாளுவதினும், நூலாசிரியரின் கருத்தை யுணர்ந்து உரைகாண்டலினும் ஏனையுரையாசிரியர்களைக் காட்டினும் மிக்க திறமை படைத்தவர். உரையெழுதுவதில் இவரை வடமொழிப் புலவராகிய மல்லிநாதசூரியோடு ஒப்பிட்டுக் கூறுவது மிகவும் பொருத்தமாகும்.

இவர்காலம் கி. பி ஒன்பதாம் நூற்றாண்டாகும். அது, நச்சினார்க்கினிய ருரையகத்து பேராசிரியர் கூற்றை மறுக்கும் பகுதி காணப்படலானும், பேராசிரியருரையகத்து திருநாவுக்கரசுநாயனார் தேவாரமொன்று மேற்கோளாகக் காணப்படலானும், நாயனார் காலம் கி. பி. ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியெனச் சிலாசாஸனங்களாற் றுணியப்பட்டிருத்தலானும், திருமுருகாற்றுப்படை திருமுறைகளுளொன்றாகச் சேர்க்கப்பெற்றகாலம் கி. பி. பத்தாம் நூற்றாண்டின் நடுப்பகுதியாமாகலானும், அந்நூலுரையகத்து இவ்விசேடசெய்தி யாதொன்றுங் கூறப்படாமையானும் எட்டாம் நூற்றாண்டிற்கும் பத்தாம் நூற்றாண்டிற்கு மிடைப்பட்ட காலமே இவர்காலமாதல் கூடுமெனக் கருதப்படலானு மொருவாறு புலனாகும்.

ஓம்

# தொல்காப்பியம்

## எழுத்ததிகாரம்

### நச்சினார்க்கினியம்

---

### சிறப்புப்பாயிரம்

வடவேங்கடந் தென்குமரி
யாயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலி
னெழுத்துஞ் சொல்லும் பொருளு நாடிச்
செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணிப்
புலந்தொகுத் தோனே போக்கறு பனுவ
னிலந்தரு திருவிற் பாண்டிய னவையத்
தறங்கரை நாவி னான்மறை முற்றிய
வதங்கோட் டாசாற் கரிறபத் தெரிந்து
மயங்கா மரபி னெழுத்துமுறை காட்டி
மல்குநீர் வரைப்பி னைந்திர நிறைந்த
தொல்காப் பியனெனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே.

என்பது பாயிரம்.

எந்நூல் உரைப்பினும் அந்நூற்குப் பாயிரம் உரைத்து உரைக்க என்பது இலக்கணம். என்னை ?

‘ ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே. ’

என்றாராகலின்.

பாயிரமென்றது புறவுரையை. நூல்கேட்கின்றான் புறவுரை கேட்கிற் கொழுச்சென்றவழித் துன்னூசி இனிது செல்லுமாறுபோல அந்நூல் இனிது விளங்குதலிற் புறவுரை கேட்டல் வேண்டும். என்னை?

'பருப்பொருட் டாகிய பாயிரங் கேட்டார்க்கு
நுண்பொருட் டாகிய நூல்இனிது விளங்கும்.'

என்றாராகலின்.

அப்பாயிரந்தான் தலையமைந்த யானைக்கு வினையமைந்த பாகன் போலவும் அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் போலவும் நூற்கு இன்றியமையாச் சிறப்பிற்றாயிருந்தன்று, அது கேளாக்காற் குன்று முட்டிய குரீஇப் போலவுங் குறிச்சிபுக்க மான்போலவும் மாணாக்கன் இடர்ப்படுமென்க.

அப்பாயிரம் பொதுவுஞ் சிறப்புமென இருவகைத்து.

அவற்றுட் பொதுப்பாயிரம் எல்லா நூன்முகத்தும் உரைக்கப் படும். அதுதான் நான்கு வகைத்து.

'ஈவோன் றன்மை யீத லியற்கை
கொள்வோன் றன்மை கோடன் மரபென
வீரிரண் டென்ப பொதுவின் றொகையே.'

என்னும் இதனான் அறிக.

ஈவோர் கற்கப்படுவோருங் கற்கப்படாதோருமென இருவகையர். அவருட் கற்கப்படுவோர் நான்கு திறத்தார்.

'மலைநிலம் பூவே துலாக்கோலென் றின்ன
நலைவி னுணர்வுடை யோர்.'

இதனுள்,

'மலையே,
அளக்க லாகாப் பெருமையு மருமையு
மருங்கநுல முடைமையு மேறற் கருமையும்
பொருந்தக் கூறுப பொச்சாப் பின்றி.'

'நிலத்தி னியல்பே நினைக்குங் காலைப்
பொறையு டைமையொடு செய்பாங் கமைந்தபின்
விளைதல் வண்மையும் போய்ச்சார்ந் தோரை
யிடுதலு மெடுத்தலு மின்னண மாக
வியையக் கூறுப வியல்புணர்ந் தோரே.'

'பூவின தியல்பே பொருந்தக் கூறின்
மங்கல மாதலு நாற்ற முடைமையுங்



காலத்தின் மலர்தலும் வண்டிற்கு நெகிழ்தலும்
கண்டோ ருவத்தலும் விழையப் படுதலு
மூவமத் தியல்பி னுணரக் காட்டுப.'

துலாக்கோ லியல்பே தூக்குங் காலை
மிகினுங் குறையினு நில்லா தாகலு
மையந் தீர்த்தலு நடுவு நிலைமையோ
டெய்தக் கூறுப வியல்புணர்ந் தோரே

என நான்கும் கண்டுகொள்க.

இனிக் கற்கப்படாதோரும் நான்கு திறத்தார்.

'கழற்பெய் குடமே மடற்பனை முடத்தெங்கு
குண்டிகைப் பருத்தியோ டிவையென மொழிப.'

இதனுட் * கழற்பெய்குடமாவது கொள்வோனுணர்வு சிறிதாயினுந் தான் கற்றதெல்லாம் ஒருங்குரைத்தல். † மடற்பனை யென்பது பிறரால் கிட்டுதற்கு அரியதாகி இனிதாகிய பயன்களைக் கொண்டிருத்தல். ‡ முடத்தெங்கென்பது ஒருவர் நீர்வார்க்கப் பிறர்க்குப் பயன் படுவதுபோல ஒருவர் வழிபடப் பிறர்க்கு உரைத்தல். § குண்டிகைப் பருத்தியென்பது சொரியினும் வீழாது சிறிது சிறிதாக வாங்கக் கொடுக்குமதுபோலக் கொள்வோனுணர்வு பெரிதாயினுஞ் சிறிது சிறிதாகக் கூறுதல்.

இனி,

'ஈத லியல்பே யியல்புறக் கிளப்பிற்
பொழிப்பே யகல நுட்ப மெச்சமெனப்
பழிப்பில் பல்லுரை பயின்ற நாவினன்
புகழ்ந்த மதியிற் பொருந்து மோரையிற்
றிகழ்ந்த வறிவினன் றெய்வம் வாழ்த்திக்
கொள்வோ னுணர்வகை யறிந்தவன் கொள்வரக்
கொடுத்தன் மரபெனக் கூறினர் புலவர்.'

இதனான் அறிக.

---

* 'பெய்தமுறை யன்றிப் பிறழ வுடன்றருஞ்—செய்தி கழற்பெய் குடத்தின் சீரே.'

† 'தானே தரக்கொளி னன்றித் தன்பால்—மேவிக் கொளக் கொடா விடத்தது மடற்பனை.'

‡ 'பல்வகை யுதவி வழிபடு பண்பி—னல்லோ ரொழித் தல்லோர்க் களிக்குமுடத் தெங்கே.'

§ 'அரிதிற் பெயக்கொண் டப்பொரு டான்பிறர்க்—கெளிதீ வில்லது பருத்திக் குண்டிகை.'

இனிக் கொள்வோருங் கற்பிக்கப்படுவோருங் கற்பிக்கப்படாதோருமென இருவகையர். அவருட் கற்பிக்கப்படுவோர் அறுவகையர்.

அவர்தாம்,

'தன்மக னாசான் மகனே மன்மகன்
பொருணனி கொடுப்போன் வழிபடு வோனே
யுரைகோ ளாளனோ டிவரென மொழிப.'

இவர் தன்மை,

* 'அன்னங் கிளியே நன்னிற நெய்யரி
யானை யானே றென்றிவை போலக்
கூறிக் கொள்ப குணமாண் டோரே.

இதனுன் அறிக.

இனிக் கற்பிக்கப்படாதோர் எண்வகையர்.

'மடிமானி பொச்சாப்பன் காமுகன் கள்வ
னடுநோய்ப் பிணியாள னேருச் சினத்தன்
றடுமாறு நெஞ்சத் தவனுள்ளிட் டெண்மர்
நெடுநூலைக் கற்கலா தார்.'

என இவர்.

இவர் தன்மை,

† 'குரங்கெறி விளங்கா யெருமை யாடே
தோணி யென்றாங் கிவையென மொழிப.'

இதனுன் அறிக

---

* 'பாலு நீரும் பாற்படப்பிரித்த—லன்னத் தியல்பென வறிந்தனர் கொளலே.'

'கிளந்தவா கிளத்தல் கிளியின தியல்பே.'

'எஞ்சிறந் தோய்தற்கு மேற்ப தாத—னன்னிறத் தியல்பென நாடினர் கொளலே.'

'நல்லவை யகத்திட்டு நவைபுறத் திடுவது—நெய்யரி மாண்பென நினைதல்வேண்டும்.'

'குழுவுபடூஉப் புறந்தருதல் குஞ்சரத் தியல்பே.

'பிறந்த வொலியின் பெற்றியோர்ந் துணர்தல்—சிறந்த வானேற்றின் செய்தி யென்ப.'

† 'கல்லா லெறிந்து கருதுபயன் கொள்வோன்—குரங்கெறி விளங்கா யாமெனக் கூறுப.'

'விலங்கி வீழ்ந்து வெண்ணீ ருழக்கிக்—கலங்கல்செய் தருந்தல் காரா மேற்றே.'



இவருட் களங்கடியப்பட்டார்:

'மொழிவ துணராதார் முன்னிருந்து காய்வார்
படிறு பலவுரைப்பார் பல்கா னகுவார்
திரிதரு நெஞ்சத்தார் தீயவை யோர்ப்பார்
கடியப்பட் டாரவையின் கண்'

இனிக் கோடன்மரபு:

'கோடன் மரபு கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடன் முனியான்
முன்னும் பின்னு மிரவினும் பகலினு
மகலா னாகி யன்பொடு கெழீஇக்
குணத்தொடு பழகிக் குறிப்பின் வழிநின்
றுசாற வுணர்ந்தோன் வாவென வந்தாங்
கிருவென விருந்தே யெழெனவெழுந்துச்
சொல்லெனச் சொல்லிச் செல்லெனச் சென்று
பருகுவ னன்ன வார்வத்த னாகிச்
சித்திரப் பாவையி னத்தக வடங்கிச்
செவிவா யாக நெஞ்சுகள னாகக்
கேட்டவை கேட்டவை வல்ல னாகிப்
போற்றிக் கோட லதனது பண்பே.'

எத்திற மாசா னுவக்கு மத்திற
மறந்திற் றிரியாப் படர்ச்சிவழி பாடே

செவ்வன் றெரிகிற்பான் மெய்ந்நோக்கிக் காண்கிற்பான்
பல்லுரையுங் கேட்பான் மிகப்பெரிதுங் காதலான்
றெய்வத்தைப் போல மதிப்பான் றிரிபில்லா
னிவ்வாறு மாண்பு முடையாற் குரைப்பவே
செவ்விதி னூலைத் தெரிந்து.'

'வழக்கி னிலக்கண மிழுக்கின் றறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்த
லாசாற் சார்ந்தவை யமைவரக் கேட்ட
லம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினாதல் வினாயவை விடுத்தலென் றின்னவை
கடனாக் கொளினே மடநனி யிகக்கும்.'

---

'ஒன்றிடை யாரா வுறினுங் குளகு—சென்றுசென் றருந்தல் யாட்டின் சீரே.'

'நீரிடை யன்றி நிலத்திடை யோடாச்—சீருடை யதுவே தோணி யென்ப.'

'அனைய னல்லோன் கேட்குவ னாயின்
வினையி னுழப்பொடு பயன்றலைப் படாஅன்'

'அனைய னல்லோ னம்மர பில்லோன்
கேட்குவ னாயிற் கொள்வோ னல்லன்.'

இவற்றான் உணர்க.

இம்மாணாக்கன் முற்ற உணர்ந்தானாமாறு,

'ஒருகுறி கேட்போ னிருகாற் கேட்பிற்
பெருக நூலிற் பிழைபா டிலனே.'
முக்காற் கேட்பின் முறையறிந் துரைக்கும்.

ஆசா னுரைத்த தமைவரக் கொளினுங்
காற்கூ றல்லது பற்றல னாகும்.'

'அவ்வினை யாளரொடு பயில்வகை யொருபாற்
செவ்விதி னுரைப்ப வவ்விரு பாலு
மையறு புலமை மாண்புநனி யுடைத்தே.'

'பிறர்க்குரை யிடத்தே நூற்கலப் பாகுந்
திறப்பட வுணருந் தெளிவி னோர்க்கே.'

இவற்றான் அறிக.

பொதுப்பாயிரம் முற்றிற்று.

இனிச் சிறப்புப்பாயிரமாவது தன்னால் உரைக்கப்படும் நூற்கு இன்றியமையாதது. அது பதினொருவகையாம்.

'ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோ டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே.'

'காலங் களனே காரண மென்றிம்
மூவகை யேற்றி மொழிநரு முளரே.'

இப்பதினொன்றும் இப்பாயிரத்துள்ளே பெறப்பட்டன.

இனிச் சிறப்புப்பாயிரத் திலக்கணஞ் செப்புமாறு,

'பாயிரத் திலக்கணம் பகருங் காலை
நூனுதல் பொருளைத் தன்னகத் தடக்கி
யாசிரிய மானும் வெண்பா வானு
மருவிய வகையா னுவறல் வேண்டும்.'

இதனான் அறிக.



நூல்செய்தான் பாயிரஞ் செய்தானாயிற் றன்னைப் புகழ்ந்தானாம்.

'தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினுந்
தான்றற் புகழ்த றகுதி யன்றே.'

என்பவாகலின்.

பாயிரஞ்செய்வார் தன் ஆசிரியருந் தன்னோடு ஒருங்குகற்ற ஒருசாலை மாணாக்கருந் தன் மாணாக்கருமென இவர். அவருள் இந்நூற்குப் பாயிரஞ் செய்தார் தமக்கு ஒருசாலை மாணாக்கராகிய பனம்பாரனார்.

**இதன் பொருள்:** வடவேங்கடந் தென்குமரி ஆயிடை—வடக்கின்கண் வேங்கடமுந் தெற்கின்கட் குமரியுமாகிய அவ்விரண் டெல்லைக்குள்ளிருந்து, தமிழ் கூறும் நல் உலகத்து வழக்குஞ் செய்யுளும் ஆ இருமுதலின்—தமிழைச் சொல்லும் நல்லாசிரியரது * வழக்குஞ் செய்யுளுமாகிய அவ்விரண்டையும் அடியாகக் கொள்ளுகையினாலே, செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு முந்துநூல் கண்டு—அவர் கூறுஞ் செந்தமிழ் இயல்பாகப் பொருந்திய செந்தமிழ்நாட்டிற்கு இயைந்த வழக்கோடே முன்னையிலக்கணங்கள் இயைந்தபடியை முற்றக்கண்டு, முறைப்பட எண்ணி—அவ்விலக்கணங்க ளெல்லாஞ் சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினோர்க்கு அறியலாகாமையின் யான் இத்துணை வரையறுத்து உணர்த்துவலென்று அந்நூல்களிற் கிடந்தவாறன்றி அதிகார முறையான் முறைமைப்படச் செய்தலை எண்ணி, எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடி—அவ்விலக்கணங்களுள் எழுத்தினையுஞ் சொல்லினையும் பொருளினையும் ஆராய்ந்து, போக்கு அறுபனுவல்—பத்துவகைக் குற்றமுந் தீர்ந்து முப்பத்திரண்டு வகை உத்தியொடு புணர்ந்த இந்நூலுள்ளே, மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டிப் புலந்தொகுத்தோனே—அம்மூவகையிலக்கணமும் மயங்காமுறைமையாற் செய்கின்றமையின் எழுத்திலக்கணத்தை முன்னர்க் காட்டிப் பின்னர் ஏனை யிலக்கணங்களையுந் தொகுத்துக் கூறினான், நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து—மாற்றாரது நிலத்தைக் கொள்ளும் போர்த் திருவினை

* சிவஞானமுனிவர், வழக்கினையுஞ் செய்யுளினையும் ஆராய்ந்த பெரிய காரணத்தானே' என உரைகூறி 'நச்சினார்க்கினியார் முதலென்பதனைப் பெயரடியாற்பிறந்த முதனிலைவினைப் பெயராகக் கொண்டு முதலுதலினாலென உரைப்பர்; இருமுதலென்னுந் தொகைச்சொல் அங்ஙனம் பகுத்தல் பொருந்தாமை அறிக' எனத் **தொல்காப்பியச் சூத்திரவிருத்தியுட்** கூறியது காண்க.

யுடைய பாண்டியன் மாகீர்த்தி அவையின்கண்ணே, அறங்கரை நாவின் நான்மறை முற்றிய அதங்கோட்டாசாற்கு அரில் தபத் தெரிந்து—அறமேகூறும் நாவினையுடைய நான்கு வேதத்தினையும் முற்ற அறிந்த அதங்கோடென்கிற ஊரின் ஆசிரியனுக்குக் குற்றமற ஆராய்ந்துகூறி, மல்குநீர்வரைப்பின் ஐந்திரம்நிறைந்த தொல்காப்பியனெனத் தன் பெயர் தோற்றி—கடல் சூழ்ந்த உலகின்கண்ணே ஐந்திரவியாகரணத்தை நிறைய அறிந்த பழைய காப்பியக் குடியினுள்ளோனெனத் தன்பெயரை மாயாமல் நிறுத்தி, பல்புகழ் நிறுத்த படிமையோனே—பல புகழ்களையும் இவ்வுலகின்கண்ணே மாயாமல் நிறுத்திய தவவேடத்தையுடையோன்; என்றவாறு.

இருந்து தமிழைச் சொல்லும் என்க; கொள்ளுநகையினாலே பொருந்திய நாடு என்க; கண்டு எண்ணி ஆராய்ந்து தன்னூலுள்ளே தொகுத்தான், அவன் யாரெனின் அவையின்கண்ணே கூறி உலகின்கண்ணே தன் பெயரை நிறுத்திப் புகழை நிறுத்திய படிமையோன் என்க.

இப்பாயிரமுஞ் செய்யுளாதலின் இங்ஙனம் மாட்டுறுப்பு நிகழக் கூறினார். இதற்கு இங்ஙனங் கண்ணழித்தல் * உரையாசிரியர் கருத்தென்பது அவருரையான் உணர்க.

இனி மங்கலமரபிற் காரியஞ்செய்வார் வடக்குங் கிழக்கும் நோக்கியுஞ் சிந்தித்தும் நற்கருமங்கள் செய்வாராதலின் மங்கலமாகிய வடதிசையை முற்கூறினார், இந்நூல் நின்று நிலவுதல் வேண்டி. தென்புலத்தார்க்கு வேண்டுவன செய்வார் தெற்கும் மேற்கும் நோக்கியுங் கருமங்கள் செய்வாராதலின் தென்றிசையைப் பிற்கூறினார். நிலங்கடந்த நெடுமுடியண்ணலை நோக்கி உலகந் தவஞ்செய்து வீடு பெற்ற மலையாதலானும் எல்லாரானும் அறியப்படுதலானும் வேங்கடத்தை எல்லையாகக் கூறினார். குமரியுந் தீர்த்தமாகலின் எல்லையாகக் கூறினார். இவ்விரண்டினையுங் காலையே ஓதுவார்க்கு நல்வினையுண்டாமென்று கருதி இவற்றையே கூறினார். இவையிரண்டும் அகப்பாட்டெல்லையாயின. என்னை ? குமரியாற்றின் தெற்கு நாற்பத்தொன்பது நாடு கடல்கொண்டதாகலின். கிழக்கும் மேற்குங் கடலெல்லையாக முடிதலின் வேறெல்லை கூறாராயினார். வேங்கடமுங் குமரியும் யாண்டைய என்றால் வடவேங்கடந் தென்குமரியென வேண்டுதலின் அதனை விளங்கக் கூறினார்.

---

* உரையாசிரியரென்றது தொல்காப்பியத்திற்கு முதன்முதல் உரை செய்த இளம்பூரண அடிகளை.



உலகமென்றது பலபொருளொருசொல்லாகலின் ஈண்டு உயர்ந்தோரை யுணர்த்திற்று, உலகம் அவரையே கண்ணாகவுடைமையின். என்னை ?

> ‘வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே
> நிகழ்ச்சி அவர்கட் டாக லான.’ (மரபியல்-கூ௨)

என மரபியலுட்கூறுதலின். அவ்வுயர்ந்தோராவார் அகத்தியனாரும் மார்க்கண்டேயருந் தலைச்சங்கத்தாரும் முதலாயினோர். உலகத்து உலகத்தினுடைய என விரிக்க.

வழக்காவது சிலசொற் பிறந்த அக்காலத்து இஃது அறத்தை உணர்த்திற்று, இது பொருளை உணர்த்திற்று, இஃது இன்பத்தை உணர்த்திற்று, இது வீட்டை உணர்த்திற்று என்று உணர்விப்பது.

செய்யுளாவது ‘பாட்டுரைநூலே’ (செய்யு-எ௮) என்னுஞ் செய்யுளியற் சூத்திரத்தாற் கூறிய ஏழு நிலமும் அறமுதலிய மூன்றுபொருளும் பயப்ப நிகழ்வது. முதலினென்றது முதலுகையினாலே என்றவாறு.

எழுத்தென்றது யாதனையெனின், கட்புலனாகாஉருவுங் கட்புலனாகிய வடிவுமுடைத்தாக வேறுவேறு வகுத்துக்கொண்டு தன்னையே உணர்த்தியுஞ் சொற்கு இயைந்தும் நிற்கும் ஓசையையாம். கடலொலி சங்கொலி முதலிய ஓசைகள் பொருளுணர்த்தாமையானும் முற்கு வீளை இலதை முதலியன பொருளுணர்த்தினவேனும் எழுத்தாகாமையானும் அவை ஈண்டுக்கொள்ளாராயினர். ஈண்டு உருவென்றது மனனுணர்வாய்நிற்குங் கருத்துப்பொருளை. அது செறிப்பச்சேறலானுஞ் செறிப்ப வருதலானும் இடையெறியப்படுதலானும் இன்பதுன்பத்தை யாக்கலானும் உருவுமுருவுங்கூடிப் பிறத்தலானும் உந்திமுதலாகத்தோன்றி எண்வகை நிலத்தும் பிறந்து கட்புலனாந் தன்மையின்றிச் செவிக்கட் சென்று உறும் ஊறுடைமையானும் விசும்பிற் பிறந்து இயங்குவதோர் தன்மையுடைமையானுங் காற்றின் குணமாவதோர்உருவாம். வன்மை மென்மை இடைமை கோடலானும் உருவேயாயிற்று. இதனைக் காற்றின் குணமேயென்றல் இவ்வாசிரியர் கருத்து. இதனை விசும்பின் குணமென்பாரும் உளர். இவ்வுரு ‘உருவுருவாகி’ (எழு-கஎ) எனவும் ‘உட்பெறுபுள்ளி யுருவாகும்மே’ (எழு-கச) எனவுங் காட்சிப் பொருட்குஞ் சிறுபான்மை வரும். வடிவாவது கட்புலனாகியே நிற்கும். அது வட்டஞ் சதுரம் முதலிய முப்பத்திரண்டனுள் ஒன்றை உணர்த்தும். மனத்தான் உணரும் நுண்ணுணர்வில்லோரும் உணர்தற்கு எழுத்துக்கட்கு வேறு வேறு வடிவங்காட்டி எழுதப்பட்டு நடத்தலிற் கட்புலனாகிய வரிவடிவும் உடையவாயின. இதற்குவிதி ‘உட்பெறுபுள்ளி யுருவாகும்மே’ (எழு-கச) என்னுஞ் சூத்திரம் முதலியனவாம். இவற்றுட் பெரும்பான்மை மெய்க்கே வடிவு கூறினார். ‘எகர

ஓகாரத் தியற்கையு மற்றே' (எழு-௧௬) என உயிர்க்குஞ் சிறுபான்மை வடிவு கூறினர்.

இலித் தன்னை உணர்த்தும் ஓசையாவது தன் பிறப்பையும் மாத்திரையையுமே அறிவித்துத் தன்னைப்பெற நிகழும் ஓசை.

சொற்கு இயையும் ஓசையாவது ஓரெழுத்தொருமொழி முதலிய வாய் வரும் ஓசை.

இனிச் சொல்லென்றது யாதனையெனின், எழுத்தினான் ஆக்கப்பட்டு இருதிணைப்பொருட்டன்மையையும் ஒருவன் உணர்தற்குநிமித்தமாம் ஓசையை. இவ்வுரைக்குப்பொருள் சொல்லதிகாரத்துட் கூறுதும். ஈண்டு 'டறலள' (எழு-௨௩) என்றாற் சூத்திர முதலியவற்றான் மொழியாக மயங்குகின்றனவும் அவ்வாக்கத்தின்கண் அடங்குமென்று உணர்க. எழுத்துச் சொற்கு அவயவமாதலின் அதனை முற்கூறி அவயவியாகிய சொல்லைப் பிற்கூறினர்.

இனிப் பொருளென்றது யாதனையெனின் சொற்றொடர் கருவியாக உணரப்படும் அறம் பொருளின்பமும் அவற்றது நிலையும் நிலையாமையுமாகிய அறுவகைப்பொருளுமாம். அவை பொருளதிகாரத்துட் கூறுதும்.

வீடு கூறாரோவெனின், அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் வீடுபேற்றிற்கு நிமித்தங் கூறுதலன்றி வீட்டின்தன்மை இலக்கணத்தாற் கூறாரென் றுணர்க. அஃது,

> 'அந்நிலை மருங்கி னறமுத லாகிய
> மும்முதற் பொருட்கு முரிய வென்ப.' (செய்யு-௧0௬)

என்பதனான் உணர்க. இக்கருத்தானே வள்ளுவனாரும் முப்பாலாகக் கூறி மெய்யுணர்தலான் வீடுபேற்றிற்கு நிமித்தங் கூறினார்.

செந்தமிழ் செவ்வியதமிழ்.

முந்துநூல் அகத்தியமும் மாபுராணமும் பூதபுராணமும் இசைநுணுக்கமும். அவற்றுட் கூறிய இலக்கணங்களாவன எழுத்துச் சொற்பொருள் யாப்பும் சந்தமும் வழக்கியலும் அரசியலும் அமைச்சியலும் பார்ப்பனவியலுஞ் சோதிடமும் காந்தருவமுங் கூத்தும் பிறவுமாம்.

புலமென்றது இலக்கணங்களை.

பனுவலென்றது அவ்விலக்கணங்களெல்லாம் அகப்படச் செய்கின்றதோர் குறியை. அவை இதனுட் கூறுகின்ற உரைச் சூத்திரங்களானும் மரபியலானும் உணர்க.

பாண்டியன் மாகீர்த்தி இருபத்துநாலாயிரம் யாண்டு வீற்றிருந்தானாதலின் அவனும் அவன் அவையிலுள்ளோரும் அறிவுமிக்கிருத்த



லின் அவர்கள் கேட்டிருப்ப அதங்கோட்டாசிரியர் கூறிய கடாவிற்கெல்லாங் குற்றந்தீர விடைகூறுதலின் 'அரிறப' என்றார்.

அகத்தியனார் அதங்கோட்டாசிரியரை நோக்கி 'நீ தொல்காப்பியன்செய்த நூலைக் கேளற்க' வென்று கூறுதலானும், தொல்காப்பியனாரும் பல்காலுஞ்சென்று 'யான் செய்த நூலை நீர் கேட்டல் வேண்டும்' என்று கூறுதலானும், இவ்விருவரும் வெகுளாமல் இந்நூற்குக் குற்றங் கூறிவிடுவலெனக் கருதி அவர் கூறிய கடாவிற்கெல்லாம் விடைகூறுதலின் 'அரிறபத் தெரிந்து' என்றார்.

அவர் கேளன்மினென்றதற்குக் காரண மென்னையெனின், தேவரெல்லாருங்கூடி யாஞ் சேரவிருத்தலின் மேருத் தாழ்ந்து தென்றிசை உயர்ந்தது, இதற்கு அகத்தியனாரே ஆண்டிருத்தற் குரியரென்று அவரை வேண்டிக்கொள்ள, அவருந் தென்றிசைக்கட் போதுகின்றவர் கங்கையாருழைச்சென்று காவிரியாரை வாங்கிக்கொண்டு, பின்னர் யமதக்கினியாருழைச்சென்று அவர் மகனார் திரணதூமாக்கினியாரை வாங்கிக்கொண்டு, புலத்தியனாருழைச்சென்று அவருடன்பிறந்த குமரியார் உலோபா முத்திரையாரை அவர் கொடுப்ப நீரேற்று இரீஇப், பெயர்ந்து, துவராபதிப்போந்து நிலங்கடந்த நெடுமுடியண்ணல்வழிக் கண் அரசர் பதினெண்மரையும் பதினெண்கோடி வேளிருள்ளிட்டாரையும் அருவாளரையுங்கொண்டு போந்து, காடுகெடுத்து நாடாக்கிப் பொதியின்கணிருந்து, இராவணனைக் கந்தருவத்தாற் பிணித்து, இராக்கதரை ஆண்டு இயங்காமை விலக்கித் திரணதூமாக்கினியாராகிய தொல்காப்பியனாரை நோக்கி, 'நீ சென்று குமரியாரைக் கொண்டு வருக' வெனக்கூற, அவரும் எம் பெருமாட்டியை எங்ஙனங் கொண்டு வருவலென்றார்க்கு 'முன்னாகப் பின்னாக நாற்கோல்நீளம் அகலநின்று கொண்டுவருக'வென அவரும் அங்ஙனங் கொண்டு வருவழி, வையைநீர்கடுகிக் குமரியாரை ஈர்த்துக்கொண்டுபோகத், தொல்காப்பியனார் கட்டளை யிறந்துசென்று ஓர் வெதிர்ங்கோலை முறித்து நீட்ட, அதுபற்றியேறினார்; அது குற்றமென்று அகத்தியனார் குமரியாரையுந் தொல்காப்பியனாரையுஞ் 'சுவர்க்கம் புகாப்பிர்' எனச் சபித்தார்; 'யாங்கள் ஒருகுற்றமுஞ் செய்யாதிருக்க எங்களைச் சபித்தமையான் எம்பெருமானுஞ் சுவர்க்கம் புகாப்பிர்' என அவர் அகத்தியனாரைச் சபித்தார். அதனான் அவர் வெகுண்டாராதலின் அவன் செய்த நூலைக் கேளற்க வென்றாரென்க.

நான்கு கூறுமாய் மறைந்த பொருளும் உடைமையான் 'நான்மறை' யென்றார். அவை தைத்திரியமும் பௌடிகமுந் தலவகாரமுஞ் சாமவேதமுமாம், இனி இருக்கும் யசுவும் சாமமும் அதர்வணமுமென்பாரு முளர். அது பொருந்தாது; இவர் இந்நூல் செய்தபின்னர் வேதவியாதர் சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினோர் உணர்தற்கு நான்கு கூறாக இவற்றைச் செய்தாராதலின்.

முற்கூறிய நூல்கள்போல எழுத்திலக்கணமுஞ் சொல்லிலக்கணமும் மயங்கக் கூறுது வேறோர் அதிகாரமாகக் கூறினுரென்றற்கு 'எழுத்து முறைகாட்டி' யென்றார்.

வரைப்பின் கண்ணே தோற்றி நிறுத்தவென்க.

இந்திரனுற் செய்யப்பட்டது ஐந்திர மென்றுயிற்று.

பல்புகழாவன, ஐந்திரநிறைதலும் அகத்தியத்தின்பின் இந்நூல் வழங்கச் செய்தலும் அகத்தியனுரைச் சபித்த பெருந்தன்மையும் ஐந்தீ நாப்பண் நிற்றலும் நீர்நிலை நிற்றலும் பிறவுமாகிய தவத்தான் மிகுதலும் பிறவுமாம்.

படிமை தவவேடம்.

'வடவேங்கடந் தென்குமரி' என்பது கட்டுரை வகையான் எண்ணெடு புணர்ந்த சொற்சீரடி. 'ஆயிடை' என்பது வழியசைபுணர்ந்த சொற்சீரடி. 'தமிழ்கூறு நல்லுலகத்து' என்பது முட்டடியின்றிக் குறைவு சீர்த்தாய சொற்சீரடி. இங்ஙனஞ் சொற்சீரடியை முற்கூறினர், சூத்திர யாப்பிற்கு இன்றியமையாமை பிறத்தற்கு. என்னை? 'பாஅ வண்ணஞ், சொற் சீர்த் தாகி நூற்பாற் பயிலும்' (செய்யுளியல்-உகரு) என்றலின். ஏனையடிகளெல்லாஞ் செந்தூக்கு.

வடவேங்கடந் தென்குமரியெனவே எல்லையும், எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடியெனவே நுதலியபொருளும் பயனும் யாப்பும், முந்துநூல் கண்டெனவே வழியும், முறைப்பட வெண்ணியெனவே காரணமும், பாண்டிய னவயத்தெனவே காலமுங் களனும், அரிறபத் தெரிந்தெனவே கேட்டோரும், தன்பெயர் தோற்றியெனவே ஆக்கியோன்பெயரும் நூற்பெயரும் பெறப்பட்டன.

தொல்காப்பியமென்பது மூன்று உறுப்படக்கிய பிண்டம். பொருள் கூறவே அப்பொருளைப் பொதிந்த யாப்பிலக்கணமும் அடங்கிற்று. நூறு கரணங்கொணர்ந்தானென்றால் அவை பொதிந்த கூறையும் அவையென அடங்குமாறுபோல.

இனி, இவ்வாறன்றிப் பிறவாறு கண்ணழிவு கூறுவாரும் உளராலெனின், வேங்கடமுங் குமரியும் எல்லையாகவுடைய நிலத்திடத்து வழங்குந் தமிழ்மொழியினைக்கூறும் நன்மக்கள் வழக்குஞ் செய்யுளுமென்றுற் செந்தமிழ் நாட்டைச் சூழ்ந்த கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டினும் வழங்குந் தமிழ்மொழியினைக் கூறுவாரை நன்மக்களென்றுரென்று பொருடருதலானும், அவர் கூறும் வழக்குஞ் செய்யுளுங் கொண்டு எழுத்துஞ் சொல்லும் பொருளும் ஆராய்தல் பொருந்தாமையானும், அவர்கூறும் வழக்குஞ் செய்யுளுமாகிய இருகாரணத்தானும் எழுத்துஞ் சொல்லும் பொருளும் ஆராய்ந்தாரெனின் அகத்தியர்க்கு மாருகத் தாமும் முதனூல் செய்தாரென்னும் பொருடருதலானும், அங்



ஙனங் கொடுந்தமிழ்கொண்டு இலக்கணஞ் செய்யக் கருதிய ஆசிரியர் குறைபாடுடையவற்றிற்குச் செந்தமிழ் வழக்கையும் முந்துநூலையும் ஆராய்ந்து முறைப்பட எண்ணினுரெனப் பொருடருதலானும் அது பொருளன்மை உணர்க.

இன்னும் முந்துநூல்கண்டு முறைப்படவெண்ணி யென்றதனுனே முதல்வன் வழிநூல் செய்யுமாற்றிற்கு இலக்கணங் கூறிற்றிலனேனும் அவன் நூல்செய்த முறைமைதானே பின்பு வழிநூல் செய்வார்க்கு இலக்கணமா மென்பது கருதி இவ்வாசிரியர் செய்யுளியலிலும் மரபியலிலும் அந்நூல் செய்யும் இலக்கணமும் அதற்கு உரையுங் காண்டிகையுங் கூறும் இலக்கணமுங் கூறிய அதனையே ஈண்டுங் கூறினுரென்று உணர்க. அவை அவ்வோத்துக்களான் உணர்க.

'யாற்ற தொழுக்கே தேரைப் பாய்வே
சீய நோக்கே பருந்தின் வீழ்வென்
றுவகை நான்கே கிடக்கை முறையே.'

'பொழிப்பே யகல நுட்ப மெச்சமெனப்
பழிப்பில் சூத்திரம் பன்ன ஞன்கே.'

'அவற்றுள்
பாடங் கண்ணழி வுதாரண மென்றிவை
நாடித் திரிபில வாகுதல் பொழிப்பே.'

'தன்னூன் மருங்கினும் பிறநூன் மருங்கினுந்
துன்னிய கடாவின் புறந்தோன் றும்விகற்பம்
பன்னிய வகல மென்மனர் புலவர்.'

'ஏதுவி னுங்கவை துடைத்த னுட்பம்.'

'துடைத்துக் கொள்பொரு ளெச்ச மாகும்.

'அப்புல மரிறப வறிந்து முதனூற்
பக்கம் போற்றும் பயன்றெரிந் துலகந்
திட்ப முடைய தெளிவர வுடையோ
னப்புலம் படைத்தற் கமையு மென்ப.'

'சூத்திர முரையென் றுயிரு திறத்தினும்
பாற்படத் தோற்றல் படைத்த லென்ப
நூற்பய னுணர்ந்த நுண்ணி யோரே.'

இவற்றை விரித்து உரைக்க.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

# உரை விளக்கக் குறிப்பு

## பொதுப்பாயிரம்

முகம் - உறுப்பு. பனுவல் - நூல். கொழு - கலப்பைக் கொழு. துன்னூசி - அக்கொழுவை அகப்படுத்திக்கொண்டு அதன் கீழிடத்தே கூராகவிருக்கும் மரம். உழும்பொழுது முன்னுள்ள கொழு வயலை உழுது செல்லத் துன்னூசியுமக்கொழுச் சென்றவழியே இடர்ப்படாது செல்லும். அதுபோல முன்னுள்ள புறவுரை சென்ற வுள்ளத்திலே நூலுமினிது செல்லும். இக்கருத்துக் கொண்டே நூல்கேட்கின்றான் புறவுரை கேட்கின் *கொழுச்சென்றவழித் துன்னூசி யினிது செல்லு மாறுபோல அந்நூலினிது விளங்குமென்றார். எனவே கொழுப் பாயிரத்திற்கும், துன்னூசி நூலிற்கும், வயல் ஒருவனுள்ளத்திற்கும் உவமையாகும். இக் கருத்தமையவே, திருவாவடுதுறை ஆதீனத்து மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளை யவர்கள்,

“ இசைபடும் பருப்பொ ருட்டா மிலக்கியம் சென்ற வாறே
வசைதவிர் நுண்பொ ருட்டா மிலக்கணம் வயங்கிச் செல்லும்
நசையுண ரொருவன் மாட்டு நறும்புனல் வயலின் மாட்டு
மசைவிறிண் கொழுச்செல் லாறே துன்னூசி யழகிற் செல்லும்.”

என்று கூறியுள்ளார்கள்.

பருப்பொரு ளென்பதும் நுண்பொருளென்பதும் முறையே பாயிரம் நூல் என்பவற்றி னியல்பை யுணர்த்தி அவற்றிக் கடையாய் நின்றன.

---

*கொழுவைப்பாயிரத்துக்கும், துன்னூசியை மாணக்கன் அறிவுக்கும், வயலை நூலுக்கும் உவமையாகக் கொள்ளுமாறு இவ்வாக்கியம் எழுதப்பட்டிருப்பின் மிகப்பொருத்தமாகும். ஏனெனில், நூலுட் புகுவோன் மாணாக்கனாதலானும், பின்னும், பாயிரம் கேளாக்கால் குன்று முட்டிய குரீஇப் போலவும் குறிச்சிபுக்க மான்போலவும் மாணக்கன் இடர்ப்படுமென நூலுட் புகுதலை மாணக்கனுக்கே கூறுதலானும் என்க. எனவே, பாயிரங்கேட்ட மாணக்கன் அவ்வறிவோடு நூலுட் புக்கால் அவ்வறிவு நூலை விளக்க அவற்கு நூலினிது விளங்கும் என்பது அதன் கருத்தாம்.

“ புறவுரை யேயது கேட்டென்னை பயனெனின்
மாயிரு ஞாலத் தவர்மதித் தமைத்த
பாயிர மில்லாப் பனுவல் கேட்கிற்
காணக் கடலிடைக் கலைஞரில் கலத்தரின்
மாணக் கன்றன் மதிபெரி திடர்ப்படும்”

என மாணக்கனறிவே நூலுட் புகுவதாக மாறனலங்காரச் சூத்திரங் கூறுமாற்றானும் இக்கருத்துப் பொருத்தமாதல் காண்க.



இனிப், பாயிரம் யாப்பருங்கல விருத்தியுட் போல நூற்பொருளைச் சுருக்கிப் பருப்பொருட்டாக விளக்குதல்பற்றியே ;

“ பருப்பொருட் டாகிய பாயிரங் கேட்டார்க்கு
நுண்பொருட் டாகிய நூலினிது விளங்கும்” என்றாரெனினு

மமையும். அங்ஙனேல் புறவுரையாகிய பாயிரம் நூற்பொருளைச் சுருக்கிப் பருப்பொருட்டாக எங்ஙனம் விளக்குமெனின் ?

பொதுப்பாயிரம்;

“ ஈவோன்றன்மை யீதலியற்கை கொள்வோன்றன்மை கோடன் மரபு” ஆகி, எல்லா நூன்முகத்து முரைக்கப்படுதலின் அஃதொழிந்தேனைச் சிறப்புப்பாயிரமே தன்னு ரைக்கப்படுநூற் கின்றியமையாச் சிறப்பிற்றாய் நிற்றலின், அதுவே பருப்பொருட்டாய் நூற்பொருளைச் சுருக்கி விளக்குமெனக்கோடும். அவற்றுள்ளும் நுதலிய பொருளே நூற்பொருளைச் சுருக்கிப் பருப்பொருட்டாய்ப் பெரிதும் விளக்கி நிற்குமென்க. நுதலிய பொருளென்றதனால் நூனுதலியதேயன்றி அதிகார நுதலியதூஉம், ஓத்து நுதலியதூஉம், சூத்திர நுதலியதூஉம் நுதலிய பொருளாயடங்கிப் பாயிரமாகக் கொள்ளப்படுமென்க. இப்பாயிரங்கள் நூற்பொருளை நன்குவிளக்குமென்க. பேராசிரியர்; “மேற்கிளந்தெடுத்த” (மர - ௱) என்னும் மரபியற் சூத்திரவுரையுள், “இனி மேற்கிளந்தெடுத்த பாயிரவிலக்கணஞ் சூத்திரத்தோடு பொருந்துங்கால் பொதுப்பாயிர விலக்கணம் பொருந்தா ; சிறப்புப்பாயிர விலக்கணமெட்டுமேபொருந்துவன” வென்றுகூறுதலானே சிறப்புப்பாயிரம் நூற்கின்றியமையாததென்பதூஉம், அவர், “ஒத்த சூத்திர முரைப்பிற் காண்டிகை (மர - கூஅ) என்னுஞ் சூத்திரவுரையுள்ளே, “சூத்திரவுரையுட் பாயிரவுரை மயங்கிவருவன உள, *அங்ஙனம் மயங்கி வருவன எவையெனின்? ‘எழுத்தெனப்படுப’ என்னுந் (எழு - க). சூத்திரத்தினை (முதலில் எடுத்து) நிறுவி என்பது சூத்திரம் எனக் கூறிப், பின் இவ்வதிகார மென்ன பெயர்த்தோ வெனவும் இவ்வதிகார மென்னுதலிற்றோவெனவும் வினவிப் பின் இன்ன பெயர்த்தெனவும் இவை நுதலிற்றெனவும் அவற்றிற்கு விடை கூறுவனவும், இவ்வதிகார மெனைத்துப்பகுதியானுணர்த்திற்றோவெனவினவி இனைத்துப்பகுதியால் உணர்த்திற்றெனவிடை கூறுவதூஉம், ஓத்து முதற்கண்ணோ இவ்வாறு வினவி விடை கூறுவதூஉம், சூத்திரமுதற்கண் இச்சூத்திர மென்னுதலிற்றோவெனவினவி விடைகூறுவதூஉம் போல்வனவென்க” என்று உரைத்தலி

---

*அங்ஙனம் ‘மயங்கிவருவன எவையெனின்? என்பதுமுதல்,... என்க’ என்பது வரையும் உள்ளவாக்கியம் மாணக்கன் விளங்கும் பொருட்டுப் பேராசிரியர் கருத்தைத் தழுவி யாமெழுதிய வாக்கியமாகும்.

னுலே சிறப்புப்பாயிரம் நூற்பொருளைச் சுருக்கி விளக்கற்குரிய தென் பதூஉம் பெறப்படுதல் காண்க. பேராசிரியர் கருத்தைத் தழுவிச் சிவ ஞானமுனிவரும் "இனி, வாய்ப்பக் காட்டல்" என்றதனுலே இத்து ணைச் சிறப்பிலவாய் அவ்வவற்றிற் கினமாய்க் கூறப்படுவனவு முள வென்பது பெற்றும். அவைதானுதலிய பொருளேயன்றிப் படலநுத லியதூஉம் ஓத்துநுதலியதூஉஞ் சூத்திரநுதலியதூஉங் கூறுதலும் என்றும், இவை நூன்முகத்துக் காட்டப்படுதலே யன்றிப் படல முகத்தும் ஓத்துமுகத்தும் சூத்திரமுகத்தும் காட்டவும்படும் என்றும் தொல்காப்பியச் சூத்திரவிருத்தியுட் கூறுதலுங்காண்க. நூற்பொருளைச் சுருக்கிப் (பதிகம்=) பாயிரங் கூறுதலைச் சிந்தாமணி, மணிமேகலை முதலிய நூல்களுள்ளுங் காண்க.

இனிக் கொழு என்பதற்குந் துன்னூசி செல்லுதற்கு முதலிற் குத்தி வழியாக்குவதொரு கருவி என்றும், துன்னூசி தையலூசி என் றும் இவை நோற்கருவிசெய்வோர் வைத்திருப்பவை என்றும் கலப் பையும் கொழுவும்போல் ஒருங்கு சேர்ந்திருப்பனவன்றி, இவை வேறு வேருக இருப்பனவாதலின் இவையே பொருந்துவன என்றும் கூறு வாருமுளர். பொருந்துவன கொள்க.

தலையமைந்தயானை - பூதநாதன். வினையமைந்தபாகன் - அதனைச் செலுத்துந்தொழிலமைந்த பாகன். இனி, தலையமைந்த யானை என்ப தற்கு அரசுவா எனினுமாம். அது அசனிவேகம், நளகிரி என்பன போன்றது. வினையமைந்த பாகன் - சீவகன், உதயணன் போன்முன். இன்றியமையாத - வேண்டியதான. அப்பாயிரம் இன்றியமையாச் சிறப்பிற்று எனக்கூட்டுக. ஒரு தலையமைந்த யானையை அடக்கிச் செலுத்தற்குப் பாகன் அதனினுமிறப்பச் சிறியவனு யிருந்தாலும் அவனே வேண்டும்; ஒரு பெரிய ஆகாயத்தை விளக்குதற்கு ஞாயிறுந் திங்களும் அதனினுமிறப்பச் சிறியனவாயினும் அவையே வேண்டும். அதுபோலவே ஒரு பெரிய இலக்கணநூலை விளக்கற்குப் பாயிரம் அத னினு மிறப்பச் சிறிதாயினும் அதுவே வேண்டும். ஏனெனின்; நூற் பொருளைத்தன்னுளடக்கி விளக்குமாற்றல் அதன்கணமைந்திருத்தலின். அதுபற்றியே இன்றியமையாச் சிறப்பிற்று என்றார். குன்று - மலை. பறந்து செல்கின்ற ஒரு குருவியை அது செல்லுந் திசைக்கண் நீண்டு உயர்ந்த ஒரு மலையிருக்குமாயின் அது, அதன் செலவைத் தடுக்கும். அதனால் அது இடர்ப்படும். அதுபோலவும், ஒருமான் தான் வசிக்கும் காட்டைவிட்டு ஒரு குறிச்சிக்கட் புகுமாயின் அங்குள்ளார் அதைத் தடைப்படுத்த அது அப்பாற் போகமுடியாது இடர்ப்படும். அதுபோல வும், பாயிரங்கேளாது ஒருமாணக்கன் ஒருநூலின்கட் புகுவானயின் அந்நூலின்கட் பல ஐயங்களிடையேதோன்றி அவனை அப்பாற்செல்ல விடாது தடுப்ப அவன் இடர்ப்படுவான். ஆதலாற் பாயிரங் கேட்க. வேண்டுமென்பது கருத்து.



### கற்கப்படுவோர்

கற்கப்படுவோர் - கற்கப்படத்தக்க நல்லாசிரியர். உலைவிலுணர் வுடையோர் - அசைவற்ற உணர்ச்சி யுடையோர். என்றது ஐயந்திரி பின்றிக் கற்றவரை.

### மலை

அளக்கலாகாப் பெருமை - அளக்கப்படாத உருவின் பெருமை. அருமை - அரிய பொருள்களைத் தன்னிடத் துடைமை. மருங்ககல முடைமை - பக்கம் விஸ்தாரமுடைமை. இனி, அளவிடப்படாத கல்வி யறிவின் பெருமையும், நூல்களி னரிய பொருளை ஆராய்ந்து தன்னி டத்தே கொண்டிருத்தலும், பக்கத்திலுள்ளவர்களாலுந் தெரியப்பட்ட கல்விப் புகழுடைமையும், தருக்கஞ்செய்து பிறரால் நெருங்குதற் கரு மையுமென ஆசிரியனுக்குப் பொருந்த உரைத்துக் கொள்க.

### நிலம்

செய்பாங்கு - செய்தற்குரிய தொழிற்பகுதிகள். என்றது; எருவிடல், உழுதல் முதலியன. விளைதல் வண்மை - விளைந்து பயன்படுதற் கேற்ற தன்மையுடைமை. போய்ச்சார்ந்தோர் - உழுவர். இடுதல் - தன்பயனைக் கொடுத்தல். எடுத்தல் - அதனைலவரை யுயர்த்தல். இனி, மாணக்கன் செய்த குற்றத்தைப் பொறுத்தலும், மாணக்கன் செய்தற்குரிய வழி பாட்டின்பகுதி யமைந்தபின்பு, அவனுக்குத் தான் பயன்படுதற் கேற்ற தன்மை யுடையனுதலும், மாணக்கனுக் கறிவைக் கொடுத்தலும். அத ஞல் அவனை உயர்த்தலுமென ஆசிரியனுக்குப் பொருந்த வுரைத்துக் கொள்க. வண்மை - வளத்தன்மை. என்றது நிலவளத்தையு மறிவின் வளத்தையும்.

### பூ

சுபகருமங்களுக் கேற்றதாதலும், உரியகாலத்திலே மலர்தலும், வண்டு சென்றூத அதற்குத் தேனையுண்ணும்படி நெகிழ்ந்து கொடுத்தலு மெனவுரைக்க. விழையப்படுதல் - பிறரால் விரும்பப்படுதல்.

இனிக் கற்பிக்குங் காலத்தே முகமலர்ந்து கற்பித்தலும், மனம் நெகிழ்ந்து கற்பித்தலுமென ஆசிரியனுக்குப் பொருந்த வுரைத்துக் கொள்க. ஏனைய வெளி

### துலாக்கோல்

மிகினுங் குறையினும் நில்லாதாகலும் - தன்கணிட்ட பொருள் துலாம் என்னும் அளவிலும் மிக்காலும் குறைந்தாலும் தன் சமநிலையி னில்லாமையுடையதாகலும். என்றது துலாம் என்னும் அளவுக்கு மேற் படி உயர்ந்துகாட்டும்; குறையிற் றழ்ந்துகாட்டும். எனவே பொரு ளின் குறைவையும் நிறைவையுங் காட்டும் என்றபடி. ஐயந்தீர்த்தல் - பொருளி னளவைக்காட்டி ஐயந்தீர்த்தல். நடுநிலை - கொள்வோனுக் குங் கொடுப்போனுக்கும் நடுநின்று அளவினுண்மையை உணர்த்தல். மெய்ந்நடுநிலை - மெய்யை உணர்த்தி நடுநிற்றலென்க. இனி ஒரு நூலி லேனும் வினவப்பட்ட பொருளிலேனும் குற்றம் மிகுந்தாலுங் குறைந் தாலு மம்மிகுதி குறைவை யுணர்ந்தவளவில் நில்லாமல் உணர்த்திவிடு தலும், தன்பால் வினவப்பட்ட பொருளி னையத்தைத் தீர்த்தலும், வாரம்படாமற் சமமாய் நிற்றலுமென ஆசிரியனுக்குப் பொருந்த வுரைத்துக்கொள்க.

**கற்கப்படாதோர்**

கற்கப்படாதோர் - கற்கப்படத்தகாத ஆசிரியர். கழல் - கழற்காய். பெய்தல் - இடுதல். குண்டிகை - குடுக்கை.

பொழிப்பு :-

"பாடங் கண்ணழி வுதாரண மென்றிவை
நாடித் திரிபில வாகுதல் பொழிப்பே."

பாடம் - மூலபாடம். கண்ணழிவு - பதப்பொருள் கூறல்.

மூலபாடமும், கண்ணழிவும், உதாரணமுமாகிய இவற்றைத் திரிபிலவாக ஆராய்ந்து செய்வது பொழிப்புரையாம்.

திரிபிலவாகச்செய்தல் - மூலபாடம் முதலாகிய மூன்றும் ஒன்றோடொன்று மாறுபடாமற் செய்தல். விபரீதப் பொருளின்றி யெனினுமாம். நாடின் எனவும் பாடம். அதற்கேற்பவும் பொருள் உரைத்துக் கொள்க. பொழிப்புரைத்தல் இருவகைப்படும். ஒன்று பிண்டமாகக் கூறல்; ஒன்று மூலபாடம் கூறியும் அதற்குப் பதப்பொருள் உரைத்தும் அதனை உதாரணத்தால் விளக்கியுஞ் செய்தல். அவற்றுட் பின்னையதே இச்சூத்திரத்தாற் கூறிய இலக்கணம். சிவஞானபோதந் துக் குரைக்கப்பட்ட பொழிப்புரையும் பின்னையதே. அதனை அச்சூத்திர உரையானறிக.

அகலம் :-

"தன்னூன் மருங்கினும் பிறநூன் மருங்கினும
துன்னிய கடாவின் புறந்தோன்று விகற்பம்
பன்னிய வகல மென்மனார் புலவர்."

இதன் கருத்து :- தன்னூலிடத்தும் பிறநூலிடத்துமுள்ள பொருள் விகற்பங்களை ஆக்கேபஞ் செய்து அதனூற் புறத்தே தோன்றும்படி அவ்விகற்பத்தைத் தெரித்துக் காட்டுவது அகலவுரையென்ப ராசிரியரென்பது.

நுட்பம் :-

"ஏதுவி னுங்கவை துடைத்தல் நுட்பம்."

இதன்கருத்து :- அங்ஙன மாக்கேபித்துத் தெரித்த விகற்பப் பொருளுட் பொருந்தாத பொருளைக் காரணங்காட்டி மறுத்து நீக்கிவிடுவது நுட்பவுரை என்பது.

எச்சம் :-

"துடைத்துக் கொள்பொரு ளெச்ச மாகும்."

இதன் கருத்து :- அங்ஙனம் மறுத்து இதுதான் பொருத்தமென்று கொள்ளப்பட்ட பொருளெச்சமாகும் என்பது.

புகழ்ந்தமதி - கல்வி தொடங்குதற்கு நல்லதென்று புகழப்பட்ட மாதம்.

ஓரை - இலக்கினம்.



கொள்வோர் - மாணுக்கர். கற்பிக்கப்படுவோர் - கற்பிக்கப்படத் தகுந்த மாணுக்கர்.

அவர் தன்மை :-

நன்னிறம்: எவ்வகைப்பட்ட நிறங்களுந் தன்னிடத்திலே கலத்தற்குரியது. அதுபோல, நன் மாணுக்கனும் ஆசியர் கூறும் எவ்வகைப்பட்ட வுரைகளையுந் தன் கருத்தில் ஏற்றுக்கொள்ளத் தகுந்தவனாயிருப்பன் என்றபடி. 'பல்லுரையுங் கேட்பான்' என்று பின்னுங் கூறுதல் காண்க.

பன்னுடைப்புறமென்றது: பன்னுடையின் மேற்புறத்தை. குஞ்சரம்—யானை. யானை தன்னினத்தோடுகூடி அவற்றிற் கிடையூறு வாராமற் காப்பதுபோல, நன்மாணுக்கனும தன்னொடு உடன்கற்கும் மாணுக்கர்களோடுங்கூடி அவர்களையங்களை நீக்கிக் கல்வியில் அவர்களைப் பாதுகாத்தலுடையவன் என்றபடி.

ஆனேறு: ஆனேறு காட்டுள் மேய்வுழி அங்குத் தோன்றிய வொலியை இன்னதனொலி இதுவென வோர்ந்து அதன் நன்மை தீமைகளை நிச்சயித் தறிதல்போல, மாணுக்கனும் ஆசிரியன் கூறிய சொற்பொருள்களை ஆராய்ந்து அப்பொருள்களின் குணகுணங்களை நிச்சயித் தறிவன் என்றபடி.

குரங்கெறி விளங்காயாவது: குரங்குக்குக் கல்லெறிந்து தான் கருதிய விளங்காயைப் பெற்றுக்கொள்வோனுடைய அவ்வியல்பு. அது போலக் கடைமாணுக்கனும் ஆசிரியனிடம் வழிபட்டு முறைப்படி கேளாமற் சில கடாக்களை நிகழ்த்தித் தான் கருதிய பொருளைப் பெற்றுக்கொள்வன் என்றபடி.

எறிவிளங்கா யென்பது எறிந்து விளங்காயைக் கொள்பவன் எனக் கொள்பவன்மேல் நின்றது. இக்கருத்தை விளக்கவே, 'கல்லால் எறிந்து கருது பயன் கொள்வோன் குரங்கெறி விளங்காயமென மொழிப' எனக் கூறினர். இங்கே "கல்லா லெறிந்து கருதுபயன் கொள்வோன்" என்பது கல்லாலெறிந்து தான் கருதிய பயனாகிய விளங்காயைக் கொள்பவனென அவனை யுணர்த்தலோடு உடம்பொடு புணர்த்தலால் அவன் றன்மையையு முணர்த்திநின்றது. நிற்கவே அவன் றன்மையாவது கல்லாலெறிந்து கருதுபயன் கோடல் என்பது பெறப்படும். கல்லாலெறிந்து கருதுபயன் கோடலே கொள்பவனுடைய இயல்பு.

காரா - எருமை. அதனியல்பாவது: பெருகிவரும் நீரிலே அதனைத் தடுத்து வீழ்ந்து அந்நீரை யுழக்கிக் கலக்கி உண்ணுதலாம். அது போலக் கடைமாணுக்கனும் ஆசிரியனைச் சொல்லவிடாது தடுத்து அவனுடைய அறிவைத் தர்க்கித்துக் கலக்கி யறிவன் என்றபடி. அருந்தல் காராமேற்று என முடிக்க. அருந்தல் - அருந்துமியல்பு. ஆட்டின்சீர் - ஆட்டின்றன்மை. ஆரஉறினும் - நிறையப் பொருந்தினும். குளகு - விலங்கிற்குரிய உணவு.

தோணி நீரிடையின்றி நிலத்திற் செல்லமாட்டாததுபோலக் கடைமாணுக்கனும் தான் பயின்ற நூலினன்றிப் பயிலாத நூலின்கட் செல்லமாட்டான். களம் - கலாசாலை.

முன்னும் பின்னும் அகலானாகி என்றது ஆசிரிய னிருக்கும்போது அவன் முன்னிடத்தையும் செல்லும்போது அவன் பின்னிடத்தையும் அகலானாகிப் படித்தலை. ஆசு - குற்றம். என்றது ஐயந்திரிபுகளை. எத்திறம் - எவ்வகையான வழிபாடு. அத்திறம் - அவ்வகையான வழிபாடு. அறத்திற் றிரியாப் படர்ச்சி - அறநூலிற் சொன்ன முறையிற் றவறாத வழிபாட்டொழுக்கம். வழிபாடு - எழுவாய். படர்ச்சி - பயனிலை. வழக்கு - உலகவழக்கு. அவையென்றது - முன்கேட்கப்பட்டவற்றை. அமைவரக்கேட்டல் - மனத்தில் நன்றாய்ப் படியக்கேட்டல். அனையன் அல்லோன் - மாணாக்கனுக்குரிய இலக்கண மில்லாதவன். வினையினுழப்பொடு - கற்றற்றொழிலினால்வரும் வருத்தத்தோடு (பொருந்துவதன்றி), பயன்தலைப்படான் - பயனையுமடையமாட்டான். (பொருந்துதலன்றியென்பது இசையெச்சம்) படான் என்பதில் படாமையுமுடையன் என உடைமை விரித்து அதனோடு ஒடுவை முடிப்பினுமமையும். வினையினுழப்பு என்பதை 'வினையிலுழப்பு' என்று பாடமோதித் தொழிலற்றமுயற்சி எனப் பொருள்கொண்டு, தாற்பரியமாகப் 'பயனற்றமுயற்சி' என்பாருமுளர். அம்மரபில்லோன் - அக்கோடன் மரபில்லாதவன். செவ்விதினுரைத்தல் - நன்குகற்பித்தல்

## சிறப்புப்பாயிரம்

அவ்விரண்டெல்லைக்குளிருந்து தமிழைச்சொல்லும் நல்லாசிரியரது வழக்கையுஞ் செய்யுளையும் அடியாகக்கொள்ளுதலினாலே செந்தமிழியல்பாகப் பொருந்திய செந்தமிழ்நாடென்க. இருந்து சொல்லும் என்றதனாலே, செந்தமிழ் மொழியினைக் கூறுவாரையே நல்லாசிரிய ரென்றாரென்றாகும். நல்லாசிரியரது வழக்கையுஞ் செய்யுளையும் அடியாகக் கொள்ளுதலினாலே செந்தமிழ் இயல்பாகப் பொருந்திய வென்றது, செந்தமிழாசிரியரது வழக்கையுஞ் செய்யுணூல்களையும் அடியாகக்கொண்டே செந்தமிழ் செந்தமிழ்நாட்டில் வழங்கி வருகின்றதென்றபடி. எனவே தொல்காப்பியரும் செந்தமிழ்நாட்டு வழக்கோடு முன்னை யிலக்கணங்களையு மாராய்ந்து இந்நூல் செய்தாரென்பது கருத்தாம். நல்லாசிரியர் வழக்கை யடியாகக் கொள்ளுதலினாலே செந்தமி ழியல்பாகப்பொருந்திய செந்தமிழ்நாட்டு வழக்கெனவே, நல்லாசிரியரது மரபு தவறாது வந்த செந்தமிழ் வழக்கு என்பது போதரும். செய்யுளைவிதவாது செந்தமிழ் வழக்கெனப் பொதுவாக்கூறினமையின் இரண்டுங் கொள்ளப்படும்.

ஏழு நிலமாவன :- பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்பன. இவற்றைச் செய்யுளியலில் ௪௮௭-ம் சூத்திரம் நோக்கியுணர்க.

இவற்றுட் பாட்டென்றது: செய்யுளை. உரையென்றது: உரைநடையை. அது நான்குவகை. ௪௮௬-ம் சூத்திரம் [தொல் - செய்]: பார்க்க. நூல் என்றது: இலக்கணநூலை. இது பெரும்பாலும் சூத்திர யாப்பாற் செய்யப்படுவது. வாய்மொழி: உண்மைமொழி, என்றது நிறைமொழி மாந்தரால் கிளக்கப்பட்டுப் புறத்தார்க்குப் புலனாகாமை மறைத்துக் கூறப்படும் தொடர்மொழிகளை. இவையே மந்திரம் எனப்படும். பிசி என்றது: நொடியான சொற்றொடர்களை. இதனைச் செய்யுளியல் ௪௮௯-ம் சூத்திரத்துட் பார்க்க. அங்கதம்: வசைச்



செய்யுள். முதுசொல்: பழமொழி. செய்யுளியல் ௪௯௦-ம் சூத்திரம் நோக்கியுணர்க. இவை உரையாசிரியர் கருத்து.

முற்கு - கர்ச்சனை; வீரர் போர்க்கழைக்கும் ஒருவகையொலி. இதனை அறைகூவலென்ப. வீளை: சீழ்க்கை. இது வேட்டுவசாதிக்குள் வழங்கியது. இலதை: இதுவுமோர் குறிப்பொலி. இன்னதென்று புலப்படவில்லை. வழக்கிறந்ததுபோலும். எனினுஞ் செருமல்போன்ற ஓரொலியாயிருக்கவேண்டுமென்று இக்கால வழக்காற் கருதப்படுகின்றது. முற்கு வீளை இலதை என்பன அடி நாவடியிற் காட்டப்படும் ஒலிக்குறிப்பென்பர் இராமாநுச கவிராயர். முற்கு - முக்கு என்பாருமுளர்.

செறிப்பச்சேறல் என்பதற்கு ஒருவன் சொல்லச் செல்லுதல் என்றும், செறிப்பவருதல் என்பதற்கு மற்றொருவன் சொல்லத் தன்கண் வருதலென்றும் பலரும் சாதாரணமாகக் கூறுவதுண்டு. மற்றொருவன் சொல்லவருதல் என்பது அவனுக்குச் செறிப்பச் சேறலேயாகலானும், செறிப்பச் சென்ற உருவே மீண்டு வராமையானும், சொல்லச் செல்லலே கருத்தாயின் செறிப்பச்சேறலென்னாது பின் "சொல்லப்பிறந்து சொற்குறுப்பாமோசையை இவர் எழுத்தென்று வேண்டுவர்" எனக் கூறியதுபோல ஈண்டும் சொல்லச் செல்லல் என வெளிப்படையாகக் கூறுவராகலானும், ஆசிரியரும் "எல்லாவெழுத்துஞ் சொல்லுங்காலை" யென்றே கூறுதலானும், செறிப்ப என்பதற்குச் சொல்ல என்பது நேர்பொருளன்றாகலானும் அவ்வாறு பொருள்கூறல் பொருந்துமோ என்பது ஆராயத்தக்கது. பின் வடிவு கூறியதற் கியைய ஈண்டும் செறிப்பச் சேறல் என்பதற்கு குழல் போன்ற ஒன்றனுட் புகுத்த அதனுள்ளே சேறல் என்றும், செறிப்ப வருதல் என்பதற்கு குடம்போன்ற ஒன்றனுட் புகுத்த அதனுள்ளே புகுந்து உட்புறத்தே தாக்குண்டு மீண்டுவருதல் என்றும் பொருள் கூறலே பொருத்தமாகும் என்பது எமது கருத்து. புகுத்தல் - (அகத்தே சொல்லிப்) புகச்செய்தல். இதுபற்றியே பின்னரும் அகத்துக்கூறல் என்றார். சொல்லுதல் வருதல் என்பன உள்ளே செல்லுதலையும் வெளியே வருதலையும் குறித்துநின்றன. இவற்றால் எழுத்திற் குருவுடைமை எங்ஙனம் பெறப்படுமெனின், குழல்போன்றவற்றினுட் புக்கு அவற்று ளடங்கிச் செல்லுதலானும் குடம் போன்றவற்றினுட் புக்கு அவற்றினடியிற் றாக்குண்டு மீளுதலானும் பெறப்படும். என்னை? உருவுடையதே ஒன்றனுட் புக்குச்செல்வதும் புக்குத் தாக்குண்டு மீளுவது முடைமையின். குழலானும் குடத்தானும் எழுத்துருவின் வரம்புபட்ட பரிணமமுடைமை பெறப்படுதலான் அதன் வடிவுடைமையும் பெறப்படும். செறித்தல் - உட்புகுத்தல். "கேள்விச்செவியிற் கிழித்துகிற் பஞ்சி - பன்னிச் செறித்து" (பெரு-உஞ-மரு-ககசு) என்னுமடிகளை நோக்கியுணர்க. இனிச் சேறல் வருதலாகிய வினையுடைமையானும் உருவுடைமை பெறப்படுமென்க.

பின்னர் (க சூ+ம்) "எழுத்துக்களி னுருவிற்கு வடிவு கூறாராயினும் ...... அவ்வடிவாராயுமிடத்துப் பெற்ற பெற்ற வடிவே தமக்கு வடிவாம். குழலகத்திற் கூறிற் குழல்வடிவும், குடத்தகத்திற் கூறிற் குடவடிவும் வெள்ளிடையிற் கூறி னெல்லாத்திசையு நீர்த்தரங்கம்போல" என்று குழல்முதலிய மூன்றிலுமமைந்தவுருவிற்கே

வடிவமுங் காட்டினராதலின் அம் மூன்றிலும் வைத்தே முன்னர் அவ்வுருவை உணர்த்திப்பின்னர் வடிவிற்கும் அவற்றையே எடுத்துக்காட்டினரென்பது சாலப் பொருத்தமாதலின் நச்சினார்க்கினியர்க்கும் இதுவே கருத்தாதல் துணிபாம். என்னை? உருவின்கண்ணதே வடி மாகலின் செறித்தல் (உட்புகுத்தல்) என்றசொல்லே குழலுங் குடமும் போல்வன வற்றை உணர்த்தும் என்க. அன்றியும் இடையென்பது வெளியிடத்தை உணர்த்தலானும் முன்னையவிரண்டும் வெளியிடமல்லாத. குழலுங் குடமும் போல்வனவற்றையே உணர்த்திவந்தனவென்பது துணிபாகும். நூலாசிரிய உரையாசிரியர்கள் கருத்துக்களைப் பின்முன் நோக்கிக்கொள்ளும் பொருளே பொருத்தமாம் என்க. குழல் குடம் போல்வனவற்றில் வைத்து உருவுவடிவுகளை விளக்கின் மாணாக்கர்க்கு அவை இனிது விளங்குமென்பது கருதியே அவற்றை ஈண்டு நச்சினார்க்கினியர் எடுத்துக்காட்டினர் என்க. சிறுவர் நீண்ட குழல் முதலியவற்றுட் பேசும் வழக்கம் இக்காலத்தும் உண்டு.

இடைபெறியப்படுதலானும் என்பதில் இடையென்பது இடத்தையுணர்த்திநின்றது. இடம் ஈண்டு வெளியிடம். அது பின் 'வெள்ளிடையிற் கூறின்' என்பதனானும் உணரப்படும். எறியப்படுதல் - வீசப்படுதல். எனவே வெள்ளிடையிற் கூறின் அவ்வெள்ளிடைக்கண் எல்லாத்திசையும் நீர்த்தரங்கமும்போல வீசப்பட்டுச் சேறலானும் என்பது பொருளாம். திரைவீசுங்கால் ஒன்றுலொன்று வீசி எழுப்பப்படுதல் போல, எழுத்தொலியும் ஒன்றுலொன்று வீசி எழுப்பப்படுதலின் "எறியப்பட்டு" என்றார். அதனை "உட்கப்படார்" என்பதுபோலச் செய்வினையாகக் கொள்ளினுமமையும். ஒன்றுலொன்று வீசியெழுப்பப்படுதலின் உருவுடைமை பெறப்படும். அவ்வொலி நீர்த்தரங்கம் போல வட்டவடிவாய்ச் சேறலின் அதன் வடிவுடைமையும் பெறப்படும். எல்லாத்திசையுமென்பது கதம்பமுகுள நியாயத்தையும், நீர்த்தரங்கமென்பது வீசிதரங்கநியாயத்தையும் குறித்து வந்தன.

கதம்பமுகுளநியாயமாவது: கடப்பம்பூவில் முதலாவதுண்டான மொட்டு ஒரேகாலத்தில் நான்குபக்கமும் பல மொட்டுக்களை உண்டாக்கிக்கொண்டு தோன்றுவதுபோல்வ தொருமுறை. அதுபோல முதலாவதுண்டான எழுத்தொலி தன் நாற்பக்கமும் ஒரே நேரத்திற் பல ஒலிகளை உண்டாக்கிக்கொண்டு தோன்றும். கடம்பு பூக்குங்கால் தன் பூவைக் கதிராகப் பூக்கும். அக்கதிரின் தலையில் ஒரு சிறு மொட்டிருக்கும். அதன் மேற்பக்கங்களிற் பல மொட்டிருக்கும்.

வீசிதரங்கநியாயமாவது: ஒரு குளத்தில் நீரிடையே ஒரு கல்லை இட அந்த இடத்தில் முதலாவதுண்டான திரை, தன்னைச்சூழப் பின்னுமோர் திரையை எழுப்ப, அது தன்னைச்சூழப் பின்னுமோர் திரையையெழுப்ப, இப்படியே கரை சாரும் வரையும் வேறு வேறு திரைகளை எழுப்பிச் சேறல்போல்வதொருமுறை. அதுபோலவே முதலாவதுண்டான எழுத்தொலி, தன் நாற்புறமும் ஒன்றையொன்று சூழ வேறு வேறு ஒலிகளை எழுப்பிச் செல்லும் என்க. இவை முறையே தருக்க சங்கிரகத்தி னுரைக்குரையாகிய நீலகண்டீய உரையின் வியாக்கியானங்களாகிய நிருதபப்பிரகாசிகையிலும், இராயருத்திரீயத்திலும் கூறப்பட்டுள்ளன.



இன்பதுன்பத்தையாக்கல்: வல்லோசையாற் றுன்பத்தையும் மெல்லோசையா லின்பத்தையு மாக்கல்.

உருவுமுருவுங் கூடிப்பிறத்தல்: உயிர்வடிவும் மெய்வடிவுங் கூடிப் பிறத்தல். உருவுமுருவுங் கூடுமன்றி உருவமில்லாதன கூடமாட்டா. அதனானும் உருவுடைமை பெறப்படும். நாமுதலிய உருவங் கூடிப் பிறத்தல் என்றுகொள்ளின் பின்னர் "தலையு மிடறும் நெஞ்சு மென்றும் மூன்றிடத்தும் நிலைபெற்றுப் பல்லு மிதழும் நாவும் அண்ணமு முறப்பிறக்கும்" எனக்கூறுதலான் அது பொருந்தாது. கூடிப்பிறத்தல் என்பதன்கண் கூடுதல் என்றுஞ் சொல்லிலேயே பொருள் சிறந்து நின்றது. பிறந்தபின்பே அவற்றின் கூட்டமறியப்படுதலின் பிறத்தலாது மென்றார்.

"உந்திமுதலாகத் தோன்றி எண்வகை நிலத்தும் பிறந்து கட்புலனாந் தன்மையின்றிச் செவிக்கட் சென்றுறும் ஊறுடைமையானும்" என்றதனாற் பிறப்புடைமையானும் பரிசமுடைமையானும் உருவுடைய தெழுத்தென்பது கூறப்பட்டது.

எண்வகை நிலம்: எழுத்துக்களுக்குப் பிறப்பிடமாகச் சொல்லப்பட்ட எண்வகை இடம். அவை: தலை, மிடறு, நெஞ்சு, பல், இதழ், நா, மூக்கு, அண்ணம் என்பன. இவற்றை நன்னூலார் இடமும் முயற்சியுமென இருவகையாகப் பகுப்பர். இடம்: தலை மிடறு நெஞ்சு மூக்கு என்பன. முயற்சி: பல் இதழ் நா அண்ணம் என்பன.

விசும்பிற் பிறந்தியங்குவதோர் தன்மை உடைமையானும் என்றதனாற் காற்று விசும்பின்கட் பிறந்து இயங்குவதுபோல இவ்வெழுத்தோசையும் விசும்பின்கட் பிறந்து இயங்கு மியல்புடைய தென்பது நச்சினார்க்கினியர் கருத்துப்போலும்.

கடையிற்கூறிய இவ்வேதுக்களிரண்டையும் எழுத்துக்களுக்கும் காற்றுக்கும் முறையே தனித்தனி சிறப்பாகவும் ஏனைய ஏதுக்களைப் பொதுவாகவும் நச்சினார்க்கினியர் கூறியிருக்கலா மென்பதும் எமது கருத்து.

இனிக் காற்றிற் கேற்பவும் குழல்போன்றவற்றிற் புகுத்தப்புகுதலானும் குடம்போன்றவற்றிற் புகுத்த அடிப்புறத்தே தாக்குண்டு மீண்டு வருதலானும் வெளிநிலத்தே வீசிச்சேறலானும் மென்மையாக வீசலானே இன்பத்தையும் வன்மையாக வீசலானே துன்பத்தையுமாக்கலானும் இருநிசைகளான் வருங்காற்று ஒன்றுகூடித் தோன்றலானும் உருவுடைமை அறியப்படும் எனக்கொள்க.

காந்தருவம் - இசைநூல். குறி - பெயர். காணம் - பொற்காசு. இவற்றுட் கூறுகின்ற உரைச் சூத்திரங்களென்றது இப்பாயிரத்திற் கூறுகின்ற "யாற்றொழுக்கே" என்பது முதலிய சூத்திரங்களை.

அரில்தப என்பது குற்றங் களைதலையும் தெரித்து என்பது விடை கூறுதலையும் உணர்த்தின.

சொற்சீரடி - சொற் சீராகிய வடி. என்றது அசையாற் சீர்செய்து சீராலடியாக்காது, சொற்களையே சீராகவைத்து அடியாகுவது.

கட்டுரைவகையானெண்ணொடு புணர்ந்த சொற்சீரடியாவது, கட்டுரைக்கண் வருமாறுபோல எண்ணொடு பொருந்தி வருஞ்சொற்சீரடி.

வடவேங்கடமும் தென்குமரியுமென்பது உம்மை தொக்கு செவ்வெண்ணாய் வடவேங்கடந் தென்குமரி எனநின்றது.

வழியசைபுணர்ந்த சொற்சீரடியாவது, 'தனியசையன்றிப் பல வசைபுணர்க்கப்பட்டு வருஞ்சொற்சீரடி' யென்பர் நச்சினார்க்கினியர். ஆயிடையென்பது தனியசையன்றிப் பின்னுமோரசை புணர்க்கப் பட்டவாறு காண்க. 'ஒருசீர்க்கண்ணே பிறிதுமொருசீர்வரத்தொடர்வ தோர் அசையைத் தொடுப்ப' தென்பர் இளம்பூரணர்.

முட்டடியின்றிக் குறைவு சீர்த்தாய சொற்சீரடியென்றது - நாற்சீரடியாய் முடியுமடியின்றிச் சீர்குறைந்து வருவதை. "நரிப் கூறு நல்லுலகத்து" என்பது நாற்சீரடியாய் முடியாது குறைவு சீர்த்தாய் முடிதல்காண்க. இவற்றைக் "கட்டுரைவகையா னெண்ணொடுபுணர்ந் தும்" என்ற செய்யுளியல் கஉ-ம் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் முதலியோர் உரைத்த உரைநோக்கி உணர்க.

செந்நூற்காவது - நான்கு சீரும் நிரம்பிவரும் அடி. மூன்றுறுப் படக்கிய பிண்டம் - சூத்திரம், ஒத்து, படலம் என்னும் மூன்றுறுப்பை யும் அடக்கிய நூல். பிண்டம் - திரட்டப்பட்டது.

இன்னும் பாயிரத்துள் "முந்துநூல்கண்டு முறைப்படவெண்ணி" என்று பாயிரஞ்செய்தார் கூறுதலானே உணர்கவென இயைக்க. எப்படி உணர்தலெனின்? இவ்வாசிரியர் கூறிய அதனையே ஈண்டும் (பாயிரத்துள்) "முந்துநூல்கண்டு முறைப்படவெண்ணி" எனப் பாயிரகாரர் கூறினாரென உணர்தல். முந்துநூல்கண்டு முறைப்பட வெண்ணித் தொகுத்தான் என வழிநூல் இலக்கணமும் பெறப்பட பாயிரகாரர் கூறியதற்குவிதி செய்யுளியலிலும் மரபியலிலும் தொல் காப்பியர் கூறிய விதியே யென்பதாம்.

இந்நூலாசிரியர் வழிநூல்செய்தற்கு விதியாண்டுப் பெற்றாரெனின் முதல்வன் கூறிற்றிலனேனும் அவன் நூல் செய்த முறையே தமக் கிலக்கணமாமென்று கருதிச் செய்தாரென்க. முதல்வன் செய்த முறையே தமக்கும் இலக்கணமாகக்கொண்டு நூல் செய்தாரெனினும் ஒருவன் செய்ததை மீளவுஞ் செய்தலாற் பயனின்றே யென்றுமாக் கேபத்தைநீக்கும் பொருட்டே முறைப்படவெண்ணி யென்றாரென்க.

பாயிரம் முற்றிற்று.

# தொல்காப்பியம்

## எழுத்ததிகாரம்.

### நச்சினார்க்கினியம்

---

### க. நூன்மரபு

க. எழுத்தெனப்படுப
அகரமுத
னகர விறுவாய் முப்பஃ தென்ப
சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே.

என்பது சூத்திரம்.

இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோவெனின் எழுத்திலக்கணம் உணர்த்தினமை காரணத்தான் எழுத்ததிகாரமென்னும் பெயர்த்து. எழுத்தை உணர்த்திய அதிகாரமென விரிக்க. அதிகாரம்—முறைமை.

எழுத்து உணர்த்துமிடத்து எனைத்து வகையான் உணர்த்தினாரோவெனின் எட்டுவகையானும் எட்டிறந்த பலவகையானும் உணர்த்தினாரென்க.

எட்டு வகைய வென்பார் கூறுமாறு:—எழுத்து இனைத் தென்றலும் இன்ன பெயரின வென்றலும் இன்ன முறையின வென்றலும் இன்ன அளவின வென்றலும் இன்ன பிறப்பின வென்றலும் இன்ன புணர்ச்சியின வென்றலும் இன்ன வடிவின வென்றலும் இன்ன தன்மையின வென்றலுமாம். இவற்றுள் தன்மையும் வடிவும் நமக்கு உணர்த்தலாகாமையின் ஆசிரியர் ஈண்டு உரைத்திலர். ஏனைய இதனுட் பெறுதும்.

எழுத்து இனைத்தென்றலைத் தொகைவகை விரியான் உணர்க. முப்பத்துமூன் றென்பது தொகை. உயிர் பன்னிரண்டும் உடம்பு பதினெட்டுஞ் சார்பிற்றோற்றம் மூன்றும் அதன்

வகை. அளபெடை யேழும் உயிர்மெய் யிருநூற்றொருபத்தாறும் அவற்றோடுங் கூட்டி இருநூற்றைம்பத்தாறெனல் விரி.

இனி எழுத்துக்களது பெயரும் முறையுந் தொகையும் இச்சூத்திரத்தாற் பெற்றாம். வகை 'ஔகாரவிறுவாய்' (எழு-௮) என்பதனானும் 'னகாரவிறுவாய்' (எழு-௯) என்பதனானும் 'அவைதாங், குற்றியலிகரங் குற்றியலுகரம்' (எழு-௨) என்பதனானும் பெற்றாம். விரி 'குன்றிசைமொழிவயின்' (எழு-௪௧) என்பதனானும் 'புள்ளியில்லா' (எழு-௧௭) என்பதனானும் பெற்றாம்.

அளவு 'அவற்றுள், அ இ உ' (எழு-௩) என்பதனானும் 'ஆ ஈ ஊ' (எழு-௪) என்பதனானும் 'மெய்யினளபே' (எழு-௧௧) என்பதனானும் 'அவ்வியனிலையும்' (எழு-௧௨) என்பதனானும் பெற்றாம்.

பிறப்பு பிறப்பியலுட் பெற்றாம்.

புணர்ச்சி 'உயிரிறு சொன்முன்' (எழு-௧௦௭) என்பதனானும் 'அவற்று, ணிறுத்தசொல்லின்' (எழு-௧௦௮) என்பதனானும் பிறவாற்றானும் பெற்றாம்.

இனி எட்டிறந்த பல்வகைய வென்பார் கூறுமாறு:— எழுத்துக்களது குறைவுங் கூட்டமும் பிரிவும் மயக்கமும் மொழியாக்கமும் நிலையும் இனமும் ஒன்றுபல வாதலுந் திரிந்ததன் திரிபு அதுவென்றலும் பிறிதென்றலும் அதுவும் பிறிதுமென்றலும் நிலையிற்றென்றலும் நிலையாதென்றலும் நிலையிற்றும் நிலையாது மென்றலும் இன்னோரன்ன பலவுமாம்.

குறைவு 'அரையளபு குறுகல்' (எழு-௧௩) 'ஓரளபாகும்' (எழு-௫௮) என்பனவற்றாற் பெற்றாம்.

கூட்டம் 'மெய்யோடியையினும்' (எழு-௧௦) 'புள்ளியில்லா' (எழு-௧௭) என்பனவற்றாற் பெற்றாம்.

பிரிவு 'மெய்யுயிர்நீங்கின்' (எழு-௧௩௯) என்பதனாற் பெற்றாம்.

மயக்கம் 'டறலள' (எழு-௨௩) என்பது முதலாக 'மெய்ந்நிலைசுட்டின்' (எழு-௩௦) என்பதீறாகக் கிடந்தனவற்றாற் பெற்றாம்



மொழியாக்கம் 'ஓரெழுத்தொருமொழி' (எழு-௪௫) என்பதனாற் பெற்றாம், அவ்வெழுத்துக்களே மொழியாக்கலின்.

நிலை 'பன்னீருயிரும்' (எழு-௫௯) 'உயிர்மெய்யல்லன' (எழு-௬௦) 'உயிர்ஔ' (எழு-௬௯) 'ஞணநமன' (எழு-௭௮) என்பன. இவற்றான் மொழிக்கு முதலாம் எழுத்தும் ஈறாமெழுத்தும் பெற்றாம்.

இனம் 'வல்லெழுத்தென்ப' (எழு-௧௯) 'மெல்லெழுத்தென்ப' (எழு-௨௦) 'இடையெழுத்தென்ப' (எழு-௨௧) 'ஔகாரவிறுவாய்' (எழு-௮) 'னகாரவிறுவாய்' (எழு-௯) என்பனவற்றாற் பெற்றாம். இவற்றானே எழுத்துக்கள் உருவாதலும் பெற்றாம். இவ்வுருவாகிய ஓசைக்கு ஆசிரியர் வடிவு கூறாமை உணர்க. இனி வரிவடிவு கூறுங்கால் செய்கை பெரும்பான்மையும் வடிவு கூறியவாறு உணர்க.

ஒன்று பலவாதல் 'எழுத்தோரன்ன' (எழு-௧௪௧) என்பதனாற் பெற்றாம்.

திரிந்ததன் திரிபது வென்றல் 'தகரம் வருவழி' (எழு-௩௯௯) என்பதனானும் பிறாண்டும் பெற்றாம்.

பிறிதென்றல் 'மகரவிறுதி' (எழு-௩௧௦) 'னகாரவீறு' (எழு-௩௩௨) என்பனவற்றாற் பெற்றாம்.

அதுவும் பிறிதுமென்றல் 'ஆறனுருபி னகரக்கிளவி' (எழு-௧௧௫) என்பதனாற் பெற்றாம்.

நிலையிற்றென்றல் 'நிறுத்த சொல்லினீறாகு' (எழு-௧௦௮) என்பதனாற் பெற்றாம்,

நிலையாதென்றல் நிலைமொழியது ஈற்றுக்கண்ணின்றும் வருமொழியது முதற்கண்ணின்றும் புணர்ச்சி தம்முள் இலவாதல். அது 'மருவின்றொகுதி' (எழு-௧௧௧) என்பதனாற் பெற்றாம்.

நிலையிற்றும் நிலையாதுமென்றல் 'குறியதன் முன்னரும்' (எழு-௨௨௬) என்பதனாற் கூறிய அகரம் 'இராவென்கிளவிக் ககரமில்லை' (எழு-௨௨௭) என்பதனாற் பெற்றாம்.

இக்கூறிய இலக்கணங்கள் கருவியுஞ் செய்கையு மென இருவகைய.

அவற்றுட் கருவி புறப்புறக் கருவியும் புறக் கருவியும் அகப் புறக் கருவியும் அகக்கருவியு மென நால்வகைத்து. நூன்மரபும் பிறப்பியலும் புறப்புறக் கருவி. மொழிமரபு புறக்கருவி. புணரியல் அகப்புறக்கருவி. 'எகர ஒகரம் பெயர்க்கீறாகா' (எழு-௨௭௨) என்றாற்போல்வன அகக்கருவி.

இனிச் செய்கையும் புறப்புறச்செய்கையும் புறச்செய்கை யும் அகப்புறச்செய்கையும் அகச்செய்கையுமென நால்வகைத்து. 'எல்லா மொழிக்கு முயிர் வருவழியே' (எழு-௧௪௦) என்றாற் போல்வன புறப்புறச்செய்கை. 'ணனவென் புள்ளிமுன் னர்' (எழு-௧௪௪) என்றாற்போல்வன புறச்செய்கை. 'உகர மொடு புணரும் புள்ளி யிறுதி' (எழு-௧௬௯) என்றாற்போல் வன அகப்புறச்செய்கை. தொகை மரபு முதலிய சூத்திரங்களுள் இன்ன ஈறு இன்னவாறு முடியுமெனச் செய்கை கூறுவனவெல் லாம் அகச்செய்கை. இவ்விகற்பமெல்லாந் தொகையாக உணர்க.

இவ்வோத் தென்னுதலிற்றோ வெனின், அதுவும் அதன் பெயருரைப்பவே அடங்கும்.

இவ்வோத் தென்ன பெயர்த்தோவெனின் இத் தொல்காப் பியமென்னும் நூற்கு மரபாந் துணைக்கு வேண்டுவனவற்றைத் தொகுத்து உணர்த்தினமையின் நூன்மர பென்னும் பெயர்த் தாயிற்று.

நூலென்றது நூல்போறலின் ஒப்பினாயதோர் ஆகுபெய ராம். அவ்வொப்பாயவா றென்னை யெனின், குற்றங் களைந்து எஃகிய பன்னூனைப் பஞ்சிகளை யெல்லாங் கைவன் மகடூஉத் தூய்மையும் நுண்மையுமுடையவாக ஓரிழைப் படுத்தாற்போல 'வினையினீங்கி விளங்கிய வறிவ' (மரபியல்-௯௪) னாகலி னெழுக் களைந்து எஃகிய இலக்கணங்களை யெல்லாம் முதலும் முடிவும் மாறுகோ ளின்றாகவுந், தொகையினும் வகையினும் பொருண்மை காட்டியும், உரையுங் காண்டிகையும் உள்நின் றகலவும், ஈரைங்குற்றமு மின்றி ஈரைந் தழகுபெற, முப்பத்திரண்டு தந்திர வுத்தியோடு புணரவும்,



'ஒருபொரு ணுதலிய சூத்திரத் தானு
மினமொழி கிளந்த வோத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானு
மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானும்.' (செய்-௧௬௬)

ஒருநெறிப்படப் புணர்க்கப்படூஉந் தன்மையுடைமையா னென்க. மரபு, இலக்கணம், முறைமை, தன்மை என்பன ஒருபொருட்கிளவி.

ஆயின் நூலென்றது ஈண்டு மூன்றதிகாரத்தினையு மன்றே? இவ்வோத்து மூன்றதிகாரத்திற்கும் இலக்கணமாயவா றென்னை யெனின், எழுத்துக்களது பெயரும் முறையும் இவ்வதிகாரத் திற்குஞ் செய்யுளியற்கும் ஒப்பக் கூறியது. ஈண்டுக் கூறிய முப்பத்துமூன்றனைப் பதினைந்தாக்கி ஆண்டுத் தொகைகோட லின் தொகை வேறும். அளவு செய்யுளியற்கும் இவ்வதிகாரத் திற்கும் ஒத்த அளவும் ஒவ்வா அளவு முளவாகக் கூறியது. குறிற்கும் நெடிற்குங் கூறிய மாத்திரை இரண்டிடத்திற்கும் ஒத்த அளவு ஆண்டுக் கூறுஞ் செய்யுட்கு அளவுகோடற்கு ஈண்டைக்குப் பயன் தாராத அளபெடை கூறியது ஒவ்வா அளவு. அஃது 'அளபிறந் துயிர்த்தலும்' (எழு-௩௩) என்னுஞ் சூத்திரத்தோடு ஆண்டு மாட்டெறியுமாற்றான் உணர்க. இன்னுங் குறிலும் நெடிலும் மூவகையினமும் ஆய்தமும் வண் ணத்திற்கும் இவ்வதிகாரத்திற்கும் ஒப்பக் கூறியன. குறை வும் இரண்டற்கும் ஒக்கும். கூட்டமும் பிரிவும் மயக்கமும் இவ்வதிகாரத்திற்கே உரியனவாகக் கூறியன. 'அம்மூவாறும்' (எழு-௨௨) என்னுஞ் சூத்திர முதலியனவற்றான் எழுத்துக் கள் கூடிச் சொல்லாமாறு கூறுகின்றமையிற் சொல்லதிகாரத் திற்கும் இலக்கணம் ஈண்டுக் கூறினாராயிற்று. இங்ஙனம் மூன் றதிகாரத்திற்கும் இலக்கணங் கூறுதலின் இவ்வோத்து நூலி னது இலக்கணங் கூறியதாயிற்று. நூலென்றது தொல்காப் பிய மென்னும் பிண்டத்தை. இவ் வோத்திலக்கணங்களாம் எழுத்துக்களது பெயரும் முறையுந் தொகையும் அளவுங் குறைவுங் கூட்டமும் இனமும் மயக்கமுமாம். ஏனைய இவ் வதிகாரத்துள் ஏனையோத்துக்களுள் உணர்த்துப.

அற்றேல் அஃதாக, இத் தலைச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின் எழுத்துக்களது பெயரும் முறையுந் தொகையும் உணர்த்துத னுதலிற்று.

**இதன் பொருள் :** எழுத்தெனப்படுப—எழுத்தென்று சிறப்பித்துச் சொல்லப்படுவன, அகரமுதல் னகரவிறுவாய் முப்பஃதென்ப—அகரம் முதல் னகரம் ஈறாகக் கிடந்த முப்பதென்று சொல்லுவர் ஆசிரியர், சார்ந்துவரல் மரபின் மூன்றலங்கடையே—சார்ந்துவருதலைத் தமக்கு இலக்கணமாகவுடைய மூன்றும் அல்லாத இடத்து; என்றவாறு.

எனவே, அம்மூன்றுங் கூடியவழி முப்பத்துமூன்றென்ப. அ-ஆ-இ-ஈ-உ-ஊ-எ-ஏ-ஐ-ஒ-ஓ-ஔ-க்-ங்-ச்-ஞ்-ட்-ண்-த்-ந்-ப்-ம்-ய்-ர்-ல்-வ்-ழ்-ள்-ற்-ன் எனவரும். எனப்படுவ வென்று சிறப்பித் துணர்த்துதலான் அளபெடையும் உயிர்மெய்யும் இத்துணைச் சிறப்பில; ஓசையுணர்வார்க்குக் கருவியாகிய வரிவடிவுஞ் சிறப்பிலா எழுத்தாகக் கொள்ளப்படும்.

அகரம் முதலாதல் ஆரியத்திற்கும் ஒக்குமேனும் ஈண்டுத் தமிழெழுத்தே கூறுகின்றாரென்பது உணர்தற்கு னகாரவிறுவா யென்றார்.

படுப, படுவ. படுபவென்பது படுத்தலோசையால் தொழிற் பெயராகக் கூறப்படும். பகரமும் வகரமும் ஈண்டு நிற்றற்குத் தம்முள் ஒத்த உரிமையவேனும் எழுத்தெனப்படுவவெனத் தூக்கற்று நிற்குஞ் சொற்சீரடிக்குப் படுபவென்பது இன்னோசைத்தாய் நிற்றலின் ஈண்டுப் படுபவென்றே பாடம் ஓதுக. இஃது அன்பெறாத அகரவீற்றுப் பலவறிசொல்

அகர னகரமெனவே பெயருங் கூறினார்.

எழுத்துக்கட்கெல்லாம் அகரம் முதலாதற்குக் காரணம் 'மெய்யினியக்க மகரமொடு சிவணும்' (எழு-௪௬) என்பதனாற் கூறுப. வீடுபேற்றிற்கு உரிய ஆண்மகனை உணர்த்துஞ் சிறப்பான் னகரம் பின்வைத்தார். இனி எழுத்துக்கட்குங் கிடக்கை முறை யாயினவாறு கூறுதும்.

குற்றெழுத்துக்களை முன்னாகக் கூறி அவற்றிற்கு இனமொத்த நெட்டெழுத்துக்களை அவற்றின் பின்னாகக் கூறினார், ஒருமாத்திரை கூறியே இரண்டுமாத்திரை கூறவேண்டுதலின். அன்றி இரண்டை முற்கூறினாலோவெனின், ஆகாது; ஒன்று நின்று அதனோடு பின்னரும் ஒன்று கூடியே இரண்டாவதன்றி



இரண்டென்பதொன்று இன்றாதலின். இதனான் ஒன்றுதான் பலகூடியே எண் விரிந்ததென்று உணர்க.

இனி, அகரத்தின் பின்னர் இகரம் எண்ணும் பிறப்பும பொருளும் ஒத்தலின் வைத்தார். இகரத்தின்பின்னர் உகரம் வைத்தார், பிறப்பு ஒவ்வாதேனும் 'அ-இ-உ அம் மூன்றுஞ் சுட்டு' (எழு-௩௧) எனச் சுட்டுப்பொருட்டாய் நிற்கின்ற இனங் கருதி. அவை ஐம்பாற் கண்ணும் பெரும்பான்மை வருமாறு உணர்க. எகரம் அதன்பின் வைத்தார், அகர இகரங்களோடு பிறப்பு ஒப்புமைபற்றி. ஐகார ஔகாரங்கட்கு இனமாகிய குற்றெழுத்து இன்றேனும் பிறப்பு ஒப்புமைபற்றி ஏகார ஓகாரங்களின் பின்னர் ஐகார ஔகாரம் வைத்தார். ஒகரம் நொ என மெய்யோடு கூடி நின்றல்லது தானாக ஓரெழுத் தொருமொழி யாகாத சிறப்பின்மை நோக்கி ஐகாரத்தின்பின் வைத்தார். அ-இ-உ-எ என்னும் நான்கும் அக்கொற்றன் இக்கொற்றன் உக்கொற்றன் எக்கொற்றன் என மெய்யோடு கூடாமல் தாம் இடைச்சொல்லாய் நின்றாயினும் மேல் வரும் பெயர்களோடு கூடிச் சுட்டுப்பொருளும் வினாப்பொருளும் உணர்த்தும். ஒகரம் மெய்யோடு கூடியே தன் பொருள் உணர்த்துவதல்லது தானாகப் பொருளுணர்த்தாதென்று உணர்க. இன்னும் அ-ஆ-உ-ஊ-எ-ஏ-ஒ-ஓ-ஔ என்பன தம்முள் வடிவு ஒக்கும். இ-ஈ-ஐ தம்முள் வடிவு ஒவ்வா. இன்னும் இவை அளபெடுக்குங்கால் நெட்டெழுத்தோடு குற்றெழுத்திற்கு ஓசை இயையுமாற்றானும் உணர்க. இனிச் சுட்டு நீண்டு ஆகார ஈகார ஊகாரங்களாதலானும் பொருள் ஒக்கும். புணர்ச்சி ஒப்புமை உயிர்மயங்கியலுட் பெறுதும். இம்முறை வழுவாமல் மேல் ஆளுமாறு உணர்க.

இனிக் ககார ஙகாரமுஞ் சகார ஞகாரமும் டகார ணகார முந் தகார நகாரமும் பகார மகாரமுந் தமக்குப் பிறப்புஞ் செய்கையும் ஒத்தலின் வல்லொற்றிடையே மெல்லொற்றுக் கலந்து வைத்தார். முதனாவும் முதலண்ணமும் இடைநாவும் இடையண்ணமும் நுனிநாவும் நுனியண்ணமும் இதழியைதலு மாகிப் பிறக்கின்ற இடத்தின் முறைமை நோக்கி அவ்வெழுத் துக்களைக் க-ச-ட-த-ப-ங-ஞ-ண-ந-ம-ன வென இம்முறையே

வைத்தார். பிறப்பு ஒப்புமையானும் ணகாரம் டகாரமாய்த் திரிதலானும் றகாரமும் னகாரமுஞ் சேர வைத்தார். இவை தமிழெழுத்தென்பது அறிவித்தற்குப் பின்வைத்தார். இனி இடையெழுத்துக்களில் யகாரம் முன் வைத்தார். அஃதும் உயிர்கள்போல மிடற்றுப்பிறந்த வளி அண்ணம் உற்று அடையப் பிறத்தலின். ரகாரம் அதன்பின் பிறப்பு ஒவ்வாதேனுஞ் செய்கை ஒத்தலின் அதன்பின் வைத்தார். லகாரமும் வகாரமுந் தம்மிற் பிறப்புஞ் செய்கையும் ஒவ்வாவேனுங் கல்வலிது சொல்வலிது என்றாற்போலத் தம்மிற் சேர்ந்து வருஞ் சொற்கள் பெரும்பான்மையென்பதுபற்றி லகாரமும் வகாரமுஞ் சேர வைத்தார். ழகாரமும் ளகாரமும் ஒன்றானும் இயைபிலவேனும் 'இடையெழுத்தென்ப யரல வழள' (எழு-உக) என்றாற் சந்தவின்பத்திற்கு இயைபுடைமை கருதிச் சேர வைத்தார்போலும்.

அகரம் உயிரகரமும் உயிர்மெய்யகரமுமென இரண்டு. இஃது ஏனை யுயிர்கட்கும் ஒக்கும். எனவே, ஓருயிர் பதினெட்டாயிற்று.

இவ்வெழுத்தெனப்பட்ட ஓசையை அருவென்பார் அறியாதார். அதனை உருவென்றே கோடும். அது செறிப்பச் சேறலானுஞ், செறிப்ப வருதலானும், இடையெறியப்படுதலானுஞ், செவிக்கட்சென்று உறுதலானும், இன்ப துன்பத்தைச் செய்தலானும், உருவும் உருவுங்கூடிப் பிறத்தலானுந், தலையும் மிடறும் நெஞ்சுமென்னும் மூன்றிடத்தும் நிலைபெற்றுப் பல்லும் இதழும் நாவும் மூக்கும் அண்ணமும் உறப் பிறந்துமென்றமையானும் உருவேயாம். அருவேயாயின் இவ்விடத்திற் கூறியன இன்மை உணர்க. அல்லதூஉம், வன்மை மென்மை இடைமையென்று ஓதியமையானும் உணர்க. உடம்பொடு புணர்த்தலென்னும் இலக்கணத்தான் இவ்வோசை உருவாதல் நிலைபெற்றதென்று உணர்க. அதற்குக் காரணமும் முன்னர்க் கூறினாம்.

இவ்வெழுத்துக்களின் உருவிற்கு வடிவு கூறாராயினர், அது முப்பத்திரண்டு வடிவினுள் இன்ன எழுத்திற்கு இன்ன வடிவெனப் பிறர்க்கு உணர்த்துதற்கு அரிதென்பது கருதி. அவ்வடிவு ஆராயுமிடத்துப் பெற்றபெற்ற வடிவே தமக்கு வடிவாம்,



குழலகத்திற் கூறிற் குழல்வடிவுங் குடத்தகத்திற் கூறிற் குடவடிவும் வெள்ளிடையிற் கூறின் எல்லாத்திசையும் நீர்த்தரங்கமும்போல.

'எல்லா மெய்யு முருவுரு வாகி' (எழு-கஎ) எனவும் 'உட்பெறு புள்ளி யுருவா கும்மே' (எழு-கச) எனவும் 'மெய்யி னியற்கை புள்ளியொடு நிலையல்' (எழு-கரு) எனவுஞ் சிறுபான்மை வடிவுங் கூறுவர். அது வட்டஞ் சதுரம் முதலிய முப்பத்திரண்டனுள் ஒன்றை உணர்த்தும். மனத்தான் உணரும் நுண்ணுணர்வு இல்லோரும் உணர்தற்கு எழுத்துக்கட்கு வேறு வேறு வடிவங்காட்டி எழுதப்பட்டு நடத்தலிற் கட்புலனாகிய வரிவடிவும் உடையவாயின. பெரும்பான்மை மெய்க்கே வடிவு கூறினார், உயிர்க்கு வடிவின்மையின். 'எகரவொகரத் தியற்கையுமற்றே' (எழு-கசு) எனச் சிறுபான்மை உயிர்க்கும் வடிவு கூறினார். (க)

குறிப்பு:

இனைத்து - இவ்வளவிற்று. வடிவு என்றது ஒலிவடிவை. குறைவு என்றது மாத்திரைக் குறுக்கத்தை. கூட்டம் - உயிரும் மெய்யும் கூடல். பிரிவு - கூடிய உயிரும் மெய்யும் பிரிந்து நிற்றல். ஒன்று பலவாதல் - ஓரெழுத்தாய் நின்றன பிரிந்து பலவாதல். அஃதாவது 'குன்றேருமா' என்புழி மாவின் முன் நின்ற 'ரு' என்னும் ஓரெழுத்தே, 'குன்றேறு ஆமா' எனப் பிரிப்புழி 'று - ஆ' எனப் பலவாதல். இதனை, இவ்வதிகாரத்து கசுக-ம் சூத்திரத்தாலறிக.

திரிந்ததன் றிரிபு அதுவென்றலாவது:--- நிலைமொழி வருமொழிகளில் யாங்காயினும் ஓரெழுத்திற்குத் திரிபு கூறி அம்மொழிகளுள் ஒன்றற்கு மீளவுந் திரிபு கூறுங்கால் அத்திரிபெழுத்து [திரியப்பட்ட எழுத்து] மொழியை யெடுத்துக் கூறாமல் திரியப்பட்டவெழுத்து மொழி அத்திரிந்த எழுத்து மொழியுமாம் என்னும் நயம்பற்றி அத்திரிந்த எழுத்து மொழியையே யெடுத்துப்புணர்ச்சிகூறல். உதாரணம் உருபியலில், 'நீயெ னொருபெயர் நெடுமுதல் குறுகும் - ஆவயி னகர மொற்றாகும்மே' என்னுஞ் சூத்திரத்தால் 'நீ' 'நின்' எனத் திரியுமெனக் கூறி மீளவும் அந்த 'நீ' என்பதற்குப் பொருட்புணர்ச்சி விதி கூறுங்கால் முற்கூறிய 'நின்' என்னும் திரிபு மொழியை யெடுத்துக் கூறாமல், 'நின்' எனத் திரிந்ததும் 'நீயே' என்பது பற்றி அதனையே யெடுத்து 'நீயெ னொருபெய ருருபிய னிலையும்' எனக் கூறல் காண்க. இன்னும் குற்றியலுகரப் புணரியலில் 'மூன்று மாறும் நெடுமுதல் குறுகும்' என்ற ஆசிரியர், 'மூன்ற னொற்றே பகார மாகும்.' எனக் கூறுதலும் 'ஆறென் கிளவி முதனீடும்மே' எனக் கூறுதலும் அன்ன

வாதல் உணர்க. இன்னும், புள்ளிமயங்கியலில், லகரவீற்று மொழிகட்குத் திரிபு கூறுங்கால் 'அல்வழி யெல்லா முறழென மொழிப' எனக் கூறி லகரம் றகரமாகுமெனக் கூறிய ஆசிரியர் மீளவும் அவற்றிற்குத் திரிபு கூறுங்கால் 'தகரம் வரும்வழி யாய்தம் நிலையலும்' என்னுஞ் சூத்திரத்தால் லகரம் ஆய்தமாகத் திரியுமென்று திரிந்த மொழியீற்றையே [லகரத்தையே] எடுத்துக் கூறலுமதுவாம். இனி 'லனவென வரூஉம் புள்ளி முன்னர்த் தநவெனவரிற் றனவா கும்மே' என்பதனால் தகரம் றகரமாகத் திரியுமென்று கூறிய ஆசிரியர், மீள லகரத்திற்குத் திரிபு கூறுங்கால் றகரமென்னுந் திரிபெழுத்து மொழியை எடுத்துக் கூறாமல் 'தகரம் வரும்வழி' எனத் திரிந்த எழுத்து மொழியை யெடுத்துக் கூறலும் அதுவேயாம். நன்னூலுரையுள் மயிலைநாதர் 'திரிந்ததன் றிரிபு பவ்வுமா மொரோவழி' என்று கூறலின் இத் திரிந்ததன்றிரிபு அதுவென்பன முதலியன முன் யாதோ ஒரு நூலிலே சூத்திரங்களாயிருந்தனபோலும்.

திரிந்ததன் றிரிபு பிறிதென்றலாவது :-- ஓரீறு பிறிதோரீறாகத் திரிந்து அவ்வாறே [பிறிதீறாகவே] நின்று புணருமென்றல். அது மரமென்பதனோடு அடியென்னும் வருமொழி புணருங்கால் மகரங் கெட்டு அகரவீறாகவே (பிறிதீறாகவே) நின்று புணருதல் போல்வது. இங்ஙனமே 'னகரவீறு'ம் றகரமாகத் திரிந்து பிறிதீறாகவே நின்று புணர்தல் காண்க.

திரிந்ததன் திரிபு அதுவும் பிறிதுமென்றலாவது :-- ஓரீறு வேறோரெழுத்துப் பெற்று பிறிதீறாக நின்று புணருமெனக் கூறி, அத்திரிபீற்றிற்காயினும் அத்திரிபீற்றோடு புணரும் வருமொழிக்காயினும் மீளவும் ஒன்று விதிக்கவேண்டி, அத்திரிபீற்றை யெடுத்துப் புணர்க்குங்கால், அத்திரிபீறு திரிந்த ஈற்றோடும் (இயல்பீற்றோடும்) கூடிநிற்றலின், அதுவும் (இயல்பீறும்) பிறிதும் (விதியீறும்) ஆயே நின்று புணருமென்றல். அது, ஆறனுருபோடும் நான்கனுருபோடும் புணருங்கால் நெடுமுதல் குறுகிநின்ற தம், நம், எம், தன், நின், என் என்னும் மொழிகளின் ஈற்றிலுள்ள மெய்கள் அகரம் பெற்றுப் புணருமென, "ஆற னுருபினு நான்க னுருபினுங் - கூறிய குற்றொற் றிரட்டலில்லை - யீறுகு புள்ளி யகரமொடு நிலையு - நெடுமுதல் குறுகு மொழிமுன்னன" என்னுஞ் சூத்திரத்தால் விதித்த ஆசிரியர், மீள அவ்வகரம் பெற்ற தம முதலிய மொழிகளோடு அது உருபை வைத்துப் புணர்த்துங்கால் அம்மொழிகளை மகரம் முதலிய புள்ளியீறும் (அதுவும்) அகரவீறும் (பிறிதும்) ஆகிய இரண்டுமாயே, "ஆறனுருபி னகரக்கிளவி யீறாககர முனைக்கெடுதல் வேண்டும்" என்னுஞ் சூத்திரத்துள், ஈறாககரம் என வைத்துப் புணர்த்தல் காண்க. ஈறாககரம் - புள்ளியீற்றுக்களுக்கு ஈறாகிய அகரம் என்பது பொருள். தம முதலிய என்றது தம முதலிய புள்ளியீற் றகரமென்று புள்ளியீறு கூறினமையினானே அதுவும், அவற்றின்



ஈறாகிய அகரம் என்றதனானே பிறிதுந் தோன்றக் கூறினமை காண்க. இன்னும் 'வெரிநெ னிறுதி முழுதுங் கெடுவழி - வருமிட னுடைத்தே மெல்லெழுத் தியற்கை' என்னுஞ் சூத்திரத்து 'வெரிநு' என்று சொல்லவேண்டியதை 'வெரிந்' என்றதனானே திரிந்ததன் றிரிபு அது வென்பதும், 'முழுதும் கெடுவழி' என்றதனாலே பிறிதென்பதும் தோன்றக் கூறியமையானே அதுவும்; திரிந்ததன்திரிபு அதுவும் பிறிதும் என்றலாம். இன்னும், இத்திரிபுகள் பிறவாறு வருவன வுளவேனு மறிந்துகொள்க.

நிலையிற்றென்றல் என்றது - நிலைமொழியும் வருமொழியும் பொருட்பொருத்தமுறப் புணரும் தழுவுதொடர்ப் புணர்ச்சி விதிகளை. 'பொற்குடம்' என்பதுபோல வருந்தொடர்மொழிகளில் நிலைமொழியும் வருமொழியும் பொருட்பொருத்தமுற ஒன்றை ஒன்று தழுவிப் புணர்ந்து நிற்றலின் ஆண்டுக் கூறுஞ் செய்கை என்றும் நிலையுடைமையின் நிலையிற்றென்றல் என்றார். பதச்சேதகாலத்துந் நிலைத்தலானே நிலையிற்றென்றார்.

நிலையாதென்றல் என்றது - நிலைமொழியும் வருமொழியும் பொருட்பொருத்தமுறப் புணராத தழாஅத்தொடர்ப் புணர்ச்சி விதிகளை. முன்றில் என்பதுபோல வரும் தொடர்மொழிகளில் நிலைமொழியும் வருமொழியும் பொருட்பொருத்தமுற ஒன்றை ஒன்று தழுவிப் புணர்ந்து நில்லாமையின் [முன்றில் என்பது இல் முன் எனப் பொருள்கொள்ளுங்கால் நிலைமொழியும் வருமொழியுந் தம்முள் இயையாமையின்] ஆண்டுக் கூறுஞ் செய்கை என்றும் நிலையாமையின் நிலையாதென்றல் என்றார். "மாயிரு மருப்பிற் பரலவ லடைய இரலைதெறிப்ப" என்பதிலும் மருப்பின் என்பது பரலோடியையாது இரலையோடியைதலின் அங்ஙனம் இயையுங்கால் ஆண்டு னகரம் றகரமாய்த் திரிந்த செய்கை நிலைபெருமையின் [இலவாதலின்] அதுபோல்வனவும் அன்னவேயாம். இதனை "மருவின் றொகுதி மயங்கியன் மொழியு - முரியவை யுளவே புணர்நிலைச் சுட்டே" என்னும் [எழு-ககக] சூத்திரம் நோக்கி உணர்க. பதச்சேதகாலத்தும் அந்துவயகாலத்தும் நிலையாமையானே நிலையாதென்றார்.

நிலையிற்றும் நிலையாதுமென்றல் - ஓரிடத்தில் பெற்ற புணர்ச்சிநிலை அதுபோன்ற வேறோரிடத்தில் நிலைபெருதென்றல். அது 'பலாஅக் கோடு' எனக் குறியதன் முன்னர் நின்ற ஆகாரவீறு பெற்ற அகரத்தை அதுபோன்ற இராவென்கிளவி பெருதென விலக்கல் போல்வன. குறியதன் முன்னர் நின்ற ஆகாரவீறு அகரம்பெறும் என்ற இப்புணர்ச்சி விதி பலா முதலிய ஆகாரவீற்றில் நிலைபெற்றும் அதுவே ஈறாய இராவென்கிளவியில் நிலைபெருதும் வருதலின் நிலையிற்றும் நிலையாதுமென்றல் என்றார்.

## கருவி

கருவி - செய்கைக்குரிய கருவி. இக்கருவி செய்கைக்கு நேரே கருவியாவதும் பரம்பரையாற் கருவியாவதும் என இருவகைத்து

அகக்கருவியும் அகப்புறக்கருவியும் நேரே கருவியாவன. ஏனைய பரம்பரையாற் கருவியாவன. நான்மரபு பிறப்பியல்களிற் கூறும் இலக்கணங்களும் சொற்குக் கருவியாகுமாதலால் செய்கைக்குக் கருவியாதலின் பரம்பரையாற் கருவியாயின.

அகக்கருவியாவது - செய்கைப்படுதற்குரிய நிலைமொழியீற்றெழுத் துப்பற்றி வரும் விதிகளைக் கூறுவது. அஃது "எகர வொகரம் பெயர்க் கீறாகா" என்ருற் போல்வது. இது செய்கைக்குரிய ஈற் றெழுத்துப்பற்றிய விதியாதலின் அகக்கருவியாயிற்று.

"அளவிற்கு நிறையிற்கு மொழிமுதலாகி - யுளவெனப்பட்ட வொன்பதிற் றெழுத்தே - யவைதாம் - க ச த ப வென்ரு ந ம வ வென்ரு - வகர வுகரமோ டவையென மொழிப" என்பதும் அகக் கருவியாகும்; செய்கைக்கு அண்ணிய கருவியாதலின். முதனிலை இறுதிநிலைகளும் அகக்கருவியாகும்; மொழிக்கு முதனிற்கும் எழுத்துக் களும் ஈற்றினிற்கு மெழுத்துக்களுஞ் செய்கைக் குபகாரப்படுதலின்.

அகப்புறக்கருவியாவது - புணர்ச்சி இலக்கணமும் புணர்ச்சிக் குரிய திரிபுகள் இவையென்பதும், இயல்பும், புணர்ச்சிவகையும், நிலைமொழிகள் செய்கைவிதியிற் பெறுஞ் சாரியைகள் வருமொழி யொடு புணருங்கா லடையுந் திரிபுகளுமாகி இருமொழிகளும் செய் கைப்படுதற் கேற்றவாய்வரும் விதிகளைக் கூறுவது.

புறக்கருவியாவது - செய்கைக்குரிய நிலைமொழி வருமொழிக ளாய் நிற்குமொழிகளின் மரபு கூறுவது. அது மொழிமரபு. அது செய்கைக்குரிய கருவிவிதி கூருது செய்கைப்படுதற்குரிய மொழிகளின் மரபு கூறுதலின் புறக்கருவியாயிற்று.

புறப்புறக்கருவியாவது - மொழிகளாதற்குரிய எழுத்துக்களது இலக்கணமும் பிறப்புங் கூறுவது. அது நான்மரபும் பிறப்பியலுமாம். அவை செய்கைக்குரிய புறக்கருவியாகிய மொழிகளாதற்குரிய எழுத்துக்களின் இலக்கணமும் பிறப்புங் கூறுதலின் புறப்புறக் கருவியாயின. இங்ஙனமே நால்வகைக் கருவியின் இலக்கணமு மறிந்துகொள்க.

எழுத்துக்கள் மொழியாகி நின்று பின் செய்கை அடைதலின் அவற்றி னிலக்கணங்களைச் செய்கைக்குப் புறப்புறக்கருவியென் றும், அம்மொழிகளே, நிலைமொழி வருமொழியாக நின்று செய்கை பெறுதலின் மொழிகளினிலக்கணங்களைப் புறக்கருவியென்றும், அங்ங னம் மொழிகள் புணருங்கால் நிலைமொழியீறும் வருமொழிமுதலு மடைகின்ற திரிபிலக்கணங்களையும் இயல்பையும், நிலைமொழி பெறுஞ் சாரியைகள் இவை என்பதையும், அவற்றின் திரிபு முத லியவற்றையுங் கூறுதலின் புணரியலை அகப்புறக்கருவியென்றும், நிலைமொழியீற்றில் நிற்றற்குரிய எழுத்து விதி முதலியவைகளைக்



கூறும் விதிகளை அகக்கருவியென்றும் வகுத்தனர் என்க. இவற் றுள் எழுத்துக்களின் இலக்கணமும் மொழியி னிலக்கணமும் பரம் பரையாற் கருவியாதல் காண்க. கருவியொன்றே அகம், அகப்புறம், புறம், புறப்புறம் எனச் செய்கை நோக்கி வகுக்கப்பட்டது.

செய்கை

இனிச் செய்கை நான்கனுள் அகச்செய்கையாவது - நிலைமொழி யீறு இன்ன இன்னவாறு முடியுமெனக் கூறுவது. அது பொற் குடம் என்ருற்போல்வது. இது ஈற்றெழுத்துக்கள் படுஞ் செய்கை விதியாதலின் அகமாயிற்று. இதுபற்றியே தொகைமரபு முதலிய ஓத்தினுள் இன்னஈறு இன்னவாறு முடியுமெனச் செய்கை கூறு வனவெல்லா மகச்செய்கையென்ருர் உரைகாரர். செய்கை யோத் துக்களை அகத்தோத்தென்பதும் இதுபற்றியேயாம்.

அகப்புறச்செய்கையாவது - நிலைமொழியீறு பெறும் முடிபன்றி நிலைமொழி யீறுபெற்று வரும் எழுத்து முதலியவற்றின் முடிபு கூறுவது. அது புள்ளியீற்றுள் உகரம் பெறுமென விதித்த புள்ளி யீறுகள் பின் அவ்வுகரம் பெருவென விலக்குதல்போல்வன. இது ஈற்றெழுத்தின் விதியன்றி ஈற்றெழுத்துப்பெற்று வரும் எழுத்தைப் பற்றிய விதியாதலின் அகப்புறமாயிற்று. இதுபற்றியே "உகர மொடு புணரும் புள்ளி யிறுதி - எகரமு முயிரும் வருவழி யியற்கை" என்ருற் போல்வன அகப்புறச் செய்கை என்ருர் உரைகாரர். "வேற்றுமைக் குக்கெட வகரம் நிலையும்" எனவும் "இராவென் கிளவிக் ககர மில்லை" எனவும் வருவனவுமவை.

புறச்செய்கையாவது - வருமொழிச்செய்கை கூறுவது. இது நிலைமொழிச் செய்கையன்றி வருமொழிச் செய்கையாதலின் புறச் செய்கையாயிற்று. அது பொன்னரிது, பொன்றீது என்ருற்போல வருவது. இதுபற்றியே "லளவென வருஉம் புள்ளி முன்னர்த் - தனவென வரிற் றனவா கும்மே" என்ருற்போல்வன புறச்செய்கை யென்ருர் உரைகாரர்.

புறப்புறச்செய்கையாவது - நிலைமொழியீறும் வருமொழிமுதலும் செய்கைபெருதுநிற்ப அவ்விரண்டையும் பொருத்துதற்கு இடையில் உடம்படுமெய்போன்ற வோரெழுத்து வருவது போல்வது. அது தீயழ கிது என்ருற் போல்வது. இதுபற்றியே "எல்லா மொழிக்கு முயிர்வரு வழியே - யுடம்படு மெய்யி னுருவுகொளல் வரையார்" என்ருற் போல்வன புறப்புறச்செய்கை யென்ரு ருரைகாரர்.

நிலைமொழியீறுபற்றி வருவதை அகச் செய்கையென்றும், அவ் வீறுபற்ருது அவ்வீறு பெற்றுவரும் எழுத்தைப்பற்றி வருவது அவ் வீற்றுக்குப் புறமாதலின் அதனை அகப்புறமென்றும், வருமொழிச் செய்கைபற்றி வருஞ்செய்கை நிலைமொழியீறும் அது பெற்றுவரும் எழுத்தும் பற்றிவருஞ் செய்கையன்றி, அவற்றிற்குப் புறமாதலின்

அதனைப் புறச்செய்கை யென்றும், நிலைமொழியீறும் வருமொழி முதலும் பற்றாது வருஞ் செய்கை அவ்விரண்டற்கும் புறமாதலின் அதனைப் புறப்புறமென்றும் கூறினர் என்க.

கு - பு: இங்கே கூறிய கருவியுஞ் செய்கையும் எழுத்ததிகாரத்துக்கு மாத்திரமே உரையாசிரியராலும் நச்சினார்க்கினியராலும் உரைக்கப்பட்டமையை அவ்விருவருரையுள்ளும் நோக்கித் தெளிந்துகொள்க.

எண்ணுதல்-பஞ்சினை நொய்தாக்கல், மூன்றுறுப்பு-சூத்திரம், ஓத்து, படலம். ஆண்டு என்றது செய்யுளியலை. வண்ணம் என்றது-செய்யுளுக்குரிய வண்ணங்களை. அவை பாவண்ணம் முதலியன. அந்நிலைப் பொருளதிகாரம் ருஉ௬-ம் சூத்திரம் முதலியவற்றானுணர்ந்துகொள்க.

உடம்பொடு புணர்த்தலென்னு மிலக்கணத்தா லிவ்வோசை யுருவாத லிலைபெற்றதென்று - பழனிமலையிலிருக்கும் குமரன் திருப்பரங்குன்றம் திருச்செந்தூர் முதலிய இடங்களினு மிருப்பானென்றல், பழனிமலையும் அவனுக்கு ஓரிடமாதல் தோன்றுதல்போல, எழுத்துக்களுக்குப் பிறப்பிடங்களும் வன்மை மென்மைகளுஞ் சொல்லி அதன்கண் உருவுடையவென்பதையும் பெறவைத்தமையான.

---

உ. அவைதாங்
குற்றிய லிகரங் குற்றிய லுகர
மாய்தமென்ற
முப்பாற் புள்ளியு மெழுத்தோ ரன்ன.

இது மேற் சார்ந்துவருமென்ற மூன்றிற்கும் பெயரும் முறையும் உணர்த்துதனுதலிற்று.

**இதன் பொருள்:** அவைதாம்—மேற் சார்ந்துவருமெனப் பட்டவைதாம், குற்றியலிகரங் குற்றியலுகரம் ஆய்தம் என்ற முப்பாற்புள்ளியும்—குற்றியலிகரமுங் குற்றியலுகரமும் ஆய்தமுமென்று சொல்லப்பட்ட மூன்று கூற்றதாகிய புள்ளிவடிவினவாம்; எழுத்தோரன்ன—அவையும் முற்கூறிய முப்பதெழுத்தோடு ஒருதன்மையாய் வழங்கும் என்றவாறு.

முற்கூறிய இரண்டும் உம்மை தொக்குநின்றன. இகர உகரங் குறுகினின்றன, விகாரவகையாற் புணர்ச்சி வேறுபடுதலின். இவற்றை இங்ஙனங் குறியிட்டாளுதல் எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது. சந்தனக்கோல் குறுகினாற் பிரப்பங்கோ லாகாது அது போல உயிரது குறுக்கமும் உயிரேயாம். இவற்றைப் புணர்ச்சி வேற்றுமையும் பொருள் வேற்றுமையும்பற்றி வேறோர் எழுத்தாக வேண்டினர்.✓

இவற்றுட் குற்றியலுகரம் நேர்பசையும் நிரைபசையுமாகச் சீர்களைப் பலவாக்குமாறு செய்யுளியலுள் உணர்க.

ஆய்தமென்ற ஓசைதான் அடுப்புக்கூட்டுப்போல மூன்று புள்ளிவடிவிற்றென்பது உணர்த்தற்கு ஆய்தமென்ற முப்பாற் புள்ளியுமென்றார் அதனை இக்காலத்தார் நடுவு வாங்கியிட்டெழு

---

2. இரண்டும் என்றது குற்றியலுகர குற்றியலிகரங்களை. அவை உம்மை தொக்குநின்றன என்றது குற்றியலுகரமும் குற்றிய லிகரமும் என உம்மைபெற்று நிற்கவேண்டியன அவ்வும்மைகள் தொக்குக் குற்றியலுகரம் குற்றியலிகரம் என நின்றன என்றபடி. குற்றியலுகரம் உயிரேற இடங்கொடுத்து நிற்றலும் முற்றியலுகரம் உயிரேற இடங் கொடாமையுமே அவ்விரண்டற்குமுள்ள வேறுபாடென்பது நச்சினார்க்கினியர் கருத்து. இதனால் குற்றியலுகரத்துக்கு முன்னும் முற்றியலுகரத்துக்கு முன்னும் உயிர் முதன்மொழி வருங்கால் அவை அடையும் புணர்ச்சி வேற்றுமை அறியப்படும். ஏனைக் கணம் வருங்காலும் அவை அடையும் புணர்ச்சி வேற்றுமைகளை அறிந்துகொள்க. வரகியாது என்புழி வரகு என்பதன் முன் யகர முதன்மொழி வந்தவிடத்து வரகு என்பதிலுள்ள உகரங் கெட்டு இகரம் விரிந்து குறுகி நின்றதாகலின் அவ்விகரம் குற்றியலிகரமெனப்படுமன்றி முற்றியலிகரமெனப்படாது. அதனால் இயல்பான இகரவீற்றுப் புணர்ச்சிக்கும் குற்றியலிகரப் புணர்ச்சிக்கும் உள்ள வேறுபா டறியப்படும்.

காது என்னுஞ் சொல்லை இதழ் குவித்துச் சொல்லுமிடத்து முற்றியலுகரமாம். அதற்குப் பொருள் கொல் என்பது. அதனை இதழ் குவியாமற் சொல்லுமிடத்துக் குற்றியலுகரமாம். அதற்குப் பொருள் காது என்னும் உறுப்பு. முருக்கு என்னுஞ் சொல் இதழ் குவித்துச் சொல்லுமிடத்து அழி எனவும் இதழ்குவியாமற் சொல்லுமிடத்து முருக்காகியமரமெனவும் பொருள்தரும். பிறவும் இவ்வாறே பொருள் வேற்றுமை உடையவாதல் அறிந்துகொள்க. குற்றியலுகரத்துக்கும் முற்றியலுகரத்துக்குமுள்ள பொருள் வேற்றுமை இவையே. அரசியாது என்புழி அரசி என்பதிலுள்ள இகரத்தை முற்றியலிகரமாகக் கொள்ளின் அதனை ஓர் இகரவீற்று உயர்திணைப் பெயராகக் கொள்ளவேண்டும். அங்ஙனங் கொள்ளுங்கால் அது யாது என்பதனோடு இயையாது. ஆதலின் அரசு என்பதே சொல்லும் பொருளும் என்பதும் அதிலுள்ள இகரங் குற்றியலிகர மென்பதும் பெறப்படும். படவே அரசி என்பதிலுள்ள இகரத்தை இயல்பாகக் கொள்ளுங்கால் இது பொருளாகுமெனவும் குற்றியலிகரமாகக் கொள்ளுங்கால் இது பொருளாகுமெனவும் அவ்விரண்டற்குமுள்ள பொருள் வேற்றுமை யறியப்பட்டவாறு காண்க. இன்னும் "சங்கந் தருமுத்தி யாம்பெற" என்னுந் திருக்கோவை

துப. இதற்கு வடிவு கூறினார், ஏனையொற்றுக்கள்போல உயி ரேறாது ஓசை விகாரமாய் நிற்பதொன்றாகலின். எழுத்தியல் தழா ஓசைகள்போலக் கொள்ளினுங் கொள்ளற்க என்றற்கு எழுத்தேயா மென்றார். இதனைப் புள்ளிவடிவிற்றெனவே ஏனை யெழுத்துக்களெல்லாம் வரிவடிவினவாதல் பெற்றாம்.

முன்னின்ற சூத்திரத்தாற் சார்ந்துவரல் மரபின் மூன்ற லங்கடையே எழுத்தெனப்படுப முப்பஃதென்ப என்றவை, சார்ந்து வரன் மரபின் மூன்றுமே சிறந்தன, ஏனைய முப்பதும் அவ் வாறு சிறந்திலவெனவும் பொருடந்து நிற்றலின், அதனை விலக்கிச் சிறந்த முப்பது எழுத்தோடு இவையும் ஒப்ப வழங்குமென் றற்கு எழுத்தோரன்ன என்றார்.

இப்பெயர்களே பெயர். இம்முறையே முறை. தொகை யும் மூன்றே. இம்மூன்று பெயரும் பண்புத்தொகை.

'அவைதாம்' 'ஆய்தமென்ற' என்பன சொற்சீரடி. (உ)

---

யார் செய்யுளடிக்குச் சிலேடைப் பொருள் கொள்ளும்பொழுது முத்து என்றும் முத்தி என்றும் பொருள்கொள்ளப்படும். கொள் ளுங்கால் முத்தி என்பதிலுள்ள இகரத்தைக் குற்றியலிகரமாகக் கொண்டு முத்து என்றும் முற்றியலிகரமாகக் கொண்டு முத்தி என் றும் பொருள்கொள்ளப்படுதலினாலே குற்றியலிகரம் முற்றியலிகரம் என்னும் இரண்டற்கும் உள்ள பொருள் வேற்றுமை நன்கறியப் படுதல் காண்க.

காது - நேர்பு அசை. வரகு - நிரைபு அசை. நடுவுவாங்கி யிட்டெழு தல் ∴ இப்படிப் புள்ளியிடாமல் ஃ இப்படி உள்வளைத்திட்டெழுதல். நடுவு - உள். வாங்கல் - வளைத்தல். எழுத்தியல் தழாஅஓசை - கட லொலி சங்கொலி போல்வன. முன்னின்ற சூத்திரமென்றது முத லாஞ் சூத்திரத்தை.

இச்சூத்திரத்துக்கு இவ்வாறு பொருள்கொள்ளாது பேராசிரியர் குற்றியலுகரமும் குற்றியலிகரமும் ஆய்தமுமென்ற முப்பாற் புள்ளி யெழுத்துக்களும் என்று பொருள் கூறுவர். அதனை வாராததனால் வந்தது முடித்தல் என்னும் உத்தி உரையுள் இச்சூத்திரத்தை எடுத் துக்காட்டி இம்மூன்றும் புள்ளியெழுத்துக்களென்று அவர் கூறுதலா னறிந்துகொள்க. இவரைத் தழுவிச் சிவஞான முனிவரும் தொல் - சூத் திர விருத்தியுள் இவ்வாறுகூறுவர். குற்றியலுகரமும் குற்றியலிகரமும் அக்காலத்துப் புள்ளிபெற்று வழங்கியதென்பது "குற்றிய லிகரமுங் குற்றியலுகரமு, மற்றவை தாமே புள்ளி பெறுமே" என்னும் சங்க யாப்புச் சூத்திரத்தானு மறியப்படும். [யாப் - விருத்தி - 27-ப் பக்கம்.]



௩. அவற்றுள், அ இ உ
எ ஒ என்னும் மப்பா லைந்து
மோரள பிசைக்குங் குற்றெழுத் தென்ப.

இது முற்கூறியவற்றுட் சிலவற்றிற்கு அளவுங் குறியும் உணர்த்துதனுதலிற்று.

**இதன் பொருள்:** அவற்றுள்—முற்கூறிய முப்பதெழுத் தினுள், அ-இ-உ-எ-ஒ என்னும் அப்பாலைந்தும்—அகர இகர உகர எகர ஒகரம் என்று கூறப்படும் அப்பகுதிகளைந்தும், ஓரளபு இசைக்குங் குற்றெழுத்தென்ப—ஒரோவொன்று ஓரளபாக ஒலிக்குங் குற்றெழுத்து என்னுங் குறியினையுடைய என்று கூறுவர் புலவர்; என்றவாறு.

இக்காரணப்பெயர் மேல் ஆளுமாறு ஆண்டு உணர்க.

தமக்கு இனமாயவற்றின்கணல்லது குறுமை நெடுமை கொள்ளப்படாமையின், அளவிற்பட்டு அமைந்தனவாங் குற் றெழுத்திற் குறுகி மெய் அரைமாத்திரை பெற்றதேனுங் குற்றெழுத்து எனப் பெயர் பெறாதாயிற்று, ஒரு மாத்திரை பெற்ற மெய் தமக்கு இனமாக இன்மையின். குற்றெழுத் தென்பது பண்புத்தொகை.

இனி இசைப்பதும் இசையும் வேறாக உணரற்க. அது பொருட்டன்மை.

'அவற்றுள்' 'அ-இ-உ' என்பன சொற்சீரடி. (௩)

---

3. இசைப்பது - எழுத்து. இசை - ஒலி. அது பொருட்டன்மை யென்றது - அந்தஇசைபொருளின் குணமென்றபடி. இங்கே பொருள் எழுத்து. அதன் குணம் ஒலி என்பதாம். எனவே எழுத்து வேறு இசை வேறு என்று உணரற்க என்றபடி, ஏன் அவ்வாறு கூறினாரெனின் ஓரளபிசைக்குங் குற்றெழுத்தென இசையை வேறாக வும் எழுத்தை வேறாகவும் ஆசிரியர் கூறியதனால் என்க.

இரண்டுமாத்திரை பெற்ற எழுத்தைநோக்கி ஒருமாத்திரை பெற்ற எழுத்துக் குற்றெழுத் தெனப்பட்டாற்போல ஒரு மாத்திரை பெற்ற குற்றெழுத்தை நோக்கி அரைமாத்திரை பெற்ற மெய்யெழுத்தும் குற் றெழுத் தெனப்படலாமேயெனின்? தமக் கினமாயவற்றின் கண் ணன்றே குறுமை நெடுமை கொள்வது; அக்குற்றெழுத்துத் தமக் கினமல்லாமையின் அங்ஙனம் கூறப்படாதாயிற்று. அன்றியும் ஒரு மாத்திரை பெற்ற மெய்கள் தமக்கினமாக இருப்பினும் அரை மாத்திரை பெற்ற மெய்களாகிய தாம் குற்றெழுத் தெனப்படலாம். அதுவு மின்மையின் குற்றெழுத்தெனப்படாவாயின என்றபடி.

ச. ஆ ஈ ஊ, ஏ ஐ
ஓ ஔ என்னு மப்பா லேழு
மீரள பிசைக்கு நெட்டெழுத் தென்ப.

இதுவும் அது.

**இதன் பொருள்:** ஆ-ஈ-ஊ-ஏ-ஐ-ஓ-ஔ என்னும் அப்பால் ஏழும்—ஆ-ஈ-ஊ-ஏ-ஐ-ஓ-ஔ என்று சொல்லப்படும் அக் கூற்றேழும், ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்து என்ப—ஓரோவொன்று இரண்டு மாத்திரையாக ஒலிக்கும் நெட்டெழுத்து என்னுங் குறியினையுடைய என்று கூறுவர் ஆசிரியர்; என்றவாறு.

எனவே, அளவுங் காரணக்குறியும் இங்ஙனம் உணர்த்தி மேல் ஆளுப. ஐகார ஔகாரங்கள் குறிய எழுத்தின் நெடியவாதற்குக் குற்றெழுத்தாகிய இனந் தமக்கின்றேனும் மாத்திரை யொப்புமையான் நெட்டெழுத் தென்றார்.

'ஆ ஈ ஊ' 'ஏ ஐ' என்பனவற்றைச் சொற்சீரடியாக்குக. (ச)

ரு. மூவள பிசைத்த லோரெழுத் தின்றே.

இஃது ஐயம் அகற்றியது; ஓரெழுத்து மூவளபாயும் இசைக்குங் கொல்லோவென்று ஐயப்படுதலின்.

**இதன் பொருள்:** ஓரெழுத்து மூவளபு இசைத்தலின்று—ஓரெழுத்தே நின்று மூன்று மாத்திரையாக இசைத்தலின்று; என்றவாறு.

எனவே, பல எழுத்துக் கூடிய இடத்து மூன்று மாத்திரையும் நான்கு மாத்திரையும் இசைக்கு மென்றவாறு.

எனவே, பெரும்பான்மை மூன்று மாத்திரையே பெறு மென்றார் புலவர். பல எழுத்தெனவே, நான்கு மாத்திரையும் பெறுதல் பெற்றும்.

---

4. காரணக்குறி - காரணப்பெயர் என்றது குற்றெழுத்து நெட்டெழுத்து என்னும் பெயரை. குறிய இசையையுடையதாகிய எழுத்து நெடிய இசையையுடையதாகிய எழுத்து என்பது கருத்து. குற்றெழுத்து, நெட்டெழுத்து என்பன பண்புத்தொகை. மேலாளுப என்றது நெட்டெழுத்தென மேலும் எடுத்தாளுதலை.



சா. நீட்டம் வேண்டி னவ்வள புடைய
கூட்டி யெழூஉத லென்மனார் புலவர்.

இது மாத்திரை நீளுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள்:** நீட்டம் வேண்டின்—வழக்கிடத்துஞ் செய்யுளிடத்தும் ஓசையும் பொருளும் பெறுதல் காரணமாக இரண்டு மாத்திரை பெற்ற எழுத்து அம்மாத்திரையின் மிக்கு ஒலித்தலை விரும்புவராயின், அவ்வளபு உடைய கூட்டி எழூஉதல் என்மனார் புலவர்—தாங் கருதிய மாத்திரையைத் தருதற்கு உரிய எழுத்துக்களைக் கூட்டி அம்மாத்திரைகளை எழுப்புகவென்று கூறுவர் ஆசிரியர்; என்றவாறு.

கூட்டியெழுப்புமாறு 'குன்றிசைமொழி' (எழு - சக) 'ஐ-ஔ வென்னும்' (எழு-சஉ) என்பனவற்றுள் எழுவகைத் தெனக் கூறுப.

**உதாரணம்:** ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஐஇ, ஓஒ, ஔஉ எனவரும். இவை மூன்று மாத்திரை பெற்றன. இவைதாம், 'நெட்டெழுத் தேழே யோரெழுத் தொருமொழி' (எழு-சா) என்ற அந்நெட்டெழுத்துக்களே அளபெடுத்தலிற் சொல்லாதல் எய்தின. இனி 'அளபெடை யசைநிலை யாகலு முரித்தே' (செய்யுளியல்-கஎ) என்னுஞ் செய்யுளியற் சூத்திரத்தான் எழுத்தாந்தன்மையும் எய்திற்று.

---

6. ஆஅ என்புழி ஆ என்னும் ஓரெழுத் தொருமொழியாகிய நெட்டெழுத்தே அளபெடுத்தலின் அவ்வளபெடை யெழுத்தும் அந் நெட்டெழுத்தோடு சேர்ந்து மொழியாமென்பார் ஓரெழுத் தொருமொழி யாகிய நெட்டெழுத்தே அளபெடுத்தலிற் சொல்லாத லெய்திற் றென்றார். எனவே அளபெடை எழுத்துக்குப் பொருளில்லையாயினும் அதற்கு முன்னுள்ள நெட்டெழுத்துக்குப் பொருளுண்மையின் அதன் பொருளே தனக்கும் பொருளாய்ச் சொல்லாந் தன்மை எய்தி நிற்கு மென்றபடி. சொல்லாந் தன்மையெய்தி நிற்றலாவது: தானு மம் மொழிக் குறுப்பெழுத்துப்போல நின்று அசையாகி அலகுபெறுதல். எழுத்தாந் தன்மையெய்தலாவது - அங்ஙனஞ் சொற்குறுப்புப்போல நின்ற அளபெடை யெழுத்துத், தமக்குமுன்னுள்ள நெட்டெழுத்தே அலகுபெறத் தாம் அலகுபெறாது (அஃதாவது ஆ அ என்புழி அளபெடை யெழுத்தாகிய அகரம் தனக்கு முன்னுள்ள நெட்டெழுத்தோடு சேர்ந்து அலகுபெற்று நேர்நேர் என நில்லாமல் அந்நெட்டெழுத்தே தனித்து அலகுபெற்று நேர் என நிற்பத் தான் அலகுபெறாது) அளபெடை

இதுதான் இயற்கை யளபெடையுஞ் செய்யுட்குப் புலவர் செய்துகொண்ட செயற்கை யளபெடையுமாய்ச் சொற்றன்மை எய்திநின்று அலகு பெறுமாறுங் குற்றியலிகரக் குற்றியலுகரங்கள்போல எழுத்தாந்தன்மை எய்தி அலகுபெறாது நிற்குமாறும் அச்சூத்திரத்தான் உணர்க. எனவே, எழுத்தாந் தன்மையும் உடைமையின் அளபெடையோடு கூடி எழுத்து நாற்பது என்றலும் பொருந்திற்று. ஒற்றளபெடை செய்யுட்கே வருதலின் ஈண்டுக் கூறாராயினர்.

அவ்வளபுடைய எனப் பன்மையாகக் கூறியவதனான் இவரும் நான்கு மாத்திரையுங் கொண்டார். என்னை? இவ்வாசிரியரை 'முந்துநூல் கண்டு' என்றாராகலின். மாபுராணத்து.

'செய்யுட்க ளோசை சிதையுங்கா லீரளபு
மையப்பா டின்றி யணையுமா மைநீரொற்
றின்றியுஞ் செய்யுட் கெடினொற்றை யுண்டாக்கு
குன்றுமே லொற்றளபுங் கொள்.'

என்ற சூத்திரத்தான் அவர்கொண்ட நான்கு மாத்திரையும் இவ்வாசிரியர்க்கு நேர்தல்வேண்டுதலின். அது 'செறாஅஅய் வாழிய நெஞ்சு' (குறள்-௧௨௦௦) 'தூஉஉத் தீம்புகைத் தொல்விசும்பு' 'பேஎஎர்த்துக்கொல்' 'இலாஅஅர்க்கில்லை தமர்' 'விராஅஅய்ச் செய்யாமை நன்று' 'மரீஇஇப்பின்னைப் பிரிவு' எனச் சான்றோர் செய்யுட்கெல்லாம் நான்கு மாத்திரை பெற்று

---

யெழுத்தென்று கொள்ளப்பட்டு நிற்றல். எனவே அது அளபெடை எழுத்தென்று நீக்கப்படுவதன்றி அசைக்குரிய எழுத்தாக வைத்து எண்ணப்படாது என்பது கருத்து. அளபெடை யசைநிலையாகலாவது - அளபெடையெழுத்து, தானுமோரசையாகிச் சீர்நிலை யடையாது, தமக்கு முன்னுள்ள நெட்டெழுத்தோடு சேர்ந்து ஓரசைநீர்கவே கொள்ளப்பட்டு நிற்றல்.

இயற்கையளபெடை குரீஇ, தோழீஇ என்பனபோல்வன. இவை வழக்கிற்குஞ் செய்யுட்கும் பொதுவாகலின் இயற்கையெனப் பட்டன. தோழீஇ என்பதைத் தொழீஇ என்றுகொள்வாரு முளர். [கலி-௧௦௧-ம் செய்யுட் குறிப்புப் பார்க்க.]

செயற்கையளபெடை புலவன் செய்யுளோசைநிறைத்தற் பொருட்டுத்தானே செய்துகொண்ட அளபெடை. அது ஓஒதல்வேண்டும் என்பதுபோல்வன. சொற்றன்மை யெய்திநிற்றலும் எழுத்தாந் தன்மை யெய்திநிற்றலும் முன் விளக்கப்பட்டன. அலகுபெறுதல்



நின்றன. அன்றி மூன்று மாத்திரை பெற்றனவேல் ஆசிரியத் தளை தட்டுச் செப்பலோசை கெடுமாயிற்று. இங்ஙனம் அளபெடாதுநின்று ஆசிரியத் தளைதட்டு நிற்பன கலிக்கு உறுப்பாகிய கொச்சகவெண்பாக்கள்; இவை அன்னவன்றென உணர்க.

கோட்டுநூறும் மஞ்சளுங் கூடியவழிப்பிறந்த செவ்வண்ணம்போல நெடிலுங் குறிலுங் கூடிய கூட்டத்துப் பிறந்த பின்னர்ப் பிளவுபடா வோசையை அளபெடையென்று ஆசிரியர் வேண்டினர். இவை கூட்டிச் சொல்லிய காலத்தல்லது புலப்படா, எள்ளாட்டிய வழியல்லது எண்ணெய் புலப்படாவாறு போல என்று உணர்க. இனி அளபெடையல்லாத ஓசைகளெல்லாம் இசையோசையாதலின் அவற்றை 'அளபிறந்துயிர்த்தலும்' (எழு-௩௩) என்னுஞ் சூத்திரத்தாற் கூறுப. (௬)

௭. கண்ணிமை நொடியென வவ்வே மாத்திரை
நுண்ணிதி னுணர்ந்தோர் கண்ட வாறே.

இது மாத்திரைக்கு அளவு கூறுகின்றது.

**இதன் பொருள்:** கண்ணிமை நொடி என அவ்வே மாத்திரை—கண்ணிமையெனவும் நொடியெனவும் அவ்விரண்டே

---

அசைக்குரிய எழுத்தாக எண்ணப்பெறுதல். இயற்கையளபெடை செயற்கையளபெடைகளின் இயல்பை செய்யுளியல் ௧௭-ம் சூத்திரம் நோக்கி உணர்க.

அகவலோசை - ஆசிரியப்பாவுக்குரிய ஓசை. அளபெடைக்கு நான்கு மாத்திரையுங் கொள்ளாக்கால் ஆன்றோரியற்றிய வெண்பாக்களில் நான்கு மாத்திரை பெறுவன ஆசிரியத் தளைதட்டுச் செப்பலோசை கெடும். ஆதலால் நான்கு மாத்திரையுங் கொள்ளவேண்டுமென்பதாம். கலிக்குறுப்பாகியகொச்சகவெண்பாக்கள் ஆசிரியத்தளை தட்டும்நிற்கலாம். "செறாஅஅய் வாழிய நெஞ்சு" முதலியன அவ்வாறு நிற்றல் கூடா என்க.

கோட்டுநூறு - சங்குநூறு - சுண்ணும்பு. இசை ஓசை என்றது பாட்டின் இசையை நிறைக்கும் ஓசையை என்பது ஈண்டு நச்சினார்க்கினியர் கருத்து. ஏனெனில் "அளபிறந் துயிர்த்தலும்" என்னுஞ் சூத்திரத்தாற் கூறுப என்று கூறலின்.

---

**7.** என என்னும் இடைச்சொல் எண்ணுப் பொருட்கண் வருதலின் அது கண்ணிமையோடுங் கூட்டப்பட்டு கண்ணிமையென

எழுத்தின் மாத்திரைக்கு அளவு, நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறே—நுண்ணிதாக நூலிலக்கணத்தை உணர்ந்த ஆசிரியர் கண்டநெறி என்றவாறு.

'என' எண்ணிற் பிரிந்து இரண்டிடத்துங் கூடிற்று. கண்ணிமை நொடி என்னும் பலபொருளொருசொற்கள் ஈண்டுத் தொழின்மேலும் ஓசைமேலும் முறையே நின்றன. ஆசிரியர் எல்லாரும் எழுத்திற்கு இவையே அளவாகக் கூறலின் இவருங் கூறினார். இயற்கை மகன் தன் குறிப்பினன்றி இரண்டிமையும் ஒருகாற்கூடி நீங்கின காலக்கழிவும் அ எனப் பிறந்த ஓசையது தோற்றக் கேட்டுக் காலக்கழிவும் ஒக்கும். இக் கண்ணிமையினது பாகம் மெய்க்குஞ் சார்பிற்றோற்றத்திற்கும் இதன் பாகம் மகரக் குறுக்கத்திற்குங் கொள்க. இக்கண்ணிமை இரட்டித்து வருதல் நெடிற்கும் அது மூன்றும் நான்குமாய் வருதல் அளபெடைக்குங் கொள்க. அதுபோலவே நொடித் தற்றொழிலிற் பிறந்த ஓசையது தோற்றக்கேட்டுக் காலக்கழிவும் அ எனப் பிறந்த ஓசையது தோற்றக்கேட்டுக் காலக்கழிவும் ஒக்கும். ஏனையவற்றிற்குங் கூறியவாறே கொள்க.

இனி அவ்வளவைதான் நிறுத்தளத்தல் பெய்தளத்தல் சார்த்தியளத்தல் நீட்டியளத்தல் தெறித்தளத்தல் தேங்கமுகந் தளத்தல் எண்ணியளத்தல் என எழுவகைத்து. அவற்றுள் இது சார்த்தியளத்தலாம்.

---

நொடியென நிற்குமென்பார் என எண்ணிற் பிரிந்து இரண்டிடத்துங் கூடிற்றென்றார். கண்ணிமை தொழின்மேலும் நொடி ஓசைமேலும் நின்றன என்க. இயற்கை மகன் என்றது இமைத்தற்றொழிலில் விகாரமில்லாத மகன் என்றபடி. குறிப்பு - நினைவு. பாகம் - சரிபங்கு.

சார்த்தியளத்தல் - ஒன்றனளவோடு மற்றொன்றனளவை ஒப்பிட்டு நோக்கியளத்தல். நிறுத்தளத்தல் - துலா முதலிய நிறையளவைகளால் நிறுத்தளத்தல். பெய்தளத்தல் - ஒன்றனுட்பெய்தளத்தல். என்றது கலமுதலியவற்றிற் பெய்தளத்தலை. தெறித்தளத்தல் - ஒன்றனைப்புடைத்து ஒலியையுண்டாக்கி அதனைச் செவியாற்கேட்டு நிதானித்து அளந்துகோடல். அது மத்தளம் வீணை முதலியவற்றைப் புடைத்து அவற்றொலியைச் செவிகருவியாக அளந்து கோடலால் அறியப்படுதல், தேங்கமுகந்தளத்தல் - நாழி முதலியவற்றா னளத்தல்.



கண்ணிமைக்கும் நொடிக்கும் அளவு ஆராயின் வரம்பின்றி ஓடுமென்று கருதி 'நுண்ணிதி னுணர்ந்தோர் கண்டவாறு' என்று முடிந்தது காட்டலென்னும் உத்தி கூறினார். இஃது ஆணை கூறுதலுமாம். எனவே, எழுத்திற்கே அளவு கூறி மாத்திரைக்கு அளவு கூறிற்றிலர். நொடியிற் கண்ணிமை சிறப்புடைத்து, உள்ளத்தான் நினைத்து நிகழாமையின். (எ)

அ. ஔகார விறுவாய்ப்,
பன்னீ ரெழுத்து முயிரென மொழிப.

இது குறிலையும் நெடிலையுந் தொகுத்து வேறோர் குறியீடு கூறுகின்றது.

**இதன் பொருள்:** ஔகார இறுவாய்ப் பன்னீரெழுத்தும்—அகரம் முதலாக ஔகாரம் ஈறாகக் கிடந்த பன்னிரண்டெழுத்தும், உயிரெனமொழிப—உயிரென்னுங் குறியினையுடைய என்று கூறுவர் புலவர் என்றவாறு.

இதுவும் ஆட்சியுங் காரணமும் நோக்கியதோர் குறி. மெய் பதினெட்டினையும் இயக்கித் தான் அருவாய் வடிவின்றி நிற்றலின் உயிராயிற்று. இவை மெய்க்கு உயிராய் நின்று மெய்களை இயக்குமேல் உயிரென வேறோர் எழுத்தின்றாம் பிறவெனின், மெய்யினிற்கும் உயிருந் தனியே நிற்கும் உயிரும் வேறென உணர்க. என்னை? 'அகர முதல' (குறள்-க) என்புழி அகரந் தனியுயிருமாய்க் ககரவொற்று முதலியவற்றிற்கு உயிருமாய் வேறு நிற்றலின். அவ்வகரந் தனியே நிற்றலானும் பல மெய்க்கண் நின்று அவ்வம் மெய்கட்கு இசைந்த ஓசைகளைப் பயந்தே நிற்றலானும் வேறுபட்டதாகலின் ஒன்றேயாயும் பலவேயாயும் நிற்பதோர் தன்மையையுடைத்தென்று கோடும்; இறைவன் ஒன்றேயாய் நிற்குந்

---

8. 'அகரமுதல்' என முற்கூறிப் போந்தமையின் என்றது - முதற் சூத்திரத்தில் 'அகரமுதல்' எனக் கூறினமையை. எனவே ஆண்டுக் கூறிய அதனை ஈண்டுக் கூறிய 'ஔகார விறுவாய்' என்பதனோடு சேர்த்து 'அகரமுதல் ஔகாரவிறுவாய்ப் பன்னீரெழுத்து முயிரென மொழிப' எனக் கூறுக என்றபடி.

தன்மையும் பல்லுயிர்க்குந் தானேயாய் அவற்றின் அளவாய் நிற்குந் தன்மையும்போல. அது அ என்ற வழியும் ஊர என விளியேற்றவழியும் 'அகரமுதல' என்றவழியும் மூவினங்களில் ஏறினவழியும் ஓசை வேறுபட்டவாற்றான் உணர்க. இங்ஙனம் இசைத்துழியும் மாத்திரை ஒன்றேயாம். இஃது ஏனையுயிர்கட்கும் ஒக்கும்.

( இய )

ஔகாரவிறுவாய் என்பது பண்புத்தொகை. உம்மை முற்றும்மை. 'அகரமுதல்' என முற்கூறிப் போந்தமையின் ஈண்டு ஈறே கூறினார்.

௯. னகாரவிறுவாய்ப்,
பதினெண் ணெழுத்து மெய்யென மொழிப.

இஃது உயிரல்லனவற்றைத் தொகுத்து ஓர் குறியீடு கூறுகின்றது.

**இதன் பொருள் :** னகாரவிறுவாய்ப் பதினெண் எழுத்தும்—ககாரம் முதல் னகாரம் ஈறாய்க் கிடந்த பதினெட்டு எழுத்தும், மெய்யென மொழிப—மெய்யென்னுங் குறியினையுடைய என்று கூறுவர் புலவர் என்றவாறு.

இதுவும் ஆட்சியுங் காரணமும் நோக்கிய குறி. என்னை? பன்னீருயிர்க்குந் தான் இடங்கொடுத்து அவற்றான் இயங்குந் தன்மை பெற்ற உடம்பாய் நிற்றலின்.

னகாரவிறுவாய் என்பது பண்புத்தொகை. உம்மை முற்றும்மை. முன்னர் னகாரவிறுவாயென்புழி முப்பதெழுத்திற்கும் ஈறாமென்றார், ஈண்டுப் பதினெட்டெழுத்திற்கும் ஈறாமென்றாதலிற் கூறியது கூறிற்றன்று. (௯)

---

9. இதன்கண் "ககரமுதல் னகரவிறுவாய்" எனக் கூறப்படவில்லையேயெனின்? அது முதற்சூத்திரத்து 'முப்பது' என்றதனானும் இதன்கண் 'பதினெண்' எழுத்தும் என்றதனாலும் பின்வரும் "வல்லெழுத் தென்ப க ச ட த ப ற" என்னுஞ் சூத்திரம் முதலியவற்றானும் உய்த்துணர்ந்துகொள்ளப்படும். இச்சூத்திரமும் முதற்சூத்திரமும் நெடுங்கணக்கை அநுவதித்துக் கூறினவாகும்.



௧௦. மெய்யோ டியையினு முயிரிய றிரியா.

இஃது உயிர்மெய்க்கு அளவு கூறுகின்றது.

**இதன் பொருள் :** உயிர் மெய்யோடு இயையினும்—பன்னீருயிரும் பதினெட்டு மெய்யோடுங் கூடி நின்றனவாயினும், இயல் திரியா—தம் அளவுங் குறியும் எண்ணுந் திரிந்துநில்லா என்றவாறு.

இது 'புள்ளியில்லா' (எழு-௧௭) என்பதனை நோக்கி நிற்றலின் எதிரது போற்றலாம். உயிரும் மெய்யும் அதிகாரப்படுதலின் ஈண்டுவைத்தார். அ என்புழி நின்ற அளவுங் குறியும் ஒன்றென்னும் எண்ணுங் க என நின்ற இடத்தும் ஒக்கும்; ஆ என்புழி நின்ற அளவுங் குறியும் ஒன்றென்னும் எண்ணுங் கா என நின்ற இடத்தும் ஒக்கும் என்பது இதன் கருத்து. பிறவும் அன்ன. ஆயின் ஒன்றரை மாத்திரையும் இரண்டரை மாத்திரையும் உடையன ஒரு மாத்திரையும் இரண்டு மாத்திரையும் ஆயவாறு என்னையெனின், நீர் தனித்து அளந்துழியும் நாழியாய் அரைநாழியுப்பிற் கலந்துழியுங் கூடி ஒன்றரைநாழியாய் மிகாதவாறுபோல்வதோர் பொருட்பெற்றியென்று கொள்வதல்லது காரணங் கூறலாகாமை உணர்க. ஆசிரியன் ஆணை என்பாரும் உளர்.

'விளங்காய் திரட்டினா ரில்லைக் களங்கனியைக்
காரெனச் செய்தாரு மில்.' (நாலடியார்-௧௦௩)

என்பதே காட்டினார் உரையாசிரியரும். (௧௦)

௧௧. மெய்யி னளவே யரையென மொழிப.

இது தனிமெய்க்கு அளவு கூறுகின்றது.

**இதன் பொருள் :** மெய்யின் அளவே அரையென மொழிப—மெய்யினது மாத்திரையினை ஒரோவொன்று அரைமாத்திரையுடையவென்று கூறுவர் புலவர் என்றவாறு.

---

10. விளங்காய்க்குந் திரட்சியும், களங்கனிக்குக் கருநிறமும் இயற்கையாதல்போல உயிர்மெய்க் குறில்கள் ஒருமாத்திரை பெறுதலும், உயிர்மெய்நெடில்கள் இரண்டுமாத்திரை பெறுதலும் இயற்கையென்று கொள்வதல்லது அவற்றிற்குக் காரணங்கூறலாகாதென்றபடி.

11. மெய்கள் எனக் கூறவேண்டியதை மெய்யென ஒருமையாகக் கூறினமையின் அதற்கியைய அரையென ஒருமையாற்

அவ்வரைமாத்திரையுந் தனித்துக் கூறிக் காட்டலாகாது, நாச் சிறிது புடைபெயருந் தன்மையாய் நிற்றலின். இனி அதனைச் சில மொழிமேற் பெய்து காக்கை கோங்கு கவ்வையெனக் காட்டுப. மெய்யென்பது அஃறிணை யியற் பெயராதலின் மெய்யென்னும் ஒற்றுமைபற்றி அரையென்றார். (௧௧)

௧௨. அவ்விய னிலையு மேனை மூன்றே.

இது சார்பிற் றோற்றத்து மூன்றற்கும் அளவு கூறுகின்றது.

**இதன் பொருள்:** ஏனை மூன்று — சார்பிற் றோற்றத்து மூன்றும், அவ்வியல் நிலையும் — முற்கூறிய அரை மாத்திரையாகிய இயல்பின்கண்ணே நிற்கும் என்றவாறு.

கேண்மியா நாகு எஃகு என வரும். (௧௨)

௧௩. அரையளவு குறுகன் மகர முடைத்தே
இசையிட னருகுந் தெரியுங் காலை.

இது மெய்களுள் ஒன்றற்கு எய்தியது விலக்குதல் நுதலிற்று.

**இதன் பொருள்:** இசை இடன் மகரம் அரையளவு குறுகலுடைத்து — வேறோர் எழுத்தினது ஓசையின்கண் மகரவொற்றுத் தன் அரைமாத்திரையிற் குறுகிக் கால்மாத்திரை பெறுதலையுடைத்து, தெரியுங்காலை அருகும் — ஆராயுங்காலத்துத் தான் சிறுபான்மையாய் வரும் என்றவாறு.

**உதாரணம்:** போன்ம் வரும்வண்ணக்கன் என ஒருமொழிக்கண்ணும் இருமொழிக்கண்ணுங் கொள்க. இது பிறன்கோட் கூற லென்னும் உத்தி. (௧௩)

---

கூறினரென்பார் மெய்யென்னும் ஒற்றுமைபற்றி அரையென்றார் என்றார்.

13. சார்பெழுத்து மூன்றென்பவர்க் கிது கூறல்வேண்டாவாகலின் பிறன்கோட் கூறல் என்னும் உத்தி என்றார்.



௧௪. உட்பெறு புள்ளி யுருவா கும்மே.

இது பகரத்தோடு மகரத்திடை வரிவடிவு வேற்றுமை செய்கின்றது.

மகரம் அதிகாரப்பட்டு நிற்றலின் ஈண்டுக் கூறினார்.

**இதன் பொருள்:** உட்பெறுபுள்ளி — புறத்துப் பெறும் புள்ளியோடு உள்ளாற்பெறும் புள்ளி, உருவாகும் — மகரத்திற்கு வடிவாம் என்றவாறு.

எனவே புறத்துப் பெறும் புள்ளியாவது மேற்சூத்திரத்தான் மெய்கட்குக் கூறும் புள்ளி. ஈண்டு உருவென்றது காட்சிப்பொருளை உணர்த்திநின்றது.

**உதாரணம்:** கப்பி கப்பி (கம்மி) எனவரும். இஃது எதிரது போற்றல். (௧௪)

௧௫. மெய்யி னியற்கை புள்ளியொடு நிலையல்.

இது தனிமெய்க்கும் உயிர்மெய்க்கும் ஒப்புமைமேல் வேற்றுமைசெய்தல் கூறுகின்றது. என்னை? உயிர்மெய்யான ககர ஙகரங்கட்குந் தனிமெய்யான ககர ஙகரங்கட்கும் வடிவு ஒன்றாக எழுதினவற்றை ஒற்றாக்குதற்குப் பின்பு புள்ளி பெறுக வென்றலின்.

**இதன் பொருள்:** மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல் — பதினெட்டு மெய்களின் தன்மையாவது புள்ளிபெற்று நிற்றலாம் என்றவாறு.

எனவே உயிர்மெய்கட்குப் புள்ளியின்றாயிற்று. க்-ங். . .ற்-ன் எனவரும். இவற்றைப் புள்ளியிட்டுக் காட்டவே புள்ளி பெறுவதற்கு முன்னர் அகரம் உடனின்றதோர் மெய்வடிவே பெற்று நின்றனவற்றைப் பின்னர் அப்புள்ளியிட்டுத் தனிமெய் யாக்கினு

---

14. இதனை மகரக்குறுக்கம், புள்ளிபெறுதலை விதிக்கவந்த சூத்திரமென்பாருமுளர்.

15. அகரம் நீங்கியே போகஎன்றது, அகரம் மீளவும் வந்து ஏறாது நீங்கிப்போக என்றபடி. எனவே வாராதொழிய என்பதாம்.

ரென்பதூஉம் பெறுதும். இதனானே ககரம் ஙகரம் முதலியன புள்ளிபெறுவதற்கு முன்னர் இயல்பாக அகரம் பெற்றே நிற்கு மென்பதூஉம் புள்ளி பெறுங்காலத்து அவ்வகரம் நீங்குமென் பதூஉம் பின்னர் அப் புள்ளி நீங்கி உயிரேறுமிடத்துத் தன் கண் அகரம் நீங்கியே போக வருகின்றதோர் உயிர் யாதாயி னும் ஒன்று ஏறி நிற்குமென்பதூஉம் பெற்றாம். 'மெய்யி னியக்க மகரமொடு சிவணும்' (எழு-௪௬) என்னுஞ் சூத்திரத் தானும் இதுவே இதற்குக் கருத்தாதல் உணர்க. (௧௫)

௧௬. எகர ஒகரத் தியற்கையு மற்றே.

இதுவும் அது.

**இதன் பொருள் :** எகர ஒகரத்து இயற்கையும் அற்றே— எகர ஒகரங்களினது நிலையும் மெய்போலப் புள்ளிபெறும் இயல் பிற்று என்றவாறு.

எனவே ஏகார ஓகாரங்கட்குப் புள்ளி யின்றாயிற்று.

எ்-ஒ்-என வரும்.

இஃது உயிர்மெய்க்கும் ஒக்கும்.

மகரம் ஆராய்ச்சிப்பட்டது கண்டு மகரத்திற்கு வடிவு வேற் றுமை செய்து, அதிகாரத்தான் மெய்யின் தன்மை கூறி, அதன் பின் மாட்டேற்றலின் எகர ஒகரத்தையுங் கூறினார். (௧௬)

௧௭. புள்ளி யில்லா வெல்லா மெய்யு
முருவுரு வாகி யகரமோ டுயிர்த்தலு
+ மேனை யுயிரோ டுருவுதிரிந் துயிர்த்தலு
மாயீ ரியல வுயிர்த்த லாறே.

இது மெய்யும் உயிருங் கூடிப் புணருமாறும் ஆண்டு அவை திரியாதுந் திரிந்தும் நிற்குமாறுங் கூறுகின்றது.

**இதன் பொருள் :** புள்ளி இல்லா எல்லா மெய்யும் — உயி ரைப் பெறுதற்குப் புள்ளியைப் போக்கின எல்லா மெய்களும், உரு உருவாகி அகரமோடு உயிர்த்தலும் — புள்ளி பெறுகின்ற காலத்து இயல்பாகிய அகர நீங்கிய வடிவே தமக்கு வடிவாகி



நின்று பின்னர் ஏறிய அகரத்தோடுகூடி ஒலித்தலும், ஏனை உயி ரோடு உருவு திரிந்து உயிர்த்தலும்—ஒழிந்த பதினோருயிருங் கூடி அவ்வடிவு திரிந்து ஒலித்தலும், ஆயீரியல உயிர்த்தலாறே —என அவ்விரண்டு இயல்பினையுடைய அவை ஒலிக்கும் முறைமை என்றவாறு.

புள்ளியில்லா மெய்யெனவே முன்பெற்று நின்ற புள் ளியை உயிரேற்றுதற்குப் போக்கினமை பெறுதும். உருவுரு வாகி யெனவே புள்ளி பெறுதற்காக இயல்பாகிய அகரம் நீங் கிய வடிவே பின்னர் அகரம் பெறுதற்கு வடிவாமென்பது கூறினார்.

க-ங-ய் என வரும்.

உருவு திரிந்து உயிர்த்தலாவது மேலுங் கீழும் விலங்கு பெற்றும் கோடுபெற்றும் புள்ளிபெற்றும் புள்ளியுங் கோடும் உடன்பெற்றும் உயிர்த்தலாம். கி கீ முதலியன மேல்விலங்கு பெற்றன. கு கூ முதலியன கீழ்விலங்கு பெற்றன. கெ கே முத லியன கோடு பெற்றன. கா ஙா முதலியன புள்ளி பெற்றன. அருகே பெற்ற புள்ளியை இக்காலத்தார் காலாக எழுதினர். மகரம் உட்பெறு புள்ளியை வளைத்தெழுதினர். கொ கோ ஙொ ஙோ முதலியன புள்ளியுங் கோடும் உடன்பெற்றன. இங் ஙனந் திரிந்து ஒலிப்பவே உயிர்மெய் பன்னிருபதினெட்டு இருநூற்றிருபத்தாறாயிற்று. ஆகவே உயிர்மெய்க்கு வடிவும் ஒருவாற்றாற் கூறினாராயிற்று. இதனானே மெய் தனக்கு இயல் பாகிய அகரத்தை நீங்கி நிற்பதோர் தன்மையும் பிறிதோ ருயிரை ஏற்குந் தன்மையும் உடையதென்பதூஉம், உயிர் மெய்க் கட் புலப்படாது இயல்பாகிய அகரமாய் நிற்குந் தன்மையும் மெய் புள்ளிபெற் றழிந்தவழி அவற்றிற்குத் தக்க உயிராய்ப் புலப்பட்டுவருந் தன்மையும் உடையதென்பதூஉம் பெற்றாம். உயிர்மெய் யென்பது உம்மைத்தொகை. (௧௭)

---

17. புள்ளிபெறுதல் என்றது; க ங என்பன அக்காலத்து க. ங. எனப் புள்ளிபெற்று வழங்கினமையை. உயிர்த்தன்மையு முடைய வென்பது பெற்றாம் எனமுடிக்க. புலப்படாது நிற்றல் அகரமும், புலப்பட்டு நிற்றல் ஏனைய உயிருமென்க. உயிர் நிற்குந் தன்மையும், வருந் தன்மையுமுடையது எனக் கூட்டிக்கொள்க.

க௮. மெய்யின் வழிய துயிர்தோன்று நிலையே.

இது மெய்யும் உயிருங் கூடியவழி அவற்றின் ஓசை நிற்கும் முறைமை கூறுகின்றது.

**இதன் பொருள் :** மெய்யின் வழியது—மெய்யினது ஓசை தோன்றிய பின்னதாம், உயிர் தோன்று நிலையே—உயிரினது ஓசை தோன்றும் நிலை என்றவாறு.

முன்னின்ற சூத்திரத்தான் மெய் முன்னர் நிற்ப உயிர் பின் வந்து ஏறுமென்றார். அம்முறையே ஓசையும் பிறக்குமென்றார். இதனானே மாத்திரை கொள்ளுங்கால் உப்பும் நீரும் போல ஒன்றேயாய் நிற்றலும் வேறுபடுத்துக் காணுங்கால் விரலும் விரலுஞ் சேரநின்றாற்போல வேறாய் நிற்றலும் பெற்றாம். நீர் உப்பின் குணமேயாயவாறுபோல உயிரும் மெய்யின் குணமேயாய் வன்மை மென்மை இடைமை எய்தி நிற்றல் கொள்க.

**உதாரணம் :** க-ங-ய எனக் கூட்டமும் பிரிவும் மூவகையோசையுங் காண்க. (க௮)

க௯. வல்லெழுத் தென்ப க ச ட த ப ற.

இது தனிமெய்களுட் சிலவற்றிற்கு வேறோர் குறியீடு கூறுகின்றது.

**இதன் பொருள் :** க ச ட த ப ற—க் ச் ட் த் ப் ற் என்னுந் தனிமெய்களை, வல்லெழுத்தென்ப—வல்லெழுத்தென்னுங் குறியினையுடைய என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

இஃது ஆட்சியுங் காரணமும் நோக்கிய குறி. ஒழிந்த மெல்லெழுத்தையும் இடையெழுத்தையும் நோக்கித் தாம் வல்லென்றிசைத்தலானும் வல்லெனத் தலைவளியாற் பிறத்தலானும் வல்லெழுத்தாயிற்று. (க௯)

௨௦. மெல்லெழுத் தென்ப ங ஞ ண ந ம ன.

இதுவும் அது.

**இதன் பொருள் :** ங ஞ ண ந ம ன—ங் ஞ் ண் ந் ம் ன் என்னுந் தனி மெய்களை, மெல்லெழுத்தென்ப—மெல்லெழுத்தென்னுங் குறியினையுடைய என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

இதுவும் ஆட்சியுங் காரணமும் நோக்கிய குறி. மெல்லென்றிசைத்தலானும் மெல்லென்று மூக்கின் வளியாற் பிறத்தலானும் மெல்லெழுத்தாயிற்று. (௨௦)

௨க. இடையெழுத் தென்ப ய ர ல வ ழ ள.

இதுவும் அது.

**இதன் பொருள் :** ய ர ல வ ழ ள—ய் ர் ல் வ் ழ் ள் என்னுந் தனி மெய்களை, இடையெழுத்தென்ப—இடையெழுத்தென்னுங் குறியினையுடைய என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

இதுவும் ஆட்சியுங் காரணமும் நோக்கிய குறி. இடைநிகர்த்தாய் ஒலித்தலானும் இடைநிகர்த்தாய மிடற்றுவளியாற் பிறத்தலானும் இடையெழுத்தாயிற்று.

வல்லினத்துக் க-ச-த-ப என்னும் நான்கும் மெல்லினத்து ஞ-ந-ம என்னும் மூன்றும் இடையினத்து ய-வ என்னும் இரண்டும் மொழிக்கு முதலாதல் நோக்கி இம்முறையே வைத்தார். இப்பெயரானே எழுத்தென்னும் ஓசைகள் உருவாயின. உயிர்க்குங் குறுமை நெடுமை கூறலின் அவையும் உருவாயின. இது சார்பிற் றோற்றத்திற்கும் ஒக்கும். (௨க)

௨௨. அம்மூ வாறும் வழங்கியன் மருங்கின்
மெய்ம்மயங் குடனிலை தெரியுங் காலை.

இது தனிமெய் பிறமெய்யோடுந் தன்மெய்யோடும் மயங்கும் மயக்கமும் உயிர்மெய் உயிர்மெய்யோடுந் தனிமெய்யோடும் மயங்கும் மயக்கமும் கூறுகின்றது.

---

21. இப்பெயரானே என்றது, வன்மை மென்மை இடைமை என்னும் பெயர்களை, உரைகாரர் தாம் எழுத்து அருவன்று உருவென்பதை இதனானும் வலியுறுத்துமாறு உருவாயின என ஈண்டுக் கூறினரென்க.

22. இச்சூத்திரத்துக்கு உரையாசிரியர் மேற்சொல்லிய பதினெட்டு மெய்யும் தம்மை மொழிப்படுத்தி வழங்குதலுளதாமிடத்து

**இதன் பொருள் :** அம்மூவாறும்—அங்ஙனம் மூன்று கூறு கப் பகுத்த பதினெட்டு மெய்யும், வழங்கியல் மருங்கின்—வழக்கிடத்துஞ் செய்யுளிடத்தும் எழுத்துக்களைக் கூட்டி மொழிப் படுத்த வழங்குதல் உளதாமிடத்து, மெய் மயங்கும் நிலை—தனிமெய் தன்முன்னர் நின்ற பிறமெய்யோடுந் தன்மெய்யோடும் மயங்கும் நிலையும், உடன்மயங்கும் நிலை—அப்பதினெட்டும் உயிருடனே நின்று தன் முன்னர் நின்ற உயிர்மெய்யோடுந் தனிமெய்யோடும் மயங்கும் நிலையுமென இரண்டாம், தெரியுங் காலை—அவை மயங்கும் மொழியாந் தன்மை ஆராயுங்காலத்து என்றவாறு.

எனவே, தனித்துநின்ற எழுத்துடன் முன்னின்ற எழுத்துக்கள் தாங் கூடுமாறு கூறினாராயிற்று. கட்க என்றால் இடைநின்ற தனிமெய் முன்னர் நின்ற தன்னின் வேறாய ககரவொற்றோடு மயங்கிற்று. காக்கை என்றால் இடைநின்ற ககரவொற்று முன்னர் நின்ற தன்னொற்றோடு மயங்கிற்று. கரு என ஈரெழுத்தொருமொழியுங் கருது என மூவெழுத்தொரு மொழியும் உயிர்மெய் நின்று தன்முன்னர் நின்ற உயிர்மெய்யோடு மயங்கிற்று. துணங்கை என உயிர்மெய் நின்று தன் முன்னர் நின்ற தனிமெய்யோடு மயங்கிற்று. கல்வில் என உயிர்மெய் நின்று தனிமெய்யோடு மயங்கிற்று.

தெரியுங்காலை என்றதனான் உயிர் முன்னர் உயிர்மெய்ம் மயக்கமும் உயிர் முன்னர்த் தனிமெய்ம்மயக்கமுங் கொள்க. அவை அளை ஆம்பல் என்றாற்போல்வன.

மெய்ம்மயக்கங்களுள் தனிமெய்முன்னர்ப் பிறமெய் நின்று மயங்குதல் பலவாதலிற் பல சூத்திரத்தாற் கூறித் தன் முன்னர்த் தான் வந்து மயங்குதலை ஒரு சூத்திரத்தாற் கூறுப.

---

மெய்ம்மயக்கமென்றும் உடனிலை மயக்கமென்றும் இருவகைய; அவை மயங்குமுறை யாராயுங்காலத்து என்று கூறி மெய்ம்மயக்க மென்பதற்கு வேற்றுநிலை மெய்ம்மயக்கமென்றும் உடனிலை மயக்க மென்பதற்குத் தன்னொடுதான் மயங்குதலென்றும் பொருள்கொண்டனர். நச்சினார்க்கினியர் 'மெய்ம்மயங் குடனிலை' என்பதை மெய்ம் மயங்கு நிலை உடன்மயங்கு நிலை எனக்கொண்டு உடன்மயங்கு நிலை



அவை மயங்குங்கால் வல்லினத்தில் டகரமும் றகரமும் மெல் லினமாறும் இடையினமாறும் பிறமெய்யோடு மயங்குமென்றும் வல்லினத்திற் கசதபக்கள் தன் மெய்யோடன்றிப் பிறமெய் யோடு மயங்காவென்றும் உய்த்துணரக் கூறுமாறு உணர்க.

மூவாறு மென்னும் உம்மை முற்றும்மை.

இச்சூத்திரம் முதலாக 'மெய்ந்நிலைசுட்டின்' (எழு-௩௦) ஈறாக மேற்கூறும் மொழிமரபிற்குப் பொருந்திய கருவி கூறுகின்றதென்றுணர்க; எழுத்துக்கள் தம்மிற் கூடிப் புணருமாறு கூறுகின்றதாதலின். (௨௨)

௨௩. ட ற ல ள வென்னும் புள்ளி முன்னர்க்
க ச ப வென்னு மூவெழுத் துரிய.

இது தனிமெய் பிறமெய்யோடு மயங்கும் மயக்கம் உணர்த்துகின்றது.

**இதன் பொருள் :** ட ற ல ள என்னும் புள்ளிமுன்னர்—மொழியிடை நின்ற ட ற ல ள என்று கூறப்படும் நான்கு புள்ளிகளின் முன்னர், க ச ப என்னும் மூவெழுத்து உரிய—க ச ப என்று கூறப்படும் மூன்றெழுத்தும் வந்து மயங்குதற்கு உரிய என்றவாறு.

**உதாரணம் :** கட்க கட்சி கட்ப எனவுங் கற்க முயற்சி கற்ப எனவுஞ் செல்க வல்சி செல்ப எனவுங் கொள்க நீள் சினை கொள்ப எனவுந் தனிமெய் பிறமெய்யோடு மயங்கிய வாறு காண்க. கட்சிறார் கற்சிறார் என்பன இருமொழிப் புணர்ச்சியாகலின் ஈண்டைக்காகா. (௨௩)

---

என்பதற்கு மெய்கள் உயிருடன் கூடிநின்று உயிர்மெய்யோடும் தனிமெய்யோடும் மயங்கும் மயக்கமென்று பொருள்கூறினர்.

உடனிலை மெய்ம்மயக்கத்திற்கு அவர் கூறிய பொருளின்படி உயிர்மெய் உயிர்மெய்யோடு மயங்குமிடத்துக் கரு என மயங்கும். ஆண்டு ககரத்திலுள்ள அகரமும் ரு என்னும் எழுத்திலுள்ள ரகரமும் மயங்கியதன்றிக் ககர அகரமும் ரகர உகரமும் மய்ங்கியதின்று. ஏனெனின் 'மெய்யின் வழிய துயிர்தோன்று நிலையே' என்பது விதியாகலின். ஆதலின், உரையாசிரியர் கருத்தே பொருத்தமாமென்க. நன்னூலார் கருத்து மிதுவேயாம்.

௨௪. அவற்றுள்
லளஃகான் முன்னர் யவவுந் தோன்றும்.

இதுவும் அது.

**இதன் பொருள்:** அவற்றுள்—முற்கூறிய நான்கனுள், லளஃகான் முன்னர்—லகார ளகாரமாகிய புள்ளிகளின் முன்னர், யவவுந் தோன்றும்—கசபக்களே யன்றி யகர வகரங்களும் வந்து மயங்கும் என்றவாறு.

கொல்யானை செல்வம் வெள்யாறு கள்வன் என வரும்.

இவற்றுட் கொல்யானை என வினைத்தொகையும் வெள்யாறு எனப் பண்புத்தொகையும் நிலைமொழி வருமொழி செய்வதற்கு இயையாமையின் 'மருவின்பாத்திய' என்று கூறுவராதலின் இவ்வாசிரியர் இவற்றை ஒருமொழியாகக் கொள்வரென்று உணர்க. இக்கருத்தானே மேலும் வினைத்தொகையும் பண்புத்தொகையும் ஒருமொழியாகக்கொண்டு உதாரணங் காட்டுதும் அன்றி இவ்வாசிரியர் நூல் செய்கின்ற காலத்து வினைத்தொகைக்கண்ணும் பண்புத்தொகைக்கண்ணுமன்றி ஒருமொழிக்கண்ணே மயங்குவனவும் உளவாதலின், அவற்றைக் கண்டு இலக்கணங் கூறினார். அவை பின்னர் இறந்தனவென்று ஒழித்து உதாரணமில்லனவற்றிற்கு உதாரணங் காட்டாமற் போதலே நன்றென்று கூறலுமொன்று. (௨௪)

௨௫. ஙஞண நமன வெனும் புள்ளி முன்னர்த்
தத்த மிசைக ளொத்தன நிலையே.

இதுவும் அது.

**இதன் பொருள்:** ங ஞ ண ந ம ன எனும் புள்ளி முன்னர்—ங ஞ ண ந ம ன என்று கூறப்படும் புள்ளிகளின் முன்னர், தத்த மிசைகள்—தமக்கினமாய் முன்னின்ற க ச ட த

24. 'மருவின்பாத்திய' என்பது ௪௱௮-ம் சூத்திரத்தின் ஓரடி. அச்சூத்திரத்து வினைத்தொகையையும் பண்புத்தொகையையும் பிரித்து வழங்கப்படாவென்று கூறுவாராகலின் ஒரு மொழியாகக் கொள்ளப்படுமென்பது கருத்து.



ப றக்கள், ஒத்தன நிலையே—பின்னிற்றற்குப் பொருந்தின, மயங்கி நிற்றற்கண் என்றவாறு.

**உதாரணம்:** கங்கன் கஞ்சன் கண்டன் கந்தன் கம்பன் மன்றன் என வரும். தெங்கு பிஞ்சு வண்டு பந்து கம்பு கன்று எனக் குற்றுகரமுங் காட்டுப. (௨௫)

௨௬. அவற்றுள், ணனஃகான் முன்னர்க்
க ச ஞ ப ம ய வவ் வேழு முரிய.

இதுவும் அது,

**இதன் பொருள்:** அவற்றுள்—மேற்கூறிய மெல்லொற்று ஆறனுள், ணனஃகான் முன்னர்—ணகார னகாரங்களின் முன்னர், க ச ஞ ப ம ய வ எழும் உரிய—டறக்களே யன்றிக் க ச ஞ ப ம ய வ என்னும் எழெழுத்தும் வந்து மயங்குதற்கு உரிய என்றவாறு.

**உதாரணம்:** எண்கு வெண்சாந்து வெண்ஞாண் பண்பு வெண்மை மண்யாறு எண்வட்டு எனவும், புன்கு புன்செய் மென்ஞாண் அன்பு வன்மை இன்யாழ் புன்வரகு எனவும் வரும். எண்வட்டு வினைத்தொகை. எண்கு புன்கு பெயர். (௨௬)

௨௭. ஞ ந ம வ வெனும் புள்ளி முன்னர்
யஃகா னிற்றல் மெய்பெற் றன்றே.

இதுவும் அது.

**இதன் பொருள்:** ஞ ந ம வ என்னும் புள்ளி முன்னர்—ஞ ந ம வ என்று கூறப்படும் புள்ளிகளின் முன்னர், யஃகான்

26. எண்கு - கரடி. ஞாண் - கயிறு. எண்வட்டு என்பதற்கு எண்ணப்படும் வட்டு எனப் பொருள் கொள்க.

இருமொழிப்புணர்ச்சி காட்டின் கூறியது கூறலென்னும் குற்றமாமென்று நச்சினார்க்கினியர் கூறுதல் பொருந்தாது. ஏனெனில் மயக்கம் வேறு புணர்ச்சி வேறாகலின். வேறுமாற்றை, மயக்கமுள்ளனவும் இயல்பாதலன்றித் திரிந்தும் மயக்கமில்லாதன மயக்கமுள்ளனவாகத் திரிந்தும் புணர்தலானறிக.

பொன்குடம் - பொற்குடம். இது மயக்கமுள்ளன திரிந்தன. கல்தீது - கற்றீது இது மயக்கமில்லாதன திரிந்து புணர்ந்தன.

நிற்றல் மெய்பெற்றன்றே—யஃகான் நிற்றல் பொருண்மை பெற்றது என்றவாறு.

இங்ஙனம் ஆசிரியர் சூத்திரஞ்செய்தலின் அக்காலத்து ஒரு மொழியாக வழங்கிய சொற்கள் உளவென்பது பெற்றாம். அவை இக்காலத்து இறந்தன.

இனி உரையாசிரியர் உரிஞ்யாது பொருந்யாது திரும்யாது தெவ்யாது என இருமொழிக்கண் வருவன உதாரணமாகக் காட்டினாராலெனின், ஆசிரியர் ஒருமொழியாமாறு ஈண்டுக் கூறி, இருமொழி புணர்த்தற்குப் புணரியலென்று வேறோர் இயலுங் கூறி, அதன்கண் 'மெய்யிறு சொன்முன் மெய்வரு வழியும்' (எழு-௧௦௭) என்று கூறினர். கூறியவழிப் பின்னும் 'உகர மொடு புணரும் புள்ளி யிறுதி' (எழு-௧௧௩) என்றும் பிறுண்டும் ஈறுகடோறும் எடுத்தோதிப் புணர்ப்பர். ஆதலின் ஈண்டு இரு மொழிப்புணர்ச்சி காட்டிற் கூறியதுகூற லென்னுங் குற்றமாம். அதனால் அவை காட்டுதல் பொருந்தாமை உணர்க. (௨௭)

௨௮. மஃகான் புள்ளிமுன் வவ்வுந் தோன்றும்.

இதுவும் அது.

இதன் பொருள்: மஃகான் புள்ளிமுன்—முற்கூறியவற்றுள் மகரமாகிய புள்ளி முன்னர், வவ்வுந் தோன்றும்—பகர யகரமேயன்றி வகரமும் வந்து மயங்கும் என்றவாறு.

இதற்கும் உதாரணம் இக்காலத்து இறந்தன. அன்றி, வரும் வண்ணக்கன் என்றாற்போல்வன காட்டின் 'வகார மிசையு மகாரங் குறுகும்' (எழு-௩௩௦) என்ற விதி வேண்டாவாம். (௨௮)

௨௯. யரழ வென்னும் புள்ளி முன்னர்
*முதலா கெழுத்து ஙகரமொடு தோன்றும்.

இதுவும் அது.

இதன் பொருள்: யரழவென்னும் புள்ளி முன்னர்—ய ர ழ என்று கூறப்படும் மூன்று புள்ளிகளின் முன்னர், முதலாகெழுத்தும்—மொழிக்கு முதலாமென மேற்கூறும் ஒன்பதெழுத்துக்களும், உம்மையான் மொழிக்கு முதலாகாத பிற எழுத்துக்களும், ஙகரமொர்டு தோன்றும்—ஙகாரமும் வந்து மயங்கும் என்றவாறு.



உதாரணம்: ஆய்க ஆர்க ஆழ்க, ஆய்தல் ஆர்தல் ஆழ்தல், ஆய்நர் ஆர்நர் ஆழ்நர், ஆய்பவை ஆர்பவை ஆழ்பவை, வாய்மை நேர்மை கீழ்மை, எய்சிலை வார்சிலை வாழ்சேரி, தெய்வம் சேர்வது வாழ்வது, பாய்ஞெகிழி நேர்ஞெகிழி வாழ்ஞெண்டு, செய்யாறு போர்யானை வீழ்யானை என மொழிக்கு முதலாம் ஒன்பதும் வந்து மயங்கின. செய்யாறு என யகரத்தின் முன்னர் யகரம் வந்தது தன்முன்னர்த் தான் வந்ததாம்.

இனி உம்மையாற்கொண்ட மொழிக்கு முதலாகாதவற்றின் கண்ணுஞ் சில காட்டுதும்: ஒய்வு சோர்வு வாழ்வு, ஒய்வோர் சோர்வோர் வாழ்வோர், ஆய்ஞர் சேர்ஞர் ஆழ்ஞர் எனவரும். பிற எழுத்துக்களோடு வருவன உளவேனும் வழக்குஞ் செய்யுளும் நோக்கிக் கூறிக்கொள்க.

இனி வேய்ங்ஙளம் வேர்ங்ஙனம் வேழ்ங்ஙனம் என மொழிக்கு முதலாகாத ஙகரம் இடைவந்த சொற்கள் அக்காலத்து வழங்கின என்றுணர்க, ஆசிரியர் ஓதுதலின். இதனை 'ஙகரமொடு தோன்றும்' எனப் பிரித்தோதினர் அக்காலத்தும் அரிதாக வழங்கலின்.

இனி வேய்கடிது வேர்கடிது வீழ்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது யாது வலிது என்பன காட்டின் அவை இருமொழியாக நிலைமொழி வருமொழி செய்து மேற்புணர்க்கின்றன ஈண்டைக்காகா என மறுக்க. (௨௯)

௩௦. மெய்ந்நிலை சுட்டி னெல்லா வெழுத்துந்
தம்முற் றாம்வரூஉம் ரழவலங் கடையே.

இது நிறுத்தமுறையானே தனிமெய் தன்னொற்றோடு மயங்குமாறு கூறுகின்றது.

---

29. ஓய்வு, ஓர்வு என்பனவற்றின் வகர உகரமும் ஒவ்வோர் என்பதில் வகர ஓகாரமும் ஆய்ஞர் என்பதில் ஞகர அகரமும் மொழிக்கு முதலாகா எழுத்துக்கள். அவை யரழ என்னும் மூன்றோடும் மயங்கி வந்தமைக்கு ஈண்டு உதாரணமாகக் காட்டப்பட்டன.

இதன் பொருள் : மெய்ந்நிலை சுட்டின் — பொருணிலைமையைக் கருதின், எல்லா எழுத்தும் — பதினெட்டு மெய்யும், தம்முன் தாம் வரூஉம் — தம்முன்னே தாம் வந்து மயங்கும், ர ழ அலங்கடையே — ரகார ழகாரங்களல்லாத இடத்து என்றவாறு.

உதாரணம் : காக்கை எங்ஙனம் பச்சை மஞ்ஞை பட்டை மண்ணை தத்தை வெந்நெய் அப்பு அம்மை வெய்யர் எல்லி எவ்வி கள்ளி கொற்றி கன்னி என வரும்.

மெய்ந்நிலை சுட்டினென்றதனால் தனிமெய் முன்னர் உயிர்மெய் வருமென்று கொள்க. எல்லாமென்றது ரகார ழகாரங்கள் ஒழிந்தனவற்றைத் தழுவிற்று. (௩௦)

௩௧. அ இ உ அம் மூன்றுஞ் சுட்டு.

இது குற்றெழுத் தென்றவற்றுட் சிலவற்றிற்கு வேறோர் குறியீடு கூறுகின்றது.

இதன் பொருள் : அ இ உ அம்மூன்றுஞ் சுட்டு — அ இ உ என்று கூறிய அம்மூன்றுஞ் சுட்டென்னுங் குறியினையுடைய என்றவாறு.

இதுவும் ஆட்சியுங் காரணமும் நோக்கியதோர் குறி, சுட்டி அறியப்படும் பொருளை உணர்த்தலின். தன்னின முடித்தல் என்பதனான் எகரம் வினைப்பொருள் உணர்த்தலுங் கொள்க.

உதாரணம் : அக்கொற்றன் இக்கொற்றன் உக்கொற்றன் எப்பொருள் என வரும். இவை பெயரைச் சார்ந்து தத்தங் குறிப்பிற் பொருள்செய்த இடைச்சொல். இச்சூத்திரம் ஒருதலைமொழித லென்னும் உத்தி. இதுவும் மேலைச் சூத்திரமும் எழுத்தாந்தன்மையன்றி மொழிநிலைமைப்பட்டு வேறோர் குறி பெற்று நிற்றலின் மொழிமரபினைச் சேரவைத்தார். (௩௧)

31. ஒருதலைமொழிதலென்னு முத்தியாவது- ஓரதிகாரத்திற் சொல்லற்பாலதனை வேறோரதிகாரத்திற் சொல்லி அவ்விலக்கணமே ஆண்டும் பெறவைத்தல். சொல்லதிகாரத்திற் சொல்லற்பாலதாய சுட்டை எழுத்திற் கூறி அதனையே சொல்லிற்கும் பெறவைத்தல்.



௩௨. ஆ ஏ ஓ அம் மூன்றும் வினா.

இது நெட்டெழுத்தென்றவற்றுட் சிலவற்றிற்கு வேறோர் குறியீடு கூறுகின்றது.

இதன் பொருள் : ஆ ஏ ஓ அம்மூன்றும் வினா — ஆ ஏ ஓ என்று கூறப்பட்ட அம்மூன்றும் வினா என்னுங் குறியினையுடைய என்றவாறு.

இதுவும் ஆட்சியுங் காரணமும் நோக்கிய குறி, வினாப்பொருள் உணர்த்தலின்.

உதாரணம் : உண்கா உண்கே உண்கோ என வரும். இவற்றுள் ஆகாரம் இக்காலத்து வினாவாய் வருதலரிது. நீயே நீயோ என்பது இக்காலத்து வரும். இவற்றுள் ஏ ஓ என்பன இடைச்சொல்லோத்தினுள்ளுங் கூறினார், ஏகார ஓகாரங்கள் தரும் பொருட்டொகைபற்றி. இது மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தலென்னும் உத்திக்கு இனமாம், யகர ஆகாரமும் வினாவாய் வருதலின். ()

௩௩. அளபிறந் துயிர்த்தலு மொற்றிசை நீடலு
முளவென மொழிப விசையொடு சிவணிய
நரம்பின் மறைய வென்மனார் புலவர்.

இது பிறன்கோட் கூறலென்னும் உத்திபற்றி இசைநூற்கு வருவதோர் இலக்கணமாமாறு கூறி, அவ்விலக்கணம் இந்நூற்குங் கொள்கின்றது.

இதன் பொருள் : அளபிறந்து உயிர்த்தலும் ஒற்றிசை நீடலும் நரம்பின் மறைய என்மனார் புலவர் — முற்கூறிய உயிரும் உயிர்மெய்யும் மாத்திரையை இறந்தொலித்தலும் ஒற்

32. மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனையு முட்டின்று முடித்தலென்னு முத்தியாவது - எடுத்தோதிய பொருண்மைக் கேற்றவகையா னப்பொருண்மைக்குச் சொல்லாததொன்று கொள்ள வைத்தல். இங்கே எடுத்தோதிய பொருள் வினா ஆ ஏ ஓ அம்மூன்றும் என்பது. அவற்றோ டெடுத்தோதாத பொருள் யா என்பது. அதனையும் வினாவென்று இவ்வுத்தியாற் கொள்க என்றபடி. இனமென்றது உயிர்மெய்யாதலிற் போலும்.

றெழுத்துக்கள் அரைமாத்திரையின் நீண்டொலித்தலும் யாழ் நூலிடத்தன என்று கூறுவர் புலவர், இசையொடு சிவணிய உளவென மொழிப — அங்ஙனம் அளபிறந்தும் நீண்டும் இசைத்தல் ஓசையோடு பொருந்திய நால்வகைச் செய்யுட்களுக்கும் உளவென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

எழுத்துக்கள் முற்கூறிய மாத்திரையை இறந்தொலிக்குமாறு கண்டு, அஃது இறந்தொலிக்கும் இடங் கூறினர், எழுத்துஞ் சொல்லும் பொருளுங் கிடக்கும் இடஞ் செய்யுளிடமாதலின். அது மிக்கொலித்தலைச் செய்யுளியலின்கண் 'மாத்திரை யெழுத்திய லசைவகை யெனாஅ' (செய்-௧) என இருபத்தாறு உறுப்பிற்குஞ் சிறப்புறுப்பாக முற்கூறிப், பின்னர்

'மாத்திரை யளவு மெழுத்தியல் வகையு
மேற்கிளந் தன்ன வென்மனார் புலவர்.' (செய்-௨)

என இச்சூத்திரத்தோடு மாட்டெறிந்து, பின்னும்

'எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை தானே
குன்றலு மிகுதலு மில்லென மொழிப.' (செய்-௩)

என்றுங் கூறினர். இது எதிரதுபோற்றலென்னும் உத்தியுங் கூறிற்று.

உதாரணம்: 'வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேளினி' (கலி-௧௧) என்புழி ழகர ஆகாரமும் ககர ஏகாரமும் மாத்திரை இறந்தொலித்தவாறு உணர்க. 'பிடி யூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே' (கலி-௧௧) என்புழி ஙகரவொற்று அளவிறந்தவாறு காண்க. ஒழிந்த மூவகைச் செய்யுட்கும் இவ்வாறே தத்தமக்குரிய பாவென்னும் உறுப்பினை நடாத்தி அளவு மிகுமாறு காண்க.

சிவணிய என்பது தொழிற்பெயர். இசையொடு சிவணிய எனவே செய்யுளாதல் பெற்றும். நரம்பென்றது ஆகுபெயராய் யாழினை உணர்த்திற்று. மறையென்றது நூலை. மொழிபவென்றும் என்மனார் புலவரென்றும் இருகாற் கூறியவதனால், இங்ஙனம் பொருள் கூறலே ஆசிரியர்க்குக் கருத்தாயிற்று.

33. தொழிற்பெயர் - வினையல்லனையும் பெயர்.



என்னை? செய்யுளியலுட் கூறிய 'மாத்திரையளவும்' என்னுஞ் சூத்திரத்தில் 'மேற்கிளந்தன்ன' (செய்-௨) என்னும் மாட்டேற்றிற்கு இவ்வோத்தினுள் வேறோர் சூத்திரம் இன்மையின். இவ்விலக்கணங் கூறுக்காற் செய்யுட்குப் பாவென்னும் உறுப்பு நிகழாது அவை உரைச்செய்யுட்போல நிற்றலின் இவ்விலக்கணங் கூறவே வேண்டுமென்று உணர்க.

'சூத்திரத் துட்பொரு ளன்றியும் யாப்புற
வின்றி யமையா தியைபவை யெல்லா
மொன்ற வுரைப்ப துரையெனப் படுமே.' (மரபியல்-௧௦௩)

என்னும் மரபியற் சூத்திரத்தானே இவ்வாறே சூத்திரங்களை நலிந்து பொருளுரைப்பனவெல்லாங் கொள்க. (௩௩)

நூன்மரபு முற்றிற்று.

## உ. மொழிமரபு

கசு. குற்றிய லிகர நிற்றல் வேண்டும்
யாவென் சினைமிசை யுரையசைக் கிளவிக்
காவயின் வரூஉ மகர மூர்ந்தே.

என்பது சூத்திரம். மேல் எழுத்து உணர்த்தியபின்னர் அவை தம்முட் தொடருமாறும் உணர்த்தி அவ்வெழுத்தானும் மொழியது மரபு உணர்த்துகின்றமையின் இவ்வோத்து மொழிமரபெனக் காரணப் பெயர்த்தாயிற்று. இச்சூத்திரம் முன்னர்ச் சார்ந்துவருமென்ற மூன்றனுட் குற்றியலிகரத்திற்கு இடனும் பற்றுக்கோடுங் கூறுகின்றது.

**இதன் பொருள்:** உரையசைக் கிளவிக்கு வரூஉம்—தான் கூறும் பொருளைக் கோடற்கு ஒருவனை எதிர்முகமாக்குஞ் சொல்லிற்குப் பொருந்தவரும், ஆவயின்—அம் மியாவென்னும் இடைச்சொல்லைச் சொல்லுமிடத்து, யாவென் சினைமிசை மகரம் ஊர்ந்து—யாவென்னும் உறுப்பின் மேலதாய் முதலாய் நின்ற மகரவொற்றினை யேறி, குற்றியலிகரம் நிற்றல் வேண்டும்—குற்றியலிகரம் நிற்றலை விரும்பும் ஆசிரியன் என்றவாறு.

**உதாரணம்:** கேண்மியா சென்மியா என வரும். கேளென்றது உரையசைக்கிளவி; அதனைச் சார்ந்து தனக்கு இயல்பின்றி நின்றது மியாவென்னும் இடைச்சொல். அவ்விடைச்சொல் முதலும் அதனிற் பிரியும் யா அதற்கு உறுப்புமாமென்று கருதி யாவென்சினை என்றார். மியா இடம்; மகரம் பற்றுக்கோடு. யாவும் இகரம் அரை மாத்திரையாதற்குச் சார்பு. இவ்விடைச்சொல் தனித்துநிற்றல் ஆற்றாமையிற் கேளென்பதனோடு சார்ந்து ஒரு சொல்லாயே நின்றுழி இடைநின்ற இகரம் ஒருமொழியிடத்துக்

1. உரையசைக் கிளவி என்பதற்குத் தான் கூறும் பொருளைக் கோடற்கு ஒருவனை எதிர்முகமாக்குஞ் சொல் என்றும், அது கேள் என்றும் நச்சினார்க்கினியர் கூறுகின்றார். அசைத்தல் - எதிர்முகமாக்கல். அங்ஙனமாயின் சென்மியா என்புழிச் செல் என்பதற்கு அது பொருந்தாமல் வருகின்றது. ஆதலின் உரையசைக்கிளவி என்பதற்கு உரையசைச் சொல்லாகிய மியா என்று உரையாசிரியர் கொள்ளும் பொருளே பொருத்தமாகின்றது. நன்னூலாரும் இவ்வாறே கொள்வர். உரையசை - கட்டுரைக்கண் அசைநிலையாய் வரு



நூன்மரபு

குற்றியலிகரமாய் வருதலானும் ஆண்டு உணர்த்தற்குச் சிறப்பின்மையானும் ஈண்டுப் போத்தந்து கூறினார். ஊர்ந்தெனவே குற்றியலிகரமும் உயிரென்பது பெற்றாம், உயிர்க்கல்லது ஏறுதலின்மையின். (க)

கரு. புணரிய னிலையிடைக் குறுகலு முரித்தே
உணரக் கூறின் முன்னர்த் தோன்றும்.

இது குற்றியலிகரம் புணர்மொழிப்கத்தும் வருமென்கின்றது.

**இதன் பொருள்:** புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே—அக்குற்றியலிகரம் புணரியலுள் ஒருமொழிக்கண்ணன்றி இருமொழி தம்மிற் புணர்தலியன்ற நிலைமைக்கண்ணுங் குறுகுதலுரித்து, உணரக்கூறின் முன்னர்த்தோன்றும் — அதற்கு இடமும் பற்றுக்கோடும் உணரக் கூறத்தொடங்கின் அவை குற்றியலுகரப் புணரியலுள்ளே கூறப்படும் என்றவாறு.

குறுகலுமென்னுமிடத்து உம்மையை நிலையிடையுமெனமாறிக்கூட்டுக. 'யகரம்வருவழி' (எழு-சகo.) என்னுஞ் சூத்திரத்து யகரம் இடம், உகரம் சார்ந்த வல்லெழுத்துப் பற்றுக்கோடு.

**உதாரணம்:** நாகியாது வரகியாது தெள்கியாது எஃகியாது கொக்கியாது குரங்கியாது எனவரும். இது மொழிவாமென்னும் உத்தி. (உ)

கசு. நெட்டெழுத் திம்பருந் தொடர்மொழி யீற்றுங்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே.

இஃது ஒருமொழிக் குற்றியலுகரத்துக்கு இடமும் பற்றுக்கோடும் உணர்த்துகின்றது.

வது. கட்டுரை - வாக்கியம். 'ஆங்க உரையசை' யென்பர் பின்னும். அச்சூத்திரத்திலே உரை என்பதற்கு நச்சினார்க்கினியர் கட்டுரை என்பர். ஆண்டு என்றது நூன்மரபை.

2. முன்னர் என்றது குற்றியலுகரப் புணரியலை. ஆண்டு சு-ம் சூத்திரம் நோக்குக. சிறப்பின்மை - சிறந்த எழுத்தல்லாமை.

**இதன்பொருள் :** குற்றியலுகரம் வல்லாறு ஊர்ந்தே—குற்றியலுகரம் வல்லெழுத்துக்கள் ஆறினையும் ஊர்ந்து, நெட்டெழுத்திம்பரும் தொடர்மொழி ஈற்றும்—நெட்டெழுத்தின் பின்னும் ஐவகைத் தொடர்மொழியின் இறுதியினும் நிற்றல் வேண்டும் ஆசிரியன் என்றவாறு.

நெட்டெழுத்தினது பின் தொடர்மொழியினது ஈற்றென நிலத்ததகலம்போல ஒன்றியற்கிழமைப்பட்டு நின்றது, அம்மொழியிற் றீர்ந்து குற்றியலுகரம் நில்லாமையின். வல்லாறு பண்புத்தொகை. *முற்றும்மை தொக்குநின்றது. அதிகார முறைமையென்னும் உத்தியான் நிற்றல்வேண்டுமென்பது வருவிக்க.

* **உதாரணம் :** நாகு வரகு தெள்கு எஃகு கொக்கு குரங்கு எனவரும். இவ்வாறுவகையும் இடம்; வல்லெழுத்துப் பற்றுக்கோடு. எனவே, மொழிக்கு ஈறுதலும் பெற்றாம். பெருமுரசு திருமுரசு என்பன இருமொழிக்கண் வந்த முற்றுகரம். பரசு இங்கு எது என்னும் முற்றுகரங்கள் வடமொழிச்சிதைவு. தருக்கு அணுக்கு என்பன வினைக்கண்வந்த முற்றுகரம். குற்றுகரத்திற்கு முன்னர் வந்த உயிரேறிமுடிய அரைமாத்திரையாய் நிற்றலும், முற்றுகரத்திற்கு முன்னர் வந்த உயிரேறி முடியாமையுந் தம்முள் வேற்றுமை. (௩)

3. நெட்டெழுத்தினது இம்பர் தொடர்மொழியினது ஈறு என்பவைகள் நிலத்ததகலம்போல ஒன்றியற் கிழமைப்பட்டு நின்றன என்றது - நிலத்ததகலம் என்புழி நிலத்தைவிட அகலம் வேறன்றாகி நிலத்துளடங்கும். அதுபோல நெட்டெழுத்தின் பின்னும் தொடர்மொழியீற்றும் வல்லா றூர்ந்துவரு முகரம் நெட்டெழுத்தையும் தொடர்மொழியையும் விட்டுத் தான் வேறாய் நின்று குற்றியலுகரமாவதன்று; அவற்றோடு ஒன்றுபட்டு நின்றே குற்றியலுகரமாகு மென்றபடி. அதிகார முறைமையாவது, அதிகாரப்பட்டு வருமுறைமையாற் கொள்வது. அதனாற் கோடலாவது, ஈண்டுச் சார்பெழுத்தின் இலக்கணமே அதிகாரப்பட்டு வந்தமையின் சார்பெழுத்தாகிய குற்றியலிகரத்துக்குக் கூறிய 'நிற்றல்வேண்டும்' என்பதை இதற்கும் வருவித்துக்கொள்ளல். இதழ் குவித்துச் சொல்வது முற்றுகரம் என்பது நச்சினார்க்கினியர் கருத்து. அதுபற்றிப் பெருமுரசு முதலியவற்றை முற்றுகரமென்றார். பெருமுரசு, திருமுரசு என்பன இருமொழிக்கண் வந்த குற்றுகரமென்பது மஹாலிங்கையர் பதிப்பு.



௩௭. இடைப்படிற் குறுகு மிடனுமா ருண்டே
கடப்பா டறிந்த புணரிய லான.

இது குற்றியலுகரம் புணர்மொழிக்கண் தன் அரைமாத்திரையிற் குறுகிவரு மென்கின்றது.

**இதன்பொருள் :** இடைப்படிற் குறுகும் இடனுமார் உண்டே—அவ்வுகரம் ஒருமொழியுளன்றிப் புணர்மொழியிடைப் படின் தன் அரைமாத்திரையினுங் குறுகும் இடனும் உண்டு, கடப்பாடு அறிந்த புணரியலான—அதற்கு இடனும் பற்றுக்கோடும் யாண்டுப் பெறுவதெனின், அதன் புணர்ச்சிமுறைமை அறியுங் குற்றியலுகரப் புணரியலுள் என்றவாறு.

'வல்லொற்றுத்தொடர்மொழி' (எழு-௪௦௧.) என்பதனுள் வல்லெழுத்துத் தொடர்மொழியும் வல்லெழுத்து வரும்வழியும் இடம்; ஈற்று வல்லெழுத்துப் பற்றுக்கோடு.

**உதாரணம் :** செக்குக்கணை சுக்குக்கோடு எனவரும். இவை அரைமாத்திரையிற் குறுகியவாறு ஏனையவற்றோடு படுத்துணர்க. இடனுமெனவே இது சிறுபான்மையாயிற்று. (௪)

௩௮. குறியதன் முன்ன ராய்தப் புள்ளி
யுயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே.

இது நிறுத்தமுறையானே ஆய்தம் ஒருமொழியுள் வருமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** ஆய்தப்புள்ளி—ஆய்தமாகிய ஒற்று, குறியதன் முன்னர் உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்து—

5. வல்லாறன்மிசைத் தென்றதனானும் ஈண்டுப் புள்ளி என்றதனானும், ஆய்தத் தொடர்மொழியென மேற்கூறுதலானும், உயிர் என்றது ஈண்டுப் பெரும்பான்மையும் குற்றுகரமேயா மென்றதன் விளக்கமாவது :- முன் குற்றியலுகர விலக்கணங் கூறுமிடத்து உகரம் வல்லாறூர்ந்து வருமென்று கூறியதுபோல ஈண்டும் வல்லாறன் மிசைத்தென்று கூறியதனானும், ஈண்டுப் புள்ளி (வல்லாறன்மிசைத்து வரும் புள்ளி) யென்று ஆய்தத்தொடரைக் கருதுமாறு கூறியதனானும், உகரமூர்ந்த வல்லாறன் மிசைவரும் ஆய்தத்தையே ஆய்தக்

குற்றெழுத்தின் முன்னதாய் உயிரோடுகூடிய வல்லெழுத்தாறின் மேலிடத்ததாய் வரும் என்றவாறு.

* 'வல்லாறன்மிசைத்தே' என்றதனானும் ஈண்டுப் புள்ளி யென்றத னானும் 'ஆய்தத்தொடர்மொழி' (எழு-௪௦௬) என மேற்கூறுதலா னும் உயிரென்றது ஈண்டுப் பெரும்பான்மையுங் குற்றுகரமே யாம். சிறுபான்மை ஏனை யுயிர்களையுங் கொள்க

**உதாரணம்:** எஃகு கஃசு கஃடு கஃது கஃபு கஃறு அஃது இஃது உஃது எனவரும். கஃறீது முஃடீது என்பனவற்றை மெய்பிறிதாகிய புணர்ச்சி என்றதனானும் ஈண்டுப் புள்ளியென் றதனானும் ஆய்தமும் மெய்யாயிற்று. அஃகாமை வெஃகாமை அஃகி வெஃகி அஃகம் எனப் பிறவுயிர்களோடும் வந்தது கஃசி யாதெனத் திரிந்ததுவுங் குற்றியலுகரத்தோடு புணர்ந்ததாம். (௫)

௩௮. ஈறியல் மருங்கினு மிசைமை தோன்றும்.

இஃது அவ்வாய்தம் புணர்மொழியகத்தும் வருமாறு கூறு கின்றது.

**இதன் பொருள்:** ஈறியல் மருங்கினும்—நிலைமொழியீறு வருமொழி முதலொடு புணர்ந்து நடக்கும் இடத்தும், இசைமை தோன்றும்—அதன் அரைமாத்திரையே இசைக்குந் தன்மை தோன்றும் என்றவாறு.

**உதாரணம்:** கஃறீது முஃடீது எனவரும். இவ்வீறு இயலுமாறு புள்ளிமயங்கியலுட் பெறுதும். ஈண்டும் இடம் குற் றெழுத்துமேல் வரும் வல்லெழுத்து. (௬)

---

மொழியென மேற்கூறுதலானும், உயிர் என்றது பெரும்பான்மை யும் குற்றுகரத்தையே புணர்த்துமென்றபடி. ஈண்டென்பது 'வல் லாறன் மிசைத்தே' என வந்த முன்வாக்கியத்தைச் சுட்டி நின்றது. இனி, ஈண்டுப் புள்ளி என்றதனானும் என்பதற்கு இச்சூத்திரத்துள் ஆய்தத்தைப் புள்ளியென்று, மெய்யுளடக்கினமையானே குற்றிய லுகரத்தை உயிருளடக்கி உயிரென்று கூறினரென்று கருத்துக் கோடலுமாம். கஃசியாது என்புழி கஃசு என்னும் குற்றியலுகர வீறே அங்ஙனம் புணர்ந்ததாகலின் அதுவும் குற்றுகரமேயாம். அதனை 'யகரம் வரும்வழி யிகரங் குறுகு - முகரக் கிளவி துவரத் தோன்றாது' [குற் - புண - சூ - ௫] என்னும் சூத்திரம் நோக்கியறிக.



உருவினு மிசையினு மருகித் தோன்று
மொழிக்குறிப் பெல்லா மெழுத்தி னியலா
வாய்த மஃகாக் காலை யான.

இஃது எதிரது போற்றலென்னும் உத்தியாற் செய்யுளியலை நோக்கி ஆய்தத்திற்கு எய்தியதோர் இலக்கணம் உணர்த்து கின்றது.

**இதன் பொருள்:**—உருவினும் இசையினும் அருகித் தோன் றுங் குறிப்புமொழியும் — நிறத்தின் கண்ணும் ஓசையின் கண் ணுஞ் சிறுபான்மை ஆய்தந்தோன்றும் பொருள் குறித்தலை யுடைய சொல்லும், எல்லா மொழியும்—அவையொழிந்த எல்லா மொழிகளும், எழுத்தினியலா—ஒற்றெழுத்துக்கள்போல அரை மாத்திரையின் கண்ணும் சிறுபான்மை மிக்கும் நடந்து, ஆய்தம் அஃகாக் காலையான—ஆய்தஞ் சுருங்காத இடத்தான சொற் களாம் என்றவாறு.

எனவே, ஈண்டு ஆராய்ச்சியின்றேனுஞ் செய்யுளியலிற் கூறும் 'ஒற்றளபெடுப்பினு மற்றெனமொழிப' (செய்யுளியல்-௧௮) என்னுஞ் சூத்திரத்துக் 'கண்ண்டண்ணெனக் கண்டுங்கேட்டும்' என்புழிக் கண்ண்ணென்பது சீர்நிலை யெய்தினாற்போலக், 'கஃஃ றென்னுங்கல்லதர்த்தம்' என நிறத்தின்கண்ணும் 'சுஃஃறென் னுந் தண்டோட்டுப் பெண்ணை' என இசையின் கண்ணும் வந்த ஆய்தம் ஒருமாத்திரை பெற்றுச் சீர்நிலை யெய்துங்கால், ஆண் டுப் பெறுகின்ற ஒருமாத்திரைக்கு ஈண்டு எதிரதுபோற்றி விதி கூறினார், ஆய்தம் அதிகாரப்பட்டமை கண்டு. 'எஃஃ கிலங்கிய கையராயின்னுயிர்—வெஃஃகுவார்க்கில்லை வீடு' என்று ஏனையி டத்தும் வந்தன. ஒற்றளபெடுக்குமாறு இவ்வதிகாரத்துக் கூறிற்

---

7. 'உருவினு மிசையினு மருகித் தோன்றும் மொழிக்குறிப் பெல்லாம்' என்பதற்குக் குறிப்பு மொழியெல்லாம் என்று பொருள் கூறலன்றி, உம்மைத்தொகையாகக் கோடல் சிறப்பின்றாம். உரை யாசிரியர் அவ்வாறே கொள்வர். இனி எழுத்தினியலா என்பதற்கு ஆய்தவெழுத்தானிட்டு எழுதப்பட்டு நடவா என இளம்பூரணர் கூறு வது வழுக்கோ என்பது ஆராயத்தக்கது. எழுத்தினியலா என்ப தற்குத் தனியெழுத்தான் நடவா என்று பொருள் கூறி, இரண் டெழுத்தா னடக்குமென்று பொருள் கூறுதலும் பொருத்தம்போ

றிலர், அஃது உயிரளபெடைபோலச் சீர்நிலையெய்துதலும் அசைநிலையாந்தன்மையு முடையவாய்ச் செய்யுட்கே வருதலின். இதனானே ஒற்றளபெடையும் ஒரு மாத்திரை பெறுமென்பது பெற்றாம்.

எழுத்தினென்ற இன் உவமப்பொருள். இயலாவென்றது செய்யாவென்னும் வினையெச்சம்.

இவ்வாறன்றி இக்குறிப்புச்சொற்கள் ஆய்தம் இரண்டிட்டு எழுதப்படாவென்று பொருள்கூறிற் செய்யுளியலோடு மாறுபட்டு மாறுகொளக் கூறலென்னுங் குற்றந் தங்குமென்று உணர்க. (௭)

௪௧. குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்கு
நெட்டெழுத் திம்ப ரொத்தகுற் றெழுத்தே.

இஃது எதிரது போற்றலென்னும் உத்திபற்றிச் செய்யுளியலைநோக்கி 'நீட்டம் வேண்டின்' (எழு-௬) என முற்கூறிய அளபெடையாமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** குன்றிசை மொழிவயின் நின்று இசை நிறைக்கும்—அளபெடுத்துக் கூறுக்காற் குன்றுவதான ஓசையையுடைய அவ்வளபெடைச் சொற்கண்ணே நின்று அவ்வோசையை நிறைக்கும், அவை யாவையோவெனின், நெட்டெழுத்திம்பர் ஒத்த குற்றெழுத்தே—நெட்டெழுத்துக்களின் பின்னாகத் தமக்கு இனமொத்த குற்றெழுத்துக்கள் என்றவாறு.

**உதாரணம் :** ஆஅ ஈஇ ஊஉ ஏஎ ஓஒ எனவரும் குன்றிசைமொழி என்றதற்கு இசைகுன்றுமொழி என்றுமாம். இனமொத்தலாவது பிறப்பும் புணர்ச்சியும் ஓசையும் வடிவும் ஒத்தல். ஈண்டு மொழியென்றது 'அளபெடையசைநிலை' (செய்யுளியல்-௧௭) என்னுஞ் செய்யுளியற் சூத்திரத்து எட்டு இயற்சீரின் பாற்படுகின்ற எண்வகை அளபெடைச் சொற்களையும் அவை ஆஅ கடாஅ ஆஅழி படாஅகை ஆஅங்கு ஆஅவது புகாஅர்த்து

னும். எழுத்தெனவே தனியெழுத்தென்பது பெறுதும். 'ஆய்தம் இரண்டிட்டெழுதப்படா என்று பொருள் கூறில்' என்றது, இளம்பூரணர் கருத்தை நோக்கிநின்றது போலும்.



விராஅயது என்பனவாம். கட்டளைகொள்ளா ஆசிரியர் இவற்றைத் தனிநிலை முதனிலை இடைநிலை இறுதிநிலை யென்றும் அடக்குப. இனி மொழியென்றதற்குத் தனிநிலை ஏழனையுமே கொள்ளின், ஒழிந்த இயற்சீர்ப்பாற்படும் அளபெடை கோடற்கு இடமின்மை உணர்க. (௮)

௪௨. ஐஔ வென்னு மாயீ ரெழுத்திற்
கிகர வுகர மிசைநிறை வாகும்.

இஃது ஒத்தகுற்றெழுத்து இல்லாதன அளபெடுக்குமாறு கூறுகின்றது.

இதுவும் எதிரது போற்றல்.

**இதன் பொருள் :** ஐஔ என்னும் ஆயீரெழுத்திற்கு—தமக்கு இனமில்லாத ஐகார ஔகாரமென்று கூறப்படும் அவ்விரண்டெழுத்திற்கு, இகர உகரம் இசைநிறைவாகும்—ஈகார ஊகாரங்கட்கு இனமாகிய இகர உகரங்களைச் சார்த்திக்கூற, அவை அக் குன்றிசைமொழிக்கண் நின்று ஓசையை நிறைப்பனவாம் என்றவாறு.

ஐஇ ஔஉ என நிரனிறையாகக் கொள்க. இவற்றை முற்கூறிய இயற்சீரெட்டிற்கும் ஏற்பனவற்றோடு உதாரணங் காட்டிக்கொள்க

இத்துணையும் நூன்மரபின் ஒழிபு. (௯)

௪௩. நெட்டெழுத் தேழே யோரெழுத் தொருமொழி.

இஃது ஓரெழுத்தொருமொழி உணர்த்துதல் நுதலியவற்றுள் நெட்டெழுத்தானும் மொழியாக்கங் கூறுகின்றது.

**இதன் பொருள் :** நெட்டெழுத்து ஏழே—நெட்டெழுத்தாகிய உயிர்களேழும், ஓரெழுத்தொருமொழி—ஓரெழுத்தானாகும் ஒருமொழியாம் என்றவாறு.

8. கட்டளைகொள்ளா ஆசிரியர் என்றது, கட்டளை யடிகொள்ளாத ஆசிரியர் என்றபடி. கட்டளை யடியென்றது, எழுத்தெண்ணி வருக்குமடியை. ஒழிந்த இயற்சீர் என்றது, நேர் நேர் அல்லாத இயற்சீர்களை

முற்றும்மை தொகுத்து ஈற்றசையேகாரம் விரித்தார்.

**உதாரணம் :** ஆ ஈ ஊ ஏ ஐ ஓ எனவரும். ஔகாரம் உயிர்மெய்க்கண்ணல்லது வாராது. ஊ என்பது தசை. இஃது உயிர்க்கும் உயிர்மெய்க்கும் விதி. கா தீ பூ சே தை கோ கௌ எனவரும். இவை தம்மையுணரநின்ற வழி எழுத்தாம். இடைநின்று பொருளுணர்த்தியவழிச் சொல்லாம். நெட்டெழுத் தேறியமெய் நெட்டெழுத்தாயுங் குற்றெழுத்தேறியமெய் குற் றெழுத்தாயும் நிற்றலேயன்றி மெய்க்கு நெடுமையுங் குறுமை யும் இன்மை உணர்க. (௧0)

சச. குற்றெழுத் தைந்து மொழிநிறை பிலவே.

இது குற்றெழுத்து ஐந்தும் மொழியாகா. அவற்றுட் சில மொழியாகுமென்பது உணர்த்துகின்றது.

**இதன் பொருள் :** குற்றெழுத்து ஐந்தும்—குற்றெழுத்தா கிய உயிரைந்தும், மொழிநிறைபு இலவே—தாமே நிறைந்து நின்று மொழியாதல் இல; சில மெய்யோடு கூடி நிறைந்து நின்று மொழியாம் என்றவாறு.

**உதாரணம் :** து நொ எனவரும். இவை உயிர்மெய்க் கண்ணல்லது வாராமையானும், உயிர்க்கண்ணும், ஏனை அகர மும் எகரமும், அக்கொற்றன் எப்பொருள் எனத் தனித்து நின்று உணர்த்தலாற்றாது இடைச்சொல்லாய்ப் பெயரைச் சார்ந்துநின்று சுட்டுப்பொருளும் வினாப்பொருளும் உணர்த் துதலானும் 'நிறைபில' வென்றார். முற்றும்மை ஈண்டு எச் சப்பட்டு நின்றதென்று உணர்க. (௧௧)

**10.** இவை என்றது, நெட்டெழுத்துக்களை. தம்மை என்றது, எழுத்தாகிய தம்மை என்றபடி. தம்மை - தம்மியல்பை. இடைநிற்றல் - தன்னையுணர்த்தி எழுத்தாதற்கும் பொருளையுணர்த்திச் சொல்லாதற் கும் இடையாக நிற்றல். எனவே, எழுத்துக்கள் சொல்லாயவிடத்துந் தம்மையுணர்த்தி எழுத்தாதலுமுடைய வென்பதாம்.

**11.** முற்றும்மை என்றது, ஐந்தும் என்றதிலுள்ள உம்மையை அது எச்சப்பட்டு நின்றதென்றது, சில மொழியாம் என்னும் பொருள் பயந்து நின்றமையை. எல்லாரும் வந்திலர் என்புழிச் சிலர் வந்தார் எனப் பொருள்படுதல்போல. [சொல்-இடை-சூ-௩௭]



சரு. ஓரெழுத் தொருமொழி யீரெழுத் தொருமொழி
யிரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட
மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே.

இது முன்னர் மெய்ம்மயக்கம் உடனிலைமயக்கங் கூறலா னும் ஈண்டு 'நெட்டெழுத்தேழே' (எழு-சஉ) என்பதனானும் எழுத்தினான் மொழியாமாறு கூறினார், அம்மொழிக்கு இச்சூத் திரத்தாற் பெயரும் முறையுந் தொகையுங் கூறுகின்றார்.

**இதன் பொருள் :** ஓரெழுத்தொருமொழி ஈரெழுத்தொரு மொழி இரண்டிறந்து இசைக்குந் தொடர்மொழி உளப்பட— ஓரெழுத்தானாகும் ஒருமொழியும் இரண்டெழுத்தானாகும் ஒரு மொழியும் இரண்டனை இறந்து பலவாற்றான் இசைக்குந் தொடர்மொழியுடனே கூட, மொழிநிலை மூன்றே—மொழிக ளின் நிலைமை மூன்றேயாம். தோன்றிய நெறியே—அவை தோன்றிய வழக்குநெறிக்கண் என்றவாறு.

**உதாரணம் :** ஆ கா நா ஓரெழுத்தொருமொழி, மணி வரகு கொற்றன் ஈரெழுத்தொருமொழி, குரவு அரவு மூவெழுத் தொருமொழி, கணவிரி நாலெழுத்தொருமொழி, அகத்தியனார் ஐயெழுத்தொருமொழி, திருச்சிற்றம்பலம் ஆறெழுத்தொரு மொழி, பெரும்பற்றப்புலியூர் ஏழெழுத்தொருமொழி.

ஓரெழுத்தொருமொழியுந் தொடர்மொழியு மென்னாது ஈரெழுத்தொருமொழியும் ஓதினார், சில பல என்னுந் தமிழ் வழக்கு நோக்கி.

**12.** இங்கே ஈரெழுத்தொருமொழி தொடர்மொழி என்று வகுத் தது சில பல என்னும் தமிழ் வழக்கு நோக்கி யென்று கூறுவதி லும், வடமொழி வழக்கு நோக்கியென்று கூறுதலே பொருத்தமா கும். நன்னூல் விருத்திகாரர் அங்ஙனமே கூறுவர். இங்கே நச் சினார்க்கினியர் செய்யுளியலோடு மாறுபடாவண்ணம் ஓரெழுத்து மொழி ஈரெழுத்துமொழி தொடர்மொழிகளை ஒற்றெழுத்துத் தள் ளிக்கொள்ளவேண்டுமென்றல் பொருந்தாது. ஏனெனின் மாத்திரை பற்றி அசை வகுத்தலாற் செய்யுளியலில் ஒற்றெழுத்து முதலிய வற்றை ஆசிரியர் தள்ளுகின்றாராதலானும், ஈண்டு எழுத்துப்பற்றி ஆசிரியர் ஓரெழுத்துமொழி முதலியவற்றை வகுத்துக் கூறுகின்றா ராதலானுமென்பது. அன்றியும் புணர்ச்சி கூறும் இயல்களின்கண்

ஆசிரியர் ஒற்றுங் குற்றுகரமும் எழுத்தென்று கொண்டனராதலின் மா கா என நின்ற சொற்கள் மால் கால் என ஒற்றடுத்துழி ஒற்றினுன் வேறு பொருள் தந்து நிற்றலின் இவற்றை ஈரெழுத்தொருமொழியென்றும், நாகு வரகு என்னுங் குற்றுகர ஈற்றுச் சொற்களிற் குற்றுகரங்கள் சொல்லொடுகூடிப் பொருள் தந்து நிற்றலின் இவற்றை ஈரெழுத்தொருமொழி மூவெழுத்தொருமொழி யென்றுங் கோடுமென்பார்க்கு, ஆசிரியர் பொருளைக் கருதாது மாத்திரை குறைந்தமைபற்றி 'உயிரிலெழுத்து மெண்ணப்படா' (செய்யுளியல்-சச) 'குறிலேநெடிலே குறிலிணை' (செய்யுளியல்-ங) என்னுஞ் செய்யுளியற் சூத்திரங்களால் இவற்றை எழுத்தெண்ணவும் அலகிடவும் பெறுவென்று விலக்குவராதலின், அவற்றால் ஈண்டு ஈரெழுத்தொருமொழியும் மூவெழுத்தொருமொழியுங் கொள்ளின், மாறுகொளக் கூறலென்னுங் குற்றந் தங்குமென்று மறுக்க.

இனி 'நெட்டெழுத் தேழே யோரெழுத் தொருமொழி (எழு-சங) 'குற்றெழுத் தைந்து மொழிநிறை பிலவே' (எழு-சச) என்பனவற்றான் மெய்க்குக் குறுமை நெடுமை யின்மையான் உயிரும் உயிர்மெய்யுமாகிய நெடிலுங் குறிலுமே மொழியமென்று கூறி, மீட்டும் அதனையே இச்சூத்திரத்தான் ஓரெழுத்தொருமொழி யென்றெடுத்து அதனோடே ஈரெழுத்தையும் இரண்டிறந்ததனையுங் கூட்டி மொழியாகக் கோடலின், ஒற்றினைக் கூட்டி எழுத்தாகக் கோடல் ஆசிரியர்க்குக் கருத்தன்மை

னும் ஆசிரியர் குற்றியலுகரப் புணரியலில் நெடிற்றொடர்க் குற்றியலுகரத்தை ஈரெழுத்தொருமொழி [கூ-கசு] என்றும், ஆய்தந் தொடர்ந்தனவற்றை ஆய்தத் தொடர்மொழியென்றும், மற்றும் ஈரொற்றுத் தொடர்மொழியென்றும், வல்லொற்றுத் தொடர்மொழியென்றும் கூறுவதை நோக்கும்போது ஒற்றையும் குற்றியலுகரத்தையும் கூட்டி மொழிவகுத்தலே அவர் கருத்தாதல் நன்கு புலப்படும். அன்றியும் நச்சினார்க்கினியர்க்கும் எழுத்து நோக்கி மொழி வகுத்துக் கோடலே கருத்தாதல் கசரு-ம் சூத்திர உரையில் மெய் முதலியவற்றை ஈரெழுத்து மொழியென்றே கூறலா னறியப்படும். எழுத்தாற் சொல்லாதலே கூறலின் கொல் என்புழி லகரமுஞ் சேர்ந்து இரண்டெழுத்தாலாய மொழியென்று கூறுவதேயன்றி, லகரத்தைத் தள்ளிக் ககர ஒகரத்தாற் றனியேயானதென்று கூறமுடியாதாகலானும் அது பொருந்தாமை யறியப்படும். உரையாசிரியர்க்கு மிதுவே கருத்தாத லவருரையா னுணர்க. அன்றியும் 'அகரமுத



யுணர்க. அன்றியும் 'மொழிப்படுத்திசைப்பினும்' (எழு-ருங) என்னுஞ் சூத்திரத்திற் கூறுகின்றவாற்றானும் உணர்க. 'அகர முதல் னகரவிறுவாய் முப்பஃதென்ப' (எழு-க) என ஒற்றினையும் எழுத்தென்றது எழுத்தின் தன்மை கூறிற்று. ஈண்டு மொழியாந்தன்மை கூறிற்று. (கஉ)

சசு. மெய்யி னியக்க மகரமொடு சிவணும்

இது தனிமெய்களை அகரம் இயக்குமாறு கூறுகின்றது.

**இதன் பொருள்:** மெய்யினியக்கம் — தனிமெய்களினது நடப்பு, அகரமொடு சிவணும் — அகரத்தோடு பொருந்தி நடக்கும் என்றவாறு.

எனவே ஒருவன் தனிமெய்களை நாவாற் கருத்துப்பொருளாகிய உருவாக இயக்கும் இயக்கமும் மூவகையாற் காட்சிப் பொருளாகிய வடிவாக இயக்கும் இயக்கமும் அகரத்தோடு பொருந்தி நடக்கும் என்றவாறு.

**உதாரணம்:** 'வல்லெழுத் தென்ப க ச ட த ப ற' (எழு-கக) 'ககார ஙகார முதனு வண்ணம்' (எழு-அக) என்றாற்போல்வன நாவால் இயக்கியவாறு காண்க. எழுதுக் காட்டுமிடத்துக் ககரம் முதலியன உயிர்பெற்று நின்ற வடிவாக எழுதிப் பின்னர்த் தனிமெய்யாக்குதற்குப் புள்ளியிட்டுக் காட்டுகின்றவாற்றான் வடிவை இயக்குமிடத்தும் அகரங் கலந்து நின்றவாறு காண்க.

இங்ஙனம் மெய்க்கண் அகரங் கலந்து நிற்குமாறு கூறினாற்போலப் பதினோருயிர்க்கண்ணும் அகரங் கலந்து நிற்குமென்பது ஆசிரியர் கூறாராயினர், அந்நிலைமை தமக்கே புலப்படுத்தலானும் பிறர்க்கு இவ்வாறு உணர்த்துதல் அரிதாகலானுமென்று உணர்க. இறைவன் இயங்குதிணைக்கண்ணும் நிலைத்திணைக்கண்ணும் பிறவற்றின்கண்ணும் அவற்றின் தன்மையாய் நிற்குமாறு

னகர விறுவாய்' என்புழி ஆசிரியர் ஒற்றினையும் எழுத்தென்று கருதினாரெனின் ஆண்டு எழுத்தின் தன்மை கூறிற்றென்ற நச்சினார்க்கினியர்க்கு ஈண்டும் [எழுத்தான் மொழியாதற்கண்ணும்] எழுத்தின் தன்மை கூறல் உடன்பாடேயாதல் காண்க.

எல்லார்க்கும் ஒப்ப முடிந்தாற்போல அகரமும் உயிர்க்கண்ணுந் தனிமெய்க்கண்ணுங் கலந்து அவற்றின் தன்மையாயே நிற்கு மென்பது சான்றோர்க்கெல்லாம் ஒப்பமுடிந்தது, 'அகரமுதல' என்னுங் குறளான் அகரமாகிய முதலையுடைய எழுத்துக்க ளெல்லாம், அதுபோல இறைவனாகிய முதலையுடைத்து உலக மென வள்ளுவனார் உவமை கூறியவாற்றானுங், கண்ணன் எழுத் துக்களில் அகரமாகின்றேன் யானேயெனக் கூறியவாற்றானும் பிறநூல்களானும் உணர்க.

இதனான் உண்மைத்தன்மையுஞ் சிறிது கூறினாராயிற்று. இதனை நூன்மரபிற் கூறாது ஈண்டுக் கூறினார், 'வல்லெழுத் தென்ப க ச ட த ப ற' (எழு-கக) என்ற இடத்துத் தான் இடைநின்று ஒற்றென்பதோர் பொருளை உணர்த்தி மொழி யாந்தன்மை எய்திநிற்றலின். (கந)

சஎ. தம்மியல் கிளப்பி னெல்லா வெழுத்து
மெய்ந்நிலை மயக்க மான மில்லை.

இது முனனர் மெய்க்கண் உயிர் நின்றவாறு கூறி அவ் வுயிர் மெய்க்கண் ஏறி உயிர்மெய்யாய் நின்றகாலத்து அம்மெய் யாற் பெயர் பெறுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள்:** எல்லா எழுத்தும் — பன்னீருயிரும், மெய்ந்நிலை தம் இயல் மயக்கங் கிளப்பின் — மெய்யின் தன்மை யிலே தம்முடைய தன்மை மயங்கிற்றாகப் பெயர் கூறின், மானமில்லை — குற்றமில்லை என்றவாறு.

மெய்யின் தன்மையாவது வன்மை மென்மை இடைமை, தம்மியலாவது உயிர்த்தன்மை என்றது வல்லெழுத்து மெல்

14. நச்சினார்க்கினியர் இச்சூத்திரத்திற்கு இது உயிர் மெய்க் கண் ஏறி உயிர்மெய்யாய் நின்றவிடத்து அம்மெய்யாற் பெயர் பெறுமாறு கூறுகிறதென்று கருத்துரைத்துப், பின் பன்னீருயிரும் மெய்யின் றன்மையிலே தம்முடைய தன்மை மயங்கிற்றாகப் பெயர் கூறிற் குற்றமில்லை என்று பதவுரையுங் கூறி, மெய்யின் தன்மை யாவது, மெய்யோடு கூடிய உயிரும் வன்மை மென்மை இடைமை என்று பெயர் பெறுதலென்று விரிவுரையுங் கூறி, மூவினத்தாற் பெயர் பெறுமாற்றிற் குதாரணமுங் காட்டினர். ஆயின் இங்ஙனம்



லெழுத்து இடையெழுத்தென உயிர்மெய்க்கும் பெயரிட்டாளு தல் கூறிற்று. அவை 'வல்லெழுத் தியையி னவ்வெழுத்து மிகுமே' (எழு-கசு) எனவும், 'மெல்லெழுத் தியையி னிறு தியோ டுறழும்' (எழு-உ௦) எனவும், 'இடையெழுத் தென்ப ய ர ல வ ழ ள' (எழு-உக) எனவும் பிறாண்டும் ஆள்ப. எழுத்தை வன்மை மென்மை இடைமையென விசேடித்த சிறப் பான் இப்பெயர் கூறினார்.

இஃதன்றிப் பதினெட்டுமெய்யுந் தன்மை கூறுமிடத்து மெய்ம்மயக்கங் கூறிய வகையானன்றி வேண்டியவாறு மயங்கு மென்று கூறி, 'அவற்றுள் லளஃகான் முன்னர்' (எழு-உச) என்பதனைக் காட்டில் அஃது இருமொழிக்கண்ணதென மறுக்க. (கச)

சஅ. ய ர ழ வென்னு மூன்று மொற்றக்
க ச த ப ங ஞ ந ம வீரொற் றாகும்.

இஃது ஈரொற்றுடனிலையாமாறு கூறுகின்றது.

**இதன் பொருள்:** ய ர ழ என்னும் மூன்றும் ஒற்ற — ய ர ழ வென்று கூறப்படும் மூன்று புள்ளியும் ஒற்றாய்நிற்ப, க ச த ப ங ஞ ந ம ஈரொற்றாகும் — க ச த பக்களும் ங ஞ ந மக்களும் வந்து ஈரொற்றாய்நிற்கும் என்றவாறு.

**உதாரணம்:** வேய்க்க வாய்ச்சி பாய்த்தல் வாய்ப்பு என வும் பீர்க்கு நேர்ச்சி வார்த்தல் ஆர்ப்பு எனவும், வாழ்க்கை தாழ்ச்சி தாழ்த்தல் தாழ்ப்பு எனவும், காய்ங்கனி தேய்ஞ்சது காய்ந்தனம் காய்ம்புறம் எனவும், நேர்ங்கல் நேர்ஞ்சிலை நேர்ந்

வலிந்து மாற்றிப் பொருள் கோடலாற் போந்த பயனின்மையின், உரையாசிரியர் கூறியவாறு இடைநிலை மயக்கப் புறனடையாகக் கொண்டு, தம் வடிவிலியல்பைச் சொல்லுமிடத்து எல்லா மெய் யெழுத்தும் மெய்ம்மயக்கநிலையில் மயங்கல் குற்றமில்லையென்று கோடலே பொருத்தமாம். நன்னூலாரும் இவ்வாறே 'தம்பெயர்..... இயலுமென்ப' எனக் கூறுதல் காண்க. அன்றியும் வல்லெழுத் தியையி னவ்வெழுத்து மிகுமே என்றது, மெய்யெழுத்து முன்னும் உயிர் பின்னுமாக ஒலித்துநின்ற முறைபற்றியன்றி, உயிரையுங் கூட்டியன்று. ஆதலானும் நச்சினார்க்கினியர் கருத்துப் பொருந்தா தென்க.

திலை நேர்ம்புறம் எனவும் வரும். ழகாரத்திற்கு வாழ்ந்தனம் இக்காலத்து நகரவொற்று வரும். ஏனைய மூன்றும் இக்காலத்து வழங்குமெனின் உணர்க.

இனித் தாழ்ங்குலை தாழ்ஞ்சினை தாழ்ந்திரள் வீழ்ம்படை என அக்காலத்து வழங்குமென்று இத்தொகைச் சொற்கள் காட்டலும் ஒன்று. உரையாசிரியரும் இருமொழிக்கட் காட்டியவற்றிற்கு அவ்வீறுகடோறுங் கூறுகின்ற சூத்திரங்கள் பின்னர் வேண்டாமை உணர்க. இஃது ஈரொற்றுடனிலையாதலின் ஈண்டு வைத்தார்.

இனி நெடிற்கீழேயன்றிப் பலவெழுத்துந் தொடர்ந்து நின்ற தன் பின்னும் ஈரொற்று வருதல் கொள்க. அவை வேந்தர்க்கு அன்றைய்க்கு என்றாற்போல்வனவாம். (௪௫)

௪௬. அவற்றுள், ரகார ழகாரங் குற்றொற் றாகா.

இஃது எய்தியது ஒரு மருங்கு மறுத்தல் கூறுகின்றது.

**இதன் பொருள் :** அவற்றுள் — முற்கூறிய மூன்றனுள், ரகார ழகாரம் — ரகாரமும் ழகாரமும், குற்றொற்றாகா — குறிற்கீழ் ஒற்றாகா, நெடிற்கீழ் ஒற்றாம், குறிற்கீழ் உயிர்மெய்யாம் என்றவாறு.

கீழென்னும் உருபு தொகுத்துக் கூறினார். ஆகாதனவற்றிற்கு உதாரணமின்று.

**உதாரணம் :** கார் வீழ் என நெடிற்கீழ் ஒற்றாய் வந்தன. கரு மழு எனக் குறிற்கீழ் உயிர்மெய்யாய் வந்தன. இவற்றை விலக்கவே, யகரம் பொய் எனவும் நோய் எனவும் இரண்டிடத்தும் ஒற்றாய் வருதல் பெற்றாம். புகர் புகழ் புலவர் என்றாற் போல்வனவோவெனின், மொழிக்கு முதலாம் எழுத்தினைச் சொல்வனவற்றிற்கே ஈண்டு ஆராய்ச்சியால் அவை வேண்டிய வாறே வருமென்று உணர்க. அன்றியுங் குற்றொற்றென்றே சூத்திரஞ்செய்தலிற் குறிலிணை யொற்றினைக் காட்டிக் கடாவ

16. மொழிக்கு முதலா மெழுத்தைச் சொல்வனவற்றிற்கே யென்றது, மொழிக்கு முதலில் நிற்கும் எழுத்துக் குறிலாயின் அதன்



லாகாமை உணர்க. இது வரையறையின்றி உயிர்மெய்யோடு தனிமெய் மயங்குவனவற்றிற் சில வொற்றிற்கு வரையறை ஈண்டுக் கூறியது. (௪௬)

௫௰. குறுமையு நெடுமையு மளவிற் கோடலிற்
றொடர்மொழி யெல்லா நெட்டெழுத் தியல.

இஃது 'அளபிறந் துயிர்த்தலும்' (எழு-௩௩) என்னுஞ் செய்யுளியலை நோக்கிய நூன்மரபிற் சூத்திரத்திற்குப் புறனடையாய் அதன்கண் நிகழ்வதோர் ஐயம் அகற்றுகின்றது; என்னை? உயிரும் உயிர்மெய்யும் அளபிறந்து இசைக்குங்காற் குறிலோ நெடிலோ இசைப்பதென மாணாக்கர்க்கு நிகழ்வதோர் ஐயம் அறுத்தலின்.

**இதன் பொருள் :** குறுமையும் நெடுமையும் — எழுத்துக்களது குறியதன்மையும் நெடியதன்மையும், அளவிற்கோடலின் — மாத்திரையென்னும் உறுப்பினைச் செவி கருவியாக அளக்கின்ற அளவு தொழிலாலே செய்யுட்குக் கொள்ளப்படுதலின், தொடர்மொழியெல்லாம் — அம்மாத்திரை தம்முட் டொடர்ந்து நிற்கின்ற சொற்களெல்லாம், நெட்டெழுத்தியல — நெட்டெழுத்து மாத்திரை மிக்கு நடக்கும்படியாகத் தொடர்ந்த சொல்லாம் என்றவாறு.

**உதாரணம் :** 'வருவர்கொல்வயங்கிழாஅய்' (கலி-௧௧) எனவும், 'கடியவேகனங்குழாஅய்' (கலி-௧௧) எனவுங் குற்றெழுத்துக்களெல்லாம் நெட்டெழுத்தினை மாத்திரை மிகுத்தற்குக் கூடியவாறு உணர்க. ஏனைச் செய்யுட்களையும் இவ்வாறே காண்க.

கீழ் வருவனவற்றிற்கே ஈண்டு ஆராய்ச்சியென்றபடி. எனவே புகர் புகழ் என்பனவற்றில் இரண்டெழுத்துக்குப் பின் வருதலின் ஆண்டாராய்ச்சி இல்லையென்பது கருத்து.

17. இதற்கு நச்சினார்க்கினியர் எழுத்துக்களது குறியதன்மையும், நெடியதன்மையும், மாத்திரை என்னும் உறுப்பினைச் செவி கருவியாக அளக்கின்ற அளவு தொழிலாலே செய்யுட்குக் கொள்ளப்படுதலின், அம்மாத்திரை தம்முட் டொடர்ந்து நிற்கின்ற சொற்களெல்லாம், நெட்டெழுத்தை மாத்திரை மிகுத்தற்குத் தொடர்ந்த சொல்லாம், என்று பொருள் கூறி நெட்டெழுத்துக்களை மாத்திரை

எனவே, மாத்திரை அளக்குங்கால் நெட்டெழுத்தே மாத்திரை பெற்று மிக்குநிற்கும் என்றமையான், எதிரது போற்றலென்னும் உத்திபற்றிச் செய்யுளியலை நோக்கிக் கூறியதாயிற்று. ஈண்டுக் கூறினர், நெட்டெழுத்து இரண்டு மாத்திரையின் இகந்துவருமென்பது அறிவித்தற்கு.

அளபென்று மாத்திரையைக் கூறுது அளவெனச் சூத்திரஞ் செய்தமையான் அளவு தொழின்மேனின்றது. அது செய்யுளியலுள் 'மாத்திரையளவும்' (செய்யுளியல்-௨) என்பதனானும் உணர்க. இயலவென்றதனைச் செயவெனெச்சமாக்கிப் படுத்தலோசையாற் கூறுக.

இனித் தன்னினமுடித்தலென்பதனான் ஒற்றிற்கும் இவ்வாறே கொள்க. 'குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி' (அகம்-௪) என்ற குறுஞ்சீர்வண்ணத்திற்கு உரிய குற்றெழுத்துக்களெல்லாம் இடையினின்ற ஒற்றெழுத்தை மாத்திரை மிகுத்தற்குக் கூடி நின்றவாறு உணர்க. எனவே, குற்றெழுத்துக்களெல்லாம் ஒற்றெழுத்துக்களோடும் நெட்டெழுத்துக்களோடுங் கூடி அவற்றையே ஓசைமிகுத்து நிற்கும் என்றவாறாயிற்று. இதனானே ஒற்றிசை நீடலுமென்ற ஒற்றிசை நீளுங்காற் குற்றெழுத்தாய் நீளுமென்றார். இனி உரையாசிரியர் புகர் புகழ் எனக் குறிலிணைக்கீழ் ரகார ழகாரங்கள் வந்த தொடர்மொழிகளெல்லாந் தார் தாழ் என்றாற்போல ஓசையொத்து நெட்டெழுத்தின்

மிகுத்தற்குக் குற்றெழுத்துக்கள் அவற்றோடு கூடிநிற்குமென்று கருத்துக் கொள்கின்றனர். இதற்கு முன்னுள்ள சூத்திரங்கள் மொழிக்கண் எழுத்துக்கள் மயங்குமாறு கூறி அதிகாரப்பட்டு நிற்றலானும் பின்னுள்ளசூத்திரமும் மயக்கமேகூறலானும், நச்சினார்க்கினியர் கூறியவாறு செய்யுள்கள் தத்தம் இசைபெறுதற்பொருட்டுக் குற்றெழுத்துக்கள் நெட்டெழுத்துக்களோடு கூடி அவற்றினோசையை மிகுத்துநிற்கும் என்று பொருள்பட வந்ததாகக் கோடலினும் மயக்கம்பற்றிவந்ததோரையமறுக்க வந்ததாகக் கோடலே பொருத்தமாதலின் இச்சூத்திரத்திற்கு உரையாசிரியர் உரையே பொருத்தமாகும். உயிரெழுத்துக்குக் குறுமையும்நெடுமையும் அளவிற் கொள்ளப்படுதலின், தொடர்மொழிக்கீழ் [அஃதாவது புகர் புகழ் என்பனவற்றின் கீழ்] நின்ற ரகர ழகரங்களெல்லாம் நெடிற்கீழ் நின்ற ரகர ழகரங்களின் இயல்பையுடையன வென்று கொள்ளப்படுமென்பது உரையாசிரியர் உரை. இங்கே நெட்டெழுத்தின் இயல்புடைய என்றது, புகர் புகழ் என்பன குறி



தன்மையவாம் என்றாரெனின், புகர் புகழ் என்பனவற்றை நெட்டெழுத்தென்றே எவ்விடத்தும் ஆளாமையானும் நெட்டெழுத்தாகக் கூறிய இலக்கணத்தால் ஒரு பயன் கொள்ளாமையானுஞ் செய்யுளியலுள் இவற்றைக் குறிலிணை ஒற்றடுத்த நிரையசையாகவுந் தார் தாழ் என்பனவற்றை நெட்டெழுத்து ஒற்றடுத்த நேரசையாகவுங் கோடலானும் அது பொருளன்மை உணர்க. (௧௭)

௫௧. செய்யு ளிறுதிப் போலி மொழிவயி
னகார மகார மீரொற் றாகும்.

இது செய்யுட்கண் ஈரொற்றிலக்கணமாமாறு கின்றது.

**இதன் பொருள் :** செய்யுட் போலி மொழி இறுதிவயின் — செய்யுட்கட் போலுமென்னுஞ் சொல்லின் இறுதிக்கண், னகாரம் மகாரம் ஈரொற்றாகும் — னகாரமும் மகாரமும் வந்து ஈரொற்று உடனிலையாய் நிற்கும் என்றவாறு.

**உதாரணம் :** 'அந்நாலை முந்நாலாக் கொள்வானும் போன்ம்' 'சிதைபுங் கலத்தைப் பயினாற் றிருத்தித் — திசையறி மீகானும் போன்ம்' (பரி-௧௦) என வரும். போலும் என்னுஞ் செய்யுமென்னும் முற்று ஈற்றுமிசையுகரம் மெய்யொழித்துக் கெட்டு லகாரந் திரிந்துநின்றது. இஃது இறுதியில் முற்று இடையிற் பெயரெச்சமாகிய உவமவுருபு. ஈண்டு முற்றென்பார் இறுதிமொழி என்றார். (௧௮)

லிணைக் கீழ் நிற்பினும், கார் காழ் என்னும் இரண்டு மாத்திரையையுடைய நெட்டெழுத்துக்குக் கீழ் நின்றனபோல ஈண்டுக் கொள்ளப்படுமியல்பை. இக்கருத்தை ஓராது புகர் புகழ் என்பவற்றை நெட்டெழுத்து மொழியாக உரையாசிரியர் கொண்டாரென்று நச்சினார்க்கினியர் மறுத்தல் பொருந்தாதென்க.

18. பெயரெச்சம் பெயர்கொண்டன்றி நில்லாதாகலின் இறுதிச் சொல்லாய் நில்லாது; முற்றே இறுதிச் சொல்லாய் நிற்கும், என்பது கருத்து.

௫௨. னகாரை முன்னர் மகாரங் குறுகும்.

இஃது அரையளபு குறுகுமென்ற மகாரத்திற்குக் குறுகும் இடம் இதுவென்கின்றது.

**இதன் பொருள்:** னகாரை முன்னர் மகாரங் குறுகும்— முற்கூறிய னகாரத்தின் முன்னர் வந்த மகாரந் தன் அரைமாத்திரையிற் குறுகிநிற்கும் என்றவாறு.

**உதாரணம்:** போன்ம் என முன்னர்க் காட்டினும். னகாரை யென இடைச்சொல் ஈறுதிரிந்து நின்றது.

இனித் தன்னினமுடித்தலென்பதனான் ணகாரவொற்றின் முன்னும் மகாரங் குறுகுதல்கொள்க. 'மருளினு மெல்லா மருண்ம்' எனவரும். (௧௭)

௫௩. மொழிப்படுத் திசைப்பினுந் தெரிந்துவே றிசைப்
மெழுத்திய றிரியா வென்மனார் புலவர். [பினு

இஃது ஒற்றுங் குற்றுகரமும் ஈண்டு எழுத்துக்களோடு கூட்டி எண்ணப்பட்டு நிற்குமென்பதூஉஞ் செய்யுளியலுள் எண்ணப்படாது நிற்குமென்பதூஉங் கூறுகின்றது.

**இதன் பொருள்:** தெரிந்து—ஒற்றுங் குற்றுகரமும் பொருள் தரு நிலைமையை ஆராய்ந்து, மொழிப்படுத்து இசைப்பினும்— சொல்லாகச் சேர்த்துச் சொல்லினும், வேறு இசைப்பினும்— செய்யுளியலுள் ஒற்றுங் குற்றுகரமும் பொருள் தருமேனும் மாத்திரை குறைந்து நிற்கும் நிலைமையை நோக்கி எழுத்தெண்ணப்படாவென்று ஆண்டைக்கு வேறாகக் கூறினும், எழுத்தியல் திரியா என்மனார் புலவர்—அவ்விரண்டிடத்தும் அரைமாத்திரை பெற்று நிற்கும் ஒற்றுங் குற்றுகரமும் முற்கூறிய எழுத்தாந் தன்மை திரியாவென்று கூறுவர் புலவர் என்றவாறு.

---

20. இதற்கு நச்சினார்க்கினியர் தெரிந்து என்பதை மொழிப்படுத் திசைப்பினும் என்பதோடும் கூட்டி, ஒற்றும் குற்றியலுகரமும் பொருட்டருநிலையை யாராய்ந்து மொழிப்படுத்துச் சொன்னாலும், செய்யுளியலின் மாத்திரை குறைந்து நிற்கும் நிலை நோக்கி எழுத்தெனப்படாவென்று வேறாகக் கூறினும், அவ்விரண்டிடத்தும் எழுத்தாந்தன்மை திரியாவென்று பொருள் கூறுவர். ஈண்டு மெய்யெழுத்



இதனான் ஒற்றும் ஆய்தமுங் குற்றுகரமும் எழுத்தாகி, நின்று பொருள் தந்தும், எழுத்தெண்ணவும் அலகிடவும் பெறா வென்பது கூறினாராயிற்று. தெரிந்துவேறிசைத்தல் குற்றுகரத்திற்கு இன்றாதலின் ஏற்புழிக்கோடலான் ஒற்றிற்கும் ஆய்தத்திற்குங் கொள்க.

**உதாரணம்:** அல் இல் உண் எண் ஒல் எனவும், கல் வில் முள் செல் சொல் எனவும், ஆல் ஈர் ஊர் ஏர் ஓர் எனவும், கால் சீர் சூல் தேன் கோன் எனவும் உயிரும் உயிர் மெய்யுமாகிய குற்றெழுத்தையும் நெட்டெழுத்தையும் ஒற்றெழுத்துக்கள் அடுத்துநின்று பொருள்தந்தவாறு காண்க. கடம் கடாம் உடையான் திருவாரூர் அகத்தியனார் என ஈரெழுத்தையும் மூவெழுத்தையும் நாலெழுத்தையும் ஐயெழுத்தையும் இறுதியிலும் இடையிலும் ஒற்றடுத்து நின்று பொருள் தந்தவாறு காண்க. எஃகு தெள்கு கொக்கு குரங்கு என்பனவும் எழுத்தெண்ணவும் அலகிடவும் பெறாத குற்றுகரம் அடுத்து நின்று பொருள்தந்தவாறு காண்க. 'உயிரி லெழுத்து மெண்ணப்படாஅ—உயிர்த்திற மியக்க மின்மை யான' (செய்யுளியல்-௪௪) என்பது எழுத்து எண்ணப்பெறாமைக்கு விதி.

இனி இச்சூத்திரத்திற்கு எழுத்துக்களைச் சொல்லாக்கிக் கூறினும் பிறிதாகக் கூறினும் மாத்திரை திரியாதென்று பொருள் கூறி, அகரம் என்புழியும் அ என்புழியும் ஆலம் என்புழியும் ஆ என்புழியும் ககரம் என்புழியுங் க என்புழியுங் காலம் என்புழியுங் கா என்புழியும் ஓசை ஒத்து நிற்குமென்றால், அது முன்னர்க் கூறிய இலக்கணங்களாற் பெறப்படுதலிற் பயனில் கூற்றாமென்க. (௨௦)

---

தென்றும் குற்றியலுகரமென்றும் ஆசிரியர் விதந்து கூறாமையானும், தெரிந்து என்பதற்கு இன்னதைத் தெரிந்து என்று தெரித்துக் கூறாமையானும், அது பொருளன்றாகலின் உரையாசிரியர் கருத்தே இதற்குப் பொருத்தமாம். நன்னூலாரும் இதைத் தழுவியே 'மொழியாய்த் தொடரினு முன்னனைத் தெழுத்தே' என்றார்.

குற்றுகரத்தை நேர்பும் நிரைபுமாகக் கோடலாற் போலும் வேறிசைத்தல் குற்றுகரத்திற்கின்மையின் என்றார். இவ்வாக்கியம் முன்னும் பின்னும் கூறிய பொருள்களுக்கு முரணாகக் காணப்படலின் இடையில் எழுதப்பட்டதுபோலும்.

ருச. அகர இகர மைகார மாகும்.

இது சிலவெழுத்துக்கள் கூடிச் சிலவெழுத்துக்கள்போல இசைக்குமென எழுத்துப்போலி கூறுகின்றது.

**இதன் பொருள் :** அகர இகரம் ஐகாரம் ஆகும்—அகரமும் இகரமுங் கூட்டிச்சொல்ல ஐகாரம்போல இசைக்கும், அது கொள்ளற்க என்றவாறு.

போல என்றது தொக்கது.

**உதாரணம் :** ஐவனம் அஇவனம் எனவரும். ஆகுமென்றதனால் இஃது இலக்கணமன்றாயிற்று. (உக)

ருரு. அகர உகர மௌகார மாகும்.

இதுவும் அது.

**இதன் பொருள் :** அகர உகரம் ஔகாரம் ஆகும்—அகரமும் உகரமும் கூட்டிச்சொல்ல ஔகாரம்போல இசைக்கும், அது கொள்ளற்க என்றவாறு.

போல என்றது தொக்கது.

**உதாரணம் :** ஔவை அஉவை எனவரும். (உஉ)

ருசு. அகரத் திம்பர் யகரப் புள்ளியு
மையெ னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்.

இதுவும் அது. See இளம்பூ:'s comm:

**இதன் பொருள் :** அகரத்திம்பர் யகரப்புள்ளியும்—அகரத்தின்பின் இகரமேயன்றி யகரமாகிய புள்ளிவந்தாலும், ஐயென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்—ஐயெனப்பட்ட நெட்டெழுத்தின் வடிவுபெறத் தோன்றும் என்றவாறு.

**உதாரணம் :** ஐவனம் அய்வனம் எனவரும். மெய்பெற என்றதனான் அகரத்தின்பின்னர் உகரமேயன்றி வகரப்புள்ளியும் ஔகாரம்போல வருமென்று கொள்க. ஔவை அவ்வை என வரும். (உங)

ருஎ. ஓரள பாகு மிடனுமா றுண்டே
தேருங் காலை மொழிவயி னான.

இஃது அதிகாரத்தான் ஐகாரத்திற்கும் ஔகாரத்திற்கும் எதிரது போற்றலென்பனதற் செய்யுளியலைநோக்கி மாத்திரைச் சுருக்கங் கூறுகின்றது.

**இதன் பொருள் :** மொழிவயினான—ஒரு சொல்லிடத்தே நின்ற ஐகார ஔகாரங்கள், தேருங்காலை—ஆராயுமிடத்து, ஓரளபாகும் இடனுமாருண்டே—ஒரு மாத்திரையாய் நிற்கும் இடமும் உண்டு என்றவாறு.

உம்மையான் இரண்டுமாத்திரை பெறுதலே வலியுடைத்தாயிற்று. இடனுமென்றது ஒருசொல்லின் முதலிடைகடையென்னும் மூன்றிடத்துங் குறுகும், அது செய்யுட்கண் ஓசை இடர்ப்பட்டொலிக்குமிடத்துக் குறுகுமென்றற்கு. உரையிற் கோடலால் ஐகாரம் முதலிடைகடையென்னும் மூன்றிடத்துங் குறுகும், ஔகாரம் முதற்கண் குறுகுமெனக்கொள்க.

**உதாரணம் :** ஐப்பசி கைப்பை இடையன் குவளை என வரும். 'அடைப்பையாய்கோறு' எனவும், 'புனையிளங்கொங்கையாய்வரும்' எனவும் பிறவாறும் வருவன செய்யுளியலுட் காண்க. ஔவை கௌவை எனவரும். ஔகாரம் 'கௌவை நீர்வேலிகூற்று' (வெண்பா-23) எனத் தொடைநோக்கிக் குறுகினவாறுங் காண்க. தேருங்காலை யென்றதனான் ஓரெழுத்தொருமொழியுங் குறுகும். கை பை எனவரும். (உச)

ருஅ. இகர யகர மிறுதி விரவும்.

இதுவும் போலி கூறுகின்றது.

**இதன் பொருள் :** இகரயகரம் இறுதிவிரவும்—இகரமும் யகரமும் ஒருமொழியின் இறுதிக்கண் ஓசை விரவிவரும், அவ்விகாரங் கொள்ளற்க என்றவாறு.

நாய் நாஇ எனவரும். (உரு)

---

21. கொள்ளற்க என்றது பொருந்தாது, இது அக்காலத்துக் கொள்ளப்பட்டு வழங்கி வந்தமையின். இதனை நன்னூலார் சந்தியக்கரமென்றல் பொருந்தாது. இதனை யாம் செந்தமிழில் வெளிப்படுத்திய 'போலி எழுத்து' என்னும் கட்டுரையை நோக்கித் தெளிக. அக்கட்டுரை இவ்வதிகாரத்து ஈற்றில் அநுபந்தமாகச் சேர்க்கப்பட்டுள்ளது.

25. இகர யகரம் இறுதி விரவி நடந்த மொழி வழக்கு அக்காலத் துண்டென்பது இதனா லறியப்படும்.

ருகூ. பன்னீ ருயிரு மொழிமுத லாகும்.

இது மேல் எழுத்தினுன் மொழியாமாறு உணர்த்தி அம்மொழிக்கு முதலாமெழுத்து இவையென்பது உணர்த்துகின்றது.

**இதன் பொருள் :** பன்னீருயிரும்—பன்னிரண்டு உயிரெழுத்தும், மொழிமுதல் ஆகும்—மொழிக்கு முதலாம் என்றவாறு.

**உதாரணம் :** அடை ஆடை இலை ஈயம் உளை ஊர்தி எழு ஏணி ஐவனம் ஒளி ஓடம் ஔவியம் எனவரும். (உகூ)

சுo. உயிர்மெய் யல்லன மொழிமுத லாகா.

இஃது உயிர்மெய் மொழிக்கு முதலாம் என்கின்றது.

**இதன் பொருள் :** உயிர்மெய்யல்லன மொழிமுதல் ஆகா—உயிரோடுகூடிய மெய்யல்லாதனவாகிய தனிமெய்கள் மொழிக்கு முதலாகா என்றவாறு.

எனவே, உயிரோடுகூடிய மெய்களே மொழிக்கு முதலாவன என்றவாறும். ஈண்டு உயிர்மெய்யென்றது வேற்றுமைநயங் கருதிற்று. ஒற்றுமைநயங் கருதின் மேலைச் சூத்திரத்து உயிரோடுங்கூடி ஆமென்றல் பயனின்றாம். (உஎ)

சுக. கதந பமவெனு மாவைந் தெழுத்து
மெல்லா வுயிரொடுஞ் செல்லுமார் முதலே.

இது மேற் பொதுவகையான் எய்துவித்த இருநூற்றொருபத்தாறு எழுத்துக்களைச் சிறப்புவகையான் வரையறுத்து எய்துவிக்கின்றது.

**இதன் பொருள் :** க த ந ப ம எனும் ஆவைந்தெழுத்தும்—க த ந ப ம என்று கூறப்பட்ட அவ்வைந்து தனிமெய்யும், எல்லா உயிரொடுஞ் செல்லுமார் முதலே—பன்னிரண்டு உயிரோடும் மொழிக்கு முதலாதற்குச் செல்லும் என்றவாறு.

---

27. உயிர்மெய் என்றது, உயிரோடு கூடிய மெய்யை அது வருஞ் சூத்திரத்து உயிரொடுஞ் செல்லும் என்றதனுல் அறியப்படும்.



**உதாரணம் :** கலை கார் கிளி கீரி குடி கூடு கெண்டை கேழல் கைதை கொண்டல் கோடை கௌவை எனவும், தந்தை தாய் தித்தி தீமை துணி தூணி தெற்றி தேன் தையல் தொண்டை தோடு தௌவை எனவும், நந்து நாரை நிலம் நீலம் நுகம் நூல் நெய்தல் நேமி நைவளம் நொச்சி நோக்கம் நௌவி எனவும், படை பால் பிடி பீடு புகழ் பூமி பெடை பேடை பைதல் பொன் போது பௌவம் எனவும், மடி மாலை மிடறு மீளி முகம் மூப்பு மெலிவு மேனி மையல் மொழி மோத்தை மௌவல் எனவும் வரும். (உஅ)

சுஉ. சகரக் கிளவியு மவற்றோ ரற்றே
அ ஐ ஔவெனு மூன்றலங் கடையே.

இதுவும் அது.

**இதன் பொருள் :** சகரக்கிளவியும் அவற்றோரற்றே—சகரமாகிய தனிமெய்யும் முற்கூறியவைபோல எல்லா உயிரோடுங் கூடி மொழிக்கு முதலாம், அ ஐ ஔ எனும் மூன்றலங்கடையே—அகர ஐகார ஔகாரமென்று சொல்லப்பட்ட மூன்று உயிரும் அல்லாத இடத்து என்றவாறு.

**உதாரணம் :** சாந்து சிற்றில் சீற்றம் சுரை சூரல் செக்கு சேவல் சொல் சோறு எனவரும். சட்டி சகடம் சமழ்ப்பு என்றாற்போல்வன 'கடிசொல்லில்லை' (எச்சவியல்-ருகூ) என்பதனுற் கொள்க. சையம் சௌரியம் என்பவற்றை வடசொல்லென மறுக்க. (உகூ)

சுங. உஊ ஒஓ வென்னு நான்குயிர்
வ என் னெழுத்தொடு வருத லில்லை.

இதுவும் அது.

**இதன் பொருள் :** உ ஊ ஒ ஓ என்னும் நான்குயிர்—உ ஊ ஒ ஓ என்று சொல்லப்பட்ட நான்கு உயிரும், வ என் எழுத்தொடு வருதலில்லை—வ என்று சொல்லப்படுந் தனிமெய்யெழுத்தோடு கூடி மொழிக்குமுதலாய் வருதலில்லை என்றவாறு.

எனவே, ஒழிந்தன மொழிக்குமுதலாம் என்றவாறாயிற்று.

**உதாரணம் :** வளை வாளி விளரி வீடு வெள்ளி வேட்கை வையம் வௌவுதல் எனவரும். (ஙo)

௬௪. ஆஎ, ஒஎனு மூவுயிர் ஞகாரத் துரிய.

இதுவும் அது.

**இதன் பொருள் :** ஆ எ ஒ எனும் மூவுயிர்—ஆ எ ஒ என்று கூறப்படும் மூன்று உயிரும், ஞகாரத்து உரிய—ஞகார ஒற்றொடு கூடி மொழிக்கு முதலாதற்கு உரிய என்றவாறு.

எனவே, ஏனைய உரியவல்ல என்பதாம்.

**உதாரணம் :** ஞாலம் ஞெண்டு ஞொள்கிற்று எனவரும்.

'ஞமலிதந்தமனவுச்சூலுடும்பு' (பெரும்பாண் - 132) என்பது திசைச்சொல். ஞழியிற்று என்றாற்போல்வன இழிவழக்கு. (௩௧)

௬௫. ஆவோ டல்லது யகர முதலாது.

இதுவும் அது.

**இதன் பொருள் :** ஆவோடு அல்லது யகரம் முதலாது—ஆகாரத்தோடு கூடியல்லது யகரவொற்று மொழிக்கு முதலாகாது என்றவாறு.

**உதாரணம் :** யானை யாடு யாமம் எனவரும்.

யவனர் யுத்தி யூபம் யோகம் யௌவனம் என்பன வடசொல்லென மறுக்க. (௩௨)

௬௬. முதலா வேன தம்பெயர் முதலும்.

இது மொழிக்கு முதலாகாதனவும் ஒரோவழி ஆமென்கின்றது.

**இதன் பொருள் :** முதலாவும்—மொழிக்கு முதலாகா என்ற ஒன்பது மெய்யும், எனவும்—மொழிக்கு முதலா மென்ற ஒன்பது மெய்யும் பன்னிரண்டுயிரும், தம்பெயர் முதலும்—தத்தம் பெயர் கூறுதற்கு முதலாம் என்றவாறு.

முதலாவும் எனவும் என்ற உம்மைகள் தொக்குநின்றன.

**உதாரணம் :** ஙகரமும் டகரமும் ணகரமும் ரகரமும் லகரமும் ழகரமும் ளகரமும் றகரமும் னகரமும் என மொழிக்கு முதலாகாத ஒன்பதும் முதலாமாறு, ஙக்களைந்தார் டப்பெரிது ணந்நன்று எனவரும் இவ்வாறே ஏனையவற்றையும் ஒட்டுக. இனி எனவென்றதனன் கக்களைந்தார் தப்பெரிது அக்குறிது ஆநெடிது என மொழிக்குமுதலாமவற்றையுந் தம்பெயர் கூறுதற்கு முதலாமாறு ஒட்டிக்கொள்க. வரையறுக்கப்பட்டு மொழிக்கு முதலாகாது நின்ற மெய்க்கும் இவ்விதிகொள்க. அவை சகரத்து மூன்றும் வகரத்து நான்கும் ஞகரத் தொன்பதும் யகரத்துப் பதினொன்றுமாம். (௩௩)

௬௭. குற்றிய லுகர முறைப்பெயர் மருங்கி
னொற்றிய நகரமிசை நகரமொடு முதலும்.

இஃது எழுத்துக்களை மொழிக்கு முதலாமாறு கூறி முறையே குற்றியலுகரம் மொழிக்கு முதலாமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** குற்றியலுகரம் முறைப்பெயர் மருங்கின்—குற்றியலுகரமானது முன்னிலைமுறைப் பெயரிடத்து, ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும்—தனிமெய்யாய் நின்ற நகரத்துமேனின்ற நகரத்தொடுகூடி மொழிக்கு முதலாம் என்றவாறு.

நுந்தை எனவரும். இதனானே முறைப்பெயர் இடமும் நகரம் பற்றுக்கோடுமாயிற்று. ஈண்டுக் குற்றியலுகரம் மெய்ப் பின்னர் நின்றதேனும் ஒற்றுமை நயத்தான் மொழிக்கு முதலென்றார். இது செய்யுளியலைநோக்கிக் கூறியதாயிற்று. (௩௪)

௬௮. முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅ
தப்பெயர் மருங்கி னிலையிய லான.

இது மேலதற்கோர் புறனடை கூறுகின்றது.

**இதன் பொருள் :** அப்பெயர்மருங்கின் நிலையியலான—அம் முறைப்பெயரிடத்தே நிற்றலிலக்கணமான குற்றியலுகரம், முற்றியலுகரமொடு பொருள் வேறுபடாஅது – இதழ்குவித்துக் கூறும்வழி வரும் முற்றுகரத்தோடு அவ்விடத்துக் குற்றுகரம்

பொருள் வேறுபடுமாறுபோல ஈண்டுப் பொருள் வேறுபட்டு நில்லாது என்றவாறு.

காது கட்டு கத்து முருக்கு தெருட்டு என்பன முற்றுகரமும் குற்றுகரமுமாய்ப் பொருள் வேறுபட்டுநின்றாற்போல நுந்தையென்று இதழ்குவித்து முற்றக்கூறியவிடத்தும் இதழ்குவியாமற் குறையக்கூறியவிடத்தும் ஒரு பொருளே தந்தவாறு காண்க. நுந்தாயென்பதோவெனின் அஃது இதழ்குவித்தே கூறவேண்டுதலிற் குற்றுகரமன்று. இயலென்றதனான் இடமும் பற்றுக்கோடும் இரண்டிற்கும் வேறுபாடின்றென்று கொள்க. இதனானே மொழிக்கு முதலாமெழுத்துத் தொண்ணூற்றுநான்கென்று உணர்க. (௩௫)

௬௯. உயிர்ஔ வெஞ்சிய விறுதி யாகும்.

இஃது உயிர்மொழிக்கு ஈறுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள்:** உயிர் ஔ எஞ்சிய இறுதியாகும்—உயிர்களுள் ஔகாரம் ஒழிந்தனவெல்லாம் மொழிக்கு ஈறாம் என்றவாறு.

எனவே, ஔகாரவுயிர் ஈறாகாதாயிற்று. இஃது உயிர்க்கும் உயிர்மெய்க்கும் பொது.

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ என இவைதாமே ஈறாயின. ஆஅ ஈஇ ஊஉ ஏஎ ஓஒ எனக் குறிலைந்தும் அளபெடைக்கண் ஈறாயின. கா தீ பூ சே கை கோ எனவும், விள கிளி மழு எனவும் வரும். எகர ஒகரம் மேலே விலக்குப. 'அளபெடை மிகூஉ மிகர விறுபெயர்' (சொல்-௧௨௫) என்பராதலின், அளபெடைப்பின் வந்த குற்றெழுத்துங் கொள்வர் ஆசிரியரென்று உணர்க. நெட்டெழுத்தேழும் முதன் மொழியாமென்னுந் துணையே முன்னுணர்த்துதலின் ஈண்டு அவை ஈறுமென்றும் உணர்த்தினர். (௩௬)

36. அளபெடைப் பின்வந்த குற்றெழுத்துங் கொள்வரென்றது, 'அளபெடை மிகூஉ மிகர விறுபெயர்' என்ற சூத்திரத்துள் அளபெடை யெழுத்தாக வரும் இகரத்தை, இகர விறுபெயரென்று ஆசிரியர் கொண்டமையை.



௭௦. கவவோ டியையி னௌவு மாகும்.

இஃது ஈறாகாதென்ற ஔகாரம் இன்னுழியாமென்கின்றது.

**இதன் பொருள்:** ஔவும்—முன் ஈறாகாதென்ற ஔகாரமும், கவவோடு இயையின் ஆகும்—ககரவகரத்தோடு இயைந்தவழி ஈறாம் என்றவாறு.

**உதாரணம்:** கௌ வௌ எனவரும். எனவே, ஒழிந்த உயிரெல்லாந் தாமே நின்றும் பதினெட்டு மெய்களோடுங்கூடி நின்றும் ஈறுதல் இதனாற் பெற்றாம். இதனானே ஔகாரம் ஏனை மெய்க்கண் வாராதென விலக்குதலும் பெற்றாம். உயிர் நகரத்தோடுகூடி மொழிக்கு ஈறாமென்பது இதனால் எய்திற்றேனும் அது மொழிக்கீறாகாமை தந்து புணர்ந்துரைத்தலான் உணர்க. இது வரையறை கூறிற்று. (௩௭)

௭௧. எ என வருமுயிர் மெய்யீ றாகாது.

இஃது எகரந் தானேநின்ற வழியன்றி மெய்யோடு கூடினால் ஈறாகாதென விலக்குகின்றது.

**இதன் பொருள்:** எ என வரும் உயிர் மெய் ஈறாகாது—எ என்று கூறப்படும் உயிர் தானே ஈறுவதன்றி யாண்டும் மெய்களோடு இயைந்து ஈறாகாது என்றவாறு. (௩௮)

௭௨. ஒவ்வு மற்றே நவ்வலங் கடையே.

இது விலக்கும் வரையறையுங் கூறுகின்றது.

**இதன் பொருள்:** ஒவ்வும் அற்று—ஒகாரமும் முன்சொன்ன எகரம்போலத் தானே ஈறுவதன்றி மெய்களோடு இயைந்து ஈறாகாது, நவ்வலங்கடையே—நகரவொற்றோடு அல்லாத இடத்தில் என்றவாறு.

**உதாரணம்:** நொ கொற்றா 'நொஅலையனின்னாட்டைநீ' எனவரும். (௩௯)

37. தந்து புணர்ந்துரைத்தலான் என்றது, உள்பொருளல்லாததனை உள்பொருள்போலத் தந்து கூட்டி உரைத்தலை. இங்கே உயிர் நகரத்தோடு கூடி ஈறுவதுபோலக் கூறியது தந்து புணர்த்தல்.

௭௩. ஏ ஒ எனுமுயிர் ஞகாரத் தில்லை.

இது சில உயிர் சில உடலோடேறி முடியாதென விலக்குகின்றது.

**இதன் பொருள்:** ஏஒ எனும் உயிர் ஞகாரத்தில்லை—ஏஒ என்று கூறப்பட்ட இரண்டுயிருந் தாமேநின்றும் பிறமெய்களோடு நின்றும் ஈறுதலன்றி ஞகாரத்தோடு ஈறுதலில்லை என்றவாறு.

எனவே, ஏனையுயிர்கள் ஞகாரத்தோடு ஈறுமென்றாராயிற்று.

**உதாரணம்:** உரிஞ உரிஞா உரிஞி உரிஞீ உரிஞு உரிஞூ இவை எச்சமும் வினைப்பெயரும் பற்றிவரும். அஞ்ஞை மஞ்ஞை இவை பெயர். ஏனையைந்தும் விலக்கப்பட்டன. உரிஞோ என்பது 'கடிசொல்லில்லை' என்பதனாற் கொள்க. (௪௦)

௭௪. உ ஊ கார நவவொடு நவிலா.

இதுவும் அது.

**இதன் பொருள்:** உ ஊகாரம்—உகர ஊகாரங்கள் தாமே நின்றும் பிறமெய்களோடுநின்றும் பயில்வதன்றி, நவவொடு நவிலா—நகர வொற்றோடும் வகரவொற்றோடும் பயிலா என்றவாறு.

எனவே, ஏனையுயிர்கள் நகரவகரங்களோடு வருமாயின.

**உதாரணம்:** நகரம் பொருந என வினைப்பெயராகியும், நா நீ நே எனப் பெயராகியும், நை நொ நோ என வியங்கோளாகியும் வரும். பொருநை என்றுங் காட்டுப. வகரம் உவ வே என வியங்கோளாயும், உவா செவ்வி வீ வை எனப் பெயராயும் வரும் ஒருவ ஒருவா ஒருவி ஒருவீ ஔவை என்றுங் காட்டுப. ஈண்டு விலக்காத ஏனை யுயிர்களோடு வந்த நகரவகரங்கள் அக்

40. வினைப்பெயரென்றது, தொழிற்பெயரை. அஞ்ஞை என்றது தாயை. அகநானூற்றில் "என் அஞ்ஞை சென்றவாறே" என வருதலா னுணர்க.

41. வியங்கோள் - ஏவல்.



காலத்து வழங்கினவென்று கோடும். இவ்விதியால் இனி நவிலாவென்றதனானே வகர வுகரம் கதவு துரவு குவவு புணர்வு நுகர்வு நொவ்வு கவ்வு எனப் பயின்று வருதலுங் கொள்க. (௪௧)

௭௫. உச்ச கார மிருமொழிக் குரித்தே.

இது சகார உகாரம் பலசொற்கு ஈறாய் வராது இருசொற்கு ஈறுமென்று வரையறை கூறுகின்றது.

**இதன் பொருள்:** உச்சகாரம்—உகாரத்தோடு கூடிய சகாரம், இருமொழிக்கே உரித்து—இரண்டு மொழிக்கே ஈறும் என்றவாறு.

எனவே, பன்மொழிக்கு ஈறாதென்றவாறாயிற்று. உரித்தேயென்னும் ஏகாரம் மொழிக்கேயெனக் கூட்டுக.

**உதாரணம்:** உசு; இஃது உளுவின்பெயர். முசு; இது குரங்கினுள் ஒருசாதி. பசு என்பதோவெனின், அஃது ஆரியச் சிதைவு. கச்சு குச்சு என்றாற்போல்வன குற்றுகரம், உகரம் ஏறிய சகரம் இருமொழிக்கு ஈறுமெனவே ஏனை உயிர்கள் ஏறிய சகரம் பன்மொழிக்கு ஈறுமாயிற்று. உச உசா விசி சே கச்சை சோ எனப் பெயராயும், துஞ்ச எஞ்சா எஞ்சி மூசி மூசு என எச்சமாயும் வரும். அச்சோ என வியப்பாயும் வரும். இன்னும் இவை வழக்கின்கட் பலவாமாறும் உணர்க. (௪௨)

௭௬. உப்ப கார மொன்றென மொழிப
இருவயி னிலையும் பொருட்டா கும்மே.

இஃது ஒருசொல்வரையறையும் அஃது ஓசைவேற்றுமையால் இருபொருள் தருமெனவுங் கூறுகின்றது.

**இதன் பொருள்:** உப்பகாரம் ஒன்றென மொழிப—உகரத்தோடுகூடிய பகரம் ஒருமொழிக்கல்லது பன்மொழிக்கு ஈறாதென்று கூறுவர் புலவர். இருவயினிலையும் பொருட்டா

43. இச்சூத்திரத்தால் ஓசைபற்றிப் பொருள் வேறுபடுமென்பது பெறப்படும். 'தொனி' என்பது மிக்கருத்து.

கும்மே—அது தான் தன்வினை பிறவினை யென்னும் இரண் டிடத்தும் நிலைபெறும் பொருண்மைத்தாம் என்றவாறு.

உதாரணம்: தபு எனவரும். இது படுத்துக்கூற நீ சாவெனத் தன்வினையாம். எடுத்துக்கூற நீ ஒன்றனைச் சாவப்பண்ணெனப் பிறவினையாம். உப்பு கப்பு என்றாற்போல்வன குற்றுகரம். உக ரத்தோடு கூடிய பகரம் ஒன்றெனவே ஏனையுயிர்களோடு கூடிய பகரம் பன்மொழிக்கு ஈறாய்ப் பலபொருள் தருமென்றாராயிற்று. மறந்தப துப்பா என எச்சமாயும், நம்பி செம்பூ பே பெதும்பை எனப் பெயராயும், போ என ஏவலாயும் வரும். இவற்றைப் பிறசொற்களோடும் ஒட்டுக. ஏனை ஈகாரபகரம் இடக்கராய் வழங்கும். (சஅ)

ஃவா

எஎ. எஞ்சிய வெல்லா மெஞ்சுத லிலவே.

இது முன்னர் மொழிக்கு ஈறுமென்றவற்றுள் எஞ்சி நின் றன மொழிக்கு ஈறுமாறும் மொழிக்கு ஈறுகாவென்றவை தம் பெயர் கூறுங்கால் மொழிக்கு ஈறுமாறுங் கூறுகின்றது.

இதன் பொருள்: எஞ்சியவும் எஞ்சுதலில—'கவவோ டியையின்' (எழு—எ०) என்னுஞ் சூத்திரத்தாற் பதினோருயி ரும் பதினெட்டு மெய்க்கண்ணும் வந்து மொழிக்கு ஈறுமென்ற பொதுவிதியிற், பின்னை விசேடித்துக் கூறியவற்றை ஒழிந்தன வும் மொழிக்கு ஈறுதற்கு ஒழிவில, எல்லாம் எஞ்சுதலில— மொழிக்கு ஈறுகாதென்ற உயிர்மெய்களுந் தம்பெயர் கூறும்வழி ஈறுதற்கு ஒழிவில என்றவாறு.

எல்லாமென்றது சொல்லினெச்சஞ்சொல்லியாங் குணர்த்த லென்னும் உத்தி. உம்மை விரிக்க. ஈண்டு எஞ்சியவென்றது முன்னர் உதாரணங்காட்டிய ஞகரமும் நகரமும் வகரமும் சகர மும் பகரமும் ஒருமொழிக்கும் ஈறுகாத ஙகரமும் ஒழிந்த பன் னிரண்டு மெய்க்கண்ணும் எகரமும் ஒகரமும் ஔகாரமும் ஒழிந்த ஒன்பதுயிரும் ஏறி மொழிக்கு ஈறுய் வருவனவற்றை யென்று உணர்க.

உதாரணம்: வருக புகா வீக்கி புகீ செகு புகூ ஈங்கே மங்கை எங்கோ எனவும், கட்ட கடா மடி மடீ மடு படு படை

முதனிலை

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| "பன்னீருயிரும்" | அடை | ஆடை | இலை | ஈயம் | உளை | ஊர்தி | எழு | ஏணி | ஐவனம் | ஒளி | ஓடம் | ஔவியம் | 12 |
| "கசத நபம" | கலை | கார் | கிளி | கீரி | குடி | கூடு | கெண்டை | கேழல் | கைதை | கொண்டல் | கோடை | கௌவை | 12 |
| | தந்தை | தாய் | தித்தி | தீமை | துணி | தூணி | தெற்றி | தேன் | தையல் | தொண்டை | தோடு | தௌவை | 12 |
| | நந்து | நாரை | நிலம் | நீலம் | நுகம் | நூல் | நெய்தல் | நேமி | நைவனம் | நொச்சி | நோக்கம் | நௌவி | 12 |
| | படை | பால் | பிடி | பீடு | புகழ் | பூமி | பெடை | பேடை | பைதல் | பொன் | போது | பௌவம் | 12 |
| | மடி | மாலை | மிடறு | மீளி | முகம் | மூப்பு | மெலிவு | மேனி | மையல் | மொழி | மோதை | மௌவல் | 12 |
| "சகரக்கிளவியும்" | — | சாந்து | சிற்றில் | சீற்றம் | சுரை | சூரல் | செக்கு | சேவல் | — | சொல் | சோறு | — | 9 |
| "உ ஊ ஒ ஓ" | வளை | வாளி | விளரி | வீடு | — | — | வெள்ளி | வேட்கை | வையம் | — | — | வௌவுதல் | 8 |
| "ஆ எ ஒ" | — | ஞாலம் | — | — | — | — | ஞெண்டு | — | — | ஞொள்கிற்று | — | — | 3 |
| "ஆவோடல்லது" | — | யாடு | — | — | — | — | — | — | — | — | — | — | 1 |
| "குற்றியலுக" | மொழிமுதற் குற்றுகரம் நுந்தை | | | | | | | | | | | | 1 |
| | | | | | | | | | | | | | 94 |

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| "உயிர் ஒள வெஞ்சிய" | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | — | 11 |
| க் | வருக | புகா | விக்கி | புகீ | செகு | புகூ | — | சக்கே | மக்கை | — | எங்கோ | கௌ | 10 |
| ச் | உச | உசா | விசி | மூசீ | உசு | மூசூ | — | சே | கச்சை | — | சோ | — | 9 |
| ஞ் | உரிஞ | உரிஞா | உரிஞி | உரிஞீ | உரிஞு | உரிஞூ | — | — | அஞ்ஞை | — | — | — | 7 |
| ட் | சட்ட | கடா | மடி | மடீ | மடு | படூ | — | * | படை | — | * | — | 9 |
| ண் | மண்ண | எண்ணா | கண்ணி | உணீ | கணு | நண்ணூ | — | * | பண்ணை | — | * | — | 9 |
| த் | அத | புதா | பதி | வதீ | அது | கைதூ | — | * | தந்தை | — | அந்தோ | — | 9 |
| ந் | பொருந | நா | * | நீ | — | — | — | நே | நை | நொ | நோ | — | 8 |
| ப் | தப | தப்பா | கம்பி | பீ | தபு | செம்பூ | — | பே | பெதும்பை | — | போ | — | 9 |
| ம் | கம | சென்மா | அம்மி | மீ | செம்மு | கொண்மூ | — | * | யாமை | — | வம்மோ | — | 9 |
| ய் | செய | காயா | * | * | * | கொய்யூ | — | * | ஐயை | — | ஐயோ | — | 9 |
| ர் | வர | தாரா | பரி | குரீ | கரு | வெரூ | — | * | காரை | — | * | — | 9 |
| ல் | சில | பலா | வலி | வலீ | வலு | கொல்லூ | — | வல்லே | கலை | — | * | — | 9 |
| வ் | உவ | உவா | செவ்வி | வீ | — | — | — | வே | வை | — | * | வௌ | 9 |
| ழ் | தொழ | விழா | காழி | வழீ | மழு | எழூ | — | * | தாழை | — | * | — | 9 |
| ள் | உள | உள்ளா | வெள்ளி | குளீ | உளு | எள்ளூ | — | * | களை | — | * | — | 9 |
| ற் | கற்ற | கற்றா | உறி | உறீ | மறு | உறூ | — | * | கற்றை | — | எற்றோ | — | 9 |
| ன் | கன | கனா | வன்னி | தனீ | முன்னு | தன்னூ | — | என்னே | அன்னை | — | அன்னோ | — | 9 |



* இவ்வடையாளம் உதாரணமில்லாதனவற்றைக் காட்டும்.

* இக்கணக்கின்படி உரையில் ஆக ஈறு நூற்றெழுபத்துமூன்றும், உதாரணமில்லாத பதினெட்டும் ஆக நூற்றுத்தொண்ணூறு என்பது ஆக ஈறு நூற்றெழுபத்தொன்றும் உதாரணமில்லாத இருபதும் ஆக நூற்றுத்தொண்ணூற்றொன்று என்றிருக்கவேண்டும்.

எனவும், இதற்கு ஏகார ஓகாரங்கள் ஏறி வருவன உளவேற் கொள்க, மண்ண எண்ணு கண்ணி உணீ கணு நண்ணூ பண்ணே எனவும், இதற்கு ஏகார ஓகாரங்கள் ஏறிவருவன உளவேற் கொள்க, அத புதா பதி வதீ அது கை தூ தந்தை அந்தோ எனவும், இதற்கு ஏகாரம் ஏறி வருவன உளவேற் கொள்க, கம நெண்மா அம்மி மீ செம்மு கொண்மூ யாமை காத்தும்வம்மோ எனவும், இதற்கு ஏகாரம் ஏறிவருவன உளவேற் கொள்க, செய காயா கொய்யூ ஐயை ஐயோ எனவும், இதற்கு இகர ஈகார உகர ஏகாரங்கள் ஏறிவருவன உளவேற் கொள்க, வர தாரா பரி குரீ கரு வெரூ நாரை எனவும், இதற்கு ஏகார ஓகாரங்கள் ஏறி வருவன உளவேற் கொள்க, சில பலா வலி வலீ வலு கொல்லூ வல்லே கலை எனவும், இதற்கு ஓகாரம் ஏறி வருவன உளவேற் கொள்க, தொழ விழா நாழி வழீ மழு எழூ தாழை எனவும், இதற்கு ஏகார ஓகாரங்கள் ஏறி வருவன உளவேற் கொள்க, உள உள்ளா வெள்ளி குளீ உளு எள்ளு களை எனவும், இதற்கு ஏகார ஓகாரங்கள் ஏறி வருவன உளவேற் கொள்க, கற்ற கற்று உறி உறீ மறு உறூ கற்றை எற்றோ எனவும், இதற்கு ஏகாரம் ஏறி வருவன உளவேற் கொள்க, நன கனா வன்னி துனீ முன்னு துன்னூ என்னே அன்னை அன்னோ எனவும் வரும். இவற்றுட் பெயராயும் வினையாயும் வருவன உணர்க. இவற்றுட் ககரணக ரங்கள் விலக்காத ஒன்பதும் வந்தன. ஆக ஈறு நூற்றுநாற் பத்துமூன்றும் உதாரணமில்லாத பதினெட்டும் ஆக நூற்றறுபத் தொன்று. ஙகரம் மொழிக்கு ஈறாகாதென்பது பெரும்பான்மை யாதலிற் கூறிற்றிலர். இனி ஙகரமும் ஔகாரமும் ஏறாத மெய் பதினேந்தும் எகரமும் ஒகரமும் ஏகாரமும் ஓகாரமும் உகரமும் ஊகாரமும் ஏறாத மெய்களுந் தம்பெயர் கூறுங்கால் மொழிக்கு ஈறுமாறு, ஙப்பெரிது சௌஅழகிது ஞௌதீது என வரும். ஏனையவற்றோடும் இவ்வாறே ஒட்டுக. கெக்குறைந்தது கொத்தீது ஞெவ்வழகிது ஞொத்தீது நுங்நன்று நூப்பெரிது வுச்சிறிது வூப்பெரிது என எல்லாவற்றையும் இவ்வாறே ஒட்டுக. இன் னும் எல்லாமென்றதனுனே கந்நன்று ஆநன்று என மொழிக்கு ஈறுவனவுந் தம்பெயர் கூறும்வழி ஆமென்று கொள்க. (சச)

எஅ. ஞணநம னயரல வழள வென்னு மப்பதி னொன்றே புள்ளி யிறுதி.

இது முன்னர் உயிர் ஈறுமாறு உணர்த்திப் புள்ளிகளுள் ஈறுவன இவையென்கின்றது.

இதன் பொருள் : ஞணநமனயரலவழள என்னும் அப்பதி னொன்றே புள்ளியிறுதி—ஞணநமனயரலவழள வென்று கூறப்பட்ட பதினொன்றுமே புள்ளிகளில் மொழிக்கு ஈறுவன என்றவாறு.

உதாரணம் : உரிஞ் மண் பொருந் திரும் பொன் வேய் வேர் வேல் தெவ் வீழ் வேள் எனவரும். னகரம் ஈற்றுவையாது மகரத்தோடு வைத்தது வழக்குப் பயிற்சியும் மயக்க இயைபும் நோக்கி. (௪௫)

௭௯. உச்ச காரமொடு நகாரஞ் சிவணும்.

இது மேற் பொதுவகையான் ஈறுவனவற்றுள் வரையறைப்படுவது இதுவென்கின்றது.

இதன் பொருள் : உச்சகாரமொடு நகாரஞ் சிவணும்—உகாரத்தோடு கூடிய சகரம் இருமொழிக்கீறுயவாறுபோல நகரவொற்றும் இருமொழிக்கல்லது ஈறுகாது என்றவாறு.

உதாரணம் : பொருந் வெரிந் என்வரும். (௪௬)

௮௦. உப்ப காரமொடு ஞகாரையு மற்றே
யப்பொரு ளிரட்டா திவணை யான.

இதுவும் அது.

இதன் பொருள் : உப்பகாரமொடு ஞகாரையும் அற்றே—உகாரத்தோடு கூடிய பகரத்தோடு ஞகரமும் ஒத்து ஒருமொழிக்கு ஈறும், இவணையான அப்பொருள் இரட்டாது—இவ்விடத்து ஞகாரத்தின் கண்ணனை அப்பொருள் பகரம்போல இருபொருட்படாது என்றவாறு.

உதாரணம் : உரிஞ் எனவரும். ஞகாரம் ஒருமொழிக்கு ஈறுதலின் நகரத்தின்பின் கூறினர். இவணை என்னும் ஐகாரம் அசை. (௪௭)



௮௧. வகரக் கிளவி நான்மொழி யீற்றது.

இதுவும் அது.

இதன் பொருள் : வகரக்கிளவி நான்மொழி ஈற்றது—வகரமாகிய எழுத்து நான்குமொழியின் ஈற்றதாம் என்றவாறு.

உதாரணம் : அவ் இவ் உவ் தெவ் எனவரும். கிளவி ஆகுபெயர், எழுத்துக் கிளவியாதற்கு உரித்தாமாதலின். (௪௮)

௮௨. மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த
னகரத் தொடர்மொழி யொன்பஃ தென்ப
புகரறக் கிளந்த வஃறிணை மேன.

இதுவும் அது; வரையறைகூறுதலின்.

இதன் பொருள் : புகரறக் கிளந்த அஃறிணை மேன—குற்றமறச் சொல்லப்பட்ட அஃறிணைப் பெயரிடத்து, மகரத்தொடர்மொழி மயங்குதல் வரைந்த னகரத் தொடர்மொழி ஒன்பஃது என்ப—மகர ஈற்றுத் தொடர்மொழியோடு மயங்காதென்று வரையறைப்பட்ட னகர ஈற்றுத்தொடர்மொழி ஒன்பதென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

ஆய்தம் விகாரம்.

உதாரணம் : எகின் செகின் விழன் பயின் குயின் அழன் புழன் கடான் வயான் எனவரும். எகின் எகினம் என்றாற்போல வேறோர் பெயராய்த் திரிவனவுஞ் சந்தியாற் திரிவனவுமாய் ஈற்றுட் திரிபுடையன களைந்து ஒன்பதும் வரும். மேற்கண்டு கொள்க. நிலம் நிலன் பிலம் பிலன் கலம் கலன் வலம் வலன் உலம் உலன் குலம் குலன் கடம் கடன் பொலம் பொலன் புலம் புலன் நலம் நலன் குளம் குளன் வளம் வளன் என இத்தொடக்கத்தன தம்முள் மயங்குவன. வட்டம் குட்டம் ஓடம் பாடம் இவைபோல்வன மயங்காதன. வரையறை னகரத்தின் மேற் செல்லும். மயங்காவெனவே மயக்கமும் பெற்றும். (௪௯)

மொழிமரபு முற்றிற்று.

---

49. இது மொழியிறுதிப்போலி கூறிற்று. னகரத்தோடு மகரம் ஒத்து நடவாது, மகரத்தோடு னகரம் ஒத்து நடக்குமென்பது கருத்து.

## ௩. பிறப்பியல்

௮௩. உந்தி முதலா முந்துவளி தோன்றித்
தலையினு மிடற்றினு நெஞ்சினு நிலைஇப்
பல்லு மிதழு நாவு மூக்கு
மண்ணமு முளப்பட வெண்முறை நிலையா
னுறுப்புற் றமைய நெறிப்பட நாடி
யெல்லா வெழுத்துஞ் சொல்லுங் காலைப்
பிறப்பி னாக்கம் வேறுவே றியல
திறப்படத் தெரியுங் காட்சி யான.

என்பது சூத்திரம். இவ்வோத்து எழுத்துக்களினது பிறப்பு உணர்த்துதலிற் பிறப்பியலென்னும் பெயர்த்தாயிற்று. சார்பிற் றோற்றத்து எழுத்துந் தனிமெய்யும் மொழியினன்றி உணர்த்தலாகாமையின் அவை பிறக்கும் மொழியை மொழிமரபிடை உணர்த்திப் பிறப்பு உணர்த்த வேண்டுதலின் நூன்மரபின் பின்னர் வையாது இதனை மொழிமரபின் பின்னர் வைத்தார்.

இச்சூத்திரம் எழுத்துக்களினது பொதுப்பிறவி இத்துணை நிலைக்களத்து நின்று புலப்படுமென்கின்றது.

**இதன் பொருள் :** எல்லா எழுத்தும் பிறப்பின் ஆக்கஞ் சொல்லுங்காலை—தமிழெழுத்து எல்லாவற்றிற்கும் ஆசிரியன் கூறிய பிறப்பினது தோற்றரவை யாங் கூறுமிடத்து, உந்திமுதலாத் தோன்றி முந்து வளி—கொப்பூழடியாகத் தோன்றி முந்துகின்ற உதானனென்னுங் காற்று, தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇ—தலையின்கண்ணும் மிடற்றின்கண்ணும் நெஞ்சின்கண்ணும் நிலைபெற்று, பல்லும் இதழும் நாவும் மூக்கும் அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான் உறுப்புற்று—பல்லும் இதழும் நாவும் மூக்கும் அண்ணமு மென்ற ஐந்துடனே அக்காற்று, நின்ற தலையும் மிடறும் நெஞ்சுங் கூட எட்டாகிய முறைமையையுடைய தன்மையோடு கூடிய உறுப்புக்களோடு ஒன்றுற்று, அமைய—இங்ஙனம் அமைதலானே, வேறுவேறு இயல—அவ்

1. வளிதோன்றி நிலைபெற்று உறுப்புற்று அமைய என்றதனே அங்ஙனம் அமைதற்கு உயிர்க்கிழவனது முயற்சியும் அவனும் வேண்டுமென்பது பெறப்படும். உயிர்க்கிழவன் - கருத்தா.



வெழுத்துக்களது தோற்றரவு வேறுவேறு புலப்பட வழங்குதலையுடைய, காட்சியான நாடி நெறிப்பட—அதனை அறிவான் ஆராய்ந்து அவற்றின் வழியிலே மனம்பட, திறப்படத் தெரியும்—அப் பிறப்பு வேறுபாடுகளெல்லாங் கூறுபட விளங்கும் என்றவாறு.

சொல்லுங்காலை வளி நிலைபெற்று உறுப்புக்களுற்று இங்ஙனம் அமைதலானே அவை வழங்குதலையுடைய; அவற்றின் வழக்கம் அவற்றின் வழியிலே மனந் திறப்படத் தெரியுமெனக் கூட்டி உரைத்துக்கொள்க. இங்ஙனம் கூறவே முயற்சியும் முயலுங்கருத்தாவும் உண்மைபெற்றும். (௧)

௮௪. அவ்வழி
பன்னீ ருயிருந் தந்நிலை திரியா
மிடற்றுப் பிறந்த வளியி னிசைக்கும்.

இஃது உயிரெழுத்திற்குப் பொதுப்பிறவி கூறுகின்றது.

**இதன் பொருள் :** பன்னீருயிருந் தந்நிலை திரியா—பன்னிரண்டு உயிருந் தத்தம் மாத்திரை திரியாவாய், அவ்வழிப்பிறந்த—அவ்வுந்தியிடத்துப் பிறந்த, மிடற்றுவளியின் இசைக்கும்—மிடற்றின்கண் நிலைபெற்ற காற்றான் ஒலிக்கும் என்றவாறு.

எனவே குற்றியலிகரமுங் குற்றியலுகரமுந் தந்நிலை திரியுமென்றாராயிற்று. அவ்வெழுத்துக்களைக் கூறி உணர்க. (௨)

௮௫. அவற்றுள்
அ ஆ ஆயிரண் டங்காந் தியலும்.

இஃது அவ்வுயிர்களுட் சிலவற்றிற்குச் சிறப்புப் பிறவி கூறுகின்றது.

**இதன் பொருள் :** அவற்றுள்—முற்கூறிய பன்னிரண்டு உயிர்களுள், அ ஆ ஆயிரண்டு—அகர ஆகாரங்களாகிய அவ்

சொல்லுங்காலை என்பதை எழுத்துக்களைக் கூறுபவனுடைய வினையாக்கி உரையாசிரியர் கூறுவர். அதுவே சிறந்த உரையாதல் காண்க.

விரண்டும், அங்காந்து இயலும்—அங்காந்து கூறும் முயற்சியாற் பிறக்கும் என்றவாறு.

முயற்சி உயிர்க்கிழவன்கண்ணது. அ ஆ என இவற்றின் வேறுபாடு உணர்க. (௬)

அ௬. இ ஈ எ ஏ ஐயென விசைக்கு
மப்பா லைந்து மவற்றோ ரன்ன
வவைதா
மண்பன் முதனா விளிம்புற லுடைய.

இதுவும் அது.

**இதன் பொருள்:** இ ஈ எ ஏ ஐ என இசைக்கும் அப்பாலைந்தும்—இ ஈ எ ஏ ஐ என்று கூறப்படும் அக்கூற்று ஐந்தும், அவற்றோரன்ன—அகர ஆகாரங்கள்போல அங்காந்து கூறும் முயற்சியாற் பிறக்கும், அவைதாம் அண்பல் முதல் நா விளிம்பு உறல் உடைய—அவைதாம் அங்ஙனம் பிறக்குமாயினும் அண்பல்லும் அடிநாவிளிம்பும் உறப் பிறக்கும் வேறுபாடுடைய என்றவாறு.

அண்பல் வினைத்தொகை. எனவே, நாவிளிம்பு அணுகுதற்குக் காரணமான பல்லென்று அதற்கோர் பெயராயிற்று இ ஈ எ ஏ ஐ என இவற்றின் வேறுபாடு உணர்க. (௪)

அ௭. உ ஊ ஒ ஓ ஒளவென விசைக்கு
மப்பா லைந்து மிதழ்குவிந் தியலும்.

இதுவும் அது.

**இதன் பொருள்:** உ ஊ ஒ ஓ ஒள என இசைக்கும் அப்பாலைந்தும்—உ ஊ ஒ ஓ ஒள என்று சொல்லப்படும் அக்கூற்று ஐந்தும், இதழ் குவிந்து இயலும்—இதழ்குவித்துக் கூறப் பிறக்கும் என்றவாறு.

உ ஊ ஒ ஓ ஒள என இவற்றின் வேறுபாடு உணர்க. (௫)

அ௮. தத்தந் திரிபே சிறிய வென்ப.

இது முற்கூறிய உயிர்க்கும் மேற்கூறும் மெய்க்கும் பொதுவிதிகூறிச் சிங்கநோக்காகக் கிடந்தது.



**இதன் பொருள்:** தத்தம் திரிபே சிறிய என்ப—உயிர்களும் மெய்களும் ஒவ்வொரு தானங்களுட் பிறப்பனவற்றைக் கூட்டிக் கூறினேமாயினும் நுண்ணுணர்வான் ஆராயுமிடத்துத் தம்முடைய தம்முடைய வேறுபாடுகள் சிறியவாக உடைய என்று கூறுவர் புலவர் என்றவாறு.

அவை எடுத்தல் படுத்தல் நலிதல் விலங்கல் என்றவாற்றானுந் தலைவளி நெஞ்சுவளி மிடற்றுவளி மூக்குவளி என்றவாற்றானும் பிறவாற்றானும் வேறுபடுமாறு நுண்ணுணர்வுடையோர் கூறி உணர்க. ஐ விலங்கலுடையது. வல்லினந் தலைவளியுடையது. மெல்லினம் மூக்குவளியுடையது. இடையினம் மிடற்றுவளியுடையது ஏனையவுங் கூறிக் கண்டு உணர்க. (௬)

அ௯. ககார ஙகார முதனா வண்ணம்.

இது மெய்களுட் சிலவற்றிற்குப் பிறப்புக் கூறுகின்றது.

**இதன் பொருள்:** ககார ஙகாரம் முதல் நா அண்ணம்—ககாரமும் ஙகாரமும் முதல் நாவும் முதல் அண்ணமும் உறப் பிறக்கும் என்றவாறு.

உயிர்மெய்யாகச் சூத்திரத்துக் கூறினுந் தனிமெய்யாகக் கூறிக் காண்க. முதலை இரண்டிற்குங் கூட்டுக. க ங என இவற்றின் வேறுபாடு உணர்க். (எ)

௯௦. சகார ஞகார மிடைநா வண்ணம்.

இதுவும் அது.

**இதன் பொருள்:** சகார ஞகாரம் இடைநா அண்ணம்—சகாரமும் ஞகாரமும் இடைநாவும் இடையண்ணமும் உறப் பிறக்கும் என்றவாறு.

இடையை இரண்டிற்குங் கூட்டுக ச ஞ என இவற்றின் வேறுபாடு உணர்க. (அ)

௯௧. டகார ணகார நுனிநா வண்ணம்.

இதுவும் அது.

இதன் பொருள்: டகார ணகாரம் நுனி நா அண்ணம்— டகாரமும் ணகாரமும் நுனிநாவும் நுனியண்ணமும் உறப் பிறக்கும் என்றவாறு.

நுனியை இரண்டிற்கும் கூட்டுக. ட ண என இவற்றின் வேறுபாடு உணர்க. (௯)

௯௨. அவ்வா றெழுத்து மூவகைப் பிறப்பின.

இது மேலானவற்றிற்கோர் ஐயம் அகற்றியது.

இதன் பொருள்: அவ்வாறெழுத்தும் மூவகைப் பிறப்பின—அக்கூறப்பட்ட ஆறெழுத்தும் மூவகையாகிய பிறப்பினை உடைய என்றவாறு.

எனவே, அவை ககாரம் முதல் நாவினும் ஙகாரம் முதல் அண்ணத்தினும் பிறக்குமென்று இவ்வாறே நிரனிறைவகையான் அறுவகைப் பிறப்பின அல்ல என்றார். (௧௦)

௯௩. அண்ண நண்ணிய பன்முதன் மருங்கி
னாநுனி பரந்து மெய்யுற வொற்றத்
தாமினிது பிறக்குந் தகார நகாரம்.

இது மெய்களுட் சிலவற்றிற்குப் பிறவி கூறுகின்றது.

இதன் பொருள்: அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கில்—அண்ணத்தைச்சேர்ந்த பல்லினதடியாகிய இடத்தே, நா நுனி பரந்து மெய்யுற ஒற்ற—நாவினது நுனி பரந்து சென்று தன்வடிவு மிகவும் உறும்படி சேர, தகார நகாரந்தாம் இனிது பிறக்கும்—தகார நகாரம் என்றவைதாம் இனிதாகப் பிறக்கும் என்றவாறு.

10. நிரனிறை வகையா னறுவகைப் பிறப்பின அல்ல என்றது, 'சகார ஞகார மிடைநா வண்ணம்' என்புழிச் சகர மிடைநாவினும் ஞகர மிடையண்ணத்தினும் என்று நிரனிறையாகக் கொள்ள அறுவகைப் பிறப்பினவாம். அங்ஙனம் இல என்றபடி.

11. சிறிது ஒற்றப்பிறப்பன லகார றகாரம். சிறிது வருடப் பிறப்பன ளகார ரகார ழகாரங்கள். மெய்யுற ஒற்ற என்றது அழுந்த ஒற்ற என்றபடி.



த ந என இவற்றின் வேறுபாடு உணர்க. முன்னர் உறப்புற்று அமைய என்று கூறி ஈண்டு மெய்யுற ஒற்ற என்றார். சிறிது ஒற்றவும் வருடவும் பிறப்பன உளவாகலின். (௧௧)

௯௪. அணரி நுனிநா வண்ண மொற்ற
றஃகா னஃகா னாயிரண்டும் பிறக்கும்.

இதுவும் அது.

இதன் பொருள்: நுனி நா அணரி அண்ணம் ஒற்ற—நாவினது நுனி மேனோக்கிச்சென்று அண்ணத்தைத் தடவ, றஃகான் னஃகான் ஆயிரண்டும் பிறக்கும்—றகார னகாரமாகிய அவ்விரண்டும் பிறக்கும் என்றவாறு.

இது முதலாக நெடுங்கணக்கு முறையன்றி நாவதிகாரம் பற்றிக் கூறுகின்றார்.

ற ன என இவற்றின் வேறுபாடு உணர்க. (௧௨)

௯௫. நுனிநா வணரி யண்ணம் வருட
ரகார ழகார மாயிரண்டும் பிறக்கும்.

இதுவும் அது.

இதன் பொருள்: நுனி நா அணரி அண்ணம் வருட—நாவினது நுனி மேனோக்கிச் சென்று அண்ணத்தைத் தடவ, ரகார ழகாரம் ஆயிரண்டும் பிறக்கும்—ரகார ழகாரமாகிய அவ்விர்ண்டும் பிறக்கும் என்றவாறு.

ர ழ என இவற்றின் வேறுபாடு உணர்க. (௧௩)

௯௬. நாவிளிம்பு வீங்கி யண்பன் முதலுற
வாவயி னண்ண மொற்றவும் வருடவும்
லகார ளகாரமா யிரண்டும் பிறக்கும்.

இதுவும் அது.

இதன் பொருள்: நா வீங்கி விளிம்பு அண்பல் முதலுற—நா மேனோக்கிச்சென்று தன் விளிம்பு அண்பல்லி னடியிலே

12. அணருதல் - மேனோக்கிச் சேறல். அணரி - மேனோக்கி.

உருநிற்க, ஆவயின் அண்ணம் ஒற்ற லகாரமாய்—அவ்விடத்து அவ்வண்ணத்தை அந்நாத் தீண்ட லகாரமாயும், ஆவயின் அண்ணம் வருட ளகாரமாய்—அவ்விடத்து அவ்வண்ணத்தை அந்நாத் தடவ ளகாரமாயும், இரண்டும் பிறக்கும்—இவ்விரண்டெழுத்தும் பிறக்கும் என்றவாறு.

ல ள என இவற்றின் வேறுபாடு உணர்க.

இத்துணையும் நாவதிகாரங் கூறிற்று. (௧௪)

௯௭. இதழியைந்து பிறக்கும் பகார மகாரம்.

இதுவும் அது.

**இதன் பொருள்:** இதழ் இயைந்து பிறக்கும் பகார மகாரம்—மேலிதழுங் கீழிதழுந் தம்மிற்கூடப் பகாரமும் மகாரமும் பிறக்கும் என்றவாறு.

ப ம என இவற்றின் வேறுபாடு உணர்க. (௧௫)

௯௮. பல்லித ழியைய வகாரம் பிறக்கும்.

இது வகாரம் பிறக்குமாறு கூறுகின்றது.

**இதன் பொருள்:** பல் இதழ் இயைய வகாரம் பிறக்கும்—மேற்பல்லுங் கீழிதழுங் கூட வகாரமானது பிறக்கும் என்றவாறு.

வ என வரும். இதற்கும் இதழ் இயைதலின், மகரத்தின் பின்னர் வைத்தார். (௧௬)

௯௯. அண்ணஞ் சேர்ந்த மிடற்றெழு வளியிசை
கண்ணுற் றடைய யகாரம் பிறக்கும்.

இது யகாரம் பிறக்குமாறு கூறுகின்றது.

**இதன் பொருள்:** எழுவளி மிடற்றுச் சேர்ந்த இசை—உந்தியிலெழுந்த காற்று மிடற்றிடத்துச் சேர்ந்த அதனாற் பிறந்த

14. இத்துணையும் நாவதிகாரம் கூறிற்றென்றது, அ-ம் சூத்திரத்தில் நாவிற் பிறக்கும் எழுத்தை அதிகாரப்பட வைத்து அது முதலாக நாவிற் பிறக்கும் எழுத்துக்களையே கூறிவந்தமையை. அதிகாரம் - தலைமை. முறைமை என்பர் நச்சினார்க்கினியர்.



ஓசை, அண்ணங் கண்ணுற்று அடைய—அண்ணத்தை அணைந்து உரலாணி இட்டாற்போலச் செறிய, யகாரம் பிறக்கும்—யகாரவொற்றுப் பிறக்கும் என்றவாறு.

ஆணி—மரம். ய எனவரும். (௧௭)

௧௦௦. மெல்லெழுத் தாறும் பிறப்பி னாக்கஞ்
சொல்லிய பள்ளி நிலையின வாயினு
மூக்கின் வளியிசை யாப்புறத் தோன்றும்.

இது மெல்லெழுத்திற்குச் சிறப்புவிதி கூறுகின்றது.

**இதன் பொருள்:** மெல்லெழுத்து ஆறும் பிறப்பின் ஆக்கஞ் சொல்லிய பள்ளி நிலையின ஆயினும்—மெல்லெழுத்துக்கள் ஆறுந் தத்தம் பிறப்பினது ஆக்கஞ் சொல்லிய இடத்தே நிலைபெற்றனவாயினும், மூக்கின் வளியிசை யாப்புறத் தோன்றும்—ஓசை கூறுங்கால் மூக்கின்கண் உளதாகிய வளியினிசையான் யாப்புறத் தோன்றும் என்றவாறு.

அவை அங்ஙனமாதல் கூறிக் காண்க. யாப்புற என்றதனான் இடையினத்திற்கு மிடற்றுவளியும் வல்லினத்திற்குத் தலைவளியுங் கொள்க. (௧௮)

௧௦௧. சார்ந்துவரி னல்லது தமக்கியல் பிலவெனத்
தேர்ந்துவெளிப் படுத்த வேனை மூன்றுந்
தத்தஞ் சார்பிற் பிறப்பொடு சிவணி
யொத்த காட்சியிற் றம்மியல் பியலும்.

இது சார்பிற்றோற்றங்கள் பிறக்குமாறு கூறுகின்றது.

**இதன் பொருள்:** சார்ந்து வரின் அல்லது—சில எழுத்துக்களைச் சார்ந்து தோன்றினல்லது, தமக்கு இயல்பு இல என—தமக்கெனத் தோன்றுதற்கு ஓரியல்பிலவென்று, தேர்ந்து வெளிப்படுத்த தம்மியல்பு மூன்றும்—ஆராய்ந்து வெளிப்படுக்கப்பட்ட எழுத்துக்கள் தம்முடைய பிறப்பியல்பு மூன்றினையுங்

17. ஆணி என்றது - உரலின் அடித்துவாரத்தை மறைக்கும்படி இடும் மரத்தை.

18. பள்ளி - இடம்.

கூறுங்கால், தத்தஞ் சார்பிற் பிறப்பொடு சிவணி இயலும்—தத் தமக்கு உரிய சார்பாகிய மெய்களது சிறப்புப் பிறப்பிடத்தே பிறத்தலோடு—பொருந்தி நடக்கும், ஏனை ஒத்த காட்சியின் இய லும்—ஒழிந்த ஆய்தந் தமக்குப் பொருந்தின நெஞ்சுவளியாற் பிறக்கும் என்றவாறு.

காட்சியென்றது நெஞ்சினை. கேண்மியா நாகு நுந்தை எனவும் எஃகு எனவும் வரும்.

ஆய்தத்திற்குச் சார்பிடங் 'குறியதன்முன்னர்' (எழு-௩அ) என்பதனாற் கூறினார். இனி ஆய்தந் தலைவளியானும் மிடற்று வளியானும் பிறக்குமென்பாரும் உளர் மொழிந்த பொருளோ டொன்ற வவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தலென் பதனான் அளபெடையும் உயிர்மெய்யுந் தம்மை ஆக்கிய எழுத் துக்களது பிறப்பிடமே இடமாக வருமென்று உணர்க. (௧௯)

க0உ. எல்லா வெழுத்தும் வெளிப்படக் கிளந்து
சொல்லிய பள்ளி யெழுதரு வளியிற்
பிறப்பொடு விடுவழி யுறழ்ச்சி வாரத்
தகத்தெழு வளியிசை யரிறப நாடி
யளபிற் கோட லந்தணர் மறைத்தே
யஃதிவ ணுவலா தெழுந்துபுறத் திசைக்கு
மெய்தெரி வளியிசை யளவுநுவன் றிசினே.

இஃது எழுத்துக்கடம் பிறப்பிற்குப் புறனடை கூறுகின் றது.

**இதன் பொருள் :** எல்லாவெழுத்துங் கிளந்து வெளிப்பட—ஆசிரியன் எல்லாவெழுத்துக்களும் பிறக்குமாறு முந்துநூற் கண்ணே கூறி வெளிப்படுக்கையினாலே, சொல்லிய பள்ளி பிறப் பொடு விடுவழி—யானும் அவ்வாறே கூறிய எண்வகை நிலத் தும் பிறக்கின்ற பிறப்போடே அவ்வெழுத்துக்களைக் கூறுமி டத்து, எழுதரு வளியின் உறழ்ச்சிவாரத்தின் அளபு கோடல்—யான் கூறியவாறு அன்றி உந்தியில் தோன்றுங் காற்றினது திரி தருங் கூற்றின் கண்ணே மாத்திரைகூட்டிக்கோடலும், அகத்து எழு வளியிசை அரில் தப நாடிக் கோடல்—மூலாதாரத்தில் எழு கின்ற காற்றினோசையைக் குற்றமற நாடிக்கோடலும், அந்த ணர் மறைத்தே—பார்ப்பாரது வேதத்து உளதே; அந்நிலைமை ஆண்டு உணர்க, அஃது இவண் நுவலாது—அங்ஙனம் கோடலை ஈண்டுக் கூறலாகாமையின் இந்நூற்கட் கூறுதே, எழுந்து புறத்து இசைக்கும்—உந்தியிற்றோன்றிப் புறத்தே புலப்பட்டு ஒலிக்கும், மெய் தெரி வளியிசை அளவு நுவன்றிசினே—பொருடெரியுங் காற்றினது துணிவிற்கே யான் மாத்திரை கூறினேன்; அவற் றினது மாத்திரையை உணர்க என்றவாறு.



இதனை இரண்டு சூத்திரமாக்கியும் உரைப்ப.

இது பிறன்கோட்கூறலென்னும் உத்திக்கு இனம். என்னை? உந்தியில் எழுந்த காற்றினைக் கூறுபடுத்தி மாத்திரைகூட்டிக் கோடலும் மூலாதாரம் முதலாகக் காற்றெழுமாறு கூறலும் வேதத்திற்கு உளதென்று இவ்வாசிரியர் கூறி அம்மதம்பற்றி அவர் கொள்வதோர் பயன் இன்றென்றலின். உந்தியில் எழுந்த காற்று முன்னர்த் தலைக்கட்சென்று பின்னர் மிடற்றிலே வந்து பின்னர் நெஞ்சிலே நிற்றலை உறழ்ச்சிவாரத்து என்றார். அகத் தெழுவளி யெனவே மூலாதாரமென்பது பெற்றாம்

இன் சாரியையை அத்துச்சாரியையோடு கூட்டுக. ஏகாரந் தேற்றம்.

மெய்தெரிவளியெனவே பொருடெரியா முற்கும் வீளையும் முயற்சியானுமெனினும் பொருடெரியாமையின் அவை கடியப் பட்டன. எனவே, சொல்லப் பிறந்து சொற்கு உறுப்பாம் ஓசையை இவர் எழுத்தென்று வேண்டுவரென உணர்க;

'நிலையும் வளியும் முயற்சியு மூன்று
மியல நடப்ப தெழுத்தெனப் படுமே.'

என்றாராகலின். (உ0)

பிறப்பியல் முற்றிற்று.

---

20. புலப்படல் - செவிக்குப் புலப்படல். நிலை என்றது இடத்தை' வளி என்றது காற்றை. முயற்சி என்றது முயற்சிப் பிறப்பை. பொருள் தெரியா என்பதற்கு எழுத்தாகிய பொருள் தெரியாத என்பது பொருள். இன்றேல், முற்கும் வீளையும் பொருளுணர்த்து மேனும் என்று இவர் முற்கூறியதோடு மாறுபடும்.

## ௪. புணரியல்

௧௦௫. மூன்றுதலை யிட்ட முப்பதிற் றெழுத்தி
னிரண்டுதலை யிட்ட முதலா கிருபஃ
தறுநான் கீற்றொடு நெறிநின் றியலு
மெல்லா மொழிக்கு மிறுதியு முதலு
மெய்யே யுயிரென் றாயீ ரியல.

என்பது சூத்திரம். மொழிமரபிற் கூறிய மொழிகளைப் பொதுவகையாற் புணர்க்கும் முறைமை உணர்த்தினமையிற் புணரியலென்று இவ்வோத்திற்குப் பெயராயிற்று. ஈண்டு முறைமையென்றது மேற்செய்கை யோத்துக்களுட் புணர்தற்கு உரியவாக ஈண்டுக் கூறிய கருவிகளை.

கூறுதற்றேவெனின்

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், மொழிமரபிற் கூறிய மொழிக்கு முதலாமெழுத்தும் மொழிக்கு ஈறாமெழுத்தும் இத்துணை யென்றலும், எல்லா மொழிக்கும் ஈறும் முதலும் மெய்யும் உயிருமல்லது இல்லையென்று வரையறுத்தலும், ஈறும் முதலுமாக எழுத்து நாற்பத்தாறு உளவோவென்று ஐயுற்றார்க்கு எழுத்து முப்பத்து மூன்றுமே அங்ஙனம் ஈறும் முதலுமாய் நிற்பதென்று ஐயமறுத்தலும் நுதலிற்று.

**இதன் பொருள்:** முதல் இரண்டு தலையிட்ட இருபஃது ஈறு அறுநான்காகும் மூன்று தலையிட்ட முப்பதிற்றெழுத்தினொடு—மொழிக்கு முதலாமெழுத்து இரண்டை முடியிலேயிட்ட இருபஃதும் மொழிக்கு ஈறாமெழுத்து இருபத்துநான்குமாகின்ற மூன்றை முடியிலே யிட்ட முப்பதாகிய எழுத்துக்களோடே, நெறிநின்று இயலும் எல்லா மொழிக்கும்—வழக்கு நெறிக்கணின்று நடக்கும் மூவகை மொழிக்கும், மெய்யே உயிரென்று ஆயீரியல் இறுதியும் முதலும்—மெய்யும் உயிருமென்று கூறப்பட்ட அவ்விரண்டு இயல்பினையுடைய எழுத்துக்களே ஈறும் முதலும் ஆவன என்றவாறு.

இருபத்திரண்டு முதலாவன பன்னீருயிரும் ஒன்பது உயிர்மெய்யும் மொழிமுதற் குற்றியலுகரமுமாம். இருபத்துநான்கு ஈறாவன பன்னீருயிரும் பதினொரு புள்ளியும் ஈற்றுக் குற்றியலுகரமுமாம். மெய்யை முற்கூறினார் நால்வகைப் புணர்ச்சியும் மெய்க்கண் நிகழுமாறு உயிர்க்கண் நிகழா வென்றற்கு.



**உதாரணம்:** மரம் என மெய்ம்முதலும் மெய்யீறும், இலை என உயிர் முதலும் உயிரீறும், ஆல் என உயிர்முதலும் மெய்யீறும், விள என மெய்ம்முதலும் உயிரீறுமாம். மொழியாக்கம் இயல்பும் விகாரமுமென இரண்டாம் உயிர் தாமே நின்று முதலும் ஈறுமாதல் இயல்பு. அவை மெய்யோடு கூடிநின்று அங்ஙனமாதல் விகாரம். (௧)

௧௦௬. அவற்றுள்
மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்.

இது முற்கூறியவாற்றால் தனிமெய் முதலாவான் சென்றதனை விலக்கலின் எய்தியது விலக்கிற்று.

**இதன் பொருள்:** அவற்றுள்—முற்கூறிய மெய்யும் உயிருமென்ற இரண்டினுள், மெய்யீறு எல்லாம் புள்ளியொடு நிலையல்—மெய்மொழிக்கு ஈறாயவை யெல்லாம் புள்ளி பெற்று நிற்கும் என்றவாறு.

எனவே மொழிக்கு முதலாயினவை யெல்லாம் புள்ளியிழந்து உயிரேறி நிற்கு மென்றாராயிற்று. இன்னும் ஈற்று மெய் புள்ளி பெற்று நிற்குமென்றதனானே உயிர்முதன்மொழி தம்மேல் வந்தால் அவை உயிரேற இடங்கொடுத்து நிற்குமென்பதூஉங் கூறினாராயிற்று. இவ்விதி முற்கூறியதன்றோவெனின் ஆண்டுத் தனிமெய் பதினெட்டும் புள்ளி பெற்று நிற்குமென்றும் அவைதாம் உயிரேறுங்காற் புள்ளி யிழந்து நிற்குமென்றுங் கூறினார்; ஈண்டு மெய்ம்முதல் மெய்யீறெனப் பொருளுரைக்க வேண்டியமையின் மொழிமுதன் மெய்களும் புள்ளிபெறுமோ

---

2. முதற் சூத்திரத்திலே 'இறுதியு முதலு மெய்யே யுயிரென் றாயீரியல' என்றமையான் மொழிக்கு மெய் முதலாயும் வரும் ஈறாயும் வரும் என்பது பெறப்படுதலின், அவ்விரு மெய்களுள் ஈற்றில் நிற்கும் மெய் எப்படி நிற்குமென இச்சூத்திரத்தால் விதிக்கின்றார். ஈற்றில் வரும் மெய்கள் புள்ளிபெற்று நிற்குமெனவே முதலில் நிற்கும் மெய்கள் உயிரோடுகூடிப் புள்ளிபெறாது நிற்குமென்பது பெறப்படும். ஈற்றில் மெய்கள் புள்ளிபெற்று நிற்குமென்றமையானே, உயிர்

வென்று ஐயுற்ற ஐயம் அகற்றக் கூறினரென்று உணர்க. மரம் எனப் புள்ளி பெற்று நின்றது அரிதென வந்துழி மரமரி தென்று ஏறி முடிந்தவாறு காண்க. (உ)

கoரு. குற்றிய லுகரமு மற்றென மொழிப.

இது முன்னர்ப் புள்ளியீற்றுமுன் உயிர் தனித் தியலா தென்று மெய்க்கு எய்துவிக்கின்ற கருவியை எதிரது போற்றி உயிர்க்கும் எய்துவிக்கின்ற கருவிச் சூத்திரம்.

**இதன் பொருள் :** குற்றியலுகரமும் அற்றெனமொழிப — ஈற்றுக் குற்றியலுகரமும் புள்ளியீறுபோல உயிரேற இடங் கொடுக்குமென்று கூறுவர் புலவர் என்றவாறு.

இம்மாட்டேறு ஒருபுடைச் சேறல் புள்ளி பெறாமையின். அங்ஙனம் உயிரேறுங்காற் குற்றுகரங் கெட்டுப்போக நின்ற ஒற்றின்மேல் உயிரேறிற்றென்று கொள்ளற்க. நாகரிதென்புழி முன்னர்க் குற்றுகரவோசையும் பின்னர் உயிரோசையும்பெற்று அவ்விரண்டுங் கூடிநின்றல்லது அப்பொரு ளுணர்த்தலாகாமை யின், இஃது உயிரோடுங்கூடி நிற்குமென்றார். (ங)

வருங்கால் தன்மேலேறி முடியவும் இடங்கொடுக்குமென்பதும், ஏனைய மெய்வருங்கால் திரிந்தும் இயல்பாயும் முடியுமென்பதும் பெறப்படு மென்பதும் உரைகாரர் கருத்து.

3. இச்சூத்திரத்திற்குக் குற்றியலுகரமும் புள்ளிபெறாது உயி ரேற இடங்கொடுக்குமென்று இளம்பூரணர் பொருள்கூறினர். நச்சி னார்க்கினியரும் அங்ஙனமே கூறினார். அற்று என்பது முதற் சூத்தி ரத்திற் கூறிய புள்ளிபெறுதலையே சுட்டுமன்றி அதிற் கூறாத உயி ரேற இடங்கொடுக்குமென்பதைச் சுட்டாது. ஆதலின் அவ்வுரைகள் மாட்டேற்றிலக்கணத்தோடு பொருந்துமோ என்பது ஆராயத்தக்கது. முன்னும், 'மெய்யி னியற்கை புள்ளியொடு நிலையல்' என மெய்கள் புள்ளிபெறுதலை விதித்த ஆசிரியர், அம் மெய்கள்போலவே எகர ஒகரமும் புள்ளிபெறுமெனப் புள்ளிபெறுதலோடு மாட்டி, 'எகர ஒகரத் தியற்கையு மற்றே' எனக் கூறுதலி னாசிரியர் கூறும் மாட்டி னிலக்கணம் இஃதென்பது உணரத்தக்கது. பேராசிரியர்க்கும் சிவ ஞானமுனிவர்க்கும் சங்க யாப்பென்னும் நாலுடையார்க்கும் குற்றிய லுகரமும் புள்ளிபெறுமென்பது கருத்தாதல் நூன்மரபு உ-ம் சூத்தி ரக் குறிப்பில் உணர்த்தப்பட்டது. ஆங்குக் காண்க.



கoசு. உயிர்மெய் யீறு முயிரீற் றியற்றே.

இது 'மெய்யேயுயிரென்றாயீரியல' (எழு-கoங) என்ற உயிர்க்கண் நிகழ்வதோர் ஐயம் அகற்றியது ; உயிர்மெய்யென்ப தோர் ஈறு உண்டேனும் அது புணர்க்கப்படாது, அதுவும் உயிராயே அடங்குமென்றலின்.

**இதன் பொருள் :** உயிர்மெய்யீறும் — உயிர்மெய் மொழியி னது ஈற்றின்கண் நின்றதும், உயிரீற்றியற்றே — உயிரீற்றின் இயல்பை யுடைத்து என்றவாறு.

உம்மையான் இடைநின்ற உயிர்மெய்யும் உயிரீற்றின் இயல் பை யுடைத்து என்றாராயிற்று உம்மை எச்சவும்மை ஈற்றினும் இடையினும் நின்றன உயிருள் அடங்குமெனவே முதல் நின் றன மெய்யுள் அடங்குமென்றார். இதனானே மேல் விள என் றாற்போலும் உயிர்மெய்களெல்லாம் அகரவீறென்று புணர்க்கு மாறு உணர்க. வரகு இதனை மேல் உயிர்த் தொடர்மொழி யென்ப. முன்னர் 'மெய்யின்வழியது' (எழு-கஅ) என்றது ஓரெழுத்திற்கென்று உணர்க. இத்துணையும் மொழிமரபின் ஒழிபு கூறிற்று. (ச)

கoஎ. உயிரிறு சொன்மு னுயிர்வரு வழியு
முயிரிறு சொன்முன் மெய்வரு வழியு
மெய்யிறு சொன்மு னுயிர்வரு வழியு
மெய்யிறு சொன்முன் மெய்வரு வழியுமென்
றிவ்வென வறியக் கிளக்குங் காலை
நிறுத்த சொல்லே குறித்துவரு கிளவியென்
றாயீ ரியல புணர்நிலைச் சுட்டே.

இது மேற்கூறும் புணர்ச்சிகளெல்லாம் இருமொழிப் புணர்ச்சி யல்லது இல்லையென்பதூஉம் அஃது எழுத்துவகை யான் நான்காமென்பதூஉம் உணர்த்துகின்றது.

4. இச் சூத்திரத்து உயிரீற்றியற்றே என விதித்தமையானும் இதற்கு முதற்சூத்திரத்துக் குற்றியலுகரமும் மெய்யீறுபோலப் புள்ளி பெறுமென்று விதித்தாரென்றே துணியப்படுதல் காண்க.

**இதன் பொருள்:** உயிரிறு சொன்முன் உயிர்வரு வழியும்—உயிர் தனக்கு ஈறாக இறுஞ் சொல்லின்முன் உயிர் முதலாகிய மொழிவரும் இடமும், உயிரிறு சொன்முன் மெய்வரு வழியும்—உயிர் தனக்கு ஈறாக இறுஞ் சொல்லின் முன்னர் மெய்முதலாகிய மொழிவரும் இடமும், மெய்யிறு சொன்முன் உயிர்வரு வழியும்—மெய் தனக்கு ஈறாக இறுஞ்சொல்லின் முன்னர் உயிர் முதலாகிய மொழிவரும் இடமும், மெய்யிறு சொன்முன் மெய்வருவழியும்—மெய் தனக்கு ஈறாக இறுஞ்சொல்லின் முன்னர் மெய்முதலாகிய மொழிவரு இடமும், என்று புணர்நிலைச் சுட்டு—என்று சொல்லப்பட்ட ஒன்றினொடொன்று கூடும் நிலைமையாகிய கருத்தின்கண், இவ்வென அறியக் கிளக்குங் காலை—அவற்றை இத்துணையென வரையறையை எல்லாரும் அறிய யாங் கூறுங்காலத்து, நிறுத்தசொல்லே குறித்துவரு கிளவியென்று ஆயீரியல—முன்னர் நிறுத்தப்பட்ட சொல்லும் அதனை முடித்தலைக்குறித்து வருஞ்சொல்லும் என்று சொல்லப்பட்ட அவ்விரண்டு இயல்பினையுடைய என்றவாறு

எனவே, நான்குவகையானுங் கூடுங்கால் இருமொழியல்லது புணர்ச்சியின்று என்றாராயிற்று.

**உதாரணம்:** ஆவுண்டு ஆவலிது ஆலிலை ஆல்வீழ்ந்தது என முறையே காண்க. விளவினைக் குறைத்தான் என்றவழிச் சாரியையும் உருபும் நிலைமொழியாயே நிற்குமென்பது நோக்கி அதனை நிறுத்த சொல்லென்றும் முடிக்குஞ் சொல்லைக் குறித்து வருகிளவி யென்றும் கூறினார். இதனானே நிலைமொழியும் வருமொழியுங் கூறினார். முன்னர் 'மெய்யேயுயிர்' (எழு-கO௩) என்றது ஒருமொழிக்கு, இது இருமொழிக்கென்று உணர்க. (ரு)

கO௮. அவற்றுள்
நிறுத்த சொல்லி னீறா கெழுத்தொடு
குறித்துவரு கிளவி முதலெழுத் தியையப்
பெயரொடு பெயரைப் புணர்க்குங் காலும்
பெயரொடு தொழிலைப் புணர்க்குங் காலுந்

5. முன்னர் என்றது, நூன்மரபு கஅ-ம் சூத்திரத்தை.



தொழிலொடு பெயரைப் புணர்க்குங் காலுந்
தொழிலொடு தொழிலைப் புணர்க்குங் காலு
மூன்றே திரிபிட னொன்றே யியல்பென
வாங்கந் நான்கே மொழிபுணர் ரியல்பே.

இது முன்னர் எழுத்துவகையான் நான்கு புணர்ச்சி எய்திய இருவகைச் சொல்லுஞ் சொல்வகையானும் நான்காகுமென்பதூஉம் அங்ஙனம் புணர்வது சொல்லுஞ் சொல்லும் அன்று எழுத்தும் எழுத்துமென்பதூஉம் உணர்த்துகின்றது.

**இதன் பொருள்:** அவற்றுள்—நிலைமொழி வருமொழி யென்றவற்றுள், நிறுத்த சொல்லின் ஈறாகு எழுத்தொடு குறித்துவரு கிளவி முதலெழுத்து இயைய—முன்னர் நிறுத்தப்பட்ட சொல்லினது ஈறாகின்ற எழுத்தோடே அதனை முடிக்கக்கருதி வருகின்ற சொல்லினது முதலெழுத்துப் பொருந்த, பெயரொடு பெயரைப் புணர்க்குங்காலும்—பெயர்ச்சொல்லோடு பெயர்ச் சொல்லைக் கூட்டும் இடத்தும், பெயரொடு தொழிலைப் புணர்க்குங்காலும்—பெயர்ச்சொல்லோடு தொழிற்சொல்லைக் கூட்டும் இடத்தும், தொழிலோடு பெயரைப் புணர்க்குங்காலும்—தொழிற்சொல்லோடு பெயர்ச்சொல்லைக் கூட்டும் இடத்தும், தொழிலொடு தொழிலைப் புணர்க்குங்காலும்—தொழிற்சொல்லோடு தொழிற்சொல்லைக் கூட்டும் இடத்தும், மூன்றே திரிபு இடன் ஒன்றே இயல்பென ஆங்கு அந்நான்கே—திரியும் இடம் மூன்று இயல்பு ஒன்று என்று முந்துநூலிற் கூறிய அந்நான்கு இலக்கணமுமே, மொழி புணர் இயல்பு—இரண்டு மொழிகள் தம்முட் கூடும் இலக்கணம் என்றவாறு.

**உதாரணம்:** சாத்தன்கை, சாத்தனுண்டான், வந்தான்சாத்தன், வந்தான்போயினான் என முறையே காண்க. இவை நான்கு இனத்தோடுங் கூடப் பதினாறும். இடையும் உரியுந் தாமாக நில்லாமையிற் பெயர்வினையே கூறினார். இடைச்சொல்லும் உரிச்சொல்லும் புணர்க்குஞ் செய்கைப்பட்டுழிப் புணர்ப்புச் சிறுபான்மை. பெயர்ப்பெயரும் ஒட்டுப்பெயருமென இரண்டுவகைப்

6. கண்கூடாக என்றது, வரிவடிவைநோக்கி. இது என்றது முயற்கோட்டை. முயற்கோடு இன்று என்றாற் புணர்க்கப்படும், என்னை? பொருளின்மையின்.

படும் பெயர். தெரிநிலைவினையுங் குறிப்புவினையுமென இரண்டு வகைப்படுந் தொழில். நிலைமொழியது ஈற்றெழுத்து முன்னர்ப் பிறந்து கெட்டுப்போக வருமொழியின் முதலெழுத்துப் பின் பிறந்து கெட்டமையான் முறையே பிறந்து கெடுவன ஒருங்கு நின்று புணருமாறின்மையிற் புணர்ச்சியென்பது ஒன்றின்றாம் பிறவெனின், அச்சொற்களைக் கூறுகின்றோருங் கேட்கின்றோரும் அவ்வோசையை இடையறவுபடாமை உள்ளத்தின்கண்ணே உணர்வராதலின் அவ்வோசை கேடின்றி உள்ளத்தின்கண் நிலை பெற்றுப் புணர்ந்தனவேயாம். ஆகவே பின்னர்க் கண்கூடாகப் புணர்க்கின்ற புணர்ச்சியும் முடிந்தனவேயாமென்று உணர்க. இனி முயற்கோடு உண்டென்றால் அது குறித்துவருகிளவி யன்மையிற் புணர்க்கப்படாது. இதுதான் இன்றென்றாற் புணர்க்கப் படுமென்று உணர்க. (சு)

கoகூ. அவைதாம்
மெய்பிறி தாதன் மிகுதல் குன்றலென்
றிவ்வென மொழிப திரியு மாறே.

இது முற்கூறிய மூன்று திரிபும் ஆமாறு கூறுகின்றது.

**இதன் பொருள்:** அவைதாந் திரியுமாறு—முன்னர்த் திரி பென்று கூறிய அவைதாந் திரிந்து புணரும் நெறியை, மெய் பிறிதாதல் மிகுதல் குன்றலென்று இவ்வெனமொழிப—மெய் வேறுபடுதல் மிகுதல் குன்றலென்று கூறப்படும் இம்மூன்று கூற்றையுடையவென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

இம்மூன்றும் அல்லாதது இயல்பாமென்று உணர்க. இவை விகற்பிக்கப் பதினாறு உதாரணமாம். மட்குடம் மலைத்தலை மர வேர் இவை பெயரோடு பெயர்புணர்க்க மூன்று திரிபு. மண் மலை என்பது இயல்பு. சொற்கேட்டான் பலாக்குறைத்தான் மரநட்டான் இவை பெயரோடு தொழில் புணர்ந்த மூன்று திரிபு. கொற்றன் வந்தான் இஃது இயல்பு. வந்தானாற்சாத்தன் கொடாப்பொருள் ஓடுநாகம் இவை தொழிலொடு பெயர் புணர்ந்த மூன்று திரிபு. வந்தான்சாத்தன் இஃது இயல்பு. வந்தாற்கொள் ளும் பாடப்போயினான் சானான்றான் இவை தொழிலொடு தொழில் புணர்ந்த மூன்று திரிபு. வந்தான் கொண்டான் இஃது இயல்பு. மூன்று திரிபென்னாது இடனென்றதனான் ஒருபுணர்ச் சிக்கண் மூன்றும் ஒருங்கேயும் வரப்பெறுமென்றுஉணர்க. மகத் தாற் கொண்டான் இஃது அங்ஙனம் வந்தவாறு மகர ஈற்று 'நாட்பெயர்க் கிளவி' (எழு-ந-நக) என்னுஞ் சூத்திரத்தான் உணர்க. இரண்டு வருவனவுங் காண்க. (எ)



ககo. நிறுத்த சொல்லுங் குறித்துவரு கிளவியு
மடையொடு தோன்றினும் புணர்நிலைக் குரிய.

இது நிலைமொழி அடையடுத்தும் வருமொழி அடையடுத் தும் அவ்விருமொழியும் அடையடுத்தும் புணருமென எய் தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

**இதன் பொருள்:** நிறுத்தசொல்லுங் குறித்துவருகிளவி யும்—நிலைமொழியாக நிறுத்தினசொல்லும் அதனைக் குறித்து வருஞ் சொல்லும், அடையொடு தோன்றினும் புணர்நிலைக்கு உரிய—தாமே புணராது ஒரோவோர்சொல் அடையடுத்துவரி னும் இரண்டும் அடையடுத்துவரினும் புணர்நிலைமைக்கு உரிய என்றவாறு.

அடையாவன, உம்மைத்தொகையும் இருபெயரொட்டுப் பண்புத்தொகையுமாம்.

**உதாரணம்:** பதினாயிரத்தொன்று ஆயிரத்தொருபஃது பதினாயிரத்திருபஃது என வரும். இவ்வடைகள் ஒருசொல்லே யாம். வேற்றுமைத் தொகையும் உவமைத் தொகையும் முடியப் பண்புத்தொகையும் வினைத்தொகையும் பிளந்து முடியாமையின்

---

8. பதினாயிரத்தொன்று. இதில் பதினாயிரம் என்புழி ஆயிரம் பத்தென்னும் அடையொடு தோன்றிற்று; இதுபண்புத்தொகை. பன்னி ரண்டு கை, இதில் இரண்டு பத்தென்னு மடையொடு வந்தது. பன்னி ரண்டு--பத்தும் இரண்டும் என உம்மைத்தொகை. இதுபற்றியே அடை யாவன இருபெயரொட்டுப் பண்புத்தொகையும் உம்மைத்தொகையும் என்றார்.

வேற்றுமைத் தொகையும் உவமைத் தொகையும் முடிய என்றது, பிளந்து முடிவுபெற என்றபடி. என்றது, குன்றக்கூகை, புலிப்பாய்த் துள் என்புழி குன்றம்+கூகை எனவும், புலி+பாய்த்துள் எனவும் பிளந்து புணர்ச்சிபெற, வினைத்தொகையும் பண்புத்தொகையும் பிளந்து முடிவுபெறாது ஒரு சொல்லாயே நிற்றலின் அவை அடை

compare சூ 24

ஒருசொல்லேயாம். அன்மொழித் தொகையுந் தனக்கு வேறோர் முடிபின்மையின் ஒருசொல்லேயாம். இத்தொகைச் சொற்களெல்லாம் அடையாய்வருங்காலத்து ஒரு சொல்லாய் வருமென்று உணர்க. உண்டசாத்தன் வந்தான், உண்டுவந்தான் சாத்தன் என்பனவும் ஒருசொல்லேயாம். (அ)

ககக. மருவின் றொகுதி மயங்கியன் மொழியு
முரியவை யுளவே புணர்நிலைச் சுட்டே.

இது மரூஉச்சொற்களும் புணர்ச்சிபெறுமென்பதூஉம் நிறுத்த சொல்லுங் குறித்துவருகிளவியுமாய்ப் பொருளியைபில்லனவும் புணர்ச்சி பெற்றாற்போல நிற்குமென்பதூஉம் உணர்த்துகின்றது.

**இதன் பொருள் :** மரு மொழியும்—இருவகையாகி மருவிய சொற்களும், இன்றொகுதி மயங்கியன்மொழியும்—செவிக்கினிதாகச் சொற்றிரளிடத்து நிறுத்த சொல்லுங் குறித்துவருகிளவியுமாய் ஒட்டினாற்போலநின்று பொருளுணர்த்தாது பிரிந்து பின்னர்ச் சென்று ஒட்டிப் பொருளுணர்த்த மயங்குதல் இயன்ற சொற்களும், புணர்நிலைச் சுட்டு உரியவை உள—புணரும் நிலைமைக் கருத்தின்கண் உரியன உள என்றவாறு.

மொழியுமென்பதனை மருவென்பதனோடுங் கூட்டுக. இன்றொகுதியென்றார், பாவென்னும் உறுப்பு நிகழப் பொருளொட்டாமற் சான்றோர் சொற்களைச் சேர்த்தலின்.

**உதாரணம் :** முன்றில் மீகண் இவை இலக்கணத்தோடு பொருந்திய மரூ. இலக்கணம் அல்லா மரூ 'வழங்கியன் மருங்கின் மருவொடு திரிநவும்' (எழு–சஅரு) என்புழிக் காட்டுதும். இனி,

---

யெனப்படும். அன்மொழித்தொகையும் தனக்கு வேறோர் முடிபின்மையின் ஒரு சொல்லேயாம் என்றது, ஏனைய தொகைகளி னீற்றிற் பிறத்தலின், அவற்றின் முடிபே தனக்கு முடிபன்றி வேறோர் முடிபின்மையின் ஒரு சொல்லேயாம். எனவே தான்பிளந்து நின்று முடிவு பெறாது. பெறின் அன்மொழிப் பொருளுணர்த்தாது என்றபடி.

9. மருவின் தொகுதியும் மயங்கியன்மொழியும் எனப் பிரித்துப் பொருள்கூறினும், நச்சினார்க்கினியர் கருத்தின்படி பொருள்கூறலாம்.



'இரும்பு திரித்தன்ன மாயிரு மருப்பிற்
பரலவ லடைய விரலை தெறிப்ப.'

என்புழி மருப்பினிரலையென்று ஒட்டி இரண்டாவதன் தொகையாய்ப் பொருடந்து 'புள்ளி யீற்றுமுன் னுயிர்தனித் தியலா' (எழு–கஅரு) என்ற உயிரேறி முடிந்து மயங்கி நின்றது. ஆயின், மருப்பிற்பரலென்று மெய் பிறிதாய் ஒட்டி நின்றவாறென்னையெனின் மருப்பினையுடைய பரலென் வேற்றுமைத் தொகைப்பொருள் உணர்த்தாமையின் அஃது அச்செய்யுட்கு இன்னோசை நிகழ்த்தற்குப் பகரத்தின்முன்னர் நின்ற னகரம் றகரமாய்த் திரிந்துநின்ற துணையேயாய்ப் புணர்ச்சிப் பயனின்றி நின்றது. இங்ஙனம் புணர்ச்சியெய்தினாற்போல மாட்டிலக்கணத்தின்கண்ணும் மொழிமாற்றின்கண்ணும் நிற்றல் சொற்கு இயல்பென்றற்கு அன்றே ஆசிரியர் இன்றொகுதி யென்றதென்று உணர்க. 'கருங்கா லோமைக் காண்பின் பெருஞ்சினை' என்புழி ஓமைச்சினையென்று ஒட்டி ஓமையினது சினையெனப் பொருள் தருகின்றது இன்னோசை தருதற்குக் ககரவொற்றுமிக்குக் காண்பினென்பதனோடும் ஒட்டினாற்போல நின்றது. 'தெய்வ மால்வரைத் திருமுனி யருளால்' என்புழித் தெய்வவரை யென்று ஒட்டித் தெய்வத்தன்மையுடைய வரையெனப் பொருள்தருகின்றது இன்னோசை தருதற்கு மாலென்பதனோடும் ஒட்டினாற்போலக் குறைந்து நின்றது மூன்று திரிபும் வந்தவாறு காண்க. இனி எச்சத்தின்கண்ணும்,

'எயிறுபடையாக வெயிற்கதவிடா
பொன்னோடைப் புகரணிநுதற்
றுன்னருந்திறற் கமழ்கடாத்துக்
கயிறுபிணிக்கொண்ட கவிழ்மணிமருங்கிற்
பெருங்கையானை யிரும்பிடர்த்தலையிருந்து
மருந்தில்கூற்றத் தருந்தொழில்சாயா' (புறம்–ங)

என மாட்டாய் ஒட்டிநின்றது கயிறுபிணிக்கொண்ட என்பதனோடும் ஒட்டினாற்போல நின்று ஒற்றடுத்தது இன்னோசை

---

அவர் இன்றொகுதியெனப் பிரித்துப் பொருள் கோடல் சிறப்பின்று. உரையாசிரியர் கருத்தே ஈண்டுப் பொருத்தமாம். ஏனெனின்? ஆசிரியர் இலக்கணத்தோடுபொருந்திய மரூஉச் சொற்களைப் பிரித்துப் புணர்த்தலின்.

பெறுதற்கு. பிற சான்றோர் செய்யுட்கண் இவ்வாறும் பிறவா றும் புணர்ச்சியில்வழிப் புணர்ச்சிபெற்றாற்போல நிற்பன எல் லாவற்றிற்கும் இதுவே ஒத்தாகக் கொள்க. (கூ)

ககஉ. வேற்றுமை குறித்த புணர்நிலை மொழியும்
வேற்றுமை யல்வழிப் புணர்மொழி நிலையு
மெழுத்தே சாரியை யாயிரு பண்பி
னொழுக்கல் வலிய புணருங் காலை.

இது மூவகைத் திரிபினுள் மிக்குப் புணரும் புணர்ச்சி இருவகைய என்கின்றது.

**இதன் பொருள் :** புணருங்காலை — நால்வகைப் புணர்ச்சி யுள் மிக்கபுணர்ச்சி புணருங்காலத்து, வேற்றுமை குறித்த புணர்மொழிநிலையும்——வேற்றுமைப் பொருண்மையினைக் குறித்த புணர்மொழியினது தன்மையும், வேற்றுமை அல்வழிப் புணர் மொழி நிலையும்—வேற்றுமையல்லாத அல்வழியிடத்துப் புண ரும் மொழியினது தன்மையும், எழுத்தே சாரியை ஆயிரு பண் பின் ஒழுக்கல் வலிய—எழுத்து மிகுதலுஞ் சாரியை மிகுதலு மாகிய அவ்விரண்டு குணத்தினனுஞ் செல்லுதலைத் தமக்கு வலியாகவுடைய என்றவாறு

எனவே ஏனைப் புணர்ச்சிகளுக்கு இத்துணை வேறுபாடு இன்றென உணர்க.

**உதாரணம் :** விளங்கோடு இஃது எழுத்துப் பெற்றது. மகவின் கை இது சாரியை பெற்றது. இனி அல்வழிக்கண் விளக்குறிது இஃது எழுத்துப் பெற்றது. பனையின்குறை இது சாரியை பெற்றது. இதற்குப் பனை குறைந்ததென்பது பொரு ளாம். இஃது அளவுப் பெயர். ஒழுக்கல்வலிய வென்றதனன்

10. யாப்பு--வலி. ஆறுபயனிலை என்றது, 'பொருண்மைசுட்டல் வியங்கொளவருதல் - வினைநிலையுரைத்தல் வினவிற்கேற்றல் - பண்பு கொளவருதல் பெயர்கொள வருதலென் - றன்றியனைத்தும் பெயர்ப் பயனிலையே' என்னுஞ் சொல்லதிகாரச் சூத்திரத்தாற் கூறிய ஆறு பயனிலையையும். அவற்றிற்கு உதாரணம் முறையே ஆவுண்டு, ஆ வாழ்க, ஆவந்தது, ஆயாது, ஆகரிது என்பனவாம். பண்புத்தொகை விரிவுழி ஐம்பாலீருக விரியும். வினைத்தொகை விரிவுழிச் செய்த



இக்கூறிய இரண்டும் எழுத்துஞ் சாரியையும் உடன்பெறுதலுங் கொள்க. அவற்றுக்கோடென்பது வேற்றுமைக்கண் இரண்டும் பெற்றது. கலத்துக்குறை யென்பது அல்வழிக்கண் இரண்டும் பெற்றது. இதற்குக் கலங்குறைந்ததென்பது பொருளாம். இயல்புகணத்துக்கண் இவ்விரண்டும் உடன்பெறுதலின்று. அல்வழி முற்கூறுதது வேற்றுமையல்லாதது அல்வழியென வேண்டுதலின். எழுத்துப்பேறு யாப்புடைமையானும் எழுத் தினற் சாரியையாதலானும் எழுத்து முற்கூறினர். வேற் றுமை மேலைச் சூத்திரத்தே கூறுகின்றார்.

அல்வழியாவன அவ்வுருபுகள் தொக்கும் விரிந்தும் நில் லாது புணர்வன. அவை எழுவாய்வேற்றுமை ஆறு பயனி லையோடும் புணர்ந்த புணர்ச்சியும், விளிவேற்றுமை தன்பொரு ளோடு புணர்ந்த புணர்ச்சியும், முற்றுப்பெயரோடும் வினையோ டும் புணர்ந்த புணர்ச்சியும், பெயரெச்சமும் வினையெச்சமும் பெயரோடும் வினையோடும் புணர்ந்த புணர்ச்சியும், உவமத் தொகையும் உம்மைத்தொகையும் இருபெயரொட்டுப் பண்புத் தொகையும் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் பெயரோடும் வினையோடும் புணர்ந்த புணர்ச்சியும், அன்மொழித்தொகை பொருளோடு புணர்ந்த புணர்ச்சியும், பண்புத்தொகையும் வினைத் தொகையும் விரிந்துநின்றவழிப் புணர்ந்த புணர்ச்சியுமென உணர்க. (க௦)

ககங. ஐஒடு குஇன் அதுகண் ணென்னு
மவ்வா றென்ப வேற்றுமை யுருபே.

இது மேல் வேற்றுமையெனப்பட்ட அவற்றது பெயரும் முறையுந் தொகையும் உணர்த்துகின்றது.

**இதன் பொருள் :** வேற்றுமையுருபு—முற்கூறிய வேற்று மைச் சொற்களை, ஐ ஒடு கு இன் அது கண் என்னும் அவ்வா

செய்யும் என்னும் பெயரெச்ச வீருக விரியும். இத்தொகைகள் பிரித் துப் புணர்க்கப்படா ஒரு சொல்லாய் நிற்கும். இங்ஙனம் பிரித்துப் புணர்க்கப்படாவென் ஆசிரியர் கூறுவதைப் பலவிடத்துங் கூறுகின்ற நச்சினார்க்கினியர் ஈண்டுப் பண்புத்தொகையையும் வினைத்தொகை யையும் விரிந்துநின்ற வழிப் புணர்ந்த புணர்ச்சியுமெனக் கூறியது பொருந்துமோ என்பது ஆராயத்தக்கது.

றென்ப—ஐ ஒடு கு இன் அது கண் என்று சொல்லப்படும் அவ் வாறு உருபுமென்று சொல்வர் ஆசிரியர் என்றவாறு

மேற் சொல்லதிகாரத்து எழுவாயையும் விளியையுங் கூட்டி வேற்றுமை எட்டென்பாராலெனின் ஐ முதலிய வேற்றுமை யாறுந் தொக்கும் விரிந்தும் பெரும்பான்மையும் புலப்பட்டு நின்று பெயர்ப்பொருளைச் செயப்படுபொருள் முதலியனவாக வேறுபாடுசெய்து புணர்ச்சியெய்துவிக்குமென்றற்கு ஈண்டு ஆறென்றார். ஆண்டு எழுவாயும் விளியுஞ் செயப்படுபொருள் முதலியவற்றினின்றுந் தம்மை வேறுபடுத்துப் பொருள்மாத் திரம் உணர்த்திநின்றும் விளியாய் எதிர்முகமாக்கிநின்றும் இங் ஙனஞ் சிறுபான்மையாய்ப் புலப்படநில்லா வேறுபாடு உடைய வேனும் அவையும் ஒருவாற்றான் வேற்றுமையாயினவென்றற்கு ஆண்டு எட்டென்றாரென உணர்க. (கக)

ககச. வல்லெழுத்து முதலிய வேற்றுமை யுருபிற்
கொல்வழி யொற்றிடை மிகுதல் வேண்டும்.

இது நான்காவதற்கும் ஏழாவதற்கும் உருபியலை நோக்கி யதோர் கருவி கூறுகின்றது.

**இதன் பொருள் :** வல்லெழுத்து முதலிய வேற்றுமை யுருபிற்கு—வல்லெழுத்து அடியாய்நின்ற நான்காவதற்கும் ஏழா வதற்கும், ஒல்வழி ஒற்று இடைமிகுதல் வேண்டும்—பொருந் தியவழி வல்லொற்றாயினும் மெல்லொற்றாயினும் இடைக்கண் மிக்குப் புணர்தலை விரும்பும் ஆசிரியன் என்றவாறு.

வரையாது ஒற்றெனவே வல்லொற்றும் மெல்லொற்றும் பெற்றாம்.

**உதாரணம் :** மணிக்கு மணிக்கண் தீக்கு தீக்கண் மனைக்கு மனைக்கண் எனவும், வேய்க்கு வேய்க்கண் ஊர்க்கு ஊர்க்கண் பூழ்க்கு பூழ்க்கண் எனவும், உயிரீறு மூன்றினும் புள்ளியீறு மூன்றினும் பெரும்பான்மை வல்லொற்று மிக்குவரும். தங் கண் நங்கண் நுங்கண் எங்கண் என மெல்லொற்று மிக்கது. இவற்றிற்கு நிலைமொழி மகரக்கேடு உருபியலிற் கூறுப. ஆங் கண் ஈங்கண் ஊங்கண் என்பன சுட்டெழுத்து நீண்டு நின் றன. இவற்றிற்கு ஒற்றுக்கேடு கூறுதற்கு ஒற்றின்று.

இனி நான்கனுருபிற்கு மெல்லொற்று மிகாதென்று உணர்க.

இனி, ஒல்வழியென்பதனான் ஏழாமுருபின்கண் நம்பிகண் என இகர ஈற்றின்கண்ணும் நங்கைகண் என ஐகார ஈற்றின் கண்ணுந் தாய்கண் என யகரஈற்றின்கண்ணும் அரசர்கண் என ரகரஈற்றின்கண்ணும் ஒற்று மிகாமை கொள்க.

இனி மெய் பிறிதாதலை முன்னே கூறாது மிகுதலை முற் கூறிய அதனானே பொற்கு பொற்கண் வேற்கு வேற்கண் வாட்கு வாட்கண் எனத்திரிந்து முடிவனவுங்கொள்க. இத னானே அவன்கண் அவள்கண் என உயர்திணைப்பெயர்க்கண் ஏழனுருபு இயல்பாய் வருதலுங்கொள்க. இவற்றிற்குக் குன் றிய புணர்ச்சிவருமேனுங் கொள்க

கொற்றிக்கு கொற்றிகண் கோதைக்கு கோதைகண் என விரவுப்பெயர்க்கும் இதனானே கொள்க. (கஉ)

161 +
ககரு. ஆற னுருபி னகரக் கிளவி
யீறு ககரமுனைக் கெடுதல் வேண்டும்.

இஃது ஆறுவதற்குத் தொகைமரபை நோக்கியதோர் கருவி கூறுகின்றது.

**இதன் பொருள் :** ஆறனுருபின் அகரக்கிளவி—அதுவென் னும் ஆறனுருபின்கணின்ற அகரமாகிய எழுத்து, ஈறுகு அகர முனைக் கெடுதல்வேண்டும்—நெடுமுதல் குறுகுமொழிகட்கு 'ஈறுகு புள்ளி யகரமொடு நிலையும்' (எழு கஙக) என விதித்ததனால் உள தாகிய அகரத்தின் முன்னர்த்தான் கெடுதலை விரும்பும் ஆசி ரியன் என்றவாறு.

---

11. பொருள் நோக்கி ஆண்டு என்றார். வருமொழியாய் நின்று புணரும் உருபுநோக்கி ஈண்டு என்றார் என்க.

12. உருபியலிற் கூறுபவென்றது, உருபியல் கசு-ம் சூத்திரத் திற் கூறுப என்றபடி. இதில் மெய்யென்பதனாற் பிறவயின் மெய் யும் கெடுக்க எனக் கூறுதல் காண்க. உயிரே நிலைமொழியாதலின் ஒற்று இன்று என்றார்.

13. எனவ என்புழி என் என்பது அகர உருபு வருங்கால் இடையில் ஓரகரம் பெற்று என என்று நின்று பின்அகர வுருபோடு

தமது நமது எமது நுமது தனது எனது நினது என வரும். இது நிலைமொழிக்கு ஓர் அகரம் பெறுமென விதியாது உருபு அகரம் ஏறி முடியுமென விதித்தால் வரும் குற்றம் உண்டோவெனின், 'நினவகூறுவலெனவகேண் மதி' (புறம்-௯௫) என்றாற்போல ஆறுவதற்கு உரிய அகர உருபின் முன்னரும் ஓர் அகர எழுத்துப்பேறு நிலைமொழிக் கண்வருதலுளதாகக் கருதினாராதலின், ஆறனுருபிற்கும் நான்கனுருபிற்கும் பொதுவாக நிலைமொழிக்கண் அகரப்பேறு விதித்து, அதுவென்னும் ஒருமையுருபு வந்தால் ஆண்டுப்பெற்று நின்ற அகரத்தின் முன்னர் அதுவென்பதன்கண் அகரங்கெடுகவென்று ஈண்டுக் கூறினாராதலின் அதற்குக் குற்றம் உண்டென்று உணர்க. (௧௩)

௧௧௬. வேற்றுமை வழிய பெயர்புணர் நிலையே.

இது வேற்றுமை பெயர்க்கண் நிற்குமாறு கூறுகின்றது.

**இதன் பொருள்:** வேற்றுமைபெயர்வழிய—வேற்றுமைகள் பெயரின் பின்னிடத்தனவாம், புணர்நிலை—அவற்றோடு புணரும் நிலைமைக்கண் என்றவாறு.

**உதாரணம்:** சாத்தனை சாத்தனொடு சாத்தற்கு சாத்தனின் சாத்தனது சாத்தன்கண் எனவரும். மற்று இது 'கூறிய முறையின்' (சொ-௬௬) என்னும் வேற்றுமையோத்திற் சூத்திரத்தாற் பெறுதுமெனின், பெயரொடு பெயரைப் புணர்த்தல் முதலிய நால்வகைப் புணர்ச்சியினையும் வேற்றுமை அல்வழியென இரண்டாக அடக்குதலிற் றொழிற்பின்னும் உருபு வருமென எய்தியதனை விலக்குதற்கு ஈண்டுக்கூறினாரென்க. ஆயின் இவ்விலக்குதல் வினையியன்முதற்சூத்திரத்தாற் பெறுதுமெனின், அது முதனிலையைக் கூறிற்றென்பது ஆண்டு உணர்க. (௧௪)

சேர்ந்து எனவ என நிற்றல் காண்க. அதுபற்றியே 'ஈறுகுபுள்ளி அகரமொடு நிலையும்' என்றார் என்பது கருத்து.

14. முதனிலையென்றது பகுதியை. பகுதிக்கன்று வினைச்சொற்கே கூறினாரென்றலே பொருத்தமாம். ஏனெனின்? இலக்கணம் கூறும் வழிக் கூறுதொழியின் ஐயம்வருமென்று, வினையியலில் 'வினையெனப்படுவது வேற்றுமை கொள்ளாது' என்று கூறினார். உய்த்துணர்ந்திடர்ப்படாமல் ஈண்டுக் கூறினாரென்று கோடலே பொருத்தமாதலின்.



௧௧௭. உயர்திணைப் பெயரே அஃறிணைப் பெயரென்
றாயிரண் டென்ப பெயர்நிலைச் சுட்டே.

இது முற்கூறிய பெயர்கட்குப் பெயரும் முறையுந் தொகையுங் கூறுகின்றது.

**இதன் பொருள்:** சுட்டுநிலைப்பெயர்—பொருளை ஒருவர் கருதுதற்குக் காரணமான நிலைமையையுடைய பெயர்களை, உயர்திணைப்பெயரே அஃறிணைப்பெயரென்று ஆயிரண்டென்ப—உயர்திணைப் பொருளை ஒருவன் கருதுதற்குக் காரணமானபெயரும் அஃறிணைப் பொருளை ஒருவன் கருதுதற்குக் காரணமான பெயரும் என்னும் அவ்விரண்டென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

பெயரியலுள் அவன் இவன் உவன் என்பது முதலாக உயர்திணைப்பெயரும் அது இது உது என்பது முதலாக அஃறிணைப்பெயரும் ஆமாறு அவற்றிற்கு இலக்கணங் கூறுகின்றார் ஈண்டுக் குறியிட்டாளுதல் மாத்திரையே கூறினாரென்று உணர்க. இனிக் கொற்றன் கொற்றி என்றாற்போலும் விரவுப்பெயருங் கொற்றன்குறியன் கொற்றிகுறியள் கொற்றன்குளம்பு கொற்றிகுறிது எனப் பின்வருவனவற்றாற் றிணைதெரிதலின் இருதிணைப் பெயரின்கண் அடங்கும். கொற்றன்செவி கொற்றிசெவி என்பனவும் பின்னர் வருகின்ற வினைகளாற் றிணைவிளங்கி அடங்குமாறு உணர்க. இனி 'அஃறிணை விரவுப்பெயரியல்புமா ருளவே' (எழு-௧௫௫) என்றாற்போலப் பிறாண்டும் ஓதுதல்பற்றி நிலையென்றதனான் விரவுப்பெயர் கோடலும் ஒன்று. (௧௫)

௧௧௮. அவற்றுவழி மருங்கிற் சாரியை வருமே.

இது சாரியை வருமிடங் கூறுகின்றது.

**இதன் பொருள்:** அவற்றுவழி மருங்கின்—அச் சொல்லப்பட்ட இருவகைப் பெயர்களின் பின்னாகிய இடத்தே, சாரியை வரும்—சாரியைச்சொற்கள் வரும் என்றவாறு.

15. கொற்றன் செவிநல்லன் என்புழி உயர்திணையென்பதும் கொற்றன் செவிநீண்டது என்புழி அஃறிணை என்பதும் விளங்கும்.

**உதாரணம் :** ஆடூஉவின்கை மகடூஉவின்கை பலவற்றுக் கோடு எனப் புணரியனிலையிடைப் பொருணிலைக்கு உதவி வந்தன. சாரியை யென்றதன் பொருள் வேறாகி நின்ற இருமொழியுந் தம்மிற் சார்தற்பொருட்டு இயைந்துநின்றதுஎன்றவாறு. (கசு)

கககூ. அவைதாம்
இன்னே வற்றே யத்தே யம்மே
யொன்னே யானே யக்கே யிக்கே
யன்னென் கிளவி யுளப்படப் பிறவு
மன்ன வென்ப சாரியை மொழியே.

இஃது அச்சாரியைகட்குப் பெயரும் முறையுந் தொகையும் உணர்த்துகின்றது.

**இதன் பொருள் :** அவைதாம்—முன்னர்ச் சாரியை யெனப்பட்ட அவைதாம், இன்னே வற்றே அத்தே அம்மே ஒன்னே ஆனே அக்கே இக்கே அன்னென்கிளவி உளப்பட அன்ன என்ப—இன்னும் வற்றும் அத்தும் அம்மும் ஒன்னும் ஆனும் அக்கும் இக்கும் அன்னென்னுஞ் சொல்லோடுகூட ஒன்பதாகிய அத்தன்மையுடையனவும், பிறவுஞ் சாரியைமொழி என்ப—அவையொழிந்தனவுஞ் சாரியைச் சொல்லா மென்பர் ஆசிரியர் என்றவாறு.

பிறவாவன தம் நம் நும் உம் ஞான்று கெழு ஏ ஐ என்பனவாம். இவற்றுள் ஞான்று ஒழிந்தன எடுத்தோதுவர் ஆசிரியர். 'எடுத்தநறவின் குலையலங்காந்தள்' இது வினைத்தொகை; சாரியையன்று. இன்சாரியை வழக்குப்பயிற்சியும் பலகால் எடுத்

16. புணரியனிலையிடைப் பொருணிலைக் குதவிவந்தன என்பது, அவற்றுட் புணரியனிலையிடைப் பொருணிலைக் குதவுநவும், என்னும் (சொல் - இடை) உ-ம் சூத்திரக் கருத்தை நோக்கி நின்றது.

பெயர்கூறி "அவற்று வழிமருங்கிற் சாரியை வருமே" எனவே முன்பெயர்வழி வேற்றுமை வருமென்றாரேனும் சாரியை வருங்கால் சாரியைக்குப் பின்னேயே வேற்றுமையுருபு வருமென்பது இச்சூத்திரத்து "அவற்றுவழி" என்பதனாற் பெறப்பட்டது.

17. குலையலங்காந்தள் என்புழி அலங்குகாந்தள் என்பது அலங்காந்தள் என நின்றதாதலின் அம்சாரியையென்று கொள்ளற்க என்பது கருத்து.



தோதப்படுதலும் பொதுவகையான் ஓதியவழித் தானேசேறலுமாகிய சிறப்புநோக்கி முன்வைத்தார். வற்றும் அத்தும் இன்போல முதல் திரியுமாகலானுஞ் செய்கையொப்புமையானும் அதன்பின் வைத்தார். அம் ஈறுதிரியுமாதலின் திரிபுபற்றி அதன்பின் வைத்தார். ஒன் ஈறு திரியுமேனும் வழக்குப்பயிற்சியின்றி நான்காமுருபின்கண் திரிதலின் அதன்பின் வைத்தார். ஆன் பொருட்புணர்ச்சிக்கும் உருபுபுணர்ச்சிக்கும் வருமென்று அதன்பின் வைத்தார். அக்கு ஈறுதிரியுமேனும் உருபுபுணர்ச்சிக்கண் வாராமையின் அதன்பின் வைத்தார். இக்கு முதல் திரியுமேனுஞ் சிறுபான்மைபற்றி அதன்பின் வைத்தார். அன் இன்போலச் சிறத்தலிற் பின்வைத்தார்.

ஆனுருபிற்கும் ஆன்சாரியைக்கும் இன்னுருபிற்கும் இன்சாரியைக்கும் வேற்றுமை யாதெனின், அவை சாரியையான இடத்து யாதானும் ஓர் உருபேற்று முடியும்; உருபாயின இடத்து வேறோர் உருபினை ஏலாவென்று உணர்க இனி மகத்துக்கை என்புழித் தகரவொற்றுந் தகரவுகரமும் வருமென்று கோடுமெனின், இருளத்துக்கொண்டானென்றால் அத்து எனவே வேண்டுதலின் ஆண்டும் அத்துநின்றே கெட்டதென்று கோடும். அக்கு இக்கு என்பனவும் பிரித்துக்கூட்டக் கிடக்கும். தாழக்கோலென அக்குப் பெற்றுநிற்றலானும் ஆடிக்கு என்புழிக் குகரம் நான்கனுருபாகாமையானும் இவை சாரியையாமாறு உணர்க. (கஎ)

கஉ௦. அவற்றுள்
இன்னி னிகர மாவி னிறுதி
முன்னர்க் கெடுத லுரித்து மாகும்.

இது முற்கூறியவற்றுள் இன்சாரியை முதல் திரியுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** அவற்றுள்—முற்கூறிய சாரியைகளுள், இன்னின் இகரம்—இன்சாரியையது இகரம், ஆவின் இறுதி

பொதுவ்கையானோதிய வழித்தானே சேறல் என்றது. இச்சொல் இச்சாரியை பெறுமென விதியாது பொதுவாகச் சாரியைப்பேறு கூறியவிடத்து தானே சாரியையாகச் செல்லுதல்.

முன்னர்—ஆ என்னும் ஓரெழுத்தொருமொழி முன்னர், கெடுதல் உரித்துமாகும்—கெட்டுமுடியவும் பெறும் என்றவாறு.

உரித்துமாகுமென்றதனற் கெடாது முடியவும் பெறுமென்றவாறு. இஃது ஒப்பக்கூறலென்னும் உத்தி.

உதாரணம்: ஆனை ஆவினை ஆனொடு ஆவினொடு ஆற்கு ஆவிற்கு ஆனின் ஆவினின் ஆனது ஆவினது ஆன்கண் ஆவின்கண் எனவரும்.

இனி முன்னரென்றதனனே மாவிற்கும் இவ்வாறே கொள்க. மானை மாவினை மானொடு மாவினொடு மாற்கு மாவிற்கு என ஒட்டுக. ஆகார ஈறென்னது ஆவினிறுதியென்று ஓதினமையின் மா இலேசினாற் கொள்ளப்பட்டது.

இனி ஆன்கோடு ஆவின்கோடு மான்கோடு மாவின்கோடு என உருபிற்குச் சென்றசாரியை பொருட்கட் சென்றுழியுங் கொள்க. (கஅ)

கஉக. அளவாகு மொழிமுத னிலைஇய வுயிர்மிசை
னஃகான் றஃகா ஞகிய நிலத்தே.

இஃது அவ்வின்சாரியை ஈறுதிரியுமாறு கூறுகின்றது.

இதன் பொருள்: அளவாகும் மொழி—அளவுப்பெயராய்ப் பின்னிற்கும் மொழிக்கு, முதல் நிலைஇய உயிர்மிசை னஃகான்—முன்னர்நின்ற எண்ணுப்பெயர்களின் ஈற்றுநின்ற குற்றுகரத்தின் மேல் வந்த இன்சாரியையது னகரம், றஃகானாகிய நிலத்து—றகரமாய்த் திரியும் நிலைமையையுடைத்து என்றவாறு.

உதாரணம்: பதிற்றகல் பதிற்றுழக்கு. இவற்றைப் பத்தென நிறுத்தி 'நிறையுமளவும்' (எழு-சஙகூ) என்னுஞ் சூத்திரத்தால் இன்சாரியை கொடுத்துக் 'குற்றிய லுகர மெய்யொடுங் கெடுமே' (எழு-சஙங) என்றதனாற் குற்றுகரம் மெய்யோடுங் கெடுத்து வேண்டுஞ் செய்கைசெய்து 'முற்றவின்வரூஉம்' (எழு.சஙங) என்பதனான் ஒற்றிரட்டித்து முடிக்க

நிலைஇய என்றதனாற் பிறவழியும் இன்னின் னகரம் றகரமாதல் கொள்க. பதிற்றெழுத்து பதிற்றடுக்கு ஒன்பதிற்றெழுத்து பதிற்றொன்று பதிற்றிரண்டு பதிற்றொன்பது என எல்லாவற்றோடும் ஒட்டிக்கொள்க. அச்சூத்திரத்திற் 'குறையாதாகும்' (எழு-சஙகூ) என்றதனாற் பொருட்பெயர்க்கும் எண்ணுப்பெயர்க்கும் இன்கொடுக்க. (ககூ)

கஉஉ. வஃகான் மெய்கெடச் சுட்டுமுத லைம்மு
னஃகா னிற்ற லாகிய பண்பே.

இது வற்றுமுதல் திரியுமாறு கூறுகின்றது.

இதன் பொருள்: சுட்டுமுதல் ஐம்முன்—சுட்டெழுத்தினை முதலாகவுடைய ஐகார ஈற்றுச்சொன்முன் வற்று வருங்காலை, வஃகான் மெய்கெட அஃகான் நிற்றலாகிய பண்பு—அவ்வற்றுச் சாரியையினது வகரமாகிய ஒற்றுக்கெட ஆண்டு ஏறிய அகரம் நிற்றல் அதற்கு உளதாகிய குணம் என்றவாறு.

உதாரணம்: அவையற்றை இவையற்றை உவையற்றை எனவரும். இன்னும் இவற்றை, அவை இவை உவை என நிறுத்திச் 'சுட்டுமுதலாகியவையெனிறுதி' (எழு-கஎஎ) என்றதனான் வற்றும் உருபுங் கொடுத்து வேண்டுஞ் செய்கை செய்க. இவ்வாறே எல்லா உருபிற்கும் ஒட்டுக. அவையற்றுக்கோடு என உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கட் சென்றவழியுங் கொள்க.

ஆகியபண்பு என்றதனனே எவனென்பது படுத்தலோசையாற் பெயராயவழி எவன் என நிறுத்தி வற்றும் உருபுங்கொ

18. ஆகாரவீருயின் மாவுங் கொள்ளப்படும். இங்கே ஆவீறென்று ஆவையே கூறினமையின் மா இலேசினாற் கொள்ளப்பட்டது. இதனை ஒப்பக் கூறல் என்னும் உத்தியால் ஆவும் மாவும் என்பர் பேராசிரியர். ஆன் என்பதில் னகரம் சாரியையென்பர் நன்னூலார்.

19. வேண்டும் செய்கை என்றது, மெய்யில் உயிரேற்றி முடிப்பதை. பதிற்றகல் என்பதில் இற்று சாரியையென்பர் நன்னூலார்.

20. எவன் என்பது எடுத்தலோசையாற் கூறின் வினாவினைக் குறிப்பாகும். படுத்தலோசையாற்கூறின் வினாப்பெயராம் எனறபடி. வற்றுச்சாரியையை அற்றுச்சாரியையென்பர் நன்னூலார்.

டுத்து வற்றுமிசையொற்றென்று னகரங்கெடுத்து அகரவுயிர் முன்னர் வற்றின் வகரங் கெடுமெனக் கெடுத்து எவற்றை எவற்றொடு என முடிக்க. ✓ (௨௦)

௧௨௩. னஃகான் றஃகா னான்க னுருபிற்கு.

இஃது இன் ஒன் ஆன் அன்னென்னும் னகர ஈறு நான்குந் திரியுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** னஃகான் நான்கனுருபிற்கு றஃகான்—னகார ஈற்று நான்கு சாரியையின் னகரமும் நான்காமுருபிற்கு றகாரமாய்த் திரியும் என்றவாறு.

**உதாரணம் :** விளவிற்கு கோஒற்கு ஒருபாற்கு அதற்கு எனவரும்

இதனை 'அளவாகு மொழிமுதல்' (எழு-௧௨௧) என்பதன் பின் வையாது ஈண்டு வைத்தது னகர ஈறுகளெல்லாம் உடன் திரியுமென்றற்கு. ஆண்டுவைப்பின் இன்சாரியையே திரியுமென்பது படும். 'ஒன்று முதலாகப் பத்தூர்ந்து வரூஉ—மெல்லா வெண்ணும்' (எழு-௧௯௯) என்பதனான் ஒருபாற்கு என்பதனை முடிக்க. (௨௧)

௧௨௪. ஆனி னகரமு மதனோ ரற்றே
நாண்முன் வரூஉம் வன்முதற் றொழிற்கே.

இஃது ஆனின் ஈறு பொருட்புணர்ச்சிக்கண் திரியுமென்கின்றது.

**இதன் பொருள் :** நாள்முன் வரூஉம் வன்முதற் தொழிற்கு—நாட்பெயர்முன்னர் வரும் வல்லெழுத்தை முதலாக உடைய தொழிற்சொற்கு இடையே வரும், ஆனின் னகரமும் அதனோரற்று—ஆன்சாரியையின் னகரமும் நான்கனுருபின்கண் வரும் ஆன் சாரியைபோல றகரமாய்த் திரியும் என்றவாறு.

---

ஞாபகம் கூறல் என்னும் உத்தியாவது, சூத்திரஞ் செய்யுங்காற் சில்வகை எழுத்தினாலாகியதாகவும் பொருணனி விளங்கவுஞ் செய்யாது, அரிதும் பெரிதுமாக நலிந்து செய்து அதனானே வேறு பல பொருளுணர்த்தல், ஞாபகத்தாற் கொள்க என ஒட்டுக.



**உதாரணம் :** பரணியாற்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் எனவரும். 'நாண்முற் றோன்றுந் தொழினிலைக் கிளவிக்கு' (எழு-௨௪௭) என்றதனான் ஆன்சாரியை கொடுத்துச் செய்கை செய்க. இனி உம்மையை இறந்தது தழீஇயதாக்கி நாளல்லவற்றுமுன் வரும் வன்முதற்றொழிற்கண் இன்னின் னகரமும் அதனோடு ஒக்குமெனப் பொருளுரைத்துப் பனியிற்கொண்டான் வளியிற்கொண்டான் என இன்னின் னகரமும் றகரமாதல் கொள்க.

இனி, ஞாபகத்தால் தொழிற்கண் இன்னின் னகரந் திரியுமெனவே பெயர்க்கண் இன்னின் னகரந் திரிதலுந் திரியாமையுங் கொள்க. குறும்பிற்கொற்றன் பறம்பிற்பாரி எனத் திரிந்து வந்தன. குருகின்கால் எருத்தின்புறம் எனத் திரியாது வந்தன. (௨௨)

௧௨௫. அத்தி னகர மகரமுனை யில்லை.

இஃது அத்து முதல் திரியுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** அத்தின் அகரம்—அத்துச்சாரியையின் அகரம், அகரமுனை இல்லை—அகரஈற்றுச் சொன்முன்னர் இல்லையாம் என்றவாறு.

'அத்தவண் வரினும் வரைநிலை யின்றே' (எழு-௨௧௧) என்பதனான் மகப்பெயர் அத்துப்பெற்று நின்றது மகத்துக்கையென அகரங்கெட்டு நின்றது. விளவத்துக் கண்ணென்புழிக் கெடாது நிற்றல் 'அத்தேவற்றே' (எழு-௧௩௩) என்பதனுள் 'தெற்றென் றற்றே' என்பதனாற் கூறுப. (௨௩)

௧௨௬. இக்கி னிகர மிகரமுனை யற்றே.

இஃது இக்கு முதல் திரியுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** இக்கின் இகரம்—இக்குச் சாரியையினது இகரம், இகரமுனை அற்று—இகரஈற்றுச்சொன் முன்னர் முற்கூறிய அத்துப்போலக் கெடும் என்றவாறு.

'திங்கண்முன்வரின்' (எழு-௨௪௮) என்பதனாற் பெற்ற இக்கு ஆடிக்குக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என இகரங்கெட்டு நின்றது. இஃது இடப்பொருட்டு. (௨௪)

கஉஎ. ஐயின் முன்னரு மவ்விய னிலையும்.

இதுவும் அது.

**இதன் பொருள்:** ஐயின் முன்னரும் அவ்வியல் நிலையும்— இக்கின் இகரம் இகர ஈற்றுச் சொன்முன்னரன்றி ஐகார ஈற்றுச் சொன்முன்னரும் மேற்கூறிய கெடுதலியல்பிலே நிற்கும் என்றவாறு.

'திங்களு நாளு முந்துகிளந் தன்ன' (எழு-உஅரு) என்பதனாற் சித்திரைக்குக் கொண்டான் என்புழிப்பெற்ற இக்கு ஐகாரத்தின் முன்னர்க் கெட்டவாறு காண்க. (உ௫)

கஉஅ. எப்பெயர் முன்னரும் வல்லெழுத்து வருவழி
யக்கி னிறுதிமெய்ம் மிசையொடுங் கெடுமே
குற்றிய லுகர முற்றத் தோன்றாது.

இஃது அக்கு முதல் ஒழிய ஏனைய கெடுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள்:** எப்பெயர் முன்னரும்—எவ்வகைப்பட்ட பெயர்ச்சொன்முன்னரும், வல்லெழுத்து வருவழி—வல்லெழுத்து வருமொழியாய் வருமிடத்து, அக்கின் இறுதிக் குற்றியலுகரம் முற்றத்தோன்றாது—இடை நின்ற அக்குச்சாரியையின் இறுதி நின்ற குற்றியலுகரம் முடியத் தோன்றாது, மெய்ம்மிசையொடுங்கெடும்—அக்குற்றுகரம் ஏறிநின்ற வல்லொற்றுத் தனக்கு மேல்நின்ற வல்லொற்றோடுங்கெடும் என்றவாறு.

'ஒற்றுநிலை திரியா தக்கொடு வரூஉம்' (எழு-சகஅ) என்றதனான் அக்குப்பெற்ற குன்றக்கூகை மன்றப்பெண்ணை என்பனவும், 'வேற்றுமையாயி னேனை யிரண்டும்' (எழு-ருஉக) என்பதனான் அக்குப்பெற்ற ஈமக்குடம் கம்மக்குடம் என்பனவும், 'தமிழென்கிளவியும்' (எழு-௬அரு) என்பதனான் அக்குப்பெற்ற தமிழக்கூத்து என்பதுவும் அக்கு ஈறுகெட்டவாறு காண்க. இங்ஙனம் வருதலின் எப்பெயரென்றார். முற்றவென்பதனான் வன்கணமன்றி ஏனையவற்றிற்கும் இவ்விதி கொள்க. தமிழநூல்

26. குன்றக்கூகை என்புழி, அக்குமெய்ம்மிசையொடுங் கெடாது, அக்கினுள்ள ககரவொற்று நிற்குமென்றால் என்னையெனின்? அங்ஙனங் கொள்ளின் கசதப முதன்மொழி வருங்கால் ககரத்துக்



தமிழயாழ் தமிழவரையர் எனவரும். இன்னும் இதனானே தமக்கேற்ற இயைபு வல்லெழுத்துக் கொடுத்து முடித்துக் கொள்க. அன்றிக் கேடோதிய ககரவொற்று நிற்குமெனின், சகரந் தகரம் பகரம் வந்தவற்றிற்குக் ககரவொற்றாகாமை உணர்க. (உ௬)

கஉ௯. அம்மி னிறுதி கசதக் காலைத்
தன்மெய் திரிந்து ஙஞந வாகும்.

இஃது அம் ஈறு திரியுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள்:** அம்மின் இறுதி—அம்முச்சாரியையின் இறுதியாகிய மகரவொற்று, கசதக்காலை—கசதக்கள் வருமொழியாய் வருங்காலத்து, தன்மெய் திரிந்து ஙஞந ஆகும்—தன் வடிவு திரிந்து ஙஞநக்களாம் என்றவாறு.

**உதாரணம்:** புளியங்கோடு செதிள் தோல் எனவரும்.

இது 'புளிமரக்கிளவிக்கு' (எழு-உசச) என்பதனான் அம் முப்பெற்றது. கசதக்காலைத் திரியுமெனவே பகரத்தின்கண் திரிபின்றாயிற்று. மெய்திரிந்தென்னாது தன்மெய் என்றதனான் அம்மின் மகரமேயன்றித் தம் நம் நும் உம் என்னுஞ் சாரியை மகரமுந் திரிதல் கொள்க. எல்லார் தங்கையும் எல்லார் நங்கையும் எல்லீர் நுங்கையும் வானவரி வில்லுந்திங்களும் எனவரும். துறைகேழூரன் வளங்கேழூரன் எனக் கெழுவென்னுஞ் சாரியையது உகரக்கேடும் எகர நீட்சியுஞ் செய்யுண்முடிபென்று கொள்க. (உஎ)

கநo. மென்மையு மிடைமையும் வரூஉங் காலை
யின்மை வேண்டு மென்மனார் புலவர்.

இஃது அம்மீறு இயல்புகணத்து முன்னர்க் கெடுமென்கின்றது.

**இதன் பொருள்:** மென்மையும் இடைமையும் வரூஉங் காலை—மென்கணமும் இடைக்கணமும் வருமொழியாய் வருங்

கன்றி ஏனையவற்றிற்குப் பொருந்தாமையின் வல்லினம் மிகுமென்றலே பொருத்தமாமென்க.

காலத்து, இன்மை வேண்டும் என்மனார் புலவர்—அம்முச்சாரியை இறுதிமகரமின்றி முடிதலை வேண்டுமென்று கூறுவர் புலவர் என்றவாறு.

**உதாரணம்:** புளியஞெரி நுனி முரி. யாழ் வட்டு என வரும். உரியிற்கோடலென்பதனாற் புளியவிலையென உயிர்வரு வழி ஈறுகெடுதலும் புளியிலையென அம்மு முழுவதுங் கெடுதலுங் கொள்க. புளியவிலை யென்றது 'ஒட்டுதற்கொழுகிய வழக்கு' (எழு-கஙஉ) அன்று. மென்கணமும் இடைக்கணமும் உயிர்க் கணமுந் தம்முளொக்குமேனும் அம்மு முழுவதுங் கெட்டுவருதலின் உயிரை எடுத்தோதாராயினர். புளிங்காய் என்பது மருமுடிபு. (உஅ)

கஙக. இன்னென வரூஉம் வேற்றுமை யுருபிற்
கின்னென் சாரியை யின்மை வேண்டும்.

இஃது இன்சாரியை ஐந்தாமுருபின்கண் முழுவதுங் கெடுமென்கின்றது.

**இதன் பொருள்:** இன்னென வரூஉம் வேற்றுமை யுருபிற்கு—இன்னென்று சொல்ல வருகின்ற வேற்றுமை யுருபிற்கு, இன்னென்சாரியை இன்மை வேண்டும்—இன்னென்னுஞ் சாரியை தான் இன்றி முடிதலை விரும்பும் ஆசிரியன் என்றவாறு.

**உதாரணம்:** விளவின் பலாவின் கடுவின் தழுவின் சேவின் வெளவின் எனவரும். இவற்றிற்கு வீழ்பழமெனவும் நீங்கினானெனவுங் கொடுத்து முடிவுணர்க. ஊரினீங்கினான் என ஏனையவற்றோடும் ஒட்டுக. இனி 'அவற்றுள் இன்னினிகரம்' (எழு-கஉ௦) என்றதன்பின் இதனை வையாத முறையன்றிக் கூற்றினான் இன்சாரியை கெடாது வழக்கின்கண்ணுஞ் செய்யுட்கண்ணும் நிற்றல்கொள்க. பாம்பினிற் கடிதுதேள் 'கற்பினின்வழாஅ நற்பலவுதவி' 'அகடுசேர்பு பொருந்தி யளவினிற் றிரியாது' எனவரும். இனி இன்மையும் வேண்டுமென்னும் உம்மை தொக்குநின்றதாக்கி அதனான் இவை கோடலும் ஒன்று.

28. இன்மை வேண்டும் என்றது, இறுதி கெடுதல் வேண்டும் என்றபடி. ஒட்டுதற் கொழுகிய வழக்கன்று - சாரியைகள் வருதற்குரிய மொழி வழக்கன்று. அடுத்த கூ௰-ம் சூத்திரம் பார்க்க.



கஙஉ. பெயருந் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப
வேற்றுமை யுருபு நிலைபெறு வழியுந்
தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணு
மொட்டுதற் கொழுகிய வழக்கொடு சிவணிச்
சொற்சிதர் மருங்கின் வழிவந்து விளங்கா
திடைநின் றியலுஞ் சாரியை யியற்கை
யுடைமையு மின்மையு மொடுவயி னொக்கும்.

இது முற்கூறிய சாரியைகளெல்லாம் புணர்மொழியுள்ளே வருமென்பதூஉம் அம்மொழிதாம் இவையென்பதூஉம் அவை வாராத மொழிகளும் உளவென்பதூஉங் கூறுகின்றது.

**இதன் பொருள்:** பெயருந் தொழிலும்—பெயர்ச்சொல்லுந் தொழிற்சொல்லும், பிரிந்து இசைப்ப ஒருங்கு இசைப்ப—பெயருந் தொழிலுமாய்ப் பிரிந்திசைப்பப் பெயரும் பெயருமாய்க்கூடியிசைப்ப, வேற்றுமையுருபு நிலைபெறுவழியும்—வேற்றுமை செய்யும் உருபுகள் தொகாது நிலைபெற்ற இடத்தும், தோற்றம் வேண்டாத் தொகுதிக்கண்ணும்—அவ்வேற்றுமையுருபுகள் தோற்றுதல் வேண்டாது தொக்க இடத்தும், ஒட்டுதற்கு ஒழுகிய வழக்கொடு சிவணி—தாம் பொருந்துதற்கேற்ப நடந்த வழக்கோடே பொருந்தி, சொற்சிதர்மருங்கின்—சாரியைபெறும் புணர்மொழிகளைப் பிரித்துக்காணுமிடத்து, சாரியை இயற்கை வழிவந்து விளங்காது இடைநின்று இயலும்—அச் சாரியையினது தன்மை அச்சொற்களின்பின்னே வந்து விளங்காது நடுவே நின்று நடக்கும், உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒக்கும்—அச்சாரியை உண்டாதலும் இல்லையாதலும் ஒடுவுருபினிடத்து ஒத்துவரும் என்றவாறு.

ஒடுவிற்கொக்கும் எனவே ஏனைய ஒவ்வாவாயின.

**உதாரணம்:** விளவினைக்குறைத்தான், கூழிற்குக் குற்றேவல் செய்யும் இவை பிரிந்திசைத்து உருபுநிலை பெற்றன.

30. இச்சூத்திரத்திற்கு உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட பொருளை மறுத்துச் சேனாவரையர் "பெயரும் பெயரும் பெயரும் தொழிலும் பிரிந்திசைப்பவும் ஒருங்கிசைப்பவும் முறையே வேற்றுமை உருபுநிலை பெற்றவிடத்தும் மறைந்துநிற்கும் தொகைக்

'அன்னென்சாரியை' (எழு-ககூச) என்பதனைக் 'கூற்றியலுக ரத்திறுதி' (எழு-ககூரு) என்பதனைச் சேரவைத்ததனால் இன் சாரியை வருதல் கொள்க. இவ்விரண்டுருபுஞ் சாரியைநிற்பப் பெரும்பான்மையுந் தொகாவென்று உணர்க. விளவினைக்குறைத் தவன், கடிசூத்திரத்திற்குப் பொன் இவை ஒருங்கிசைப்ப உருபு நிலை பெற்றன. வானத்தின் வழுக்கி, வானத்துவழுக்கி எனச் சாரியைபெற்றுப் பிரிந்திசைத்து ஐந்தாமுருபு நிலைபெற்றும் நிலைபெறாதும் வந்தது. வானத்தின் வழுக்கல், வானத்து வழுக் கல் இவை 'மெல்லெழுத்துறழும்' (எழு-ஙகஉ) என்னுஞ் சூத்திரத்து 'வழக்கத்தான' என்பதனான் அத்துக்கொடுத்து மகரங்கெடுக்க ஒருங்கிசைத்தன. விளவினதுகோடு, விளவின் கோடு என ஒருங்கிசைத்துச் சாரியை பெற்றவழி ஆறனுருபு தொகாதுந் தொக்கும் நின்றது. இதற்குப் பிரிந்திசைத்தலின்று. மாத்துக்கட்கட்டினான், மாத்துக்கட்டினான் எனப் பிரிந்திசைத்த வழியும், மாத்துக்கட்குரங்கு, மாத்துக்குரங்கு என ஒருங்கி சைத்த வழியுஞ் சாரியை நின்றவழி ஏழனுருபு தொகாதுந் தொக்கும் நின்றது. 'கிளைப்பெயரெல்லாம்' (எழு-ஙoஎ) என் றதனுட் 'கொள' என்றதனான் ணகாரம் டகாரமாயிற்று. 'நிலாவென் கிளவி யத்தொடு சிவணும்' (எழு-உஉஅ) என விதித்த அத்து நிலாக்கதிர் நிலாமுற்றம் என்றவழிப் பெறாதா யிற்று, அஃது 'ஓட்டுதற் கொழுகியவழக்கு' அன்மையின். நிலாத்துக்கொண்டான், நிலாத்துக்கொண்டவேன் என்பன உருபு தொக்குழி இருவழியும் பெற்றன. எல்லார் தம்மையும் எனச் சாரியை ஈற்றின்கண்ணும் வருதலின் இடைநிற்றல் பெரும் பான்மையென்றற்கு இயலுமென்றார். பூவினொடு விரிந்த கூந்தல் என உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒத்தது. இனி இயற்கையென்றதனான் ஒடு உருபின்கட் பெற்றும் பெறாமை யும் வருதலன்றிப் பெற்றேவருதலுங் கொள்க. பலவற்றொடு என வரும். (ஙo)

கண்ணும்" என்று பொருள்கூறுவர். அவர் கருத்து "பெயரும் பெயரும் பெயரும் தொழிலும் வேற்றுமையுருபு நிலைபெற்றவழி [விரிந்தவழி] பிரிந்திசைக்குமென்பதும், தொக்கவழி ஒருங்கிசைக்கு மென்பதுமாகும். இதுவே நன்னூலார்க்குங் கருத்தாதல் பொதுவியலிற் கூறிய தொகைநிலைச் சூத்திரம் நோக்கி உணர்க. எல்லார்தம்மையும் என்புழி உம்மை முற்றும்மை என்பர் நன்னூலார்.



கஙங. * அத்தே வற்றே யாயிரு மொழிமே
லொற்றுமெய் கெடுத றெற்றென் றற்றே
யவற்றுமுன் வரூஉம் வல்லெழுத்து மிகுமே.

இஃது அத்து வற்று என்பனவற்றிற்கு நிலைமொழியது ஒற்றுக்கேடும் வருமொழி வன்கணத்துக்கண் ஒற்றுப்பேறு மாகிய செய்கை கூறுகின்றது.

**இதன் பொருள் :** அத்தே வற்றே ஆயிரு மொழிமேல் ஒற்று—அத்தும் வற்றுமாகிய அவ்விரண்டு சாரியைமேல் நின்ற ஒற்று, மெய்கெடுதல் தெற்றென்றற்று—தன்வடிவு கெடுதல் தெளியப்பட்டது, அவற்றுமுன் வரூஉம் வல்லெழுத்துமிகுமே—அவ்விரு சாரியை முன்னும் வரும் வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

**உதாரணம் :** கலத்துக்குறை, அவற்றுக்கோடு எனவரும். 'அத்திடை வரூஉங் கலமென் னளவே' (எழு-கஙஅ) 'சுட்டு முதல் வகர மையு மெய்யும்' (எழு-கஅங) என்பனவற்றான் அத் தும் வற்றும் பெற்றுவரும் மகர வகர ஈறுகட்கு ஈற்று வல்லெ ழுத்துவிதி இன்மையின் அவற்றுமுன் வரூஉம் வல்லெழுத்து மிகுமென்று சாரியை வல்லெழுத்து விதித்தார். வல்லெழுத்து இன்றித் திரிந்து முடிவன ணகாரமும் னகாரமும் லகாரமும் ளகாரமுமாம். மகர ஈற்றிற்கு அத்தும் வகர ஈற்றிற்கு வற்றும் வருமென்பது அச்சூத்திரங்களாற் பெற்றாம். வற்றே யத்தே யென்னாத முறையன்றிக் கூற்றினாற் புள்ளியீற்றின் முன்னர் அத்தின்மிசை யொற்றுக் கெடாது நிற்றலுங் கொள்க.

**உதாரணம் :** விண்ணத்துக் கொட்கும், வெயிலத்துச் சென் றான்; இருளத்துக் கொண்டான் என வரும். மெய்யென்றதனான் அத்தின் அகரம் அகரமுன்னரேயன்றிப் பிற உயிர்முன்னருங் கெடும் ஒரோவிடத்தென்று கொள்க. அண்ணாத்தேரி, திட்டாத் துக்குளம் என ஆகாரத்தின் முன்னரும் வரும் அத்தின் அகரங்

31. ஈற்று வல்லெழுத்து விதியில்லாதது என்றது, கலம், அவ் என்னும் நிலைமொழிகளின் ஈற்றெழுத்துக்கள் ஒற்றாதலினாலே வல்லி னம் மிகா; உயிராயின் மிகும். ஆதலின் விதியில்லை என்றபடி. அண்ணா, திட்டா என்பன ஊர்போலும்.

கெட்டது. இவற்றை அகர ஈருக்கியும் முடிப்ப. இனித் தெற்றென்றற்றே என்றதனுன் அத்தின் அகரந் தெற்றெனக் கெடாது நிற்கும் இடமுங் கொள்க. அதவத்துக்கண், விளவத்துக்கண் என வரும். (ஙக)

கஙச. காரமுங் கரமுங் கானொடு சிவணி
நேரத் தோன்று மெழுத்தின் சாரியை.

இது மொழிச்சாரியையை விட்டு எழுத்துக்கட்கு வருஞ் சாரியைகளது பெயரும் முறையுந் தொகையும் உணர்த்துகின்றது.

**இதன் பொருள்:** காரமுங் காமுங் கானொடு சிவணி—காரமுங் கரமுங் கானொடு பொருந்தி, எழுத்தின் சாரியை நேரத் தோன்றும—எழுத்தின்கண் வருஞ் சாரியையாதற்கு எல்லா ஆசிரியரானும் உடம்படத்தோன்றும் என்றவாறு.

காரமுங் கரமும் எடுத்துச் சொல்லியவழி இனிதிசைத்தலானும், வழக்குப் பயிற்சியுடைமையானும், வடவெழுத்திற்கும் உரியவாதலானுஞ் சேரக் கூறினர் கான் அத்தன்மை யின்மையினுற் பின் வைத்தார். நேரத்தோன்றுமெனவே நேரத்தோன்றுதனவும் உளவாயின. அவை ஆனம், ஏனம், ஓனம் என்க. இவை சிதைந்த வழக்கேனுங் கடியலாகாவாயின. (ஙஉ)

கஙரு. அவற்றுள்
கரமுங் கானு நெட்டெழுத் திலவே.

இஃது அவற்றுட் சிலசாரியை சிலவெழுத்தோடு வாராவென எய்தியது விலக்கிற்று.

**இதன் பொருள்:** அவற்றுள்—முற்கூறியவற்றுள், கரமுங் கானும் நெட்டெழுத்தில—காமுங் கானும் நெட்டெழுத்திற்கு வருதலின்று என்றவாறு.

எனவே, நெட்டெழுத்திற்குக் காரம் வருமாயிற்று. ஆகாரம் ஈகாரம் என ஒட்டுக. ஐகாரம் ஔகாரமெனச் சூத்திரங்களுள் வருமாறு காண்க. (ஙங)



கஙரு. வரன்முறை மூன்றுங் குற்றெழுத் துடைய.

இஃது ஐயம் அகற்றியது; என்னை? நெட்டெழுத்திற்குச் சிலசாரியை விலக்கினாற்போலக் குற்றெழுத்திற்கும் விலக்கற்பாடு உண்டோவென ஐயம் நிகழ்தலின்.

**இதன் பொருள்:** வரன்முறை மூன்றும்—வரலாற்றுமுறைமையையுடைய மூன்றுசாரியையும், குற்றெழுத்துடைய—குற்றெழுத்துப்பெற்று வருதலையுடைய என்றவாறு.

அகாரம் அகரம் மஃகான் என ஒட்டுக. 'வகாரமிசையும்' 'அகர இகரம்' 'வஃகான் மெய்கெட' எனவும் பிறவுஞ் சூத்திரங்களுட் காண்க. இஃகான் ஒஃகான் என்பன பெருவழக்கன்று. வரன்முறையென்றதனுன் அஃகான் என்புழி ஆய்தம் பெறுதல் கொள்க. இது 'குறியதன் முன்ன ராய்தப் புள்ளி' (எழு–ஙஅ) என்பதனுற் பெறுதாயிற்று, மொழியாய் நில்லாமையின். (ஙச)

கஙஎ. ஐகார ஔகாரங் கானொடுந் தோன்றும்.

இஃது 'அவற்றுட் கரமுங் கானும்' என்பதற்கோர் புறனடை கூறுகின்றது.

**இதன் பொருள்:** ஐகார ஔகாரங் கானொடுந் தோன்றும்—நெட்டெழுத்துக்களுள் ஐகார ஔகாரங்கள் முன் விலக்கப்பட்ட கானொடுந் தோன்றும் என்றவாறு.

ஐகான் ஔகான் என வரும். உம்மை இறந்ததுதழீஇயிற்று, காரத்தைக் கருதுதலின். (ஙரு)

கஙஅ. புள்ளி யீற்றுமுன் னுயிர்தனித் தியலாது
மெய்யொடுஞ் சிவணு மவ்வியல் கெடுத்தே.

இது புள்ளியீற்றுமுன் உயிர்முதன்மொழி வந்த காலத்துப் புணரும் முறைமை கூறுகின்றது.

---

36. இச்சூத்திரத்து "அவ்வியல்கெடுத்து" என்பதற்குத் தான் தனித்துநிற்கு மியல்பினைக் கெடுத்து என்று பொருள் கொள்ளாது

**இதன் பொருள் :** புள்ளியீற்றுமுன் உயிர் தனித்து இயலாது—புள்ளியீற்றுச் சொன்முன்னர் வந்த உயிர் முதன்மொழியின் உயிர் தனித்து நடவாது, மெய்யொடுஞ் சிவணும்—அப் புள்ளியோடும் கூடும், அவ்வியல் கெடுத்து—தான் தனித்து நின்ற அவ்வியல்பினைக் கெடுத்து என்றவாறு.

எனவே, நீரோடு கூடிய பால்போல நின்றதென்று ஒற்றுமை கூறினர். ஈண்டு இதனானே உயிர்மெய்யெனப் பெயர் பெற்றது.

**உதாரணம் :** பாலரிது பாலாழி ஆலிலை பொருளீட்டம் வானுலகு வானாடு வேலெறிந்தான் வேலேற்றான் பொருளையம் பொருளொன்று நாணோடிற்று சொல்லெளியம் என வரும்.

ஒன்றென முடித்தலென்பதனான் இயல்பல்லாத புள்ளி முன்னர் உயிர்வந்தாலும் இவ் விதி கொள்க. அதனை அதனொடு நாடுரி என வரும். இவற்றைச் 'சுட்டுமுத லுகர மன்னொடு' (எழு—௧௭௯) 'உரிவருகாலை நாழிக்கிளவி' (எழு—௨௪௦) என்பனவற்றான் முடிக்க. புள்ளியீற்று முன்னுமென உம்மையை மாறி எச்சவும்மையாக்கிக் குற்றியலுகரத்தின் முன்னரும் என அவ்விதி கொள்க. எனவே, 'குற்றியலுகரமுமற்று' (எழு—௧௦௫) என்றதனோடும் பொருந்திற்றாம். நாகரிது வரகரிது என வரும். (௩௬)

௧௩௯. மெய்யுயிர் நீங்கிற் றன்னுரு வாகும்.

இஃது உயிர்மெய் புணர்ச்சிக்கண் உயிர்நீங்கியவழிப் படுவதோர் விதி கூறுகின்றது.

**இதன் பொருள் :** மெய் உயிர் நீக்கின்—மெய் தன்னோடு கூடிநின்ற உயிர் புணர்ச்சியிடத்துப் பிரிந்து வேறு நின்றதாயின், தன் உருவாகும்—தான் முன்னர்ப் பெற்று நின்ற புள்ளிவடிவு பெறும் என்றவாறு.

ஆல் இலை அதன் ஐ என வரும்.

உயிர் என்ன வடிவிற்றென்று ஆசிரியர் கூறாமையின் உயிர்க்கண் ஆராய்ச்சியின்று.

இனி எகர ஒகரங்களைப் புள்ளியான் வேற்றுமை செய்தலின் தொன்றுதொட்டு வழங்கின வடிவுடையவென்று கோடலுமாம். புணர்ச்சியுள் உயிர்மெய்யினைப் பிரிப்பாராதலின் இது கூறாக்காற் குன்றக்கூறலாமென்று உணர்க. (௩௭)

௧௪௦. எல்லா மொழிக்கு முயிர்வரு வழியே
யுடம்படு மெய்யி னுருவுகொளல் வரையார்.

இஃது உயிரீறும் உயிர்முதன்மொழியும் புணரும்வழி நிகழ்வதோர் கருவி கூறுகின்றது.

**இதன் பொருள் :** எல்லாமொழிக்கும்—நிலைமொழியும் வருமொழியுமாய்ப் புணரும் எவ்வகை மொழிக்கும், உயிர் வருவழி—உயிர் முதன்மொழி வருமிடத்து, உடம்படு மெய்யின் உருவு

---

புள்ளியீறாக நிற்கு மவ்வியல்பினைக்கெடுத்து என்று மெய்க்கும், குற்றியலுகர வீறாகநிற்கு மவ்வியல்பினைக் கெடுத்து என்று குற்றியலுகர வீற்றிற்கு மேற்பப் பொருள்கொள்ளின், நன்னூலார் குற்றியலுகரங் கெட்டுப் புணருமெனக் கூறியது தொல்காப்பியர்க்குங் கருத்தாகும். கெட்டுப் புணருமென்பதே தொல்காப்பியர்க்குங் கருத்தாதல் "யகரம் வரும்வழி இகரங் குறுகு - முகரக் கிளவி துவரத் தோன்றாது" என்னுஞ் சூத்திரத்தை உற்றுநோக்கின் அறியப்படும். இனி, "புள்ளியீற்றின்முன் னுயிர் தனித்தியலாது" என்புழி, ஈற்றும் என உம்மையை விரித்துக் குற்றியலுகர வீற்றிற்கு வலிந்து விதி கொள்வதினும் "புள்ளியீறு" என்பதை இருமுறை ஓதி இரு தொடராகக் கொண்டு மெய்யீறு என்றும், புள்ளிபெறுங் குற்றியலுகர வீறென்றும் பொருள் கொள்ளலாமென்பது எமது கருத்து. அங்ஙனம் கொள்ளின், "குற்றியலுகரமு மற்றெனமொழிப" என ஆசிரியர் ஓதிய விதிக்குமோர் பயனுண்டாம். இடையியல் "வேற்றுமைப் பொருள்வயி னுருபாகுநவும்" என்பதையும், வேற்றுமையியலில் ஐந்தாம் வேற்றுமைச் சூத்திரத்து "இதனினிற்றிது" என்பதையும் இரு தொடராக வைத்துச் சேனாவரையரும் பொருள் கூறல் காண்க. அன்றி ஒரு சூத்திரத்திற்கு இரு பொருளுங்கொள்வர். அவ்வாறே கோடலுமாம். இதுபோல்வனவற்றை ஒப்பக்கூறல் என்பர் பேராசிரியர். உத்தி பேராசிரியருரை பார்க்க.

**37.** மெய்யுயிர் நீங்கிற் றன்னுரு வாகும் என்று மெய்யீற்றிற்கே கூறினாராயினும், குற்றியலுகரத்திற்கும் ஒன்றென முடித்தலாற் கொள்ளப்படும்.

கொளல் வரையார்—உடம்படுமெய்யினது வடிவை உயிரீறுகோடலை நீக்கார் கொள்வார் ஆசிரியர் என்றவாறு.

அவை யகாரமும் வகாரமுமென்பது முதனூல்பற்றிக்கோடும்;

'உடம்படு மெய்யே யகார வகார
முயிர்முதன் மொழிவரூஉங் காலை யான'

எனவும்,

'இறுதியு முதலு முயிர்நிலை வரினே
யுறுமென மொழிப வுடம்படு மெய்யே'

எனவுங் கூறினாராகலின். உயிர்களுள் இகர ஈகார ஐகார ஈறு யகர உடம்படுமெய் கொள்ளும். ஏகாரம், யகாரமும், வகாரமுங் கொள்ளும். அல்லனவெல்லாம் வகர உடம்படுமெய்யே கொள்ளுமென்று உணர்க.

உதாரணம்: கிளியழகிது, குரீஇயோப்புவாள், வரையரமகளிர் எனவும்; விளவழகிது, பலாவழகிது, கடுவழகிது, பூவழகிது, கோவழகிது, கௌவடைந்தது எனவும் ஒட்டுக. 'ஏஎயிவளொருத்தி பேடியோ வென்றார்' ஏவாடல் காண்க என ஏகாரத்திற்கு இரண்டும் வந்தன.

ஒன்றென முடித்த லென்பதனான் விகாரப்பட்ட மொழிக்கண்ணும் உடம்படுமெய் கொள்க. மரவடி ஆயிருதிணை என வரும். வரையாரென்றதனான் உடம்படுமெய்கோடல் ஒருதலையன்று. கிளிஅரிது மூங்காஇல்லை எனவும் வரும். ஒன்றென முடித்தலென்பதனால் 'விண்வத்துக்கொட்கும்' எனச் சிறுபான்மை புள்ளியீற்றினும் வரும். செல்வுழி உண்புழி என்பன வினைத்தொகையென மறுக்க (௩அ)

கசக. எழுத்தோ ரன்ன பொருடெரி புணர்ச்சி
யிசையிற் றிரித னிலைஇய பண்பே.

இஃது எழுத்துக்கள் ஒன்று பலவாமென எய்தாததெய்துவிக்கின்றது.

38. விகாரப்பட்டமொழி என்றது, விதியீற்றை. செல்வுழி உண்புழி என்பவற்றை வினைத்தொகையென மறுக்கவென்று இவர் கூறலின், செல்லுழி உண்ணுழி என்பன பிரித்துப் புணர்க்கப்படாத மரூஉ மொழிகளாய் முறையே வகரமும் பகரமும் பெற்று இவ்வாறு நின்றதென்பது கருத்துப்போலும்.



**இதன் பொருள்:** எழுத்தோ ரன்ன பொருள்தெரி புணர்ச்சி—எழுத்து ஒருதன்மைத்தான பொருள்விளங்க நிற்கும் புணர்மொழிகள், இசையிற் றிரிதல் நிலைஇய பண்பு—எடுத்தல் படுத்தல் நலிதலென்கின்ற ஓசைவேற்றுமையாற் புணர்ச்சி வேறுபடுதல் நிலைபெற்ற குணம் என்றவாறு.

உதாரணம்: செம்பொன்பதின்றொடி, செம்பருத்தி, குறும்பரம்பு, நாகன்றேவன்போத்து, தாமரக்கணியார், குன்றேறுமா என இவை இசையிற் றிரிந்தன. (௩௯)

கசஉ. அவைதாம்
முன்னப் பொருள புணர்ச்சி வாயி
னின்ன வென்னு மெழுத்துக்கட னிலவே.

இது மேலதற்கோர் புறனடை கூறுகின்றது.

**இதன் பொருள்:** அவை தாம்—பல பொருட்குப் பொதுவென்ற புணர்மொழிகள் தாம், முன்னப்பொருள—குறிப்பான் உணரும் பொருண்மையினையுடைய, புணர்ச்சிவாயின் இன்னவென்னும் எழுத்துக் கடன் இல—புணர்ச்சியிடத்து இத்தன்மைய வென்னும் எழுத்துமுறைமையை உடையவல்ல என்றவாறு.

செம்பொன்பதின்றொடி என்றுழிப் பொன்னாராய்ச்சியுளவழிப் பொன்னெனவுஞ் செம்பாராய்ச்சியுளவழிச் செம்பெனவுங் குறிப்பான் உணரப்பட்டது. இசையிற் றிரிதலென்றது ஒலியெழுத்திற்கெனவும் எழுத்துக்கடனில வென்றது வரிவடிவிற்கெனவுங் கொள்க. (௪௦)

புணரியல் முற்றிற்று.

39. செம்பு+அருத்தி. அருத்தி—விருப்பம். செம்+பருத்தி எனவும் பிரியும். தாமரைக்கணியார் எனத் திருத்துக. சிவஞானமுனிவர் உரைபார்க்க. கண்ணி—மாலை. தாம்+அரைக்கு+அணியார், தா+மரைக்கு+அண்ணியார்.

## ரு. தொகைமரபு

கசஈ. கசதப முதலிய மொழிமேற் றேன்று
மெல்லெழுத் தியற்கை சொல்லிய முறையான்
ஙஞநம வென்னு மொற்ரு கும்மே
யன்ன மரபின் மொழி வயினை!

என்பது சூத்திரம்.

உயிரீறும் புள்ளியீறும் மேலே அகத்தோத்தினுள் முடிக்கும்வழி ஈறுகடோறும் விரித்து முடிப்பனவற்றை ஈண்டு ஒரோவோர் சூத்திரங்களாற் றொகுத்து முடிபு கூறினமையின், இவ்வோத்துத் தொகைமர பென்னும் பெயர்த்தாயிற்று. மேல் மூவகைமொழியும் நால்வகையாற் புணர்வுழி, மூன்றுதிரிபும் ஓரியல்பும் எய்தி வேற்றுமை அல்வழியென இருபகுதியவாகி எழுத்துஞ் சாரியையும் மிக்குப் புணருமாறு இதுவென்று உணர்த்தி அவைதாம் விரிந்த சூத்திரப்பொருளவன்றியுந் தொக்குப் புணருமாறு கூறுதலின், இவ்வோத்துப் புணரியலோடு இயைபுடைத்தாயிற்று. இத் தலைச்சூத்திரம் உயிர்மயங்கியலையும் புள்ளி மயங்கியலையும் நோக்கியதோர் வருமொழிக் கருவி கூறுகின்றது.

**இதன் பொருள் :** கசதப முதலிய மொழிமேற்றேன்றும் இயற்கை மெல்லெழுத்து—உயிரீறும் புள்ளியீறும் முன்னர் நிற்பக் கசதபக்களை முதலாகவுடைய மொழிகள் வந்தால் அவற்றிற்கு மேலே தோன்றிநிற்கும் இயல்பாகிய மெல்லெழுத்துக்கள், சொல்லிய முறையான் ஙஞநம என்னும் ஒற்ருகும்—நெடுங்கணக்கிற் பொருந்தக்கூறிய முறையானே கசதபக்களுக்கு ஙஞநம வென்னும் ஒற்றுக்கள் நிரனிறைவகையானும், அன்ன மரபின் மொழிவயினை—அத்தன்மைத்தாகிய முறைமையினையுடைய மொழிகளிடத்து என்றவாறு.

1. கசதப முதலிய மொழிமேற்றேன்றும் மெல்லெழுத்தென்றது, விள+கோடு என்பன புணருங்கால் வருமொழிக் ககரம்நோக்கி விளங்கோடு என மெல்லெழுத்து மிகுதற்கேயன்றி, மரம் குறிது என்பன புணருங்கால் ககரம் முதலிய நோக்கி மெல்லெழுத்துத் திரிதற்கும் விதி என்க. இச்சூத்திரத்தின் கருத்து உயிரீற்றின்முன் கச



compare நன்னூல்

**உதாரணம் :** விளங்கோடு செதிள் தோல் பூ என வரும். இது 'மரப்பெயர்க்கிளவி' (எழு-உ௪ா) என்பதனன் மெல்லெழுத்துப் பெற்றது. மரங் குறிது சிறிது தீது பெரிது என அல்வழிக்கட் டிரியுமாறு 'அல்வழியெல்லாம்' (எழு-ஈ௧௪) என்பதனற் பெறுதுமேனும் ஈண்டுத் தோன்றுமென்றதனல் நிலைமொழிக்கட் டோன்றிநின்ற ஒற்றுத் திரிதல் கொள்க. அன்ன மரபின் மொழியன்மையின் விளக்குறுமை விளக்குறைத்தான் என்புழி மெல்லெழுத்துப் பெருவாயின; இவை ஏழாவதும் இரண்டாவதுந் திரிதலின். இங்ஙனம் எழுத்துப் பெறுவனவுந் திரிவனவுமெல்லாம் வருமொழியேபற்றி வருமென்று உணர்க. (௧)

கசசா. ஞநம யவவெனு முதலாகு மொழியு
முயிர்முத லாகிய மொழியு முளப்பட
வன்றி யனைத்து மெல்லா வழியு
நின்ற சொன்மு னியல்பா கும்மே.

இது முற்கூறிய நால்வகைப் புணர்ச்சியுள் இயல்பு புணருங்கால் இக்கூறிய பதினேழெழுத்தும் வருமொழியாய் வந்த இடத்து இருபத்துநான்கீற்றின் முன்னரும் வேற்றுமையினும் அல்வழியினும் வருமொழி இயல்பாய் முடிக வென்கின்றது.

**இதன் பொருள் :** ஞநமயவ் எனும் முதலாகு மொழியும்—ஞநமயவ என்று சொல்லப்படும் எழுத்துக்கள் முதலாய்நிற்குஞ் சொற்களும், உயிர்முதலாகிய மொழியும் உளப்பட—உயிரெழுத்து முதலாய்நின்ற சொற்களுந் தம்மிற்கூட, அன்றியனைத்தும்—அப்பதினேழாகிய வருமொழிகளும், எல்லாவழியும்—வேற்றுமையும் அல்வழியுமாகிய எல்லா இடத்தும், நின்றசொன்முன்—இருபத்துநான்கு ஈற்றவாய்நின்ற பெயர்ச்சொன்முன்னர், இயல்பாகும்—திரிபின்றி இயல்பு புணர்ச்சியாய் நிற்கும் என்றவாறு.

தப வருங்கால் அவ்வவற்றின் இனம் மிகும் என்பதும் நிலைமொழியீற்றிலுள்ள மெல்லெழுத்துக்கள் அந்நான்கும் வருங்கால் அவ்வவ்வினமாகத் திரியும் என்பதுமே. விளக்குறுமை ஏழாவது. விளக்குறைத்தான் இரண்டாவது.

2. எடுத்தோத்து என்றது சூத்திரத்தை, விதிகளை எடுத்தோதுவது என்பது கருத்து. இலேசு என்றது மிகை முதலியவற்றை. இனி

உயிரீற்றின்கண் எகர ஒகரம் ஒழிந்தன கொள்க.

**உதாரணம் :** விள பலா கிளி குரீ கடு பூ சேகை சோ கௌ என நிறுத்தி, ஞான்றது நீண்டது மாண்டது யாது வலிது நுந்தையது என மெய்ம்முதன்மொழி வருவித்து, பொருள் தருதற்கு ஏற்பன அறிந்து கூட்டுக. சோ என்பது அரண். அதற்குச் சோ ஞொள்கிற்று எனக் கொள்க. கௌவென்பதற்குக் கௌவெகிழ்ந்தது நீடிற்று என்க. இனி இவற்றின் முன்னர் உயிர்முதன்மொழி வருங்கால் அழகிது ஆயிற்று இல்லை ஈண்டிற்று உண்டு ஊறிற்று எழுந்தது ஏய்ந்தது ஐது ஒன்று ஓங்கிற்று ஔவியத்தது என வரும். இவற்றுட் சோவுக்கு இடிந்தது ஈண்டையது உள்ளது ஊறிற்று என்பனவற்றோடு முற்கூறியவற்றையும் ஒட்டுக. இனி வேற்றுமைக்கண் விள முதலியவற்றை நிறுத்தி ஞாற்சி நீட்சி மாட்சி யாப்பு வன்மை அழகு ஆக்கம் இளமை ஈட்டம் உயர்வு ஊற்றம் எழுச்சி ஏற்றம் ஐயம் ஒழிவு ஓக்கம் ஔவியம் என ஒட்டுக. ஏலாதனவற்றிற்கு முற்கூறியவாறுபோல ஏற்பன கொணர்ந்து ஒட்டுக.

இனிப் புள்ளியீற்று ணகாரமும் னகாரமும் மேற்கூறுப. ஏனைய ஈண்டுக் கூறுதும்.

**உதாரணம் :** உரிஞ் வெரிந் என நிறுத்தி, ஞெகிழ்ந்தது நீடிற்று அழகிது ஆயிற்று எனவும், ஞெகிழ்ச்சி நீட்டிப்பு அடைவு ஆக்கம் எனவும் வருவித்து, எல்லாவற்றோடும் ஒட்டுக. மரம் வேய் வேர் யாழ் என நிறுத்தி, ஞான்றது நீண்டது மாண்டது யாது வலிது நுந்தையது அழகிது ஆயிற்று எனவும், ஞாற்சி நீட்சி மாட்சி யாப்பு வன்மை அடைவு ஆக்கம் எனவும் வருவித்து, எல்லாவற்றோடும் ஒட்டுக. இவற்றுள் மகர ஈறு வேற்றுமைக்கட் கெடுதல் 'துவர' (எழு-௩௧௦) என்றதனாற் கொள்க. அல்வழிக்கட் கெடுதல் 'அல்வழி யெல்லாம்' (எழு-௩௧௪) என்றதனாற் கொள்க. நிலைமொழித் திரிபு ஈண்டுக் கொள்ளாமை உணர்க. யகர ஈறு யகரத்தின்முன்னர் இரண்டிடத்துங் கெடுதல் ஈண்டு எல்லாமென்றதனாற் கொள்க. வேல் தெவ் கோள் என நிறுத்தி ஏற்பன கொணர்ந்து இருவழியும் ஒட்டுக. ணகார லகார ளகார னகாரங்களின் முன்னர் நகரம் வருமொழியாக வந்துழி அந்நகரந் திரிதலின் அத்திரிந்த உதாரணங்கள் ஈண்டுக் கொள்ளற்க. இவற்றுள் திரிந்து வருவனவுள; அவை எடுத்தோத்தானும் இலேசானும் ஏனையோத்துக்களுள் முடிக்கின்றவாற்றான் உணர்க. இனி, எல்லாமென்றதனான் உயிர்க்கணமாயின் ஒற்றிரட்டியும் உடம்படு மெய் பெற்றும் உயிரேறியும் முடியுங் கருவித்திரிபுகள் திரிபெனப் படா இவ்வியல்பின்கண்ணென்று உணர்க. வரகுஞான்றது வரகுஞாற்சி எனக் குற்றுகரத்தின்கண்ணும் இவ்வாறே கொள்க. இருபத்துநான்கு ஈற்றிற்கும் வேற்றுமைக்கும் அல்வழிக்கும் அகத்தோத்தினுள் நாற்பத்தெட்டுச் சூத்திரங்களான் முடிவனவற்றை ஒரு சூத்திரத்தாற் றொகுத்து முடித்தார். மேலும் இவ்வாறே கூறுப. இவ்வியல்பு வருமொழி நோக்கிக் கூறியதென்று உணர்க. இவ்வியல்புபுணர்ச்சி மெய்க்கண் நிகழுமாறு உயிர்க்கண் நிகழாமையின் மெய் முற்கூறினர். (உ)

எல்லாம் என்றதனால் உயிர்க்கணமாயி னொற்றிரட்டியும் உடம்படு மெய்பெற்றும் உயிரேறியும் முடியுங் கருவித்திரிபுகள் திரிபெனப் படா இவ்வியல்பின்கண் என்று உணர்க என ஓதினமையானே கருவித்திரிபினதும், செய்கையினதும் வேறுபாடு இனிது அறியப்படும்.



கசரு. அவற்றுள்
மெல்லெழுத் தியற்கை யுறழினும் வரையார்
சொல்லிய தொடர்மொழி யிறுதி யான.

இது முற்கூறிய முடிபிற் சிலவற்றிற்கு அம்முடிபு விலக்கிப் பிறிது விதி எய்துவித்தது.

**இதன் பொருள் :** அவற்றுள்—முற்கூறிய மூன்று கணத்தினுள், மெல்லெழுத்தியற்கை உறழினும் வரையார்—மெல்லெழுத்து இயல்பியல்பாதலேயன்றி உறழ்ந்து முடியினும் நீக்கார், சொல்லிய தொடர்மொழி இறுதியான—சொல்லப்பட்ட தொடர்மொழி யீற்றுக்கண் என்றவாறு.

உம்மை எதிர்மறை. எனவே, உறழாமை வலியுடைத்தாயிற்று. கதிர்ஞெரி கதிர்ஞ்ஞெரி நுனி முரி எனவும், இதழ்

3. மெய், காய் என்னுமொழிகளை இங்கே ஈரெழுத்தொருமொழி யென்று கொண்ட நச்சினார்க்கினியர் 'ஓரெழுத்தொருமொழி ஈரெழுத்தொருமொழி' என்னுஞ் சூத்திரத்து இவைமுதலியவற்றை ஒற்றுத்

ஞெரி இதழ்ஞ்ஞெரி நுனிமுரி எனவும் வரும். வருமொழி முற்கூறியவதனால் ஓரெழுத்தொருமொழி ஈரெழுத்தொருமொழிகளுள்ளுஞ் சில உறழ்ச்சிபெற்று முடிதல் கொள்க. பூஞெரி பூஞ்ஞெரி நுனி முரி காய்ஞெரி காஞ்ஞெரி நுனி முரி என வரும். சொல்லியவென்றதனான் ஓரெழுத்தொருமொழிகளுட் சில மிக்குமுடிதல் கொள்க. கைஞ்ஞெரித்தார் நீட்டினார் மறித்தார் எனவரும். இன்னும் இதனானே ஈரெழுத்தொருமொழிக்கண் மெய்ஞ்ஞானம் நூல்மறந்தார் என வரும். இவற்றை நலிந்து கூறப் பிறத்தலின் இயல்பென்பாரும் உளர். பூஞாற்றினார் என்றாற்போல்வன மிகாதன. (௩)

கசகூ. ணனவென் புள்ளிமுன் யாவு ஞாவும்
வினையோ ரனைய வென்மனார் புலவர்.

இது யகர ஞகர முதன்மொழிவந்த இடத்து நிகழ்வதோர் தன்மை கூறுகின்றது. இதுவும் புணரியலொழிபாய்க் கருவிப்பாற்படும்.

**இதன் பொருள்:** ணனவென் புள்ளிமுன் யாவும் ஞாவும்—ணகார னகாரமென்று கூறப்படும் புள்ளிகளின் முன்னர் வந்த யாவும் ஞாவும் முதலாகிய வினைச்சொற்கள், வினையோரனைய என்மனார் புலவர்—ஒருவினைவந்த தன்மையை ஒக்குமென்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

**உதாரணம்:** 'மண்யாத்த கோட்ட மழகளிறு தோன்றுமே' 'மண்ஞாத்த கோட்டமழகளிறு தோன்றுமே' எனவும் 'பொன்யாத்த தார்ப்புரவி பரிக்குமே' 'பொன்ஞாத்த தார்ப் புரவி பரிக்குமே' எனவும் வரும்.

வினைக்கண்ணெனவே மண்யர்மை மண்ஞாமை எனப் பெயர்க்கண் வாராவாயின. ஞாமுற்கூறாது யாமுற்கூறியவதனான் ஞாச்சென்றவழி யாச்செல்லாது யாச்சென்றவழி ஞாச்

தள்ளிக்கொள்ளவேண்டுமென்றது அவருக்கே யுடன்பாடன்மையைக் காட்டும். எழுத்தியல்பு நோக்கி ஈண்டுக் கூறினாரெனின்? . ஆண்டும் அவ்வாறே கூறிவிடுதல் பொருத்தமென்பது அவர்க்கு முடன்பாடாதல் காண்க.



செல்லுமென்று கொள்க. மண்ஞான்றது என்றவழி மண்யான்றது என்று வாராமை உணர்க. (௪)

கசஎ. மொழிமுத லாகு மெல்லா வெழுத்தும்
வருவழி நின்ற வாயிரு புள்ளியும்
வேற்றுமை யல்வழித் திரிபிட னிலவே.

இது ணகார ஈறும் னகார ஈறும் அல்வழிக்கண் இயல்பாய் முடியுமென்கின்றது.

**இதன் பொருள்:** மொழிமுதலாகும் எல்லாவெழுத்தும் வருவழி—மொழிக்கு முதலா மெனப்பட்ட இருபத்திரண்டெழுத்தும் வருமொழியாய் வருமிடத்து, நின்ற ஆயிரு புள்ளியும்—முன்னர்க்கூறி நின்ற ணகாரமும் னகாரமும், வேற்றுமை யல்வழித் திரிபிடன் இலவே—வேற்றுமை யல்லாத இடத்துத் திரியுமிடம் இல என்றவாறு

மண் பொன் என நிறுத்திக், கடிது சிறிது தீது பெரிது ஞெகிழ்ந்தது நீண்டது மாண்டது யாது வலிது நந்தையது அடைந்தது ஆயிற்று இல்லை ஈண்டிற்று உண்டு ஊட்டிற்று எவ்விடத்தது ஏறிற்று ஐது ஒழுகிற்று ஓங்கிற்று ஔவையது என ஒட்டுக. வருமொழி முற்கூறியவதனால் ணகாரத்திற்குச் சிறுபான்மை திரிபும் உண்டென்று கொள்க. சாட்கோல் என வரும்; இதற்குச் சாணுகியகோ லென்க. இவை 'நின்றசொன்முனியல்பாகும்' (எழு-கசச) என்ற வழி அடங்காவாயின; அது வருமொழிபற்றித் திரியாமை கூறியதாதலின். இது நிலைமொழி பற்றித் திரியாமை கூறியது. (௫)

கசஅ. வேற்றுமைக் கண்ணும் வல்லெழுத் தல்வழி
மேற்கூ றியற்கை யாவயி னான.

இது முற்கூறியவாற்றான் வேற்றுமைக்கண் திரிபு எய்தி நின்றவற்றை ஈண்டு வேற்றுமைக்கண்ணும் வல்லெழுத் தல் வழித் திரியாவென எய்தியது விலக்கிற்று.

**இதன் பொருள்:** ஆவயினான—அல்வழிக்கண் அங்ஙனந் திரியாது நின்ற அவ்வொற்றுக்கள், வேற்றுமைக்கண்ணும்—

வேற்றுமைப் பொருட் புணர்ச்சி யிடத்தும், வல்லெழுத்தல்வழி மேற்கூறியற்கை—வல்லெழுத்தல்லாத இடத்து மேற்கூறிய இயல்பு முடிபாம் என்றவாறு.

எனவே, வல்லெழுத்து வந்துழித் திரியுமென்றாராயிற்று.

**உதாரணம்:** மண் பொன் என நிறுத்தி, ஞெகிழ்ச்சி நீட்சி மாட்சி யாப்பு வன்மை நுந்தையது அழகு ஆக்கம் இன்மை என ஏற்பன கொணர்ந்து ஒட்டுக. இதுவுஞ் செய்கைச் சூத்திரம். மேல் நான்கு சூத்திரத்தாற் கூறியன வல்லெழுத்து வந்துழித் திரியுமாறு தத்தம் ஈற்றுட் கூறுப. (௬)

௧௪௯. லனவென வருஉம் புள்ளி முன்னர்த்
தநவென வரிற் றனவா கும்மே.

இது புள்ளிமயங்கியலை நோக்கியதோர் வருமொழிக் கருவி கூறுகின்றது.

**இதன் பொருள்:** லன என வருஉம் புள்ளிமுன்னர்—லகார னகாரமென்று சொல்லவருகின்ற புள்ளிகளின் முன்னர், த ந என வரின்—தகாரமும் நகாரமும் முதலென்று சொல்லும்படியாகச் சில சொற்கள் வரின், றனவாகும்—நிரனிறையானே அவை றகார னகாரங்களாகத் திரியும் என்றவாறு.

**உதாரணம்:** கஃறீது கன்னன்று பொன்றீது பொன்னன்று என வரும். நிலைமொழித்திரிபு தத்தம் ஈற்றுட் கூறுப. (௭)

௧௫௦. ணளவென் புள்ளிமுன் டணவெனத் தோன்றும்.

இதுவும் அது.

**இதன் பொருள்:** ணளவென் புள்ளிமுன்—ணகார ளகாரமென்று சொல்லப்படும் புள்ளிகளின் முன்னர் அதிகாரத்தால் தகார நகாரங்கள் வருமெனின், டணவெனத் தோன்றும்—அவை நிரனிறையானே டகார ணகாரங்களாய்த் திரிந்து தோன்றும் என்றவாறு.



**உதாரணம்:** மண்டீது மண்ணன்று முஃடீது முண்ணன்று என வரும். நிலைமொழித்திரிபு தத்தம் ஈற்றுட் கூறுப. (௮)

௧௫௧. உயிரீ றாகிய முன்னிலைக் கிளவியும்
புள்ளி யிறுதி முன்னிலைக் கிளவியு
மியல்பா குநவு முறழா குநவுமென்
றாயீ ரியல வல்லெழுத்து வரினே.

இது முன்னிலைவினைச்சொல் வன்கணத்துக்கண் முடியுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள்:** உயிரீறாகிய முன்னிலைக் கிளவியும்—உயிரீறாய்வந்த முன்னிலை வினைச்சொற்களும், புள்ளியிறுதி முன்னிலைக் கிளவியும்—புள்ளியீறாய் வந்த முன்னிலை வினைச்சொற்களும், வல்லெழுத்துவரின்—வல்லெழுத்து முதலாகிய மொழி வரின், இயல்பாகுநவும் உறழாகுநவுமென்று ஆயீரியல—இயல்பாய் முடிவனவும் உறழ்ந்து முடிவனவுமென அவ்விரண்டு இயல்பினையுடைய என்றவாறு.

**உதாரணம்:** எறிகொற்றா கொணாகொற்றா உண்கொற்றா தின்கொற்றா சாத்தா தேவா பூதா என இவை இயல்பு. நடகொற்றா நடக்கொற்றா ஈர்கொற்றா ஈர்க்கொற்றா சாத்தா தேவா பூதா என இவை உறழ்ச்சி. ஈறென்று ஓதினமையின் வினைச்சொல்லே கொள்க. இவை முன்னின்றான் தொழி லுணர்த்துவனவும், அவனைத் தொழிற்படுத்துவனவு மென இருவகைய. இ ஐ ஆய் முதலியன தொழிலுணர்த்துவன. நட வா முதலியன உயிரீறும் புள்ளியீறுந் தொழிற்படுத்துவன. நில்கொற்றா நிற்கொற்றா எனத் திரிந்துறழ்ந்தனவும், உறழாகுநவு மென்னும் பொதுவகையான் முடிக்க. இயல்பு முறழ்வு மென் றிரண் டியல்பின என்னாது ஆகுநவு மென்றதனான் துக்கொற்றா நொக்கொற்றா ஞெள்ளா நாகா மாடா வடுகா என ஓரெழுத் தொருமொழி முன்னிலைவினைச்சொல் மிக்கே முடிதல்கொள்க. (௯)

---

9. முன்னின்றான் தொழிலுணர்த்துவன முன்னிலை வினைமுற்று. முன்னின்றானைத் தொழிற்படுத்துவன ஏவல் வினைமுற்று. இவை அவ்விரண்டற்கும் வேறுபாடு.

௧௫௨. ஔவென வரூஉ முயிரிறு சொல்லும்
ஞநமவ வென்னும் புள்ளி யிறுதியுங்
குற்றிய லுகரத் திறுதியு முளப்பட
முற்றத் தோன்று முன்னிலை மொழிக்கே.

இஃது எய்தியது விலக்கிற்று, முற்கூறியவற்றுட் சில ஆகாதனவற்றை வரைந்து உணர்த்தலின்.

**இதன் பொருள் :** ஔவென வரூஉம் உயிரிறு சொல்லும்—ஔவென வருகின்ற உயிரீற்றுச் சொல்லும், ஞநமவ என்னும் புள்ளியிறுதியும்—ஞநமவ என்று சொல்லப்படும் புள்ளியீற்றுச் சொல்லும், குற்றியலுகரத்து இறுதியும்—குற்றியலுகரத்தை இறுதியிலேயுடைய சொல்லும், முன்னிலை மொழிக்கு உளப்பட முற்றத் தோன்று—முன்னர் முன்னிலை மொழிக்குப் பொருந்தக் கூறிய இயல்பும் உறழ்ச்சியுமாகிய முடிபிற்கு முற்றத் தோன்று என்றவாறு.

முற்றவென்றதனான் நிலைமொழி உகரம் பெற்று உறழ்ந்து முடிதல் கொள்க.

**உதாரணம் :** கௌவுகொற்றா கௌவுக்கொற்றா, வெளவுகொற்றா வெளவுக்கொற்றா, உரிஞுகொற்றா உரிஞுக்கொற்றா, பொருநுகொற்றா பொருநுக்கொற்றா, திருமுகொற்றா திருமுக்கொற்றா, தெவ்வுகொற்றா தெவ்வுக்கொற்றா, கூட்டுகொற்றா கூட்டுக்கொற்றா என வரும். (௧௦)

௧௫௩. உயிரீ றாகிய வுயர்திணைப் பெயரும்
புள்ளி யிறுதி யுயர்திணைப் பெயரு
மெல்லா வழியு மியல்பென மொழிப.

இஃது உயர்திணைப்பெயர் வன்கணம் மென்கணம் இடைக்கணம் உயிர்க்கண மென்னும் நான்கு கணத்தினும் இருவழியும் முடியுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** உயிரீறாகிய உயர்திணைப்பெயரும்—உயிரீறாய் வந்த உயர்திணைப் பெயர்களும், புள்ளி யிறுதி உயர்திணைப் பெயரும்—புள்ளியீற்றினையுடைய உயர்திணைப் பெயர்களும், எல்லாவழியும்—நான்கு கணத்து அல்வழியும் வேற்றுமையுமாகிய எல்லா இடத்தும், இயல்பென மொழிப—இயல்பாய் முடியுமென்று கூறுவர் புலவர் என்றவாறு.

வன்கணம் ஒழிந்த கணங்களை ‘ஞ ந ம ய வ’ (எழு-௧௪௪) என்பதனான் முடிப்பாரும் உளர். அது பொருந்தாது, இவ்வாசிரியர் உயர்திணைப் பெயரும் விரவுப்பெயரும் எடுத்தோதியே முடிப்பாராதலின்.

**உதாரணம் :** நம்பி அவன் எனவும், நங்கை அவள் எனவும் நிறுத்தி, அல்வழிக்கட் குறியன் சிறியன் தீயன் பெரியன் எனவும், குறியள் சிறியள் தீயள் பெரியள் எனவும், ஞான்றான் நீண்டான் மாண்டான் எனவும், ஞான்றாள் நீண்டாள் மாண்டாள் எனவும், யாவன் வலியன் எனவும், யாவள் வலியள் எனவும், அடைந்தான் ஆயினன் ஔவியத்தான் எனவும், அழகியள் ஆடினள் ஔவியத்தாள் எனவும் ஒட்டுக. இனி வேற்றுமைக்கட் கை செவி தலை புறம் எனவும், ஞாற்சி நீட்சி மாட்சி எனவும், யாப்பு வன்மை எனவும், அழகு ஔவியம் எனவும் எல்லாவற்றோடும் ஒட்டுக. ஒருவேன் எனத் தன்மைப் பெயர்க்கண்ணுங் குறியேன் சிறியேன் தீயேன் பெரியேன் எனவும், கை செவி தலை புறம் எனவும் ஒட்டுக. நீ முன்னிலை விரவுப் பெயராதலின் ஈண்டைக் காகா.

இனி, உயிரீறு புள்ளியிறுதி என்ற மிகையானே உயர்திணைப்பெயர் திரிந்துமுடிவனவுங் கொள்க. கபிலபரணர், இறைவநெடுவேட்டுவர், மருத்துவமாணிக்கர் என னகர ஈறு கெட்டு இயல்பாய் முடிந்தன. ஆசீவகப்பள்ளி நிக்கந்தக்கோட்டம் என் இவை அவ்வீறு கெட்டு ஒற்று மிக்கு முடிந்தன. ஈழவக்கத்தி வாணிகத்தெரு அரசக்கன்னி கோலிகக்கருவி என இவை ஒருமையீறும் பன்மையீறுங் கெட்டு மிக்கு முடிந்தன. குமரகோட்டம் குமரக்கோட்டம், பிரமகோட்டம் பிரமக்கோட்டம் என இவை ஈறுகெட்டு வல்லெழுத்து உறழ்ந்தன. வண்ணாரப்பெண்டிர் இது மிக்கு முடிந்தது. பல்சங்கத்தார் பல்சான்றோர் பல்லரசர் என்றாற்போல்வன ரகரவீறும் அதன் முன்னின்ற அகரமுங் கெட்டுப் பிறசெய்கைகளும் பெற்றுமுடிந்தன.

இனி, எல்லாவழியு மென்றதனான் உயர்திணை வினைச்சொல் இயல்பாயுந் திரிந்தும் முடிவன எல்லாங்கொள்க. உண்கு உண்டு வருது சேறு உண்பல் உண்டேன் உண்பேன் என்னுந் தன்மை வினைகளைக் கொற்றா சாத்தா தேவா பூதா என்பனவற்றோடு ஒட்டுக. உண்டீர் சான்றீர் பார்ப்பீர் என முன்னிலைக்கண்ணும் உண்ப உண்டார் சான்றார் பார்ப்பார் எனப் படர்க்கைக்கண்ணும் ஒட்டுக. இவை இயல்பு. உண்டனெஞ் சான்றேம் உண்டோநாம் என்றாற்போல்வன திரிந்துமுடிந்தன. பிறவும் அன்ன. (கக)

கருச. அவற்றுள்
இகர விறுபெயர் திரிபிட னுடைத்தே.

இஃது உயர்திணைப்பெயருட் சிலவற்றிற்கு எய்தாததெய்துவித்தது.

**இதன் பொருள்:** அவற்றுள் இகர இறுபெயர்—முற்கூறிய உயர்திணைப் பெயர்களுள் இகர ஈற்றுப்பெயர், திரிபிட னுடைத்து—இருவழியுந் திரிந்து முடியும் இடனுடைத்து என்றவாறு.

எட்டிப்பூ காவிதிப்பூ நம்பிப்பேறு என இவ்வுயர்திணைப் பெயர்கள் வேற்றுமைக்கண் மிக்கு முடிந்தன. எட்டி காவிதி என்பன தேயவழக்காகிய சிறப்புப்பெயர். எட்டிமரம் அன்று. அஃது 'எட்டிக்குமரனிருந்தோன்றன்னை' என்பதனான் உணர்க. இவை எட்டியதுபூ எட்டிக்குப்பூ என விரியும். இனி நம்பிக்கொல்லன் நம்பிச்சான்றான் நம்பித்துணை நம்பிப்பிள்ளை எனவும், செட்டிக்கூத்தன் சாத்தன் தேவன் பூதனெனவும் அல்வழிக்கண் உயர்திணைப்பெயர் மிக்கு முடிந்தன. இடனுடைத்தென்றதனான் இகாரஈறல்லாதனவும் ஈறு திரியாது நின்று வல்லெழுத்துப்பெறுதல் கொள்க. நங்கைப்பெண் நங்கைச்சானி என அல்வழிக்கட் சிறுபான்மை ஐகார ஈறு மிக்கன. இவ்விற்றஃறிணைப்பெயர் மிக்குமுடிதல் உயிர்மயங்கியலுட் கூறுப. (கஉ)

கருரு. அஃறிணை விரவுப்பெய ரியல்புமா ருளவே.

இது விரவுப்பெயருள் இயல்பாய் முடிவனவும் உளவென்கின்றது.



**இதன் பொருள்:** அஃறிணைவிரவுப்பெயர்—உயர்திணைப் பெயரோடு அஃறிணை விரவிய விரவுப்பெயர், இயல்பு மாருள—இயல்பாய் முடிவனவும் உள, உம்மையான் இயல்பின்றி முடிவனவும் உள என்றவாறு.

உயர்திணைப்பெயரோடு அஃறிணைசென்று விரவிற்றென்றதென்னை? சொல்லதிகாரத்து 'இருதிணைச் சொற்குமோ ரன்ன வுரிமையின்' (சொல் கஎஉ) என்று சூத்திரஞ் செய்வாராலெனின், அதுவும் பொருந்துமாறு கூறுதும். சாத்தன் சாத்தி, முடவன் முடத்தி எனவரும் விரவுப்பெயர்க்கண் உயர்திணைக்கு உரித்தாக ஓதிய ஆண்பாலும் பெண்பாலும் உணர்த்திநின்ற ஈற்றெழுத்துக்களை அஃறிணை யாண்பாலும் பெண்பாலும் உணர்த்திற்றென்றல் வேண்டும்; என்னை? அஃறிணைக்கு ஒருமைப் பாலும் பன்மைப்பாலும் உணர்த்தும் ஈறன்றி ஆண்பாலும் பெண்பாலும் உணர்த்தும் ஈறுகள் உளவாக ஆசிரியர் ஓதாமையின்; அங்ஙனம் உயர்திணை இருபாலும் உணர்த்தும் ஈறுகள் நின்றே அஃறிணையாண்பாலையும் பெண்பாலையும் உணர்த்துதலின் அஃறிணை உயர்திணையோடு சென்று விரவிற்றென்று அவற்றின் உண்மைத் தன்மைத் தோற்றங் கூறுவான் ஈண்டுக் கூறினார். இவ்வாறே விளிமரபின்கட் 'கிளந்தவிறுதி யஃறிணை விரவுப்பெயர்' (எழு-கருo) என்புழியும் ஆசிரியர் உயர்திணையோடு அஃறிணை விரவிய விரவுப்பெயரென ஆண்டும் உண்மைத் தன்மைத் தோற்றங்கூறுவர். மாணாக்கன் இனிது உணர்தற்கு இவ்வாறு விரவுப்பெயரினது உண்மைத்தன்மைத் தோற்றம் இரண்டு அதிகாரத்துங்கூறி, அவ்விரவுப்பெயர் வழக்கின்கண் இருதிணைப்பொருளும் உணர்த்தி இருதிணைச் சொல்லாய் நிற்றற்கும் ஒத்த உரிமையவாமெனப் புலப்பட நிற்குமாறு காட்டினாரென்று உணர்க.

இனி, அவை அல்வழிக்கண் இயல்பாய் நிற்குமாறு:—சாத்தன் கொற்றன் சாத்தி கொற்றி என நிறுத்திக் குறியன் சிறியன் தீயன் பெரியன் குறியள் சிறியள் தீயள் பெரியள் எனவும், ஞான்றான் நீண்டான் மாண்டான் யாவன் வலியன் ஞான்றாள் நீண்டாள் மாண்டாள் யாவள் வலியள் எனவும், அடைந்தான் ஔவித்தான் அடைந்தாள் ஔவித்தாள் எனவும் நான்கு கணத்தோடும் ஒட்டி உணர்க. இனி வேற்றுமைக்கட் கை செவி தலை

புறம் எனவும், ஞாற்சி நீட்சி மாட்சி யாப்பு வன்மை அழகு ஒளியம் என்வும் ஒட்டுக. இவற்றுள் ணகாரம் நிற்பத் தகார நகாரம் வந்துழித் திரியும் உதாரணம் ஈண்டுக் கொள்ளற்க. இனிச் சாத்தன்குறிது சாத்திகுறிது என அஃறிணை முடிபேற் பனவுங் கொள்க. இவற்றொடு வினைச்சொல் தலைப்பெய்ய இவை இருதிணைக்கும் உரியவாம். ஆண்டு நாற்பத்தெட்டுச் சூத்திரங் களான் முடிவதனை ஈண்டுத் தொகுத்தார். இஃது உயர்திணைக் கும் ஒக்கும். உம்மையான் இயல்பின்றி முடிவன ணகார ஈற் றுட் காட்டுதும். (கரு)

கருசு. புள்ளி யிறுதியு முயிரிறு கிளவியும்
வல்லெழுத்து மிகுதி சொல்லிய முறையாற்
றம்மி னாகிய தொழிற்சொன் முன்வரின்
மெய்ம்மை யாகலு முறழத் தோன்றலு
மம்முறை யிரண்டு முரியவை யுளவே
வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்.

இது மேல் உயிரீற்றிற்கும் புள்ளியீற்றிற்கும் வேற்றுமைக் கட் கூறும் முடிபு பெறுதுநிற்கும் மூன்றும் வேற்றுமை முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** தம்மினாகிய தொழிற்சொல்—மூன்று வதற்கு உரிய வினைமுதற்பொருளானுளவாகிய தொழிற்சொல், புள்ளியிறுதி முன்னும் உயிரிறுகிளவி முன்னும் வரின்—புள்ளி யீற்றுச்சொன் முன்னரும் உயிரீற்றுச்சொன் முன்னரும் வருமா யின், மெய்ம்மையாகலும் உறழத்தோன்றலும் அம்முறையிரண் டும் உரியவை உள—அவற்றுள் இயல்பாகலும் உறழத்தோன் றலுமாகிய அம்முறை யிரண்டும் பெறுதற்கு உரிய உளவாத லால், வேற்றுமை மருங்கிற் சொல்லிய முறையான் வேண்டும் வல்லெழுத்துமிகுதி—உயிர்மயங்கியலுள்ளும் புள்ளிமயங்கியலுள் ளும் வேற்றுமைப்புணர்ச்சிக்குச் சொல்லிய முறையான் விரும் பும் வல்லெழுத்து மிகுதியை, போற்றல்—ஈண்டுக் கொள்ளற்க என்றவாறு.

மெய்ம்மை பட்டாங்காதலின் இயல்பாம்.

14. பட்டாங்கு—உண்மை. உண்மையாவது விகாரமின்றி இயல் பாய் நிற்றல். ஆதலின் மெய்ம்மை இயல்பு என்றபடி.



**உதாரணம் :** நாய் புலி என நிறுத்திக் கோட்பட்டான் சாரப்பட்டான் தீண்டப்பட்டான் பாயப்பட்டான் என வருவித்து இயல்பாயவாறு காண்க. சூர்கோட்பட்டான் சூர்க்கோட்பட்டான், வளிகோட்பட்டான் வளிக்கோட்பட்டான், சாரப்பட்டான், தீண் டப்பட்டான், பாயப்பட்டான் என இவை உறழ்ந்தன. இவை நாற்பத்தெட்டுச் சூத்திரங்களான் முடிவனவற்றைத் தொகுத்தார்.

புள்ளியிறுதி உயிரிறுகிளவி என்றதனாற் பேஎய்கோட்பட் டான் பேஎய்க்கோட்பட்டான் என எகரப்பேறும் உறழ்ச்சிக் குக் கொடுக்க. அம்முறையிரண்டு முரியவை யுளவே என்றத னாற் பாம்புகோட்பட்டான் பாப்புக்கோட்பட்டான் என்னும் உறழ்ச்சியுள் நிலைமொழியொற்றுத் திரிதலுங் கொள்க. இவ் வீறுகள் நாய்க்கால் தேர்க்கால் கிளிக்கால் என ஆண்டு வேற்று மைக்கண் வல்லெழுத்து மிகுமாறு காண்க. (கசு)

கருஎ. மெல்லெழுத்து மிகுவழி வலிப்பொடு தோன்றலும்
வல்லெழுத்து மிகுவழி மெலிப்பொடு தோன்றலு
மியற்கை மருங்கின் மிகற்கை தோன்றலு
முயிர்மிக வருவழி யுயிர்கெட வருதலுஞ்
சாரியை யுள்வழிச் சாரியை கெடுதலுஞ்
சாரியை யுள்வழித் தன்னுருபு நிலையலுஞ்
சாரியை யியற்கை யுறழத் தோன்றலு
முயர்திணை மருங்கி னொழியாது வருதலு
மஃறிணை விரவுப்பெயர்க் கவ்விய னிலையலு
மெய்பிறி தாகிடத் தியற்கை யாதலு
மன்ன பிறவுந் தன்னியன் மருங்கின்
மெய்பெறக் கிளந்து பொருள்வரைந் திசைக்கு
மைகார வேற்றுமைத் திரிபென மொழிப.

இஃது இரண்டாம் வேற்றுமைத் திரிபு தொகுத்து உணர்த் துகின்றது.

**இதன் பொருள் :** மெல்லெழுத்து மிகுவழி வலிப்பொடு தோன்றலும்—'மரப்பெயர்க் கிளவி மெல்லெழுத்து மிகுமே' (எழு-உகஎ) என்றதனான் விளங்குறைத்தானென மெல்லெழுத்து மிகுமிடத்து விளக்குறைத்தானென வல்லெழுத்துத் தோன்று

தலும், வல்லெழுத்து மிகுவழி மெலிப்பொடு தோன்றலும்—'மகரவிறுதி' (எழு-௩௧௦) என்பதனான் மரக்குறைத்தான் என வல்லெழுத்து மிகுமிடத்து மரங்குறைத்தான் என மெல்லெழுத்துத் தோன்றுதலும், இயற்கை மருங்கின் மிகற்கை தோன்றலும்—'தாயென் கிளவி யியற்கையாகும்' (எழு-௩௫௮) என்ற வழித் தாய்கொலை என இயல்பாய் வருமிடத்துத் தாய்க்கொலை என மிகுதி தோன்றலும், உயிர்மிக வருவழி உயிர்கெட வருதலும்—'குறியதன் முன்னரும்' (எழு-௨௨௯) எனவுங் 'குற்றெழுத்திம்பரும்' (எழு-௨௯௭) எனவும் 'ஏயெனிறுதிக்கு' (எழு-௨௭௭) எனவுங் கூறியவற்றான் உயிர்மிக்கு வருமிடத்துப் பலாக் குறைத்தான் கழுக்கொணர்ந்தான் ஏக்கட்டினான் என உயிர்கெட வருதலும், சாரியை உள்வழிச் சாரியை கெடுதலும்—'வண்டும் பெண்டும்' (எழு-௪௨௦) என்பதனாற் சாரியைப்பேறு உள்ள இடத்து வண்டு கொணர்ந்தான் எனச் சாரியை கெட்டு நிற்றலும், சாரியை உள்வழித் தன்னுருபு நிலையலும்—'வண்டும் பெண்டும்' என்பதனாற் சாரியைப்பேறு உள்ள இடத்து வண்டினைக் கொணர்ந்தான் எனத் தன்னுருபு நிற்றலும் (இதற்கு வல்லெழுத்துப்பேறு ஈற்றுவகையாற் கொள்க), சாரியை இயற்கை உறழத் தோன்றலும்—'புளிமரக்கிளவிக்கு' (எழு-௨௪௪) எனவும் 'பனையுமரையும்' (எழு-௨௮௩) எனவும் 'பூல்வேலென்றா' (எழு-௩௭௫) எனவும் பெற்ற சாரியை பெறாது இயல்பாய்நின்று புளிகுறைத்தான் புளிக்குறைத்தான் பனைதடிந்தான் பனைத்தடிந்தான் பூல்குறைத்தான் பூற்குறைத்தான் என மிக்குந் திரிந்தும் உறழ்ச்சியாகத் தோன்றலும், உயர்திணை மருங்கின் ஒழியாது வருதலும் — 'உயிரீறாகிய வுயர்திணைப் பெயரும்' (எழு-௧௫௩) என்பதனான் வேற்றுமைக்கண் இயல்பாய் வருமென்றவை நம்பியைக் கொணர்ந்தான் நங்கையைக் கொணர்ந்தான் என்றவழி இரண்டனுருபு தொகாதே நிற்றலும், (ஒழியாதென்றதனான் மகற் பெற்றான் மகட் பெற்றான் எனவும் ஆடுஉவறிசொல் 'மழுவரோட்டிய' 'அவர்க்கண் டெம்முள்' எனவும் ஒழிந்தும் வருமென்று கொள்க.) அஃறிணை விரவுப் பெயர்க்கு அவ்வியல் நிலையலும்—உயர்திணையோடு அஃறிணை விரவும் பெயர்க்குக் கொற்றனைக் கொணர்ந்தானென உருபு தொகாதே நிற்றலும், (அவ்வியல் நிலையலும் என்றதனானே மகப்பெற்றேனென விரவுப் பெயர்க்கண்ணுந் தொகுதல்



கொள்க. உருபியலுட் 'தேருங்காலை' (எழு-௨௦௨) என்ற இலேசான் இதற்கும் முன்னையதற்கும் வல்லெழுத்துப் பேறுங் கொள்க.) மெய்பிறிதாகிடத்து இயற்கையாதலும்—புள்ளி மயங்கியலுள் ணகார னகார இறுதி வல்லெழுத்தியையின் மெய்பிறிதாமென்ற இடத்து மெய்பிறிதாகாது மண் கொணர்ந்தான் பொன் கொணர்ந்தான் என இயற்கையாய் வருதலும், அன்ன பிறவும்—அவைபோல்வன பிறவும், (அவை 'எக்கண்டு பெயருங் காலை யாழநின் கற்கெழு சிறுகுடி' எனவும் 'நப்புணர்வில்லா நயனில்லோர் நட்பு' எனவும் வருவழி எக்கண்டு நப்புணர்வு என்னுந் தொடக்கங்குறுகும் உயர்திணைப் பெயர்கள் மெல்லெழுத்துப் பெறுதற்கு உரியன வல்லெழுத்துப் பெறுதல் கொள்க. இன்னுந் தினைபிளந்தான் மயிர்குறைத்தான் தற்கொண்டான் செறுத்தான் புகழ்ந்தான் என வரும்) தன் இயல்மருங்கின்—தன்னையே நோக்கித் திரிபு நடக்குமிடத்து, மெய்பெறக் கிளந்து பொருள்வரைந்து இசைக்கும்—பொருள்பெற எடுத்தோதப்பட்டு ஏனை வேற்றுமைப் பொருட் புணர்ச்சியது பொது முடிபினைத் தான் நீக்கி வேறு முடிபிற்றாய் நின்று ஒலிக்கும், ஐகார வேற்றுமைத் திரிபென மொழிப—இரண்டாம் வேற்றுமையது வேறுபட்ட புணர்ச்சி என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

மெய்பெற என்றதனானே சாரியையுள்வழித் தன்னுருபு நிலையாது செய்யுட்கண் வருவனவும் பிறவற்றின்கண் உறழ்ந்து முடிவனவுங் கொள்க. 'மறங்கடிந்த வருங்கற்பின்' எனவும் 'சில்சொல்லிற் பல்கூந்தல்' (புறம்-௧௯௯) எனவும் 'ஆயிருதிணையி னிசைக்குமன்' எனவும் பிறாண்டும் பெரும்பான்மையும் வருமென்று கொள்க. மைகொணர்ந்தான் மைக்கொணர்ந்தான் வில்கோள் விற்கோள் என வரும். இனி, இவ்வாறு திரியாது அகத்தோத்திற் கூறிய பொதுமுடிபே தமக்கு முடிபாக வருவனவுங் கொள்க. அவை கடுக்குறைத்தான் செப்புக்கொணர்ந்தான் என்றாற்போல்வன. 'தம்மினாகிய தொழிற்சொன் முன்வரின்' (எழு-௧௫௯) என்ற அதிகாரத்தான் வினைவந்துழியே இங்ஙனம் பெரும்பான்மை திரிவதென்று உணர்க. இனித் தன்னினமுடித்தலென்பதனான் ஏழாவதற்கும் வினையோடு முடிவுழித் திரிதல் கொள்க. அது 'வரைபாய் வருடை' 'புலம்புக்கனனே புல்லணற்காளை' (புறம்-௨௫௮) என்றாற்போல வரும். (௧௫)

கருஅ. வேற்றுமை யல்வழி இஐ என்னு
மீற்றுப்பெயர்க் கிளவி மூவகை நிலைய
வவைதா
மியல்பா குநவும் வல்லெழுத்து மிகுநவு
முறழா குநவு மென்மனார் புலவர்.

இஃது இகர ஈற்றுப்பெயர்க்கும் ஐகார ஈற்றுப்பெயர்க்கும் அல்வழி முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** வேற்றுமை யல்வழி—வேற்றுமையல்லா இடத்து, இ ஐ என்னும் ஈற்றுப்பெயர்க்கிளவி மூவகை நிலைய—இ ஐ என்னும் ஈற்றையுடைய பெயர்ச்சொற்கள் மூவகையாகிய முடிபுநிலையையுடைய, அவை தாம்—அம்முடிபுகடாம், இயல்பாகுநவும்—இயல்பாய் முடிவனவும், வல்லெழுத்து மிகுநவும்—வல்லெழுத்து மிக்கு முடிவனவும், உறழாகுநவும்—உறழ்ச்சியாய் முடிவனவும், என்மனார் புலவர்—என இவையென்று கூறுவர் புலவர் என்றவாறு.

**உதாரணம் :** பருத்திகுறிது காரைகுறிது சிறிது தீது பெரிது என இவை இயல்பு. மாசித்திங்கள் சித்திரைத்திங்கள் அலிக்கொற்றன் புலைக்கொற்றன் காவிக்கண் குவளைக்கண் என இவை மிகுதி. கிளிகுறிது கிளிக்குறிது தினைகுறிது தினைக்குறிது என இவை உறழ்ச்சி.

பெயர்க்கிளவி மூவகைநிலைய வெனவே பெயரல்லாத இரண்டீற்று வினைச்சொல்லும் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் இயல்பும் மிகுதியுமாகிய இருவகை நிலையவாம். ஒல்லைக்கொண்டான் என்பது ஐகார ஈற்று வினைச்சொன் மிகுதி. 'இனி யணி' (எழு-உகக) யென்பதன்கண் இகர ஈற்று வினையெச்சம் எடுத்தோதுப. இவற்றிற்கு இயல்புவந்துழிக் காண்க. 'சென்மதி பாக' இஃது இகர ஈற்று இடைச்சொல்லியல்பு. மிகுதி வந்துழிக் காண்க. 'தில்லைச் சொல்லே' இஃது ஐகார ஈற்று இடைச்சொன் மிகுதி. இயல்பு வந்துழிக் காண்க. 'கடிகா' இஃது இகர ஈற்று உரிச்சொல்லியல்பு மிகுதி வந்துழிக் காண்க. பணைத்தோள் இஃது ஐகார ஈற்று உரிச்சொன்மிகுதி. இயல்பு வந்துழிக் காண்க. (கரு)



கருகூ. சுட்டுமுத லாகிய விகர விறுதியு
மெகரமுதல் வினாவி னிகர விறுதியுஞ்
சுட்டுச்சினை நீடிய வையெ னிறுதியும்
யாவென் வினாவி னையெ னிறுதியும்
வல்லெழுத்து மிகுநவு முறழா குநவுஞ்
சொல்லியன் மருங்கி னுளவென மொழிப.

இஃது ஏழாம்வேற்றுமை இடப்பொருளுணர்த்தி நின்ற இகர ஐகார ஈற்று இடைச்சொன் முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** சொல்லியல் மருங்கின்—இகர ஐகாரங்கட்கு முன்னர்க் கூறிய மூவகை யிலக்கணங்களுள் இயல்பை நீக்கி, சுட்டு முதலாகிய இகர இறுதியும்—சுட்டெழுத்தினை முதலாகவுடைய அவ்விகர ஈற்று இடைச்சொல்லும், எகர வினாவின் முதல் இகர இறுதியும்—எகரமாகிய வினாவினை முதலாகவுடைய அவ்விகர ஈற்று இடைச்சொல்லும், சுட்டுச்சினை நீடிய ஐயென் இறுதியும்—சுட்டாகிய உறுப்பெழுத்து நீண்ட அவ்வைகார ஈற்று இடைச்சொல்லும், யாவென் வினாவின் ஐயென் இறுதியும்—யாவென் வினாவினை முதற்கணுடைய அவ்வைகார ஈற்று இடைச்சொல்லும், வல்லெழுத்து மிகுநவும்—வல்லெழுத்து மிக்கு முடிவனவும், உறழாகுநவும்—உறழ்ச்சியாய் முடிவனவும், உளவென மொழிப—உளவென்று கூறுவர் புலவர் என்றவாறு.

**உதாரணம் :** அதோளிக்கொண்டான் இதோளிக்கொண்டான் உதோளிக்கொண்டான் எதோளிக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் எனவும், ஆண்டைக்கொண்டான் ஈண்டைக்கொண்டான் ஊண்டைக்கொண்டான் யாண்டைக்கொண்டான் எனவும் இவை மிக்கன. அதோளி அவ்விடமென்னும் பொருட்டு. அவ்வழிகொண்டான் அவ்வழிக்கொண்டான் இவ்வழிகொண்டான் இவ்வழிக்கொண்டான் உவ்வழிகொண்டான் உவ்வழிக்கொண்டான் எவ்வழிகொண்டான் எவ்வழிக்கொண்டான் என உறழ்ந்தன. சுட்டுச்சினை நீண்டதற்கும் யாவினாவிற்கும் வரும் ஐகார ஈற்றுக்கு உதாரணம் அக்காலத்து

17. ஆங்கவை—அங்கவை என்பதன் திரிபுபோலும்.

ஆயிடைகொண்டான் ஆயிடைக்கொண்டான் என்றாற்போல ஏனையவற்றிற்கும் வழங்கிற்றுப்போலும். இனி, ஆங்கவை கொண்டான் ஆங்கவைக்கொண்டான் என்பன காட்டுவாரும் உளர். அவை திரிபுடையனவாம். சொல்லியல் என்றதனானே பிற ஐகார ஈறு மிக்கு முடிவன கொள்க. அன்றைக்கூத்தர் பண்டைச்சான்றோ ரெனவும் ஒருதிங்களைக்குழவி ஒருநாளைக்குழவி எனவும் வரும். (௧௭)

௧௯௦. நெடியதன் முன்ன ரொற்றுமெய் கெடுதலுங்
குறியதன் முன்னர்த் தன்னுரு விரட்டலு
மறியத் தோன்றிய நெறியிய லென்ப.

இது புள்ளிமயங்கியலை நோக்கியதோர் நிலைமொழிக் கருவி கூறுகின்றது.

**இதன் பொருள்:** நெடியதன்முன்னர் ஒற்று மெய்கெடுதலும்—நெட்டெழுத்தின்முன் நின்ற ஒற்றுத் தன்வடிவு கெடுதலும், குறியதன் முன்னர்த் தன் உரு இரட்டலும்—குற்றெழுத்தின் முன் நின்ற ஒற்றுத் தன்வடிவு இரட்டித்தலும், அறியத்தோன்றிய நெறியியல் என்ப—அறியும்படி வந்த அடிப்பாட்டியலென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

இங்ஙனம் நெடியதன்முன்னர் ஒற்றுக்கெடுவன ணகாரமும் னகாரமும் மகாரமும் லகாரமும் ளகாரமும் என ஐவகையவாம்.

**உதாரணம்:** கோணிமிர்ந்தது தானல்லன் தாநல்லர் வேனன்று தோணன்று என நகரம் வருமொழியாதற்கண் நெடியதன்முன்னர் ஒற்றுக்கெட்டது. கோறீது வேறீது எனத் தகரம் வருமொழியாதற்கண் லகாரவொற்றுக் கெட்டது. ஏனைய வந்துழிக் காண்க. இவற்றை 'லனவெனவரூஉம்' (எழு—௧௪௧) 'ணளவென்புள்ளிமுன்' (எழு—௧௫௦) என்பனவற்றான் முடித்துக் கெடுமாறு காண்க. ஒற்றிரட்டுவன ஞகார நகார ழகாரம் ஒழிந்தன. கண்ணழகிது பொன்னகல் தம்மாடை சொல்லழகிது எள்ளழகிது நெய்யகல் தெவ்வலன் எனக் குறியதன் முன்னர்த் தன்னுரு இரட்டின.

மேலைச் சூத்திரத்து நான்கனுருபு பிற்கூறியவதனான் ஒற்றிரட்டுதல் உயிர்முதன்மொழிக்கண்ணதென்று உணர்க. குறியது பிற்கூறிய முறையன்றிக் கூற்றினால் தம்மை எம்மை நின்னை என நெடியன குறுகிநின்ற வழியுங் குறியதன்முன்னரொற்றாய் இரட்டுதலும், விரனன்று குறணிமிர்ந்தது எனக் குறிலிணையின்முன்னர் வந்த ஒற்றுக் கெடுதலும், வராறீது நன்று எனக் குறிநெடிற்கணின்ற ஒற்றுக் கெடுதலும், அதுகொலொழி எனவுங் குரிசிறீயன் எனவுந் தொடர்மொழியீற்றுநின்ற ஒற்றுக்கெடுதலும் இடைச்சொல்லோடு ஒட்டுப்பட்டுநிற்றலுங், காற்றீது எனவும் விரற்றீது எனவும் ஒற்றுநிற்றலுங் கொள்க. இனி அறிய என்றதனாற் தேன்றீது நாண்டீது என்றாற்போல்வன கெடாமைநிற்றலுங், கெடுதலுந் தகரநகரங்கள் வந்துழியென்பதூஉங் கொள்க. நெறியியலென்றதனாற் சுட்டின்முன் உயிர்முதன்மொழி வந்துழி அவ்வடை அவ்வாடை என இடை வகரவொற்று இல்வழியும் இரட்டுதல் கொள்க. (௧௮)



௧௯௧. ஆற னுருபினு நான்க னுருபினுங்
கூறிய குற்றொற் றிரட்ட லில்லை
யீறாகு புள்ளி யகரமொடு நிலையு
நெடுமுதல் குறுகு மொழிமுன் னான.

இஃது உருபியலை நோக்கியதோர் நிலைமொழிக்கருவி கூறுகின்றது.

**இதன் பொருள்:** நெடுமுதல் குறுகும் மொழிமுன் ஆன—நெடிதாகிய முதலெழுத்துக் குறுகிமுடியும் அறுவகைப்பட்ட மொழிகளின் முன்னர் வந்த, ஆறனுருபினும் நான்கனுருபினும்—ஆறாம் வேற்றுமைக்கண்ணும் நான்காம் வேற்றுமைக்கண்ணும், கூறிய குற்றொற்று இரட்டலில்லை—முன்னர் நிலைமொழிக்கு இரட்டுமென்ற குற்றொற்று இரட்டிவருதலில்லை, ஈறாகு புள்ளி அகரமொடு நிலையும்—நிலைமொழியீற்றுக்கண் நின்ற ஒற்றுக்கள் அகரம்பெற்று நிற்கும் என்றவாறு.

18. இடைச்சொல்லோடு ஒட்டுப்பட்டுநிற்றலும் என்ற வாக்கியம் ஈண்டுப் பொருத்தமாகக் காணவில்லை. அதுகொல் என்பதைத் தொடர்மொழி என்றமையால் அதற்கேற்ப இடைச்சொல்லோடு ஒட்டுப்பட்டு நின்றது என்று கூறியிருக்கலாம்.

உருபியலில் 'நீயெனொருபெயர்' (எழு—௩௯) எனவுந் 'தாம் நாமென்னும்' (எழு-௧௮௮) எனவுந், 'தான் யானென்னும்' (எழு—௧௧௨) எனவுங் கூறியவற்றாற் குறுகி ஒற்றிரட்டித் தம்மை நம்மை எம்மை தன்னை நின்னை என்னை என வருவன இதனானே தமது நமது எமது தனது நினது எனது எனவும், தமக்கு நமக்கு எமக்கு தனக்கு நினக்கு எனக்கு எனவும் ஒற்றிரட்டாது அகரம்பெற்றுவந்தன. நான் காவதற்கு ஒற்றுமிகுதல் 'வல்லெழுத்து முதலிய' (எழு—௧௧௪) என்பதனாற் கொள்க. ஆறனுருபாகிய அகரம் ஏறிமுடியாமைக் குக் காரணம் 'ஆறனுருபினகரக்கிளவி' (எழு—௧௧௫) என்புழிக் கூறினும். ஒற்றிரட்டாமையும் அகரப்பேறும் இரண்டற்கும் ஒத்தவிதியென்று உணர்க. கூறியவென்றதனான் நெடுமுதல் குறுகாத தம் நம் நும் என வருஞ் சாரியைகட்கும் இவ்விரு விதி யுங் கொள்க. எல்லார்தமக்கும் எல்லாநமக்கும் எல்லீர் நுமக்கும் எல்லார்தமதும் எல்லாநமதும் எல்லீர்நுமதும் என வரும். (௧௯)

௧௯௨. நும்மெ னிறுதியு மந்நிலை திரியாது.

இது நெடுமுதல்குறுகாத நும்மென்கின்றதும் அவ்விதி பெறுமென்கின்றது.

**இதன் பொருள் :** நும்மென் இறுதியும்—நெடுமுதல்குறுகா நும்மென்னும் மகரவீறும், அந்நிலை திரியாது—முற்கூறிய குற்றொற்று இரட்டாமையும் ஈற்றுப்புள்ளி அகரமொடு நிலைய லும் எய்தும் என்றவாறு.

**உதாரணம் :** நுமது நுமக்கு என வரும். (௨௦)

௧௯௩. உகரமொடு புணரும் புள்ளி யிறுதி
யகரமு முயிரும் வருவழி யியற்கை.

இது புள்ளிமயங்கியலை நோக்கியதோர் நிலைமொழிச்செய்கை கூறுகின்றது.

**இதன் பொருள் :** உகரமொடு புணரும் புள்ளியிறுதி—உகரப்பேற்றோடு புணரும் புள்ளியீறுகள், யகரமும் உயிரும்

19. இரண்டற்கும் = ஆறனுருபிற்கும் நான்கனுருபிற்கும்.



வருவழி இயற்கை—யகரமும் உயிரும் வருமொழியாய் வரு மிடத்து அவ்வுகரம் பெறாது இயல்பாய் முடியும் என்றவாறு.

அவ்வீறுகளாவன புள்ளிமயங்கியலுள் உகரம்பெறுமென்று விதிக்கும் பல ஈறுகளுமென்று கொள்க. உரிஞ் யாறு அனந்தா ஆதா இகலா ஈந்தா உழுந்தா ஊரா எயினு ஏறு ஐயா ஒழுக்கா ஓதா ஔவியா எனவும், உரிஞ்யாது அழகு எனவும் ஒட்டுக. ஏனைப் புள்ளிகளோடும் ஏற்பன அறிந்து ஒட்டுக.

'ஞகாரையொற்றிய' (எழு—௨௯௯) என்பதனும் 'ஞநமவ வியையினும்' (எழு—௨௩) என்பதனும் யகரமும் உயிரும் வந்தால் உகரம்பெறாது இயல்பாமென்பது பெறுதலின் ஈண்டு விலக்கல் வேண்டாவெனின், எடுத்தோத்தில் வழியதே உய்த் துணர்ச்சியென்று கொள்க.

இது முதலாக அல்வழி கூறுகின்றார். (௨௧)

௧௯௪. உயிரும் புள்ளியு மிறுதி யாகி
யளவு நிறையு மெண்ணுஞ் சுட்டி
யுளவெனப் பட்ட வெல்லாச் சொல்லுந்
தத்தங் கிளவி தம்மகப் பட்ட
முத்தை வரூஉங் காலந் தோன்றி
னொத்த தென்ப வேயென் சாரியை.

இஃது அளவும் நிறையும் எண்ணுமாகிய பெயர்கள் தம் மிற் புணருமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** உயிரும் புள்ளியும் இறுதியாகி—உயிரும் புள்ளியுந் தமக்கு ஈறாய், அளவும் நிறையும் எண்ணுஞ் சுட்டி உளவெனப்பட்ட எல்லாச்சொல்லும்—அளவையும் நிறையையும் எண்ணையுங் கருதி வருவனவுளவென்று ஆசிரியர் கூறப்பட்ட எல்லாச்சொற்களும், தத்தங் கிளவி தம்மகப்பட்ட—தத்தமக்கு இனமாகிய சொற்களாய்த் தம்மிற் குறைந்த சொற்கள், முத்தை வரூஉங் காலந்தோன்றின்—தம்முன்னே வருங்காலந் தோன்று மாயின், ஏயென் சாரியை ஒத்தது என்ப—தாம் ஏயென்சாரியை பெற்று முடிதலைப் பொருந்திற்றென்பார் ஆசிரியர் என்றவாறு.

முந்தை முத்தையென விகாரம்.

நாழி+ ஆழாக்கு

நாழியேயாழாக்கு உழக்கேயாழாக்கு கலனேபதக்கு என அளவுப்பெயர் ஏகாரம்பெற்றுத் தம்முன்னர்த் தம்மிற் குறைந்தன வந்தன. தொடியேகஃசு கழஞ்சேகுன்றி கொள்ளேயையவிஎ என நிறைப்பெயர் ஏகாரம் பெற்றுத் தம்முன்னர்த் தம்மிற் குறைந்தன வந்தன. ஒன்றேகால் காலேகாணி காணியேமுந்திரிகை என எண்ணுப்பெயர் ஏகாரம்பெற்றுத் தம்முன்னர்த் தம்மிற் குறைந்தன வந்தன. அதிகாரம்பட்ட புள்ளியீறு முற்கூறுததனனே குறுணிநானாழி ஐங்நாழியுழக்கு என ஏகாரமின்றி வருவனவுங் கொள்க. (உஉ)

கசுரு. அரையென வரூஉம் பால்வரை கிளவிக்குப்
ல்ல புரைவ தன்றாற் சாரியை யியற்கை.

இஃது எய்தியது விலக்கிற்று.

**இதன் பொருள்:** அரையெனவரூஉம் பால்வரைகிளவிக்கு—அம்மூவகைச்சொன் முன்னர் வரும் அரையென்று சொல்ல வருகின்ற பொருட்கூற்றை உணரநின்ற சொல்லிற்கு, சாரியையியற்கை புரைவதன்று—ஏயென்சாரியை பெறுந்தன்மை பொருந்துவதன்று என்றவாறு.

ஆல் அசை.

**உதாரணம்:** உழக்கரை செவிட்டரை மூவுழக்கரை எனவும், கஃசரை கழஞ்சரை தொடியரை கொள்ளரை எனவும், ஒன்றரை பத்தரை எனவும் இவை ஏயென்சாரியை பெறுவாய் வந்தன. புரைவதன்றென்றதனற் கலவரையென்பதனை ஒற்றுக் கெடுத்துச் செய்கைசெய்து முடிக்க. இதனனே செவிட்டரையென்புழி டகரவொற்று மிகுதலுங் கொள்க. 'ஒட்டுதற் கொழுகிய வழக்கு' (எழு-கஙஉ) அன்மையிற் சாரியை பெறுவாயினவென்றாலோவெனின் அவை பெற்றும் பெறுதும் வருவனவற்றிற்குக் கூறியதாகலானும் இது 'தம்மகப்பட்ட' (எழு-கசுச) என வரைந்தோதினமையானும் விலக்கல் வேண்டிற்று. (உங)

23. செவிட்டரை என்பது—' தம்மகப்பட்ட முத்தை வருங்காலந் தோன்றின் ஒத்ததென்ப......ஏயென்சாரியை' என்பதனுல் செவிட்டேயரை என் ஏ என்சாரியை பெற்று வரவேண்டும். அங்ஙனம் பெறவேண்டிய இடத்துப் பெருது செவிட்டரை என நிற்றலின், இதற்கு இச்சூத்திர விதி வேண்டியதாயிற்று. பெருமல் வருவனவற்றிற்கே ஒட்டுதற்கொழுகிய வழக்கன்று என்னும் விதி கொள்ளப்படும். ஆதலின் இது அதனற் கொள்ளப்படாதென்க.



கசுசு. குறையென் கிளவி முன்வரு காலை
நிறையத் தோன்றும் வேற்றுமை யியற்கை.

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது, ஏயென்சாரியை விலக்கி வேற்றுமை முடிபினேடு மாட்டெறிதலின்.

**இதன் பொருள்:** குறையென் கிளவி முன்வருகாலை—குறையென்னுஞ்சொல் அளவுப்பெயர் முதலியவற்றின்முன் வருங்காலத்திற்கு, வேற்றுமையியற்கை—வேற்றுமைப்புணர்ச்சி முடிபிற்கு உரித்தாகக் கூறுந்தன்மை நிறையத்தோன்றும்—நிரம்பத்தோன்றும் என்றவாறு.

**உதாரணம்:** + உரிக்குறை கலக்குறை எனவும், தொடிக்குறை கொட்குறை எனவும், காணிக்குறை காற்குறை எனவும் வரும். உரியநெல்லுங் குறைநெல்லு மென்க.

வேற்றுமையியற்கையெனவே இவை வேற்றுமையன்ருயின. எனவே உரிக்குறையென்பதற்கு உரியும் உழக்குமெனப் பொருளாயிற்று. ஏனையவும் அன்ன.

முன்வருகாலை யென்றதனனே கலப்பயறு கலப்பாகு என்றாற்போலப் பொருட்பெயரோடு புணரும்வழியும் இவ்வேற்றுமை முடிபு எய்துவிக்க. பாகென்றது பாக்கினை. நிறையவென்றதனனே உரிக்கூறு தொடிக்கூறு காணிக்கூறு எனக் கூறென்றதற்கும் இம்முடிபு எய்துவிக்க. (உச)

கசுஎ. குற்றிய லுகரக் கின்னே சாரியை.

இது வேற்றுமைமுடிபு விலக்கி இன் வருத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறுகின்றது.

**இதன் பொருள்:** குற்றியலுகரக்குச் சாரியை—குற்றியலுகர ஈற்று அளவுப்பெயர் முதலியவற்றிற்குக் குறையென்பதனேடு புணரும்வழி வருஞ் சாரியை, இன்னே—இன்சாரியையேயாம் என்றவாறு.

24. பாகு என்றது பாக்கினை என்ருர். 'குற்றபாகு கொழிப்பவர்' என்பதுபோன்ற இலக்கிய வழக்கு நோக்கி.

குற்றியலுகரக்கு, இதற்கு அத்து விதித்து முடிக்க. குற்றியலுகரத்தினேயென்பதும் பாடம்.

உழக்கின்குறை ஆழாக்கின்குறை எனவும், கழஞ்சின்குறை கஃசின்குறை எனவும், ஒன்றின்குறை பத்தின்குறை எனவும் வரும். இதற்கு உழக்குங்குறையுமென்பது பொருள். இது வேற்றுமைக்கண்ணுயின் உழக்கிற்குறையென நிற்கும். (உரு)

கசுஅ. அத்திடை வரூஉங் கலமெ னளவே.

இதுவும் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது, வேற்றுமைவிதி விலக்கி அத்து வகுத்தலின்.

**இதன் பொருள்:** கலமென் அளவே—கலமென்னும் அளவுப்பெயர் குறையோடு புணருமிடத்து, அத்து இடைவரூஉம்—அத்துச் சாரியை இடைவந்து புணரும் என்றவாறு.

கலத்துக்குறை. இதனை 'அத்தேவற்றே' (எழு-கஙங) என்பதனுன் முடிக்க. இதற்குக் கலமுங் குறையுமென்பது பொருள். சாரியை முற்கூறியவதனுனே முன் இன்சாரியை பெற்றவழி வல்லெழுத்து வீழ்க்க. (உசு)

கசுகூ. பனையெ னளவுங் காவெ னிறையு
நினையுங் காலை யின்னெடு சிவணும்.

இதுவும் அது, வேற்றுமைவிதி விலக்கி இன் வகுத்தலின்.

**இதன் பொருள்:** பனையென் அளவுங் காவென் நிறையும்—பனையென்னும் அளவுப்பெயருங் காவென்னும் நிறைப்பெயருங் குறையென்பதனேடு புணருமிடத்து, நினையுங்காலை இன்னெடு சிவணும்—ஆராயுங்காலத்து இன்சாரியை பெற்றுப் புணரும் என்றவாறு.

பனையின்குறை காவின்குறை எனவரும். இவையும் உம்மைத்தொகை. நினையுங்காலை யென்பதனுன் வேற்றுமைக்கு உரிய விதியெய்தி வல்லெழுத்துப் பெறுதலுஞ் சிறுபான்மை கொள்க. பனைக்குறை காக்குறை என வரும்.



இத்துணையும் அல்வழிமுடிபு. இவற்றை 'வேற்றுமை அல்வழி இஐ" (எழு-கருஅ) என்னுஞ் சூத்திரத்திற் கூருது வேருேதினுர், இவை அளவும் நிறையும் எண்ணுமாதலின். (உஎ)

கஎ௦. அளவிற்கு நிறையிற்கு மொழிமுத லாகி
யுளவெனப் பட்ட வொன்பதிற் றெழுத்தே
யவைதாங்
கசதப வென்ரு நமவ வென்ரு
வகர வுகரமோ டவையென மொழிப.

இது முற்கூறிய மூன்றனுள் அளவிற்கும் நிறைக்கும் மொழிக்கு முதலாமெழுத்து இனைத்தென்கின்றது.

**இதன் பொருள்:** அளவிற்கும் நிறையிற்கும் மொழிமுதலாகி உளவெனப்பட்ட ஒன்பதிற்றெழுத்தே—அளவுப்பெயர்க்கும் நிறைப்பெயர்க்கும் மொழிக்கு முதலாயுள்ளவென்று கூறப்பட்டன ஒன்பதெழுத்துக்கள், அவைதாங் கசதப என்ரு நமவ என்ரு அகரவுகரமோடு அவையென மொழிப—அவ்வெழுத்துக்கள் தாங் கசதபக்களும் நமவக்களும் அகர உகரமாகிய அவையென்று கூறுவர் புலவர் என்றவாறு.

**உதாரணம்:** கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு இவை அளவு. கழஞ்சு சீரகம் தொடி பலம் நிறை மா வரை அந்தை இவை நிறை. நிறைக்கு உகரமுதற்பெயர் வந்துழிக் காண்க. இனி உளவெனப்பட்ட என்றதனுனே உளவெனப்படாதனவும் உள. அவை இம்மி ஓரடை இடா என வரையறை கூருதனவுங் கொள்க. இன்னும் இதனுனே தேய வழக்காய் ஒருஞார் ஒருதுவலி என்பனவுங் கொள்க. இங்ஙனம் வரையறை கூறினுர், அகத்தோத்தினுள் முடிபுகூறியவழி அதிகாரத்தான் வன்கணத்தின்மேற் செல்லாது ஒழிந்தகணத்தினுஞ் செல்லுமென்றற்கு. எண்ணுப்பெயர் வரையறையின்மையிற் கூருராயினுர். (உஅ)

28. இங்ஙனம் வரையறை கூறினுர் அகத்தோத்தினுள் முடிவு கூறியவழி அதிகாரத்தான் வன்கணத்தின்மேற் செல்லாது ஒழிந்த கணத்தினுஞ் செல்லுமென்றற்கு என்பதற்கு, "அளவும் நிறையும்" என எடுத்துக் கூறுஞ் சூத்திரங்களுள், வன்கணத்தின் மாத்திரம் செல்லாமல் ஏனைய கணத்தினும் அச் சூத்திரவிதி செல்லுமென்றற்கு என்பது கருத்து.

கஎக. ஈறியன் மருங்கி னிவையிவற் றியல்பெனக்
கூறிய கிளவிப் பல்லா றெல்லா
மெய்த்தலைப் பட்ட வழக்கொடு சிவணி
யொத்தவை யுரிய புணர்மொழி நிலையே.

இஃது இவ்வோத்திற்குப் புறனடை; எடுத்தோத்தானும் இலேசானும் முடியாதனவற்றிற்கு இதுவே ஓத்தாகலின்.

**இதன் பொருள் :** ஈறு இயல் மருங்கின்—உயிரும் புள்ளியும் இறுதியாகிய சொற்கள் வருமொழியோடு கூடி நடக்குமிடத்து, இவற்று இயல்பு இவையெனக் கூறிய கிளவிப் பல்லாறெல்லாம்—இம்மொழிகளின் முடிபு இவையெனக்கூறி முடிக்கப்பட்ட சொற்களினது அவ்வாற்றான் முடியாதுநின்ற பலவகை முடிபுகளெல்லாம், மெய்த்தலைப்பட்ட வழக்கொடு சிவணி—உண்மையைத் தலைப்பட்ட வழக்கோடு கூடி, புணர்மொழிநிலை ஒத்தவை உரிய—புணரும் மொழிகளின் நிலைமைக்கட் பொருந்தினவை உரியவாம் என்றவாறு.

**உதாரணம் :** நடஞெள்ளா என உயிரீறுகிய முன்னிலைக் கிளவி மென்கணத்தோடு இயல்பாய் முடிந்தது. மண்ணுகொற்றா மண்ணுக்கொற்றா மன்னுகொற்றா மன்னுக்கொற்றா உள்ளுகொற்றா உள்ளுக்கொற்றா கொல்லுகொற்றா கொல்லுக்கொற்றா என்பன புள்ளியிறுதி முன்னிலைக்கிளவி உகரம்பெற்றும் உறழ்ந்தும் முடிந்தன. உரிஞுஞெள்ளா இஃது 'ஔவெனவரூஉம்' (எழு-கருஉ) என்பதன் ஒழிபு. பதக்கநாழுழி பதக்கமுந்நாழி என இவை ஏயென்சாரியை பெறாது அக்குப்பெற்று அதன் இறுதி மெய்ம்மிசையொடுங் கெட்டுப் புணர்ந்தன. வாட்டானை தோற்றண்டை என்பன தகரம் வந்துழித் திரிந்து நெடியதன் முன்னர் ஒற்றுக்கெடாது நின்றன. சீரகரை என்பதனைச் சீரகம் அரை யென நிறுத்திக் ககரவொற்றின் மேலேறின அகரத்தையும் மகரவொற்றையுங் கெடுத்து அரையென்பதன் அகரத்தையேற்றி முடிக்க. இது நிறைப் பெயர். ஒருமா வரை யென்பதனை ஒருமா அரையென நிறுத்தி வருமொழி அகரங்கெடுத்து ஒருமாரை என முடிக்க. கலவரை யென்பதனைக் கலரை என முடிக்க. அகர மகரங் கெடுத்து நாகணை யெனப் பிறவும் வருவன வெல்லாம் இச்சூத்திரத்தான் முடிக்க. (உகூ)

---

29. நாகம் என்பதன் அகரமகரங் கெடுத்து என்க.



கஎ௨. பலரறி சொன்முன் யாவ ரென்னும்
பெயரிடை வகரங் கெடுதலு மேனை
யொன்றறி சொன்முன் யாதென் வினாவிடை
யொன்றிய வகரம் வருதலு மிரண்டு
மருவின் பாத்தியிற் றிரியுமன் பயின்றே.

இது மரூஉச்சொன் முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** பலரறி சொன்முன் யாவ ரென்னும் பெயரிடை வகரங் கெடுதலும்—பலரை யறியும் அவரென்னுஞ் சொல்லின் முன்னர் வருகின்ற யாவரென்னும் பெயர் இடையில் வகரங்கெடுதலும், ஏனை ஒன்றறி சொன்முன் யாதென் வினா இடையொன்றிய வகரம் வருதலும்—ஒழிந்த ஒன்றனை அறியும் அதுவென்னுஞ் சொல்லின்முன்னர் வருகின்ற யாதென்னும் வினாச்சொல் இடையிலே உயிரோடு பொருந்திய வகரம் வருதலும், இரண்டும்—ஆகிய அவையிரண்டும், மருவின் பாத்தியின் மன் பயின்று திரியும்—மருமுடியின் பகுதியிடத்து மிகவும் பயின்று திரியும் என்றவாறு.

**உதாரணம் :** அவர்யார் எனவும் அதுயாது எனவும் வரும். அவர் யாவரென்பது வகரங்கெட்டு அவர்யாரென நின்றவழி 'யாஅ ரென்னும் வினாவின் கிளவி' (சொ - உக௦) என்று வினையியலுட் கூறும் வினைக்குறிப்புச் சொல்லாம் பிறவெனின், ஆகாது ; அவ்வகரங் கெட்டாலும் ஈண்டு யாவரென்னும் பெயர்த்தன்மையாயே நிற்றலின். அது பெற்றவாறென்னையெனின், ஈண்டுப் பலரறி சொன்முன் வந்த யாவரென்பதன் வகரங் கெடுமெனவே, ஏனை அவன் அவள் என்னும் இருபான் முன்னும் யாவரென்பது வாராதென்றும் அது திரிந்து மருவாய் நிற்குமென்றுங் கூறுதலானும் 'யாவரென்னும் பெயரிடை' என்பதனானும் பெற்றாம். இதனானே அவன்யாவர் அவள்யாவர் என்றாற், பால்வழுவாமென்பது பெற்றாம். இதனை 'யாவன் யாவள் யாவ ரென்னு—மாவயின் மூன்றோடு' (சொ—ககூஉ) எனப் பெயராக ஓதியவாற்றான் உணர்க. அன்றியும் யாரென்னும் வினாவின் கிளவி முப்பாற்கும் உரித்தென்று யாரென்னும் வினாவினைக் குறிப்பினை அவன்யார் அவள்யார் அவர்யார் என முப்பாற்கும் ஒப்ப உரிமை கூறுதலானும் அது வேறென்பது

பெற்றும். அது வினையியலுள் ஓதினமையானும் 'வினாவிற் கேற்றல்' (சொ-௬௬) எனப் பயனிலையாக ஓதினமையானும் வேறாயிற்று.

இனி 'யார்யார்க்கண்டேயுவப்பர்' எனப் பலரறிசொன் முன்னரன்றி இயல்பாக வந்த யாரென்பது யாண்டு அடங்கு மெனின் அதுவும் யாரை யாரைக் கண்டென உருபு விரித லின் யாவரை என்னும் வகரங்கெட்ட பெயரேயாம். அங் ஙனம் நிலைமொழி வருமொழியாய் நிற்றல் பயின்றென்றதனாற் கொள்க. இதனானே 'யாவது நன்றென வுணரார் மாட்டும்' என ஏனை ஒன்றறிசொல்லும் நிலைமொழியாய் நிற்றல் கொள்க. இன்னும் இதனானே யாரவர் யாவதது என இவ்விரு சொல் லும் 'நிலைமொழியாய் வருதல்' கொள்க. (௩௦)

தொகைமரபு முற்றிற்று.

## ௬. உருபியல்

௧௭௩. அஆ உஊ ஏஔ வென்னு
மப்பா லாற னிலைமொழி முன்னர் பகுதி
வேற்றுமை யுருபிற் கின்னே சாரியை.

என்பது சூத்திரம்.

உருபுகளோடு பெயர் புணரும் இயல்பு உணர்த்தினமை யின் இவ்வோத்து உருபியலென்னும் பெயர்த்தாயிற்று. மேற் றொகுத்துப் புணர்த்ததனை ஈண்டு விரித்துப் புணர்க்கின்றாராக லின், இவ்வோத்துத் தொகைமரபோடு இயைபுடைத்தாயிற்று. இச்சூத்திரம் அகரமுதலிய ஈற்றுன்வரும் ஆறு ஈற்றுச்சொற் கள் நின்று இன் பெற்று உருபினோடு புணருமாறு கூறுகின்றது. உருபின் பொருள் படவரும் புணர்ச்சி மேற்கூறுப.

**இதன் பொருள்:** அ ஆ உ ஊ ஏ ஔ என்னும் அப்பால் ஆறன் நிலைமொழி முன்னர்—அ ஆ உ ஊ ஏ ஔ என்று சொல் லப்படுகின்ற அக்கூற்று ஆறினையும் ஈறாகவுடைய நிலைமொழி களின் முன்னர் வருகின்ற, வேற்றுமை யுருபிற்கு இன்னே சாரியை—வேற்றுமை யுருபுகட்கு இடையே வருஞ் சாரியை இன்சாரியையே என்றவாறு.

**உதாரணம்:** விளவினை விளவினொடு விளவிற்கு விள வினது விளவின்கண் எனவும், பலாவினை பலாவினொடு பலா விற்கு பலாவினது பலாவின்கண் எனவும், கடுவினை கடுவினொடு கடுவிற்கு கடுவினது கடுவின்கண் எனவும், தழூஉவினை தழூஉ வினொடு தழூஉவிற்கு தழூஉவினது தழூஉவின்கண் எனவும், சேவினை சேவினொடு சேவிற்கு சேவினது சேவின்கண் என வும், வெளவினை வெளவினொடு வெளவிற்கு வெளவினது வெளவின்கண் எனவும்வரும். இவ்வாறே செய்கையறிந்து ஒட்டுக.

'இன்னென வரூஉம் வேற்றுமை யுருபிற்
கின்னென் சாரியை யின்மை வேண்டும்.' (எழு-௧௩௧)

எனவே, ஏனைய இன்பெறுமென்றலின், 'ஞ ந ம ய வ' (எழு- ௧௪௪) என்பதனான் இயல்பென்றது விலக்கிற்றாம். (௧)

---

1. ஞ ந ம ய வ என்னுந் தொகைமரபு ௨-ம் சூத்திரத்தால் இயல் பென்றதை விலக்கிற்றென்றது, உருபுகள் நிலைமொழிமுன் இயல் பாகாது இன்பெறுமென்றதை.

கஎச. பல்லவை நுதலிய வகர விறுபெயர்
வற்றொடு சிவணை லெச்ச மின்றே.

இஃது இன்சாரியை விலக்கி வற்று வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

**இதன் பொருள் :** பல்லவை நுதலிய பெயரிறு அகரம்—பன்மைப்பொருளைக் கருதின பெயர்களின் இறுதி நின்ற அகரம், வற்றொடு சிவணல் எச்சமின்று—வற்றுச் சாரியையோடு பொருந்துதலை ஒழிதலில்லை என்றவாறு.

**உதாரணம் :** பல்லவற்றை பல்லவற்றொடு பலவற்றை பலவற்றொடு சில்லவற்றை சில்லவற்றொடு சிலவற்றை சிலவற்றொடு உள்ளவற்றை உள்ளவற்றொடு இல்லவற்றை இல்லவற்றொடு என ஒட்டுக.

எச்சமின்றி என்றதனானே மேல் இன் பெற்றன பிற சாரியையும் பெறுதல் கொள்க. நிலாத்தை துலாத்தை மகத்தை என வரும். இன்னும் இதனானே பல்லவை நுதலியவற்றின்கண் மென்றொடருபு வற்றுப்பெற்றே முடிதல் கொள்க. (உ)

கஎரு. யாவென் வினவு மாயிய றிரியாது.

இஃது ஆகார ஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

**இதன் பொருள் :** யாவென் வினவும்—யாவென்று சொல்லப்படும் ஆகார ஈற்று வினைப்பெயரும், ஆயியல் திரியாது—முற்கூறிய வற்றுப்பேற்றிற் றிரியாது என்றவாறு.

யாவற்றை யாவற்றொடு எனவரும். (ந)

கஎசு. சுட்டுமுத லுகர மன்னொடு சிவணி
யொட்டிய மெய்யொழித் துகரங் கெடுமே.

இஃது உகர ஈற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

**இதன் பொருள் :** சுட்டுமுதல் உகரம் அன்னொடு சிவணி—சுட்டெழுத்தினை முதலாகவுடைய உகர ஈற்றுச்சொல் அன் சாரியையோடு பொருந்தி, ஒட்டிய மெய் ஒழித்து உகரங் கெடும்—தான் பொருந்திய மெய்யை நிறுத்தி உகரங் கெடும் என்றவாறு.

அதனை அதனொடு இதனை இதனொடு உதனை உதனொடு என வரும். அதினை அதினொடு என்றாற்போல்வன மரூஉ முடிப்புழி முடிந்தன. ஒட்டிய என்றதனாற் சுட்டுமுதல் உகரமன்றிப் பிற உகரமும் உயிர்வருவழியிற் கெடுவன கொள்க. அவை கதவு களவு கனவு என நிறுத்தி அழகிது இல்லை என வருவித்து உகரங் கெடுத்து முடிக்க. இவற்றை வகர ஈறாக்கி உகரம் பெற்றனவென்று கோடுமெனின் வழக்கின்கண்ணுஞ் செய்யுட்கண்ணும் பயின்றுவரும் வகர ஈறுகளை ஒழித்து ஆசிரியர் 'வகரக் கிளவி நான்மொழி யீற்றது' (எழு-அக) என்றாற்போல வரைந்தோதல் குன்றக்கூறலாம் ஆதலின், அவை உகர ஈறென்று கொள்க. அவை செலவு வரவு தரவு உணவு கனவு என வழக்கின்கண்ணும் 'புன்கண் ணுடைத்தாற் புணர்வு' 'பாடறியா தானை யிரவு' 'கண்ணாரக் காணக் கதவு' எனச் செய்யுட்கண்ணும் பயின்றுவருமாறு உணர்க. (ச)



கஎஎ. சுட்டுமுத லாகிய வையெ னிறுதி
வற்றொடு சிவணி நிற்றலு முரித்தே.

இஃது ஐகார ஈற்றிற்கு முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** சுட்டு முதலாகிய ஐயெனிறுதி—சுட்டெழுத்தினை முதலாகவுடைய ஐகார ஈற்றுச்சொல், வற்றொடு சிவணி நிற்றலும் உரித்து—வற்றுச்சாரியையோடு பொருந்தி நிற்றலும் உரித்து என்றவாறு. உம்மையான் வற்றொடு சில உருபின்கண் இன்சாரியை பெற்று நிற்றலும் உரித்தென்றவாறு.

அவையற்றை அவையற்றொடு இவையற்றை இவையற்றொடு உவையற்றை உவையற்றொடு என ஒட்டுக; இங்ஙனம்

4. அதினை அதினொடு என்பன மருமுடிப்புழி முடிந்தன என்றது, 'வழங்கியன் மருங்கின் மருவொடு திரிநவும்' என்னும் அதிகாரப் புறனடையான் முடிந்தமையை. இதனால் அன் இன்னாகப் பிற்காலத்து மருவியதென்பது கருத்துப்போலும்.

ஐகாரம் நிற்க வற்று வந்துழி ‘வஃகான் மெய்கெட’ (எழு-கஉஉ) என்பதனான் முடிக்க.

இனி, உம்மையான் அவையற்றிற்கு அவையற்றின்கண் என நான்காவதும் ஏழாவதும் வற்றும் இன்னும் பெற்று வந்தவாறு காண்க. இனி, ஒன்றென முடித்தலென்பதனாற் பல்லவை நுதலிய அகர ஈற்றிற்கும் இவ்விரண்டு உருபின்கண் வற்றும் இன்னுங் கொடுத்துப் பலவற்றிற்கு பலவற்றின்கண் என முடிக்க. இது மேல்வருவனவற்றிற்கும் ஒக்கும். (ரு

கஎஅ. யாவென் வினாவி னையெ னிறுதியு
மாயிய றிரியா தென்மனார் புலவ
ராவயின் வகர மையொடுங் கெடுமே.

இதுவும் அது.

**இதன் பொருள்:** யாவென் வினாவின் ஐயென் இறுதியும்—யாவென்னும் வினாவினையுடைய ஐகார ஈற்றுச்சொல்லும், ஆயியல் திரியாது—முற்கூறிய சுட்டுமுதல் ஐகாரம்போல வற்றுப்பெறும் அவ்வியல்பில் திரியாதென்று சொல்லுவார் ஆசிரியர், ஆவயின் வகரம் ஐயொடுங் கெடும்—அவ் ஈற்றிடத்து வகரம் ஐகாரத்தோடுகூடக் கெடும் என்றவாறு.

யாவற்றை யாவற்றோடு என ஒட்டுக. வகரம் வற்றுமிசையொற்றென்று கெடுவதனைக் கேடு ஓதிய மிகையானே பிற ஐகாரமும் வற்றுப் பெறுதல் கொள்க. கரியவற்றை கரியவற்றொடு நெடியவற்றை நெடியவற்றொடு குறியவற்றை குறியவற்றொடு என எல்லாவற்றோடும் ஒட்டுக. இது கருமை நெடுமை குறுமை என்னும் பண்புப்பெயரன்றிக் கரியவை நெடியவை குறியவை எனப் பண்புகொள்பெயராய் நிற்றலின் வகர ஐகாரங் கெடுத்து வற்றுச்சாரியை கொடுத்து முடிக்கப்பட்டன. இவை ‘ஐம்பா லறியும் பண்பு தொகுமொழி’ அன்மை உணர்க. (சு)

கஎகூ. நீயெ னொருபெயர் நெடுமுதல் குறுகு
மாவயி னகர மொற்றா கும்மே.

இஃது ஈகார ஈறு இன்னவாறு புணருமென்கின்றது.



**இதன் பொருள்:** நீ என் ஒருபெயர் நெடுமுதல் குறுகும்—நீயென்னும் ஒருபெயர் தன்மேல் நின்ற நெடிதாகிய ஈகாரங் குறுகி இகரமாம், ஆவயின் னகரம் ஒற்றாகும்—அவ்விடத்து வரும் னகரம் ஒற்றாய் நிற்கும் என்றவாறு.

**உதாரணம்:** நின்னை நின்னொடு நினக்கு எனச் செய்கையறிந்து ஒட்டுக. நினக்கு என்பதற்கு ‘ஆறனுருபினுநான்கனுருபினும்’ (எழு-ககூக) ‘வல்லெழுத்து முதலிய’ (எழு-ககச) என்பன கொணர்ந்து முடிக்க. நினதென்பதற்கு ‘ஆறனுருபினகரக் கிளவி’ (எழு-ககரு) என்பதனான் முடிக்க. நின்னென்பது வேறொருபெயரோ எனக் கருதுதலை விலக்குதற்கு ஒருபெயரென்றார். பெயர்குறுகுமென்னாது முதல்குறுகுமென்றது அப்பெயரின் எழுத்தின்கண்ணது குறுக்க மென்றற்கு. நெடுமுதலெனவே நகரங்குறுகுதலை விலக்கிற்று. உயிர்மெய் யொற்றுமைபற்றி நெடியது முதலாயிற்று. ‘உடைமையு மின்மையு மொடுவயி னொக்கும்’ (எழு-கஙஉ) என்றதனை நோக்கி ஒடுவிடுத்துச் சாரியைபெற்றேவந்த அதிகாரத்தை மாற்றுதற்குச் சாரியைப் பேற்றிடை எழுத்துப்பேறு கூறினார். (எ)

கஅ௦. ஒகார விறுதிக் கொன்னே சாரியை.

இஃது ஒகார ஈறு இன்னவாறு புணருமென்கின்றது.

**இதன் பொருள்:** ஒகார இறுதிக்கு ஒன்னே சாரியை—ஒகார ஈற்றிற்கு இடைவருஞ் சாரியை ஒன்சாரியை என்றவாறு.

கோஒனை கோஒனொடு என ஒட்டுக. ஒன்னேயென்ற ஏகாரத்தாற் பெரும்பான்மையாக வருஞ் சாரியை ஒன்னே, சிறுபான்மை இன் சாரியை வருமென்று கொள்க. ‘ஒன்றாகநின்ற கோவினையடர்க்கவந்த’ எனவும், கோவினை கோவினொடு சோவினை சோவினொடு ஓவினை ஓவினொடு எனவும் வரும்.

ஒவென்பது மதகுநீர் தாங்கும் பலகை. (அ)

கஅக. அஆ வென்னு மரப்பெயர்க் கிளவிக்
கத்தொடுஞ் சிவணு மேழ னுருபே.

இஃது அகர ஆகார ஈற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இதன் பொருள்: அஆ என்னும் மரப்பெயர்க் கிளவிக்கு—அஆவென்று சொல்லப்படும் மரத்தை உணர்த்துகின்ற பெயராகிய சொல்லிற்கு, எழனுருபு அத்தொடுஞ் சிவணும்—ஏழாமுருபு இன்னோடன்றி அத்தோடும் பொருந்தும் என்றவாறு.

உதாரணம்: விளவத்துக்கண் பலாவத்துக்கண் எனவரும்.

'வல்லெழுத்துமுதலிய' (எழு—கககச) என்பதனான் வல்லெழுத்துக் கொடுத்துத் 'தெற்றென்றற்றே' (எழு—கருஎ) என்பதனான் 'அத்தினகர மகரமுனை' (எழு—கஉரு) க் கெடாமைச் செய்கைசெய்து முடிக்க. (௯)

கஅஉ. ஞநவென் புள்ளிக் கின்னே சாரியை.

இது புள்ளியீற்றுள் ஞகார ஈறும் நகார ஈறும் முடியுமாறு கூறுகின்றது.

இதன் பொருள்: ஞந என் புள்ளிக்கு இன்னே சாரியை—ஞநவென்று சொல்லப்படுகின்ற புள்ளியீறுகட்குவருஞ் சாரியை இன்சாரியை என்றவாறு.

உதாரணம்: உரிஞினை உரிஞினொடு பொருநினை பொருநினொடு என ஒட்டுக. (க௦)

Must be older than Tolkappiyam

கஅங. சுட்டுமுதல் வகர மையு மெய்யுங்
கெட்ட விறுதி யியற்றிரி பின்றே.

இது நான்குமொழிக்கு ஈறும் வகர ஈற்றுட் சுட்டுமுதல் வகர ஈற்றிற்கு முடிபு கூறுகின்றது.

இதன் பொருள்: சுட்டுமுதல் வகரம்—அவ் இவ் உவ் என்னுஞ் சுட்டெழுத்தினை முதலாகவுடைய வகர ஈற்றுச் சொல், ஐயும் மெய்யுங் கெட்ட இறுதியியல் திரிபின்று—ஐகாரமும் ஐகாரத்தான் ஊரப்பட்ட மெய்யுங் கெட்டு வற்றுப்பெற்று முடிந்த யாவை (எழு—கஎஅ) என்னும் ஐகார ஈற்றுச் சொல்லியல்பில் திரிபின்றி வற்றுப்பெற்று முடியும் என்றவாறு.

அவ் + வற்று

உதாரணம்: அவற்றை அவற்றொடு, இவற்றை இவற்றொடு, உவற்றை உவற்றொடு என ஒட்டுக. (கக)



கஅச. ஏனை வகர மின்னொடு சிவணும்.

இஃது எய்தாததெய்துவித்தது; பெயர்க்கேயன்றி உரிச்சொல் வகரத்திற்கு முடிபு கூறுதலின்.

இதன் பொருள்: ஏனை வகரம் இன்னொடு சிவணும்—ஒழிந்த உரிச்சொல் வகரம் இன்சாரியையோடு பொருந்தி முடியும் என்றவாறு.

தெவ்வினை தெவ்வினொடு என ஒட்டுக. இஃது உரிச்சொல்லாயினும் படுத்தலோசையாற் பெயராயிற்று. (கஉ)

கஅரு. மஃகான் புள்ளிமு னத்தே சாரியை.

இது மகர ஈறு புணருமாறு கூறுகின்றது.

இதன் பொருள்: மஃகான் புள்ளிமுன் அத்தே சாரியை—மகரமாகிய புள்ளியீற்றுச் சொன்முன் வருஞ் சாரியை அத்துச் சாரியை என்றவாறு

உதாரணம்: மரத்தை மரத்தொடு நுகத்தை நுகத்தொடு என ஒட்டுக. 'அத்தேவற்றே' (எழு—கருஎ) 'அத்தினகரம்' (எழு—கஉரு) என்பனவற்றான் முடிக்க. (கங)

கஅசா. இன்னிடை வரூஉ மொழியுமா ருளவே.

இது மகர ஈற்றிற் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

இதன் பொருள்: இன்னிடை வரூஉம் மொழியுமாருள—மகர ஈற்றுச் சொற்களுள் அத்தேயன்றி இன்சாரியை இடையே வந்து முடியுஞ் சொற்களும் உள என்றவாறு.

மார் அசை.

உதாரணம்: உருமினை உருமினொடு, திருமினை திருமினொடு என வொட்டுக. (கச)

௧௮௭. நும்மெ னிறுதி யியற்கை யாகும்.

இது மகர ஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

**இதன் பொருள்:** நும்மென் இறுதி இயற்கையாகும்—நும்மென்னும் மகர ஈறு மேற்கூறிய அத்தும் இன்னும் பெறாது இயல்பாக முடியும் என்றவாறு.

**உதாரணம்:** நும்மை, நும்மொடு, நுமக்கு, நும்மின், நுமது, நுங்கண் என வரும்.

நுமக்கு நுமது என்பனவற்றிற்கு 'ஆறனுருபினு நான்கனுருபினும்' (எழு—௧௬௧) 'நும்மெனிறுதியுமந்நிலை' (எழு—௧௬௨) 'வல்லெழுத்து முதலிய' (எழு—௧௧௪) 'ஆறனுருபினகரக்கிளவி' (எழு—௧௧௫) என்பன கொணர்ந்து முடிக்க.

நுங்கணென்பதற்கு மேலைச்சூத்திரத்து 'மெய்' என்றதனான் மகரவொற்றுக் கெடுத்து 'வல்லெழுத்து முதலிய' என்பதனான் மெல்லொற்றுக் கொடுக்க. இயற்கையென்றார் சாரியை பெறாமை கருதி. See article palatals in Tamil University Review (௧௫)

௧௮௮. தாநா மென்னு மகர விறுதியும்
யாமெ னிறுதியு மதனோ ரன்ன
ஆஎய் யாகும் யாமெ னிறுதி
யாவயின் யகரமெய் கெடுதல் வேண்டு
மேனை யிரண்டு நெடுமுதல் குறுகும்.

இது மகர ஈற்றில் முற்கூறிய முடிபு ஒவ்வாதனவற்றிற்கு முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள்:** தாம் நாம் என்னும் மகர இறுதியும் யாமென் இறுதியும் அதனோரன்ன—தாம் நாமென்று கூறப்படும் மகர ஈறும் யாமென்னும் மகர ஈறும் நும்மென்னும் மகர ஈறுபோல அத்தும் இன்னும் பெறாது முடிதலையுடைய, யாமென் இறுதி ஆ எ ஆகும்—யாமென்னும் மகர ஈற்றுச்சொல்லில் ஆகாரம் ஏகாரமாம், ஆவயின் யகரமெய் கெடுதல் வேண்டும்—அவ்விடத்து நின்ற யகரமாகிய மெய் கெடுதலை விரும்பும் ஆசிரியன், ஏனை இரண்டும் நெடுமுதல் குறுகும்—ஒழிந்த தாம் நாமென்னும் இரண்டும் நெடியவாகிய முதல்குறுகித் தம் நம் என நிற்கும் என்றவாறு.

15. மேலைச்சூத்திரமென்றது வருஞ்சூத்திரத்தை,



**உதாரணம்:** தம்மை தம்மொடு நம்மை நம்மொடு எம்மை எம்மொடு என ஆறு உருபோடும் ஒட்டுக. ஆறனுருபிற்கும் நான்கனுருபிற்குங் கருவி யறிந்து முடிக்க.

மெய்யென்றதனாற் பிறவயின்மெய்யுங் கெடுக்க. தங்கண் நங்கண் எங்கண் என ஏழனுருபின்கண் மகரங்கெடுத்து 'வல்லெழுத்து முதலிய' (எழு—௧௧௪) என்பதனான் மெல்லெழுத்துக் கொடுக்க. (௧௬)

௧௮௯. எல்லா மென்னு மிறுதி முன்னர்
வற்றென் சாரியை முற்றத் தோன்று
மும்மை நிலையு மிறுதி யான.

இது மகர ஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

**இதன் பொருள்:** எல்லாமென்னும் இறுதிமுன்னர் வற்றென்சாரியை முற்றத்தோன்றும்—எல்லாமென்னும் மகர ஈற்றுச்சொன் முன்னர் அத்தும் இன்னும் அன்றி வற்றென்னுஞ் சாரியை முடியத்தோன்றி முடியும், உம்மை நிலையும் இறுதி யான—ஆண்டு உம்மென்னுஞ் சாரியை இறுதிக்கண் நிலைபெறும் என்றவாறு.

மகரம் வற்றின்மிசை யொற்றெனக் கெடுக்க.

எல்லாவற்றையும் எல்லாவற்றினும் எல்லாவற்றுக்கண்ணும் என வரும். முற்றவென்றதனான் ஏனைமுற்றுகரத்திற்கும் உம்மின் உகரங்கெடுத்துக்கொள்க. எல்லாவற்றொடும் எல்லாவற்றுக்கும் எல்லாவற்றதும் என வரும். முற்றுகரமாதலின் ஏறி முடியா. (௧௭)

17. ஏனை முற்றுகரம் என்றது, ஒடு, கு, அது என்பவற்றை.

கக௦. உயர்திணை யாயி னம்மிடை வருமே.

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

**இதன் பொருள் :** உயர்திணையாயின்—எல்லாமென நின்ற மகர ஈற்று விரவுப்பெயர் உயர்திணைப்பெயராமெனின், நம் இடைவரும்—நம்மென்னுஞ் சாரியை இடைநின்று புணரும் என்றவாறு.

மகர ஈற்றினை மேல் வற்றின்மிசை யொற்றெனக்கெடுத்த அதிகாரத்தாற் கெடுக்க. எல்லாநம்மையும் எல்லர்நம்மினும் எல்லாநங்கணும் என உகரம்பெற்றும் எல்லாநம்மொடும் எல்லா நமக்கும் எல்லாநமதும் என உகரங் கெட்டும் மகரம் நிற்கும். இவற்றிற்கு எல்லாரையும் எல்லாரொடும் என்பது பொருளாக ஒட்டுக. இதற்கு நம்முவகுத்ததே வேறுபாடு. ஈருகுபுள்ளி அகரமொடு நிற்றல் (எழு—ககூக) நான்காவதற்கும் ஆறுவதற்குங் கொள்க. (கஅ)

ககக. எல்லாரு மென்னும் படர்க்கை யிறுதியு
மெல்லீரு மென்னு முன்னிலை யிறுதியு
மொற்று முகரமுங் கெடுமென மொழிப
நிற்றல் வேண்டும் ரகரப் புள்ளி
யும்மை நிலையு மிறுதி யான
தம்மிடை வரூஉம் படர்க்கை மேன
நும்மிடை வரூஉ முன்னிலை மொழிக்கே.

இது மகர ஈற்று உயர்திணைப்பெயர்க்கு முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** எல்லாருமென்னும் படர்க்கையிறுதியும்—எல்லாருமென்னும் மகர ஈற்று உயர்திணைப் படர்க்கைப் பெயரும், எல்லீருமென்னும் முன்னிலையிறுதியும்—எல்லீருமென்னும் மகர ஈற்று உயர்திணை முன்னிலைப்பெயரும், ஒற்றும் உகர

18. நம்மையும் என்ற இடத்தில் உம்மில் உகரங் கெடாது பெற்று நின்றது. நம்மொடும் என்ற இடத்தில் உம்மில் உகரங் கெட்டு மகரம் நின்றது என்பது கருத்து.



முங் கெடுமென மொழிப—மகரவொற்றும் அதன்முன்னின்ற உகரமுங் கெட்டு முடியுமென்று சொல்லுவர் புலவர், ரகரப் புள்ளி நிற்றல் வேண்டும்—அவ் வுகரம் ஏறிநின்ற ரகர ஒற்றுக் கெடாது நிற்றலை விரும்பும் ஆசிரியன், இறுதியான உம்மை நிலையும்—அவ்விருமொழியி னிறுதிக்கண்ணும் உம்மென்னுஞ் சாரியை நிலைபெறும், படர்க்கை மேன தம் இடைவரூஉம்—படர்க்கைச் சொல்லிடத்துத் தம் முச்சாரியை இடைவரும், முன்னிலை மொழிக்கு நும் இடைவரூஉம்—முன்னிலைச்சொற்கு நும் முச்சாரியை இடைவரும் என்றவாறு.

**உதாரணம் :** எல்லார்தம்மையும் எல்லார்தம்மினும் எல்லார்தங்கணும் என உகரம் பெற்றும், எல்லார்தம்மொடும் எல்லார்தமக்கும் எல்லார்தமதும் என உகரங் கெட்டும், மகரம் நிற்கும். எல்லீர்நும்மையும் எல்லீர்நும்மினும் எல்லீர்நுங்கணும் என உகரம் பெற்றும், எல்லீர்நும்மொடும் எல்லீர்நுமக்கும் எல்லீர்நுமதும் என உகரங் கெட்டும், மகரம் நிற்கும்.

முன்னர் 'மெய்' (எழு—கஅஅ) என்ற இலேசாற்கொண்ட மகரக்கேடு இவற்றிற்கும் மேல்வருவனவற்றிற்குங் கொள்க.

படர்க்கைப்பெயர் முற்கூறியவதனானே ரகர ஈற்றுப் படர்க்கைப் பெயரும் முன்னிலைப்பெயரும் மகர ஈற்றுத் தன்மைப் பெயரும் தம் நும் நம் என்னுஞ் சாரியை இடையே பெற்று இறுதி உம்முச்சாரியையும்பெற்று முடிவன கொள்க. கரியார் தம்மையும் சான்றார்தம்மையும் எனவும், கரியீர்நும்மையும் சான்றீர்நும்மையும் எனவும், கரியேநம்மையும் இருவேநம்மையும் எனவும் எல்லாவுருபொடுஞ் செய்கை யறிந்து ஒட்டுக. உகரமும் ஒற்றும் என்றதனான் இக்காட்டியவற்றிற்கெல்லாம் மூன்று உருபின்கண்ணும் உம்மின் உகரங் கெடுதல் கொள்க. 'நிற்றல்வேண்டும் ரகரப்புள்ளி' என்றதனானே தம்முப்பெறுமை வருமவையுங் கொள்க. 'எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை' என வரும். (ககூ)

19. முன்னர் 'மெய்' என்றது கசுஅ-ம் சூத்திரத்துள் வரும் மெய் என்பதை. நங்கண் என்புழி நம் என்ற நிலைமொழியின் மகரக் கேட்டுக்கு விதி 'மெய்' என்றது.

கசுஉ. தான்யா னென்னு மாயீ ரிறுதியு
மேன்முப் பெயரொடும் வேறுபா டிலவே.

இது னகர ஈற்றுட் சிலவற்றிற்கு முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** *தான் யான் என்னும் ஆயீ ரிறுதியும்*— தான் யான் என்று சொல்லப்பட்ட அவ்விரண்டு னகர ஈறும், *மேல் முப்பெயரொடும் வேறுபாடு இலவே*—மேல் மகர ஈற்றுட் கூறிய மூன்றுபெயரோடும் வேறுபாடின்றித் தானென்பது குறுகியும் யானென்பதன்கண் ஆகாரம் எகரமாய் யகரவொற் றுக் கெட்டும் முடியும் என்றவாறு.

தன்னை என்னை என எல்லாவுருபோடும் ஒட்டுக. செய்கை யறிந்து ஒற்றிரட்டுதல் 'நெடியதன் முன்னர்' என்பதனுள் இலேசாற் கொள்க. (உ௦)

கசுங. அழனே புழனே யாயிரு மொழிக்கு
மத்து மின்னு முறழத் தோன்ற
லொத்த தென்ப வுணரு மோரே.

இதுவும் அது.

**இதன் பொருள் :** *அழனே புழனே ஆயிரு மொழிக்கும்*— அழன் புழன் ஆகிய அவ்விருமொழிக்கும், *அத்தும் இன்னும் உறழத் தோன்றல் ஒத்ததென்ப*—அத்துச்சாரியையும் இன்சாரி யையும் மாறிவரத் தோன்றுதலைப் பொருந்திற்றென்பர், *உணருமோர்*—அறிவோர் என்றவாறு.

அழத்தை அழனினை, புழத்தை புழனினை எனச் செய்கை யறிந்து எல்லாவுருபினோடும் ஒட்டுக. னகரத்தை அத்தின்மிசை ஒற்றென்றுகெடுத்து 'அத்தினகரம்' (எழு—கஉரு) என்பதனான் முடிக்க. தோன்றலென்றதனான் எவன் என நிறுத்தி வற்றுக் கொடுத்து வேண்டுஞ்செய்கை செய்து எவற்றை எவற்றொடு

21. இச்சூத்திரத்தால் எவன் என்பதற்கு வற்றுக் கொடுத்து, வற்றுமிசை யொற்றென்று னகரங் கெடுத்து 'வஃகான் மெய்கெட' என்னுஞ் சூத்திரத்து 'ஆகியபண்பு' என்றமையால் ஐகாரத்தின் முன்னன்றி, அகரத்தின் முன்னும் வற்றின் வகரங் கெடுமென



என முடிக்க. எல்லாவுருபினோடும் ஒட்டுக. எற்றை என்புழி நிலைமொழிவகரம் இதனாற் கெடுக்க. இனி ஒத்ததென்றதனால் எகின் என நிறுத்தி அத்தும் இன்னுங் கொடுத்துச் செய்கை செய்து எகினத்தை எகினை என ஒட்டுக. அத்து இனிது இசைத் தலின் முற்கூறினார். (உக)

கசுச. அன்னென் சாரியை யேழ னிறுதி
முன்னர்த் தோன்று மியற்கைத் தென்ப.

இஃது ஏழென்னும் எண்ணுப்பெயர் அன்சாரியை பெற் றுப் புணர்க என்கின்றது.

**இதன் பொருள் :** *அன்னென்சாரியை ஏழனிறுதி முன் னர்த்தோன்றும் இயற்கைத் தென்ப*—அன்னென்னுஞ் சாரியை ஏழென்னும் எண்ணுப்பெயரின் முன்னே தோன்றும் இயல்பினை யுடைத்தென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

**உதாரணம் :** ஏழனை ஏழற்கு ஏழனின் என்க. ஏனையுருபுக ளோடுஞ் செய்கை யறிந்து ஒட்டுக. சாரியை முற்கூறியவத னாற் பிறவும் அன்பெறுவன கொள்க. பூழனை யாழனை என ஏனையவற்றோடும் ஒட்டுக. மேல்வருகின்ற இன்சாரியைச் சேர வைத்தமையான் அவையெல்லாம் இன்சாரியைபெற்று வருதலுங் கொள்க. ஏழினை பூழினை யாழினை என வரும். (உஉ)

கசுரு. குற்றிய லுகரத் திறுதி முன்னர்
முற்றத் தோன்று மின்னென் சாரியை.

இது குற்றுகர ஈற்றிற்கு முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** *குற்றியலுகரத்து இறுதிமுன்னர்*—குற் றியலுகரமாகிய ஈற்றின் முன்னர், *முற்றத்தோன்றும் இன் னென்சாரியை*—முடியத்தோன்றும் இன்னென்னுஞ் சாரியை என்றவாறு.

**உதாரணம் :** நாகினை நாகினொடு, வரகினை வரகினொடு என வரும். ஏனையவற்றோடுஞ் செய்கை யறிந்து ஒட்டுக.

வகர அகரத்தைக் கெடுத்து எவற்றை என முடிக்க. எற்றை என்ப தில் நிலைமொழி வகரங் கெட்டதற்கு விதியும் 'தோன்றல்' என்பது.

முற்ற என்றதனானே பிறசாரியை பெறுவனவுங் கொள்க. வழக்கத்தாற் பாட்டாராய்ந்தா னெனவுங் கரியதனை எனவும் வரும். (௨௩)

௧௬௫. நெட்டெழுத் திம்ப ரொற்றுமிகத் தோன்று
மப்பான் மொழிக ளல்வழி யான.

இஃது அக்குற்றிய லுகரங்களுட் சிலவற்றிற்கு இன வொற்று மிகுமென்கின்றது.

**இதன் பொருள் :** நெட்டெழுத்திம்பர் ஒற்றுமிகத் தோன்றும்—நெட்டெழுத்தின்பின்னர் வருகின்ற குற்றுகரங்கட்கு இன வொற்று மிகத் தோன்றாநிற்கும், அப்பால் மொழிகள் அல்வழி ஆன—ஒற்று மிகத்தோன்றாத கசதபக்கள் ஈறாகிய மொழிகள் அல்லாத இடத்து என்றவாறு.

எனவே, டகார றகாரங்கள் ஈறான சொல்லிடைத் தோன்று மாயிற்று.

**உதாரணம்:** யாட்டை யாட்டொடு யாட்டுக்கு யாட்டின் யாட்டது யாட்டுக்கண் எனவும், யாற்றை சோற்றை எனவும் இனவொற்று மிக்கன. இவை அப்பால் மொழிகள் அல்லன.

நாகு காசு போது காபு என்றாற்போல்வன அப்பால் மொழிகள் ; அவை இனவொற்று மிகாவாயின. (௨௪)

௧௬௭. அவைதாம்
இயற்கைய வாகுஞ் செயற்கைய வென்ப.

இஃது எய்தியது விலக்கிற்று.

**இதன் பொருள் :** அவைதாம் இயற்கைய ஆகுஞ் செயற்கைய என்ப—அங்ஙனம் இனவொற்று மிகுவனதாம் இன்சாரியை பெறாது இயல்பாக முடியுஞ் செய்தியையுடைய வென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

**உதாரணம் :** முன்னர்க் காட்டினவே கொள்க.

செயற்கைய என்ற மிகையானே உயிர்த்தொடர்மொழிகளில் ஏற்பனவற்றிற்கும் ஒற்று மிகத் தோன்றுதல் கொள்க. முயிற்றை முயிற்றொடு முயிற்றுக்கு முயிற்றின் முயிற்றது



முயிற்றுக்கண் என வரும். இன்னும் இதனானே யாட்டினை முயிற்றினை என விலக்கிய இன்பெறுதலுங் கொள்க. (௨௫)

௧௬௮. எண்ணி னிறுதி யன்னொடு சிவணும்.

இது குற்றுகர ஈற்று எண்ணுப்பெயர் முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** எண்ணின் இறுதி அன்னொடு சிவணும்—எண்ணுப்பெயர்களினது குற்றுகர ஈறு அன்சாரியையோடு பொருந்தும் என்றவாறு.

**உதாரணம் :** ஒன்றனை இரண்டனை என எல்லா எண்ணினையும் எல்லா உருபினோடுஞ் செய்கை யறிந்து ஒட்டுக. முன்னர்ச் செயற்கைய என்ற இலேசானே ஒன்றினை இரண்டினை என இன்சாரியையுங் கொடுக்க. (௨௬)

௧௬௯. ஒன்றுமுத லாகப் பத்தூர்ந்து வரூஉ
மெல்லா வெண்ணுஞ் சொல்லுங் காலை
யானிடை வரினு மான மில்லை
யஃதென் கிளவி யாவயிற் கெடுமே
யுய்தல் வேண்டும் பஃகான் மெய்யே.

இஃது ஒன்று முதலாக எட்டு இறுதியாக நின்ற குற்றுகர ஈற்று எண்ணுப்பெயர் ஏழினோடும் பத்தென்னும் எண்ணுப்பெயர் வந்து புணர்ந்து ஒன்றாய்நின்ற சொற்கள் சாரியை பெற்றுத் திரியுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** ஒன்று முதலாகப் பத்து ஊர்ந்து வரூஉம் எல்லா எண்ணும்—ஒன்றுமுதலாக எட்டீறாக நின்ற எண்களின் மேலே பத்தென்னும் எண்ணுப்பெயர் ஏறி வருகின்ற ஒருபது முதலான எல்லா எண்களையும், சொல்லுங் காலை—முடிபுகூறுங்காலத்து, ஆன் இடை வரினும் மானமில்லை—முற்கூறிய அன்சாரியையேயன்றி ஆன்சாரியை இடையே வரினுங் குற்றமில்லை, ஆவயின் அஃதென் கிளவி கெடும்—அவ் ஆன் பெற்றுழிப் பஃதென்னும் எண்ணிடத்து அஃதென்னுஞ் சொற் கெட்டுப்போம், பஃகான் மெய் உய்தல்வேண்டும்—அவ் அகரத்தான் ஊரப்பட்ட பகரமாகிய ஒற்றுக் கெடாது நிற்றலை ஆசிரியன் விரும்பும் என்றவாறு.

‘நின்ற பத்த னொற்றுக்கெட வாய்தம்
வந்திடை நிலையும்’ (எழு-௪௩௭)

என்பதனான் ஆய்தம் பெற்றது.

**உதாரணம் :** ஒருபஃது இருபஃது முப்பஃது நாற்பஃது ஐம்பஃது அறுபஃது எண்பஃது எனக் குற்றியலுகரப் புணரியலுள் விதிக்குமாறே நிறுத்தி அஃதென்பதனைக் கெடுத்துப் பகரவொற்றை நிறுத்தி ஆன்சாரியை கொடுத்து ஒருபானை இருபானை என எல்லா எண்ணோடும் எல்லா உருபினையுஞ் செய்கை யறிந்து ஒட்டுக. உம்மை எதிர்மறையாதலின் ஒரு பஃதனை இருபஃதனை என எல்லாவற்றோடும் ஒட்டுக.

சொல்லுங்காலை என்றதனாற் பத்தூர் கிளவியேயன்றி ‘ஒன்பான் முதனிலை’ (எழு-௪௯௩). ‘ஒன்பாற்கொற்றிடைமிகுமே’ (எழு-௪௭௫) என்றாற்போல வருவனவற்றின் கண்ணும் பகரத்துள் அகரம்பிரித்து அஃதென்பதுகெடுத்து ஆன்கொடுக்க. (௨௭)

௨௦௦. யாதெ னிறுதியுஞ் சுட்டுமுத லாகிய
வாய்த விறுதியு மன்னொடு சிவணு
மாய்தங் கெடுத லாவயி னான.

இஃது எண்ணுப்பெயரல்லாத குற்றுகர ஈற்றுட் சிலவற்றிற்கு முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** யாது என் இறுதியும்—யாதென வருங் குற்றுகர ஈறும், சுட்டுமுதலாகிய ஆய்த இறுதியும்—சுட்டெழுத்தினை முதலாகவுடைய ஆய்தத் தொடர்மொழிக் குற்றுகர ஈறும், அன்னொடு சிவணும்—அன்சாரியையோடு பொருந்தும், ஆவயின் ஆன ஆய்தங் கெடுதல்—அவ்விடத்து வந்த ஆய்தங் கெடும் என்றவாறு.

யாதனை யாதனொடு எனவும், அதனை அதனொடு, இதனை இதனொடு, உதனை உதனொடு எனவும் வரும். (௨௮)

27. ‘ஒன்பான் முதனிலை’ என்பது, ஒன்பஃது ஆன் பெற்றதற்கு உதாரணம். ஏனையவுமன்ன.



௨௦௧. ஏழ னுருபிற்குத் திசைப்பெயர் முன்னர்ச்
சாரியைக் கிளவி யியற்கையு மாகு
மாவயி னிறுதி மெய்யொடுங் கெடுமே.

இதுவுங் குற்றுகர ஈற்றுட் சிலவற்றிற்கு ஏழனுருபோடு முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** திசைப்பெயர்முன்னர் ஏழனுருபிற்கு—திசைப்பெயர்களின் முன்னர் வந்த கண்ணென்னும் உருபிற்கு முடிபு கூறுங்கால், சாரியைக் கிளவி இயற்கையுமாகும்—முன் கூறிய இன்சாரியையாகிய சொல் நின்று முடிதலேயன்றி நில்லாது இயல்பாயும் முடியும், ஆவயின் இறுதி மெய்யொடுங் கெடும்—அங்ஙனம் இயல்பாயவழித் திசைப்பெயரிறுதிக் குற்றுகரந் தன்னான் ஊரப்பட்ட மெய்யொடுங் கெடும் என்றவாறு.

**உதாரணம் :** <u>வடக்கின்கண் கிழக்கின்கண் தெற்கின்கண் மேற்கின்கண்</u> எனவும், வடக்கண் கிழக்கண் தெற்கண் மேற்கண் எனவும் வரும். இன்பெறுவழி உகரங் கெடாதென்று உணர்க.

ஆவயினென்றதனாற் கீழ்சார் கீழ்புடை, மேல்சார் மேல்புடை, தென்சார் தென்புடை, வடசார் வடபுடை எனச் சாரியையின்றிப் பல விகாரப்பட்டு நிற்பனவுங் கொள்க. இன்னும் இதனானே கீழைக்குளம் மேலைக்குளம், கீழைச்சேரி மேலைச்சேரி என ஐகாரம் பெறுதலுங் கொள்க. (௨௯)

௨௦௨. புள்ளி யிறுதியு முயிரிறு கிளவியுஞ்
சொல்லிய வல்ல வேனைய வெல்லாந்
தேருங் காலை யுருபொடு சிவணிச்
சாரியை நிலையுங் கடப்பா டிலவே.

இஃது இவ்வோத்தினுள் எடுத்தோத்தானும் இலேசானும் முடியாது நின்றவற்றிற்கெல்லாம் இதுவே ஓத்தாயதோர் புறனடை கூறுகின்றது.

**இதன் பொருள் :** சொல்லிய அல்ல புள்ளியிறுதியும் உயிரிறுகிளவியும்—முற்கூறிய புள்ளியீறும் உயிரீறும் அல்லாத புள்

ளியீற்றுச் சொல்லும் உயிரீற்றுச் சொல்லும், ஏனையவுமெல்லாம்—முற்கூறிய ஈறுகள் தம்முளொழிந்து நின்றனவுமெல்லாம், தெருங்காலை உருபொடு சிவணிச் சாரியைநிலையுங் கடப்பாடு இல—ஆராயுங்காலத்து உருபுகளோடு பொருந்திச் சாரியை நின்று முடியும் முறைமையை உடையவல்ல, நின்றும் நில்லாதும் முடியும் என்றவாறு.

ஏனையவுமென உம்மை விரிக்க. கூறுத புள்ளியீறுகள் ஐந்து. அவை ணகர யகர ரகர லகர ளகரங்களாம். மண்ணினை மண்ணை, வேயினை வேயை, நாரினை நாரை, கல்லினை கல்லை, முள்ளினை முள்ளை எனவரும். உயிரீற்றுள் ஒழிந்தது இகரம் ஒன்றுமேயாதலின், அதனைப் பிற்கூறினர். கிளியினை கிளியை என வரும்.

இனித் தான் யான் அழன் புழன் என்னும் னகர ஈற்றினும் எழென்னும் ழகர ஈற்றினும் ஒழிந்தன பொன்னினை பொன்னை தாழினை தாழை என்றாற்போல வருவன பிறவுமாம். இனி, ஈகார ஈற்றுள் ஒழிந்தன தீயினை தீயை ஈயினை ஈயை வீயினை வீயை என்றாற்போல்வன பிறவுமாம். ஐகார ஈற்றுள் ஒழிந்தன தினையினை தினையைக் கழையினை கழையை என்றாற் போல்வன பிறவுமாவும். ஏனை ஈறுகளினும் வருவன உணர்ந்து கொள்க.

மேலே பெயரீற்றுச் செய்கையெல்லாந் தத்தம் ஈற்றின் கண் முடிப்பாராதலின் அவை ஈண்டுக் கூறல்வேண்டா.

இனித் தெருங்காலை என்றதனானே உருபுகள் நிலைமொழி யாக நின்று தம்பொருளோடு புணரும்வழி வேறுபடும் உருபீற்றுச் செய்கையெல்லாம் ஈண்டு முடித்துக்கொள்க.

உதாரணம்: நம்பியைக் கொணர்ந்தான் மண்ணினைக் கொணர்ந்தான் கொற்றனைக் கொணர்ந்தான் என மூவகைப் பொருளோடுங் கூடிநின்ற உருபிற்கு ஒற்றுக்கொடுக்க. மலையொடு பொருதது, மத்திகையாற் புடைத்தான், சாத்தற்குக் கொடுத்தான், ஊர்க்குச் சென்றான், காக்கையிற் கரிது காக்கையது பலி, மடியுட்பழுக்காய், தடாவினுட் கொண்டான் என்னும் தொடக்கத்தன உருபு காரணமாகப் பொருளோடு புணரும்வழி இயல்பாயும் ஈறுதிரிந்தும் ஒற்றுமிக்கும் வந்தன கொள்க.

காக்கையிற் கரிது



இனிக் கண் கால் புறம் முதலியன பெயராயும் உருபாயும் நிற்குமாதலின் அவை உருபாகக் கொள்ளும்வழி வேறுபடுஞ் செய்கைகளெல்லாம் இவ்விலேசான் முடிக்க. இஃது உருபியலாதலின் உருபொடு சிவணி என வேண்டா, அம் மிகையானே உருபுபுணர்ச்சிக்கட் சென்ற சாரியைகளெல்லாம் ஈற்றுப் பொருண்முடிபு உள்வழிப் பொருட் புணர்ச்சிக்குங் கொள்க. விளவின்கோடு கிளியின்கால் என எல்லா ஈற்றினுங் கொள்க. நம்பியை கொற்றனை என உயிரீறும் புள்ளியீறுஞ் சாரியைபெறாது இயல்பாய் முடிவனவும் ஈண்டே கொள்க. (௩௦)

உருபியல் முற்றிற்று.

---

30. இகரவீற்றிற்குதாரணம் கிளியினே, கிளியை என்பன. பெயரீறு என்றது உருபேற்கும் பெயரீற்றை. நிலைமொழியாய்நின்று உருபேற்பன பெயராதலின் பெயரீறென்றார். பெயரீருகிய நிலைமொழியீற்றின் செய்கை ஈறுகடோறுங் கூறப்படுமென்றபடி. மூவகைப் பொருள் என்றது மூவகைப் பெயரை. பொருள் என்றது வருமொழியை. ஈற்றுப்பொருள் - வருமொழிப்பொருள்.

## எ. உயிர்மயங்கியல்

உ0௬. *அகர விறுதிப் பெயர்நிலை முன்னர்*
*வேற்றுமை யல்வழிக் கசதபத் தோன்றிற்*
*றத்த மொத்த வொற்றிடை மிகுமே.*

*என்பது சூத்திரம். உயிரீறு நின்று வன்கணத்தோடுஞ் சிறுபான்மை ஏனைக் கணங்களோடும் மயங்கிப் புணரும் இயல்பு உணர்த்தினமையின் இவ்வோத்து உயிர்மயங்கியலென்னும் பெயர்த்தாயிற்று. மேற்பெயரோடு உருபு புணருமாறு கூறிப் பெயர்வருவழி உருபு தொக்குநின்ற பொருட்புணர்ச்சி கூறுகின்றமையின் உருபியலோடு இயைபுடைத்தாயிற்று.*

*இச்சூத்திரம் அகரஈற்றுப் பெயர் அல்வழிக்கண் வன்கணத்தோடு புணருமாறு கூறுகின்றது.*

**இதன் பொருள் :** *அகர இறுதிப் பெயர்நிலை முன்னர்—அகரமாகிய இறுதியையுடைய பெயர்ச்சொன் முன்னர், வேற்றுமையல்வழிக் கசதபத் தோன்றின்—வேற்றுமை யல்லாதவிடத்துக் கசதப முதன்மொழிகள் வருமொழியாய்த் தோன்றுமாயின், தத்தம் ஒத்த ஒற்று இடைமிகும்—தத்தமக்குப் பொருந்திய அக்கசதபக்களாகிய ஒற்று இடைக்கண் மிகும் என்றவாறு.*

**உதாரணம் :** *விளக்குறிது நுணக்குறிது அதக்குறிது சிறிது தீது பெரிது என ஒட்டுக. இவை அஃறிணை இயற்பெயராகிய எழுவாய் வினைக்குறிப்புப் பண்பாகிய பயனிலையோடு முடிந்தன.*

*ஒத்தவென்றமையாது தத்தமொத்த என்றதனன் அகரஈற்று உரிச்சொல் வல்லெழுத்து மிக்கும் மெல்லெழுத்து மிக்கும் முடியும் முடியும் அகரந் தன்னை உணரநின்றவழி வன்கணத்தோடு மிக்கு முடியும் முடிபுங் கொள்க. தடக்கை தவக்கொண்டான் வயக்களிறு வயப்புலி குழக்கன்று எனவும்,*

1. *தன்னை - எழுத்தாகிய தன்னை என்க. அஃறிணை இயற்பெயரென்றது, பால்பகாவஃறிணைப்பெயரை. விள, நுண என்பன பால்பகா வஃறிணைப்பெயர். அவை எழுவாயாய் நின்று குறிது, சிறிது முதலிய வினைக்குறிப்புப் பண்போடு முடியுமென்றபடி. வினைக்குறிப்புப் பண்பென்றது, பண்படியாகப் பிறந்த குறிப்புவினைமுற்றுக்களை.*



*தடஞ்செவி கமஞ்சூல் எனவும், அக்குறிது சிறிது தீது பெரிது எனவும் வரும். இனி, இடைச்சொல் வல்லொற்றுப் பெற்று வருவன உளவேல் அவற்றையும் இவ்விலேசினன் முடித்துக்கொள்க.* (க)

உ0௪. *வினையெஞ்சு கிளவியு முவமக் கிளவியு*
*மெனவெ னெச்சமுஞ் சுட்டி னிறுதியு*
*மாங்க வென்னு முரையசைக் கிளவியு*
*ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுமே.*

*இஃது அகர ஈற்று வினைச்சொல்லும் இடைச்சொல்லும் புணருமாறு கூறுகின்றது.*

**இதன் பொருள் :** *வினையெஞ்சு கிளவியும்—வினையை ஒழிபாகவுடைய அகர ஈற்று வினைச்சொல்லும், உவமக் கிளவியும்—உவமவுருபாய் நின்ற அகர ஈற்று இடைச்சொல்லும், எனவென் எச்சமும்—எனவென்னும் வாய்பாட்டால் நின்ற அகர ஈற்று இடைச்சொல்லும், சுட்டின் இறுதியும்—சுட்டாகிய அகர ஈற்று இடைச்சொல்லும், ஆங்க என்னும் உரையசைக் கிளவியும்—ஆங்கவென்னும் அகர ஈற்று உரையசை யிடைச்சொல்லும், ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகும்—முன்னர்க்கூறிய வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.*

**உதாரணம் :** *உண தாவ சாவ என நிறுத்திக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வல்லெழுத்துக் கொடுத்துமுடிக்க. இவ்வினையெச்சம்ஒழிந்தன எல்லாம் இடைச்சொல்லென்று உணர்க. புலிபோலக் கொன்றான் சென்றான் தந்தான் போயினான் எனவும், கொள்ளெனக் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் எனவும், அக்கொற்றன் சாத்தன் தேவன் பூதன் எனவும், ஆங்கக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் 'ஆங்கக்குயிலு மயிலுங் காட்டிக் கேச*

2. *போல முதலிய உவமச்சொல் வினையெச்சவினைக் குறிப்பாகவுங் கொள்ளப்படுமாயினும் உவமைப்பொருள் தந்தும் நிற்றலின்*

வனை விடுத்துப் போகியோளே' எனவும் வரும். உவமம் வினையெச்சவினைக் குறிப்பேனும் ஒன்றனோடு பொருவப்படுதல் நோக்கி உவமவியலின்கண் ஆசிரியர் வேறுபடுத்திக் கூறினார். எனவென்னும் எச்சமும் இருசொல்லையும் இயைவிக்கின்ற நிலைமையான் இடைச்சொல்லோத்தினுள் வேறோதினார். ஆங்க என்பது ஏழனுருபின் பொருள்பட வந்ததல்லாமை 'ஆங்கவென்னு முரையசை' என்றதனானும் 'ஆங்கவுரையசை' என்னும் இடையியற் சூத்திரத்தானும் உணர்க. இவை இயல்புகணத்துக்கண் முடியும் முடிபு 'ஞநமயவ' (எழு-௧௪௪) என்புழிக் கூறியதேயாம். அவை தாவ புலிபோல கொள்ளென ஆங்க என நிறுத்தி ஞநமயவ முதலிய மொழி ஏற்பன கொணர்ந்து புணர்த்தி இயல்பாமாறு ஒட்டிக்கொள்க. சுட்டு மேற் கூறுப. (௨)

௨௦௫.+ சுட்டின் முன்னர் ஞநமத் தோன்றின்
ஒட்டிய வொற்றிடை மிகுதல் வேண்டும்.

இது 'ஞநமயவ' (எழு-௧௪௪) என்னுஞ் சூத்திரத்தான் மென்கணம் இயல்பாகும் என் முற்கூறியதனை விலக்கி மிக்கு முடிக என்றலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

இதன் பொருள்: சுட்டின்முன்னர் ஞநமத் தோன்றின்—அகரச் சுட்டின் முன்னர் ஞநமக்கண் முதலாகிய மொழிவரின், ஒட்டிய ஒற்று இடைமிகுதல் வேண்டும்—தத்தமக்குப் பொருந்தின ஒற்று இடைமிகுதலை விரும்பும் ஆசிரியன் என்றவாறு.

அஞ்ஞாண் அந்நூல் அம்மணி எனவரும்.

ஒட்டியவென்றதனான் அஞ்ஞெளிந்தது அந்நன்று அம்மாண்டது என அகரந் தன்னையுணர நின்றவழியும் மிகுதல் கொள்க. (௩)

௨௦௬.+ யவமுன் வரினே வகர மொற்றும்.

இதுவும் அது.

---

ஈண்டு உவமக் கிளவியுமென்றார், வேறுபடுத்தல் - உவமை இடைச் சொல்லாகக் கோடல்.



இதன் பொருள்: யவ முன்வரின்—யகர வகர முதன் மொழி அகரச்சுட்டின் முன்னே வரின், வகரம் ஒற்றும்—இடைக்கண் வகரம் ஒற்றும் என்றவாறு.

உதாரணம்: அவ்யாழ் அவ்வளை என வரும்.

வருமொழி முற்கூறியவதனால் அகரந் தன்னையுணர நின்ற வழியும் வகரம் மிகுதல் கொள்க. அவ்வளைந்தது என வரும். (௪)

௨௦௭.+ உயிர்முன் வரினு மாயிய றிரியாது.

இதுவும் அது.

இதன் பொருள்: உயிர்முன் வரினும் ஆயியல் திரியாது—உயிர்கள் அகரச்சுட்டின்முன் வரினும் முற்கூறிய வகரம் மிக்கு வரும் இயல்பிற் றிரியாது என்றவாறு.

அ என நின்ற சுட்டின் முன்னர் அடை என வருவித்து வகரம் ஒற்றித் தன்னுரு இரட்டி உயிரேற்றி அவ்வடை அவ்வாடை அவ்விலை அவ்வீயம் அவ்வுரல் அவ்வூர்தி அவ்வெழு அவ்வேணி அவ்வையம் அவ்வொழுக்கம் அவ்வோடை அவ்வௌவியம் என ஒட்டுக.

'நெடியதன் முன்னர்' (எழு-௧௯௦) என்பதனுள் 'நெறியியல்' என்றதனான் இரட்டுதல் கூறினமையின், அது நிலைமொழித் தொழிலென்பது பெறப்பட்டது. வருமொழி முற்கூறியவதனான் அகரந் தன்னை யுணரநின்றவழியும் வகரம் மிகுதல் கொள்க. அவ்வழகிது எனவரும். திரியாதென்றதனான் மேற்சுட்டு நீண்டவழி வகரக்கேடு கொள்க. (௫)

௨௦௮. நீட வருதல் செய்யுளு ளுரித்தே.

இஃது எய்தியது விலக்கிச் செய்யுட்கு ஆவதோர் விதி கூறுகின்றது.

இதன் பொருள்: நீட வருதல் செய்யுளுள் உரித்து—அகரச்சுட்டு நீடவருதல் செய்யுளிடத்து உரித்து என்றவாறு.

**உதாரணம் :** 'ஆயிருதிணையி னிசைக்குமனசொல்லே' (சொல்-க) 'ஆயிருபாற்சொல்' (சொல்-௩) எனவரும். இது வருமொழி வரையாது கூறலின் வன்கணம் ஒழிந்தகணம் எல்லாவற்றோடுஞ் சென்றது. அவற்றிற்கு உதாரணம் வந்தவழிக் காண்க. இந்நீட்சி இருமொழிப்புணர்ச்சிக்கண் வருதலின் 'நீட்டும்வழி நீட்டல்' ஆகாமை உணர்க. (௬)

உ௦௯. சாவ வென்னுஞ் செயவெ னெச்சத்
திறுதி வகரங் கெடுதலு முரித்தே.

இது மேல் வினையெஞ்சுகிளவி என்ற எச்சத்திற்கு எய்தாததெய்துவித்தது.

**இதன் பொருள் :** சாவ என்னுஞ் செயவென் எச்சத்து இறுதி வகரம்—சாவவென்று சொல்லப்படுஞ் செயவெனெச்சத்து இறுதிக்கண் நின்ற அகரமும் அதனைப் பற்றப்பட்ட வகரமும், கெடுதலும் உரித்து—கெட்டுநிற்றலுங் கெடாதுநிற்றலும் உரித்து என்றவாறு.

**உதாரணம் :** கோட்டிடைச் சாக்குத்தினன் எனவரும். சீறினன் தகர்த்தான் புடைத்தான் என ஒட்டுக. கெடாதது முன்னர் முடித்தாம்.

இதனை 'வினையெஞ்சுகிளவி' (எழு-உ௦௪) என்றதன்பின் வையாததனன் இயல்புகணத்தும் இந்நிலைமொழிக்கேடு கொள்க. சாஞான்றான் நீண்டான் மாண்டான் யாத்தான் வீழ்த்தான் அடைந்தான் என ஒட்டுக. (எ)

உக௦. அன்ன வென்னு முவமக் கிளவியு
மண்மை சுட்டிய விளிநிலைக் கிளவியுஞ்
செய்ம்மன வென்னுந் தொழிலிறு சொல்லு
மேவல் கண்ணிய வியங்கோட் கிளவியுஞ்

---

6. வருமொழி வரையாது கூறியதென்றது, சூத்திரத்தில் நீட வருதற்கு வருமொழி வரையறை கூறாமையை. நீட்டும் வழி நீட்டல் ஒருமொழிக்கண் வரும்.

7. முன்னர் முடித்தாம் என்றது, 'வினையெஞ்சு கிளவியும்' என்னும் சூத்திரத்துள் முடித்தமையை.



செய்த வென்னும் பெயரெஞ்சு கிளவியுஞ்
செய்யிய வென்னும் வினையெஞ்சு கிளவியு
மம்ம வென்னு முரைப்பொருட் கிளவியும்
பலவற் றிறுதிப் பெயர்க்கொடை யுளப்பட
வன்றி யனைத்து மியல்பென மொழிப.

இஃது அகர ஈற்றுள் ஒருசார் பெயர்க்கும் வினைக்கும் இடைக்கும் முன்னெய்தியது விலக்கியும் எய்தாததெய்துவித்தும் இலக்கணங் கூறுகின்றது.

**இதன் பொருள் :** அன்ன என்னும் உவமக் கிளவியும்—அன்ன என்று சொல்லப்படும் உவமவுருபாகிய அகர ஈற்று இடைச்சொல்லும், அண்மை சுட்டிய விளிநிலைக் கிளவியும்—அணியாரைக் கருதின விளியாகிய நிலைமையினையுடைய அகர ஈற்று உயர்திணைப் பெயர்ச்சொல்லும், செய்ம்மன என்னுந் தொழிலிறுசொல்லும்—செய்ம்மன என்று சொல்லப்படுந் தொழிற்சொற் பொருள் தருங்கால் உம் ஈற்றான் இறுஞ் சொல்லும், ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்—ஒருவரான் ஏவற்றொழின்மை கருதிக் கூறப்பட்ட ஏவற்பொருண்மையை முற்ற முடித்தலை உணர்த்தும் அகர ஈற்று வினைச்சொல்லும், செய்த என்னும் பெயரெஞ்சு கிளவியும்—செய்த என்று சொல்லப்படும் பெயரெச்சமாகிய அகர ஈற்று வினைச்சொல்லும், செய்யிய என்னும் வினையெஞ்சு கிளவியும்—செய்யிய என்று சொல்லப்படுகின்ற வினையெச்சமாகிய அகர ஈற்று வினைச்சொல்லும், அம்ம என்னும் உரைப்பொருட் கிளவியும்—அம்ம என்று சொல்லப்படும் எதிர்முகமாக்கிய அகர ஈற்று இடைச்சொல்லும், பலவற்று இறுதிப் பெயர்க்கொடை உளப்பட—பன்மைப் பொருளை உணர்த்தும் அகர ஈற்றுப் பெயர்கள் ஐந்தினையும் முற்கூறியவற்றோடு கூட்டிக்கொடுத்தல் உள்ளிட்டு, அன்றி அனைத்தும் இயல்பென மொழிப—அவ் வெட்டுச் சொல்லும் இயல்பாய் முடியுமென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

**உதாரணம் :** பொன்னன்ன குதிரை செந்நாய் தகர் பன்றி என இது 'வினையெஞ்சு கிளவி' (எழு-உ௦௪) என்பதனன் மிக்குமுடிதலை விலக்கிற்று. ஊர கேள் செல் தா போ என 'உயிரீறாகியவுயர்திணை' என்னுஞ் சூத்திரத்தான் இயல்பாய்

முடிவது ஈண்டு னகரங்கெட்டு அகர ஈருய் விளியேற்று முடிந்தமையின் எய்தாததெய்துவித்தது. உண்மனகுதிரை செந்நாய் தகர் பன்றி என்பனவற்றிற்கு உண்ணுமென விரித்தும் யானுண்மன நீயுண்மன அவனுண்மன என நிறுத்திக் கூழ் சோறு தேன் பால் என வருவித்தும் முடிக்க. இவற்றிற்கும் அவ்வாறே விரித்துக்கொள்க. இங்ஙனஞ் செய்யுமென்பதன் பொருட்டாகிய மனவெ னிறுதிச்சொல் அக்காலம் வழங்கியதாதலின் ஆசிரியர் அதனையும் வேருக எடுத்தோதினர். யானும் நின்னேடுடன்வருக அவன்செல்க அவள்செல்க அவர்செல்க என நிறுத்திக் காட்டின்கண் செறுவின்கண் தானைக்கண் போரின்கண் என வருவித்து முடிக்க. இவை ஏவற்பொருண்மையை முற்ற முடித்தன. ஏவல் கண்ணிய வெனவே ஏவல் கண்ணுதனவும் உளவாயின. அவை ; நீசெல்க அதுசெல்க அவைசெல்க என நிறுத்தி முற்கூறிய காடு முதலியவற்றை வருவித்து முடிக்க. இவை ஏவற் பொருண்மையை முற்ற முடியாதன. அஃறிணை ஏவற் பொருண்மையை முற்ற முடியாமை வினையியலுள் வியங்கோட் கண்ணே பொருளியலுஞ் செய்யுளியலும்பற்றிக் கூறுதும். மனவும் வியங்கோளும் எய்தாததெய்துவித்தது. உண்டகுதிரை செந்நாய் தகர் பன்றி இதுவும் அது. இதற்கு உரிய உண்ணுத குதிரையென்னும் எதிர்மறையும் நல்லகுதிரையென்னுங் குறிப்புங் கொள்க. உண்ணிய கொண்டான் சென்ருன் தந்தான் போயினுன் இது முன்னர் வினையெச்சம் வல்லெழுத்துப்பெறுக என்றலின் எய்தியது விலக்கிற்று. அம்மகொற்ற சாத்தா தேவா பூதா என்பது இடைச்சொல்லாதலின் எய்தாததெய்துவித்தது. இதுகேளாய் கொற்றனே என எதிர்முகமாக்கியவாறு காண்க. பல்லகுதிரை பலகுதிரை சில்லகுதிரை சிலகுதிரை உள்ள குதிரை இல்லகுதிரை செந்நாய் தகர் பன்றி என ஒட்டுக. இக்காலத்துப் பல்ல, சில்ல என்பன வழங்கா. இதுவும் விளக்குறித்து என்ருற்போலப் பலக்குதிரையென வல்லெழுத் தெய்தியதனை விலக்கிற்று. விளிநிலைக் கிளவியாகிய பெயர் முற்கூருததனேனே செய்யுமென்பதன் மறையாகிய செய்யாதவென்பதற்கும் இவ்வியல்பு முடிபுகொள்க. அது வாராத கொற்றனென

8. எய்தாததெய்துவித்தது என்றது, 'வினையெஞ்சு கிளவியும்' என்னுஞ் சூத்திரத்தால் எய்தாததை எய்துவித்தது. அது செல்க என்புழி அது என்று சுட்டிய அஃறிணைப்பொருள் செல்க என்னும்



வரும். இவ்வியல்பு முடிபிற்குச் செய்ம்மன சிறத்தலின் வியங்கோட்குமுன் வைத்தார். ஏவல் கண்ணிய என்பதனன் ஏவல் கண்ணுததும் உளதென்றுகூறி 'மன்னியபெருமநீ' (புறம்—கூக) என உதாரணங் காட்டுகவெனின், அது பொருந்தாது ; கூறுகின்ருன் அவன் நிலைபெற்றிருத்தல் வேண்டுமென்றே கருதிக் கூறுதலின் அதுவும் ஏவல்கண்ணிற்றேயாம். எல்லாவற்றினுஞ் சிறந்த பலவற்றிறுதி முற்கூறுகவெனின், அது வழக்கிற்குஞ் செய்யுட்கும் வேறுவேறு முடிபுடைத்தென்றற்குஞ் செய்யுண் முடிபு இவ்வியல்புபோற் சிறப்பின்றென்றற்கும் அகர ஈற்றுள் முடிபு கூருது நின்ற முற்றுவினையும் வினைக்குறிப்பும் இவ்வியல்பு முடிபு பெறுமென்றற்கும் பின் வைத்தார். உண்டனகுதிரை இது முற்றுவினை. கரியன்குதிரை இது முற்றுவினைக் குறிப்பு. இஃது இயல்புகணத்து முடிபு 'ஞநமயவ' (எழு—கசச) என்புழிப் பொருந்துவனவெல்லாங் கொள்க. (அ)

உகக. வாழிய வென்னுஞ் செயவென் கிளவி
யிறுதி யகரங் கெடுதலு முரித்தே.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தது.

**இதன் பொருள் :** வாழிய என்னுஞ் செய என் கிளவி—வாழுங்காலம் நெடுங்காலமாகுக என்னும் பொருளைத்தரும் வாழியவென்று சொல்லப்படுஞ் செயவெனெச்சக் கிளவி, இறுதி யகரங் கெடுதலும் உரித்து—இறுதிக்கண் அகரமும் அதனற் பற்றப்பட்ட யகரவொற்றுங் கெட்டு முடிதலும் உரித்து என்றவாறு.

கெடுதலுமெனவே, கெடாதுமுடிதலே பெரும்பான்மையென்றவாறு.

வாழிகொற்ற சாத்தா தேவா பூதா என வரும். வாழிய என்பதே பெரும்பான்மை. வாழிய யான் நீ அவன் அவள் அவர்

ஏவலை உணர்ந்து செல்லமாட்டாமையின் அஃறிணைக்கண்வரும் வியங்கோளை ஏவல்கண்ணுதன என்ருர்.

9. 'வாழியவென்னுஞ் சேயவென்கிளவி' எனச் சூத்திரத்தைத் திருத்துக. இஃது ஒன்றை ஒன்று விசேடித்து முற்ருதலை உணர்த்தும். சேய என்பதற்கு நீண்டகாலமாகுக என்பது பொருள். இஃது

அது அவை என இது மூன்றிடத்துஞ் சேறலின் ‘உயிரீறாகிய முன்னிலைக் கிளவியும்’ (எழு-௧௫௧) என்புழி முன்னிலையியல் பாம் என்றதன்கண் அடங்காதாயிற்று. இதுகுறிப்புவியங்கோள்.

ஒன்றென முடித்தலான் இஃது இயல்புகணத்துங் கொள்க. வாழி ஞெள்ளா என வரும். இவை வாழ்த்தப்படும் பொருள் வாழவேண்டுமென்னுங் கருத்தினனைக் கூறுதலின் ஏவல்கண்ணிற்றேயாம். அல்லாக்கால் ‘வாழ்த்தியல் வகையே நாற்பாற்கு முரித்தே’ (செய்யுளியல்-௧௦௯) என்பதற்கும் வாழ்த்தியலாகச் சான்றோர் கூறிய செய்யுட்களுக்கும் பயனின்றாமென்று உணர்க. (௯)

௨௧௨. உரைப்பொருட் கிளவி நீட்டமும் வரையார்.

இஃது அம்மவென்பதற்கு எய்தாததெய்துவித்தது.

**இதன் பொருள் :** உரைப்பொருட் கிளவி—எதிர்முகமாக்கும் பொருளையுடைய அம்மவென்னுஞ் சொல், நீட்டமும் வரையார்—அகரமாகி நிற்றலேயன்றி ஆகாரமாய் நீண்டுமுடிதலையும் நீக்கார் என்றவாறு.

அம்மா கொற்றா சாத்தா தேவா பூதா என வரும். உம்மையால் நீளாமையே பெரும்பான்மையாம்; வரையாது கூறினமையின் நீட்சி இயல்பு கணத்துங் கொள்க அம்மா ஞெள்ளா நாகா மாடா வடுகா ஆதா என ஒட்டுக. (௧௦)

௨௧௩. பலவற் றிறுதி நீடுமொழி யுளவே
செய்யுள் கண்ணிய தொடர்மொழி யான.

இது முற்கூறிய பலவற்றிறுதிக்கண் சிலவற்றிற்குச் செய்யுண்முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** பலவற்று இறுதி நீடும் மொழி உள—பலவற்றை உணர்த்தும் ஐவகைச்சொல்லின் இறுதி அகரம் நீண்டு முடியுமொழிகளுஞ் சில உள, செய்யுள் கண்ணிய தொடர்மொழி ஆன—யாண்டுளவெனிற் செய்யுளாதலைக் கருதிய ஒன்றோடொன்று தொடர்ச்சிப்படுஞ் செய்யுண் முடிபுடைய மொழிகளின்கண் என்றவாறு.

உடைத்தென்னாது உளவென்ற பன்மையான் வருமொழிக்கட் சில என்பது வந்து நீடுமென்று கொள்க. செய்யுளான என்னாது செய்யுள் கண்ணிய தொடர்மொழியான என்றதனாற், பல என்பதன் இறுதி அகரம் நீண்டுழி நிலைமொழி அகரப்பேறும் வருமொழி ஞகரமாகிய மெல்லெழுத்துப்பேறும், வருமொழியிறுதி நீண்டவழி அகரப்பேறும் மகரமாகிய மெல்லெழுத்துப்பேறுங் கொள்க.

**உதாரணம் :** ‘பலாஅஞ் சிலாஅ மென்மனார் புலவர்’; இதன் சொன்னிலை பலசில என்னுஞ் செவ்வெண். (௧௧)

௨௧௪. தொடர லிறுதி தம்முற் றாம்வரின்
லகரம் றகரவொற் றாகலு முரித்தே.

இது பலசில என்பனவற்றிற்கு இயல்பேயன்றித் திரிபும் உண்டென எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

**இதன் பொருள் :** தொடர் அல் இறுதி—தொடர்மொழியல்லாத ஈரெழுத்தொருமொழியாகிய பலசில என்னும் அகர ஈற்றுச் சொல், தம்முன் தாம்வரின்—தம்முன்னே தாம் வருமாயின், லகரம் றகரவொற்று ஆகலும் உரித்து—தம் ஈற்றினின்ற லகரவொற்று றகரவொற்றாகத் திரிந்து முடிதலும் உரித்து என்றவாறு.

உம்மையாற் றிரியாமையும் உரித்தென்றார்.

**உதாரணம் :** பற்பலகொண்டார் சிற்சிலவித்தி என வரும். அகர ஈற்றுச் சுட்டல்லாத குற்றெழுத்து ஓரெழுத் தொருமொழியாகுவன இன்மையின் தொடரலிறுதி யெனவே ஈரெழுத்

---

உரையாசிரியருரையானும் நன்கு விளங்கும். சேய என்பது முற்றுமொழியாய் அஃறிணைப் பன்மையில் வருமாயினும் ஈண்டு வாழிய என்பதனால் விசேடிக்கப்பட்டமையின் வியங்கோள் முற்றாதலை உணர்த்துமென்க. ‘வாழ்த்தியல் வகையே நாற்பாற்கு முரித்தே’ [செ-௧௦௯].

**11.** செவ்வெண் - உம்மை தொக்கு வருவது.

**12.** வாராததனால் வந்தது முடித்தலாவது - ஒருபொருண்மைக்கு வேண்டும் இலக்கணம் நிரம்ப வாராததோர் சூத்திரத்தானே அங்ஙனம் வந்த பொருண்மைக்கு வேண்டும் முடிபு கொள்ளச்செய்தல், இங்ஙே

தொருமொழியே உணர்த்திற்று. தன்முனென்றது தம்முனென்ற பன்மையாற் பலசில என நின்ற இரண்டுந் தழுவப்பட்டன.

தம்முன்வரினென்றது தாமென்றதனாற் பலவின்முன் பல வருதலுஞ் சிலவின்முன் சிலவருதலுங் கொள்க. லகரம் றகரவொற்றுமென ஒற்றிற்குத் திரிபு கூறி அகரங்கெடுதல் கூறிற்றிலரெனின், அது வாராததனால் வந்ததுமுடித்தலென்னும் உத்தி பெறவைத்ததென்று உணர்க. இதனை ஞாபகமென்பாரும் உளர். அருத்தாபத்தியால் தம்முன் தாம் வரினெனவே தம்முன் பிற வரின் லகரம் றகரவொற்றாகாது அகரங் கெடுமென்று கொள்ளப்படும்.

**உதாரணம்:** பல்கடல் சேனை தானை பறை எனவும், பல்யானை பல்வேள்வி எனவும், சில்காடு சேனை தானை பறை எனவும், சில்யானை சில்வேள்வி எனவும் வரும். உரித்தென்றது அகர ஈற்றொருமைபற்றி. (௧௨)

௨௧௫. வல்லெழுத் தியற்கை யுறழத் தோன்றும்.

இது முற்கூறிய இரண்டற்கும் உள்ளதோர் முடிபு வேற்றுமை கூறுகின்றது.

**இதன் பொருள்:** வல்லெழுத்து இயற்கை—முற்கூறிய பலசில வென்னும் இரண்டற்கும் அகர ஈற்றுப் பொதுவிதியிற் கூறிய வல்லெழுத்துமிகும் இயல்பு, உறழத்தோன்றும்—மிகுதலும் மிகாமையுமாய் உறழ்ந்துவரத் தோன்றும் என்றவாறு.

**உதாரணம்:** பலப்பல பலபல சிலச்சில சிலசில என வரும். ஈண்டுந் தம்முன் தாம்வருதல் கொள்க. இயற்கை யென்றதனான் அகரங்கெட லகரந் திரிந்துந் திரியாதும் உறழ்ந்தும் முடிதலுங் கொள்க. பற்பல பல்பல சிற்சில சில்சில என வரும்.

நிரம்ப வராதது - அகரக்கேடு சொல்லாமை. லகரம் றகரமாகத் திரியும் எனவே அதில் ஏறிநின்ற அகரக்கேடு ஈண்டுச் சொல்லப்படாததாயினும் அஃதும் இவ்வுத்தியாற் கொள்ளப்படுமென்பது கருத்து. ஞாபகம் என்றது, ஞாபகம் என்னும் உத்தியை. அது முன் விளக்கப்பெற்றது. அருத்தாபத்தியாற் கொள்ளப்படுமென முடிக்க. உரித்தென்றது - சூத்திரத்திலுள்ள உரித்தென்னுஞ் சொல்லை.



தோன்றுமென்றதனான் அகரங்கெட லகரம் மெல்லெழுத்தும் ஆய்தமுமாகத் திரிந்து முடிதலுங் கொள்க. பன்மீன்வேட்டத்து பன்மலர் பஃறுலி பஃறுழிசை சின்னூல் சிஃறுழிசை என வரும். இது முன்னர்த் தோன்றுமென்று எடுத்தோதிய சிறப்புவிதியால் அகரங்கெட நின்ற லகரவொற்றின் முடிபாகலின் தகரம் வருவழி ஆய்தமென்பதனான் முடியாது. (௧௩)

௨௧௬. வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே.

இஃது அகர ஈற்றிற்கு அல்வழிமுடிபு கூறி வன்கணத்தோடு வேற்றுமை தொக்குநின்ற முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள்:** வேற்றுமைக் கண்ணும் அதனோரற்று—அகர ஈற்றுப்பெயர் வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக் கண்ணும் முற்கூறிய அல்வழியோடு ஒருதன்மைத்தாய்க் கசதப முதன்மொழி வந்துழித் தகரம் ஒத்தவொற்று இடைமிக்கு முடியும் என்றவாறு.

**உதாரணம்:** இருவிளக் கொற்றன் சாத்தன் தேவன் பூதன் என வரும். இருவிளக் குறுமை சிறுமை தீமை பெருமை எனக் குணவேற்றுமைக் கண்ணுங் கொள்க. இருவிள வென்பது ஓலை; வேணாட்டகத்து ஓரூர்; கருவூரினகத்து ஒரு சேரியுமென்ப. இருவிளவிற் கொற்றன் என விரிக்க. (௧௪)

௨௧௭. மரப்பெயர்க் கிளவி மெல்லெழுத்து மிகுமே.

இஃது அகர ஈற்று மரப்பெயர்க்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

**இதன் பொருள்:** மரப்பெயர்க் கிளவி மெல்லெழுத்து மிகும்—அகர ஈற்று மரப்பெயராய சொல் வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண் மெல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

**உதாரணம்:** அதங்கோடு விளங்கோடு செதிள் தோல் பூ என வரும்.

இது 'கசதப முதலிய' (எழு-௧௪௩) என்பதனான் முடியும்.

உகஅ. மகப்பெயர்க் கிளவிக் கின்னே சாரியை.

இஃது அகர ஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

**இதன் பொருள் :** மகப்பெயர்க் கிளவிக்கு இன்னே சாரியை—அகர ஈற்று மக என்னும் பெயர்ச் சொல்லிற்கு வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண் வருஞ் சாரியை இன் சாரியை என்றவாறு.

**உதாரணம் :** மகவின்கை செவி தலை புறம் என வரும். சாரியைப்பேறு வரையாது கூறியவழி நான்கு கணத்துக்கண்ணுஞ் செல்லுமென்பது ஆசிரியர்க்குக் கருத்தாகலின் மகவின் ஞாண் நூல் மணி யாழ் வட்டு அடை என ஒட்டுக.

மேல் அவண் என்றதனான் இன்சாரியை பெற்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க. (கரு)

உககூ. அத்தவண் வரினும் வரைநிலை யின்றே.

இஃது ஈற்று வல்லெழுத்தும் அத்தும் வருத்தலின் எய்தியதன்மேற் சிறப்பு விதி கூறுகின்றது.

**இதன் பொருள் :** அவண்—முற்கூறிய மகவிடத்து, அத்து வரினும், வரைநிலை இன்று—இன்னேயன்றி அத்துச்சாரியையும் ஈற்று வல்லெழுத்தும் வந்து முடியினும் நீக்கும் நிலைமையின்று என்றவாறு.

**உதாரணம் :** மகத்துக் கை செவி தலை புறம் என வரும்.

அவண் என்றதனால் மகப்பால்யாடு என வல்லெழுத்துப் பேறும், மகவின்கை என மேல் இன்சாரியை பெற்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்வும், விளவின்கோடு என உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கட் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்வுங் கொள்க. நிலையென்றதனால் மகம் பால்யாடு என மெல்லெழுத்துப் பேறுங் கொள்க. (கஎ)



உஉ0. பலவற் றிறுதி யுருபிய னிலையும்.

இஃது ஈற்று வல்லெழுத்தும் வற்றும் வருத்தலின் எய்திய தன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

**இதன் பொருள் :** பலவற்றிறுதி—பல்ல பல சில உள்ள இல்ல என்னும் பலவற்றை யுணர்த்தும் அகரஈற்றுச் சொற்களின் இறுதி, உருபியல் நிலையும்—உருபியற்கண் வற்றுப்பெற்றுப் புணர்ந்தாற்போல உருபினது பொருட் புணர்ச்சிக்கண்ணும் வற்றுப்பெற்றுப் புணரும் என்றவாறு.

ஈற்று வல்லெழுத்து அதிகாரத்தாற் கொள்க.

**உதாரணம் :** பல்லவற்றுக்கோடு பலவற்றுக்கோடு சிலவற்றுக்கோடு உள்ளவற்றுக்கோடு இல்லவற்றுக்கோடு, செதிள் தோல் பூ என ஒட்டுக. உருபு விரிந்துழி நிற்குமாறு போலன்றி அவ்வுருபு தொக்கு அதன்பொருள் நின்று புணருங்கால் வேறுபாடு உடைமையின் அவ்வேறுபாடுகள் ஈண்டு ஓதினார் இத்துணையு மென்று உணர்க. (கஅ)

உஉக. ஆகார விறுதி யகர வியற்றே.

இஃது ஆகார ஈற்றுப்பெயர் அல்வழிக்கண் முடியுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** ஆகார இறுதி அகர இயற்று—ஆகார ஈற்றுப்பெயர் அல்வழிக்கண் அகர ஈற்று அல்வழியது இயல்பிற்றாய் வல்லெழுத்து வந்துழித் தத்தம் ஒத்த ஒற்று இடைமிகும் என்றவாறு.

**உதாரணம் :** மூங்காக்கடிது தாராக்கடிது சிறிது தீது பெரிது என ஒட்டுக. (ககூ)

உஉஉ. செய்யா வென்னும் வினையெஞ்சு கிளவியு மவ்வியல் திரியா தென்மனார் புலவர்.

இஃது ஆகார ஈற்று வினைச்சொல் முடிபு கூறுகின்றது.

**இதன்பொருள் :** செய்யா என்னும் வினையெஞ்சு கிளவியும்—செய்யா வென்னும் வினையெச்சமாகிய சொல்லும் உம்மையாற் பெயரெச்ச மறையாகிய சொல்லும், அவ்வியல் திரியாது என்

மனர் புலவர்—வல்லெழுத்து மிக்கு முடியும் அவ்வியல்பிற் றிரியா தென்று சொல்லுவார் புலவர் என்றவாறு.

**உதாரணம் :** உண்ணுக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் எனவும், உண்ணுக்கொற்றன் சாத்தன் தேவன் பூதன் எனவும் வரும். (௨௦)

௨௨௩. உம்மை யெஞ்சிய விருபெயர்த் தொகைமொழி
மெய்ம்மை யாக வகர மிகுமே.

இஃது ஆகார ஈற்று அல்வழிக்கண் உம்மைத்தொகை முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** உம்மை எஞ்சிய இருபெயர்த் தொகை மொழி—உம்மை தொக்குநின்ற இருபெயராகிய தொகைச்சொற்கள், மெய்ம்மையாக அகரம் மிகும்—மெய்யாக நிலைமொழியீற்று அகரம் மிக்குமுடியும் என்றவாறு.

**உதாரணம் :** உவாஅப்பதினான்கு இராஅப்பகல் என வரும். மெய்ம்மையாக என்பதனான் வல்லெழுத்துக் கொடுக்க. இஃது எழுவாயும் பயனிலையுமன்றி உம்மைத்தொகையாதலின் மாட்டேற்றான் வல்லெழுத்துப் பெறுதாயிற்று.

உம்மைதொக்க என்னாது எஞ்சிய என்ற வாய்பாட்டு வேற்றுமையான் அராஅப்பாம்பு எனப் பண்புத்தொகைக்கும் இராஅக்கொடிது என எழுவாய்முடிபிற்கும் இராஅக்காக்கை எனப் பெயரெச்சமறைக்கும் அகரப்பேறு கொள்க. இருமொழி வரையாது கூறினமையின் இயல்புகணத்துக் கண்ணும் அகரப்பேறு கொள்க. இருஅவழுதுணங்காய் என வரும். இஃது உம்மைத் தொகை. அராஅக்குட்டி என்பது பண்புத்தொகையும் வேற்றுமைத்தொகையுமாம். உவாஅப்பட்டினி என்பது வேற்றுமைத் தொகை. (௨௧)

21. மாட்டேறு என்றது, 'ஆகாரவிறுதியகரவியற்றே' என்றதை. எனவே அகரவீற்றுவிதி எழுவாய்த் தொடருக்கேயாதலின் அதனோடு மாட்டிய ஆகாரவீற்றுவிதி எழுவாய்த் தொடருக்கேயுரியது. ஆதலின் உம்மைத்தொகை • அம்மாட்டேற்றான் வல்லெழுத்துப் பெறுதாயிற் றென்க.



௨௨௪. ஆவு மாவும் விளிப்பெயர்க் கிளவியும்
யாவென் வினவும் பலவற் றிறுதியு
மேவல் குறித்த வுரையசை மியாவுந்
தன்றொழி லுரைக்கும் வினாவின் கிளவியோ
டன்றி யனைத்து மியல்பென மொழிப.

இஃது எய்தியது விலக்கலும் எய்தாததெய்துவித்தலும் உணர்த்துகின்றது.

**இதன் பொருள் :** ஆவும்—ஆவென்னும் பெயரும், மாவும்—மாவென்னும் பெயரும், விளிப்பெயர்க் கிளவியும்—விளித்தலை யுடைய பெயராகிய உயர்திணைச்சொல்லும், யாவென் வினவும்—யாவென்னும் வினாப்பெயரும், பலவற்று இறுதியும்—பன்மைப் பொருளை உணர்த்தும் ஆகார ஈற்றுப் பெயரெச்ச மறையாகிய முற்று வினைச்சொல்லும், ஏவல் குறித்த உரையசை மியாவும்—முன்னிலை யேவல் வினையைக் கருதிவரும் எதிர்முகமாக்குஞ் சொல்லினைச் சேர்ந்த மியா வென்னும் ஆகாரஈற்று இடைச்சொல்லும், தன் தொழில் உரைக்கும் வினாவின் கிளவியொடு—தனது தொழிலினைச் சொல்லும் ஆகார ஈற்றுத் தன்மையாகிய வினைச் சொல்லோடு கூட, அன்றியனைத்தும்—அவ் வெழுவகையாகிய சொல்லும், இயல்பென மொழிப—இயல்பாய் முடியுமென்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

**உதாரணம் :** ஆகுறிது மாகுறிது சிறிது தீது பெரிது குறிய சிறிய தீய பெரிய என ஒட்டுக. இஃது ஆகார ஈற்றுப் பெயராகலின் மிக்கு முடிவன மிகாவென எய்தியது விலக்கிற்று. ஊராகேள் செல் தா போ என இஃது இயல்பாமென்ற உயர் திணைப்படர்க்கைப்பெயர் திரிந்து முன்னிலையாய் விளியேற்றலின் எய்தாத தெய்துவித்தது. யா குறிய சிறிய தீய பெரிய என இதுவும் பெயராகலின் எய்திய இயைபு வல்லெழுத்து விலக்கியதாம். உண்ணு குதிரைகள் செந்நாய்கள் தகர்கள் பன்றிகள் என இஃது எய்தியது விலக்கிற்று, செய்யாவென்னுஞ் சூத்திரத்து உம்மையாற் பெற்ற வல்லெழுத்தினை விலக்கலின். கேண்மியா கொற்றா சாத்தா தேவா பூதா எனவும், உண்கா கொற்றா

22. 'ஏவல் குறித்த உரையசைக் கிளவியும்' என்பதற்கு இவ்வுரை பொருந்தாது. உரையாசிரியர் உரையே பொருத்தமாம்.

சாத்தா தேவா பூதா எனவும் இவ்விடைச்சொற்கள் முடியாமையின் எய்தாத தெய்துவித்ததுமாம். உண்கா என்பது யானுண்பேனே என்னும்பொருட்டு. இயல்பு கணத்துக் கண்ணுயின் 'ஞநமயவ' (எழு-கசச) என்பதனுன் முடிபெய்தும். (உஉ)

உஉரு. வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே.

இஃது ஆகார ஈறு வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண் முடியுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** வேற்றுமைக் கண்ணும்—ஆகார ஈற்றுப் பெயர் அல்வழிக்கண்ணேயன்றி வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக்கண்ணும், அதனோரற்று—அகர ஈற்று அல்வழியோடு ஒரு தன்மைத்தாய் வல்லெழுத்துவந்துழி அவ்வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

**உதாரணம் :** தாரா மூங்கா வங்கா எனநிறுத்திக் கால் செவி தலை புறம் என வருவித்து வல்லெழுத்துக்கொடுத்து ஒட்டுக. (உங)

உஉசா. குறியதன் முன்னரு மோரெழுத்து மொழிக்கு மறியத் தோன்று மகரக் கிளவி.

இஃது அவ் வீற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது, அகரமும் வல்லெழுத்தும் பெறுதலின்.

**இதன் பொருள் :** குறியதன் முன்னரும்—குற்றெழுத்தின் முன்னின்ற ஆகார ஈற்றிற்கும், ஓரெழுத்து மொழிக்கும்—ஓரெழுத் தொருமொழியாகிய ஆகார ஈற்றிற்கும், அகரக்கிளவி அறியத்தோன்றும்—நிலைமொழிக்கண் அகரமாகிய எழுத்து விளங்கத் தோன்றும் என்றவாறு.

**உதாரணம் :** பலாஅக்கோடு செதிள் தோல் பூ எனவும், காஅக்குறை செய்கை தலை புறம் எனவும் வரும். ஓரெழுத்தொரு மொழி அகரம் பெறுதல் சிறுபான்மை யென்றற்கு அதனைப் பிற்கூறினர். இது நிலைமொழிச் செய்கையாதலிற் பலாஅவிலை பலாஅகார் என இயல்பு கணத்துங் கொள்க. அறிய என்றதனுன் அவ்வகரம் ஈரிடத்தும் பொருந்தினவழிக் கொள்க.

என்னை? எதிர்முகமாக்குஞ்சொல் என்னும் பொருளுக்குச் சென்மியா பொருந்தாமையின்.



இன்னும் இதனுனே அண்ணுஅத்தேரி திட்டாஅத்துக்குளம் என அத்துக் கொடுத்தும், உவாஅத்து ஞான்று கொண்டான் என அத்தும் ஞான்றுங் கொடுத்தும், உவாஅத்தாற்கொண்டான் என அத்தும் ஆனுங் கொடுத்தும் இடாவினுட் கொண்டான் என இன்னும் ஏழனுருபுங் கொடுத்துஞ் செய்கைசெய்து முடிக்க.

இன்னும் இதனுனே மூங்காஅவின்கால் மூங்காவின்றலை என உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கட் சென்றுழி இயைபு வல்லெழுத்துக் கேடுங் கொள்க. (உச)

உஉஎ. இராவென் கிளவிக் ககர மில்லை.

இஃது ஆகார ஈற்றுப்பெயர்க்கு ஒருவழி எய்தியது விலக்குகின்றது.

**இதன் பொருள் :** இராவென் கிளவிக்கு—இராவென்னும் ஆகார ஈற்றுச் சொல்லிற்கு, அகரம் இல்லை—முற்கூறிய அகரம் பெறுதலின்றி வல்லெழுத்துப்பெற்று முடியும் என்றவாறு.

**உதாரணம் :** இராக்கொண்டான் சென்றுன் தந்தான் போயினுன் என வரும். இராஅக்காக்கை இராஅக்கூத்து எனப் பெயரெச்சமறைப்பொருள் தாராது இராவிடத்துக் காக்கை இராவிடத்துக் கூத்து என வேற்றுமை கருதியவழி இராக்காக்கை இராக்கூத்து என அகரம் பெறுதென்று உணர்க. (உரு)

உஉஅ. நிலாவென் கிளவி யத்தொடு சிவணும்.

இஃது அகரம் விலக்கி அதிகார வல்லெழுத்தினோடு அத்து வகுத்தலின் எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

**இதன் பொருள் :** நிலாவென் கிளவி அத்தொடு சிவணும்—நிலா வென்னுஞ் சொல் அத்துச்சாரியையோடு பொருந்தி முடியும் என்றவாறு.

**உதாரணம் :** நிலாஅத்துக்கொண்டான் சென்றுன் தந்தான் போயினுன் என வரும். நிலைமொழித்தொழில் நிலைமொழித் தொ

24. இடாஅ - இறைகூடை.

25: இராஅக்காக்கை - இராத காக்கை. இராவிடத்துக் காக்கை எனின் அகரம் பெறுது இராக்காக்கை எனவரும். ஏனையவுமன்ன.

ழிலை விலக்குமாதலின் அத்துவகுப்ப அகரம் வீழ்ந்தது. இதற்கு ஏழனுருபு விரிக்க. நிலாஅக்கதிர் என்பது 'வேற்றுமைக் கண்ணும்' (எழு–௨௨௫) என்பதனான் ஈற்று வல்லெழுத்துப்பெற்றது. நிலாஅமுற்றமென்பது 'ஒட்டுதற்கொழுகிய வழக்கு' அன்மையின் அத்துப் பெறுதாயிற்று. ஈண்டு வருமொழி வரையாது கூறினமையின் நிலாஅத்து ஞான்றான் என இயல்புகணத்துக் கண்ணும் ஏற்பனகொள்க. (௨௯)

௨௨௯. யாமரக் கிளவியும் பிடாவுந் தளாவு
மாமுப் பெயரு மெல்லெழுத்து மிகுமே.

இது வருமொழி வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

**இதன் பொருள் :** யாமரக் கிளவியும்—யாவென்னும் மரத்தை உணரநின்ற சொல்லும், பிடாவும்—பிடாவென்னுஞ் சொல்லும், தளாவும்—தளாவென்னுஞ் சொல்லும், ஆம் முப்பெயரும் மெல்லெழுத்து மிகும்—ஆகிய மூன்று பெயரும் வல்லெழுத்து மிகாது மெல்லெழுத்துமிக்கு முடியும் என்றவாறு.

**உதாரணம் :** யாஅங்கோடு பிடாஅங்கோடு தளாஅங்கோடு செதிள் தோல் பூ என வரும். வருமொழித் தொழிலாகிய மெல்லெழுத்து வகுப்பவே வல்லெழுத்து விலக்கிற்றும். இதற்கு விலக்காமையின் அகரம் பெற்றது. (௨௭)

௨௩௦. வல்லெழுத்து மிகினு மான மில்லை.

இஃது எய்தியது இகந்துபடாமற் காத்தது, அகரத்தோடு மெல்லெழுத்தேயன்றி வல்லெழுத்தும் பெறுமென்றலின்.

**இதன் பொருள் :** வல்லெழுத்து மிகினும் மானம் இல்லை—முற்கூறிய மூன்று பெயர்க்கும் மெல்லெழுத்தே யன்றி வல்லெழுத்து மிக்கு முடியினும் குற்றமில்லை என்றவாறு.

**உதாரணம் :** யாஅக்கோடு பிடாஅக்கோடு தளாஅக்கோடு செதிள் தோல் பூ என வரும். மானமில்லை என்றதனால் இம்

26. இச்சூத்திரம் நிலைமொழித் தொழிலை விலக்கும். நிலைமொழித் தொழிலை விலக்கல் ௨௪-ம் சூத்திரத்து அகரப்பேற்றை விலக்கல்.



மூன்றற்கும் உருபிற்குச்சென்ற சாரியை பொருட்கட் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க. யாவின்கோடு பிடாவின்கோடு தளாவின்கோடு என வரும். சாரியை பெறவே அகரம் வீழ்ந்தது.

இன்னும் இதனானே யாஅத்துக்கோடு பிடாஅத்துக்கோடு தளாஅத்துக்கோடு என அத்துப் பெறுதலுங் கொள்க, அகரமும் வல்லெழுத்தும் பெறுதலின்.

யாமரக் கிளவி யென்பதனைக் 'குறியதன் முன்னர்' (எழு–௨௨௯) என்பதன்பின் வையாதவதனான் இராவிற் கொண்டான் நிலாவிற் கொண்டான் என உருபிற்குச்சென்ற சாரியை பொருட்கட் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க. (௨௮)

௨௩௧. மாமரக் கிளவியு மாவு மாவு
மாமுப் பெயரு மவற்றோ ரன்ன
வகரம் வல்லெழுத் தவையவ ணிலையா
னகர மொற்று மாவு மாவும்.

இஃது எய்தியது விலக்கி எய்தாததெய்துவித்தது. இம்மூன்றும் வல்லெழுத்துப் பெறா என்றலின் எய்தியது விலக்கிற்று. மாமரத்துக்கு அகரமும் ஙஞநம ஒற்றும் ஏனையவற்றிற்கு னகர ஒற்றும் எய்தாததெய்துவித்தது.

**இதன் பொருள் :** மாமரக் கிளவியும் ஆவும் மாவும் ஆம் முப்பெயரும் அவற்றோரன்ன—மாமரமாகிய சொல்லும் ஆவென்னுஞ் சொல்லும் மாவென்னுஞ் சொல்லுமாகிய மூன்றுபெயரும் யாமரம் முதலியமூன்றோடும் ஒருதன்மையவாய் மெல்லெழுத்துப் பெற்று முடியும், ஆவும் மாவும் அகரம் அவணிலையா னகரம் ஒற்றும்—அவற்றுள் ஆவும் மாவும் புணர்ச்சியிடத்து அகரம் நிலைபெறுவாய் னகர ஒற்றுப் பெற்று முடியும், எனவே அருத்தாபத்தியான் மாமரத்திற்கு அகரம் நிலைபெற்று ஙஞநம

28. அகரமும் வல்லெழுத்தும் பெறுதலின் என்றது, யா முதலிய இவைகள் உயிர் ௨௪-ஞ் சூத்திரத்தானே அகரமும், இச்சூத்திரத்தால் வல்லெழுத்தும் பெறுதலின், அத்துப் பெறுதலுங் கொள்க என்றபடி. என்னை ? அகரமும் வல்லெழுத்தும் பெறுவன அத்தும் பெறுமாதலின். (சூத். ௨௪ நோக்குக) இனி, அத்தின் முதலெழுத்தும் அகரமாதலானும், அத்து வல்லெழுத்தும் பெறுதலானும் என்பது கருத்தாகக் கொள்ளினுமாம்.

ஒற்றும் பெறுமாயிற்று; அவை வல்லெழுத்து அவண் நிலையா—அம் மூன்று பெயரும் முற்கூறிய வல்லெழுத்துப் புணர்ச்சியிடத்து நிலைபெறுவாய் வரும் என்றவாறு.

அவணிலையா என்றதனை இரண்டிடத்துங் கூட்டுக.

**உதாரணம்:** மாஅங்கோடு செதிள் தோல் பூ ஆன்கோடு மான்கோடு செவி தலை புறம் என வரும்.

ஆவும் மாவும் அவற்றோரன்ன என்று ஞாபகமாகக் கூறியவதனால் மாங்கோடென அகர மின்றியும் வரும்.

இனி, அவண் என்றதனாற் காயாங்கோடு நுணாங்கோடு ஆணாங்கோடு என்றாற்போலப் பிறவும் மெல்லெழுத்துப் பெறுதலும், அங்காக்கொண்டான் இங்காக்கொண்டான் உங்காக்கொண்டான் எங்காக்கொண்டான் என இவற்றுள் ஏழாம் வேற்றுமையிடப்பொருள் உணரநின்ற இடைச்சொற்கள் வல்லெழுத்துப் பெறுதலும், ஆவின்கோடு மாவின்கோடு எனச் சிறுபான்மை இன் பெறுதலும், பெற்றுழி வல்லெழுத்து வீழ்வுங் கொள்க.

மாட்டேற்றான் மூன்றுபெயரும் வல்லெழுத்துப் பெறாது மெல்லெழுத்துப் பெற்றவாறும் மாமரம் அகரம் பெற்றவாறும் இச்சூத்திரத்தின்கண்ணழிவான் உணர்க. (௨௯)

௨௩௨. ஆனொற் றகரமொடு நிலையிட னுடைத்தே.

இஃது அவற்றுள் ஆனென்றதற்கு எய்தியதன்மேற் சிறப்பு விதி கூறுகின்றது.

**இதன் பொருள்:** ஆனொற்று—ஆவென்னுஞ் சொன் முன்னர்ப் பெற்று நின்ற னகரவொற்று, அகரமொடும் நிலையிடன் உடைத்து—அகரத்தோடு கூடிநிற்கும் இடனும் உடைத்து என்றவாறு.

---

29. ஞாபகம் என்றது, ஞாபகம் என்னும் உத்தியை. இதன் விளக்கத்தைப் புணரியல் ௨௨-ம் சூத்திரம் பார்க்க.

ஞாபகமாகக்கூறியதென்றது, 'ஆவும் மாவும் அவற்றோரன்ன' என்ற விதியைப் பெறாது வரவும் பெற்றனபோலப் பெரிதாகச் சூத்திரித்தமையை. கண்ணழிவு - பதப்பொருள்கூறல்.



இடனுடைத்தென்றவதனால் வன்கண மொழிந்த கணத்து இம் முடிபெனக் கொள்க.

**உதாரணம்:** 'ஆனநெய் தெளித்து நான நீவி' 'ஆனமணி கறங்குங் கானத் தாங்கண்' என வரும். அகரமொடும் என்ற உம்மையால் அகரமின்றி வருதலே பெரும்பான்மை. ஆனெய் தெளித்து ஆன்மணி ஆன்வால் என வரும். (௩௦)

௨௩௩. ஆன்முன் வரூஉ மீகார பகரந்
தான்மிகத் தோன்றிக் குறுகலு முரித்தே.

இஃது ஆனென்பதற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி கூறுகின்றது.

**இதன் பொருள்:** ஆன்முன் வரூஉம் ஈகார பகரம்—ஆனென்னுஞ் சொன்முன்னர் வருமொழியாய் வருகின்ற ஈகாரத்தோடு கூடிய பகரமாகிய மொழி, தான் மிகத் தோன்றி—அப் பகரமாகிய தான் மிக்கு நிற்ப நிலைமொழி னகரத்திற்குக் கேடு தோன்றி, குறுகலும் உரித்து—ஈகாரம் இகரமாகக் குறுகி நிற்றலும் உரித்து என்றவாறு.

**உதாரணம்:** ஆப்பி என வரும்.

உம்மை எதிர்மறை யாகலான் ஆன்பீ என்றுமாம். (௩௧)

௨௩௪. குறியத னிறுதிச் சினைகெட வுகர
மறிய வருதல் செய்யுளு ளுரித்தே.

இஃது ஆகார ஈற்றுட் சிலவற்றிற்குச் செய்யுண் முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள்:** குறியதன் இறுதிச் சினைகெட—குற்றெழுத்தின் இறுதிக்கண் நின்ற ஆகாரத்தினது இரண்டு மாத்திரையில் ஒருமாத்திரைகெட்டு அஃது அகரமாய் நிற்ப, உகரம் அறிய வருதல் செய்யுளுள் உரித்து—ஆண்டு உகரம் புலப்பட வருதல் செய்யுளிடத்து உரித்து என்றவாறு.

---

31. தோன்றி என்பதை இலேசாகக் கொண்டு னகரத்திற்குக் கேடு கூறுவர் உரையாசிரியர். அதுவே பொருத்தமாம்.

உதாரணம்:

'இறவுப்புறத் தன்ன பிணர்ப்படு தடவுமுதற்
சுறவுக்கோட் டன்ன முள்ளிலைத் தாழை' (நற்-கக)

'புறவுப்புறத் தன்ன புன்காயுகாய்' (குறு-உஎச)

எனவரும். உகரம் வகுப்பவே நிலைமொழி அகரங் கெட்டது. அதிகார வல்லெழுத்து விலக்காமையின் நின்று முடிந்தது. இனி நிலைமொழித் தொழில் வரையாது கூறினமையின் இயல்பு கணத்திற்கும் இவ் விதி எய்திற்றாகலின், ஆண்டு வரும் உகரம் புலப்பட வாராமையும் உணர்க. சுறவுயர்கொடி அரவுயர்கொடி முழவுறழ்தோள் என இவை குறிய தனிநுதிச் சினை கெட்டு வரு மொழி உயிர் முதன் மொழியாய் வருதலின் வகர உடம்படு மெய் பெற்று உகரம் பெறாது முடிந்தன. இவற்றிற்கு இரண்டா முருவு விரிக்க; மூன்றுவதுமாம். (கூஉ)

உகரு. இகர விறுதிப் பெயர்நிலை முன்னர்
வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே.

இஃது இகர ஈற்றுப்பெயர்க்கு அல்வழிமுடிபு தொகைமர பிற் கூறி ஈண்டு வேற்றுமை முடிபு கூறுகின்றது.

இதன்பொருள்: இகர இறுதிப் பெயர்நிலை முன்னர்—இகரஈற்றுப் பெயர்ச்சொன் முன்னர் அதிகாரத்தாற் கசதப முதன்மொழி வந்துழி, வேற்றுமையாயின் வல்லெழுத்து மிகும்—வேற்றுமைப் பொருட்புணர்ச்சியாயின் தமக்குப் பொருந்தின வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

உதாரணம்: கிளிக்கால் சிறகு தலை புறம் எனவரும். புலி நரி என்றாற் போல்வனவும் அவை.

இனிக் கிளிகுறுமை கிளிக்குறுமை எனக் குணம்பற்றி வந்த உறழ்ச்சி முடிபு, மேல் 'வல்லெழுத்து மிகினும்' (எழு-உசகூ) என்னுஞ் சூத்திரத்து 'ஒல்வழியறிதல்' என்பதனாற் கொள்க. (கூக)

32. சுறவுயர்கொடி - சுறவை உயர்த்தியகொடி இரண்டாவது, சுறவால் உயர்த்தியகொடி மூன்றுவது.



உகசு. இனியணி யென்னுங் காலையு மிடனும்
வினையெஞ்சு கிளவியுஞ் சுட்டு மன்ன.

இஃது எய்தாத தெய்துவித்தது, இவ்வீற்று இடைச் சொற்கும் வினைச்சொற்கும் முடிபு கூறுதலின்.

இதன் பொருள்: இனி அணி என்னுங் காலையும் இடனும்—இனியென்றும் அணியென்றுஞ் சொல்லப்படுகின்ற காலத்தையும் இடத்தையும் உணரநின்ற இடைச்சொல்லும், வினையெஞ்சு கிளவியும்—இவ்வீற்று வினையெச்சமாகிய சொல்லும், சுட்டும்—இவ்வீற்றுச் சுட்டாகிய இடைச்சொல்லும், அன்ன—முற்கூறியவாறே வல்லெழுத்து மிக்குமுடியும் என்றவாறு.

உதாரணம்: இனிக்கொண்டான் அணிக்கொண்டான் தேடிக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் எனவும், இக்கொற்றன் சாத்தன் தேவன் பூதன் எனவும் வரும். இவ் விடைச்சொன் மூன்றும் இப்பொழுது கொண்டான் அணிய இடத்தே கொண்டான் இவ்விடத்துக்கொற்றன் என உருபின் பொருள்படவந்த வேற்றுமையாதலின் வேறோதிமுடித்தார். (கூச)

உகஎ. இன்றி யென்னும் வினையெஞ் சிறுதி
நின்ற விகர முகர மாதல்
தொன்றியல் மருங்கிற் செய்யுளு ளுரித்தே.

இஃது இவ் வீற்று வினையெச்சத்துள் ஒன்றற்குச் செய்யுண் முடிபு கூறுகின்றது.

இதன்பொருள்: இன்றி என்னும் வினையெஞ்சு இறுதி நின்ற இகரம் உகரம் ஆதல்—இன்றியென்று சொல்லப்படும் வினையெச்சக் குறிப்பின் இறுதிக்கண் நின்ற இகரம் உகரமாகத் திரிந்து முடிதல், தொன்றியல் மருங்கிற் செய்யுளுள் உரித்து—பழக நடந்த கூற்றையுடைய செய்யுளுள் உரித்து என்றவாறு.

உதாரணம்: 'உப்பின்று புற்கை யுண்கமா கொற்கை யோனே.' உப்பின்றி பெறான்

நின்று என்றதனால் வினையெச்சத்திற்குமுன் எய்திய வல் லெழுத்து வீழ்க்க.

தொன்றியதன்மருங்கின் என்றதனுன் அன்றி யென்பதூஉஞ் செய்யுளில் இம்முடிபு எய்துதல் கொள்க. 'இடனன்று துறத்தல் வல்லி யோரே' 'வாளன்று பிடியா வன்கணுடைவர்' 'நாளன்றுபோகி' (புறம்-கஉச) என வரும். முற்றியலிகரந் திரிந்து குற்றியலுகரமாய் நின்றது. (௩ரு)

உ௩அ. சுட்டி னியற்கை முற்கிளந் தற்றே.

இஃது இகர ஈற்றுச் சுட்டுப்பெயர் இயல்புகணத்தோடு முடியுமாறு கூறுதலின் எய்தாததெய்துவித்தது.

**இதன் பொருள் :** சுட்டின் இயற்கை—இகரஈற்றுச் சுட்டின் இயல்பு, முன் கிளந்தற்று—முன் அகர ஈற்றுச் சுட்டிற்குக் கூறிய தன்மைத்தாம் என்றவாறு.

என்றது 'சுட்டின்முன்னர் ஞநமத்தோன்றி' (எழு-உ0ரு) என்பது முதலிய நான்கு சூத்திரத்தானுங் கூறிய இலக்கணங்களை அவை மென்கணத்து மெல்லெழுத்து மிகுதலும் இடைக்கணத்தும் உயிர்க்கணத்தும் வகரம் பெறுதலுஞ் செய்யுட்கண் வகரங்கெட்டுச் சுட்டு நீடலுமாம்.

இஞ்ஞாண் நூல் மணி எனவும், இவ்யாழ் இவ்வட்டு எனவும், இவ்வடை இவ்வாடை இவ்விலை இவ்வீயம் இவ்வுரல் இவ்வூர்தி இவ்வெழு இவ்வேணி இவ்வையம் இவ்வொடு இவ்வோக்கம் இவ்வௌவியம் எனவும் ஈவயினுன எனவும் வரும்.

'ஈகாண் டோன்றுமெய்ஞ் சிறுநல் லூரே'

என்றதும்,

கள்வனோ வல்லன் கணவனென் காற்சிலம்பு
கொள்ளும்விலைப் பொருட்டாற் கொன்றாரே யீதொன்று'
(சிலப். ஊர்சூழ்வரி-எ)

என்றதும் இதுவென்னுஞ் சுட்டு முதல் உகர ஈறுதலின் அது செய்யுளகத்துப் புறநடையான் முடியுமென உணர்க. (௩சு)

36. இதுகாண் என்பது ஈகாண் என்றாயிற்று. ஈது என்பதும் இது என்பதன் திரிபு.



உ௩௯. பதக்குமுன் வரினே தூணிக் கிளவி
முதற்கிளந் தெடுத்த வேற்றுமை யியற்றே.

இஃது இவ்வீற்று அல்வழிகளுள் அளவுப்பெயருள் ஒன்றற்குத் தொகைமரபினுள் எய்திய ஏயென் சாரியை விலக்கி வேறு முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** தூணிக் கிளவிமுன் பதக்கு வரின்—தூணியாகிய அளவுப்பெயரின் முன்னர்ப் பதக்கு என்னும் அளவுப்பெயர் வருமாயின், முதற்கிளந்து எடுத்த வேற்றுமை இயற்று—முன்பு விதந்தெடுத்த வேற்றுமை முடிபின் இயல்பிற்றாய் வல்லெழுத்து மிக்குமுடியும் என்றவாறு.

**உதாரணம் :** தூணிப்பதக்கு என வரும். இஃது உம்மைத் தொகை.

வருமொழி முற்கூறியவதனுன் அடையொடு வந்துழியும் இவ் விதி கொள்க. இருதூணிப்பதக்கு முத்தூணிப்பதக்கு என ஒட்டுக. கிளந்தெடுத்த வென்றதனுல் தூணிக்கொள் சாமை தோரை பாளிதம் எனப் பொருட்பெயர் முன் வந்துழியும், இருதூணிக்கொள் என அதுதான் அடை யடுத்துழியுந், தூணித்தூணி தொடித்தொடி காணிக்காணி பூணிப்பூணி எனத் தன் முன்னர்த் தான் வந்துழியும் இவ் விதி கொள்க.

இன்னும் இதனனே தன்முன்னர்த் தான் வந்துழியும் அதுதான் அடையடுத்து வந்துழியும் இக்குச்சாரியை பெறுதலுங் கொள்க. தூணிக்குத்தூணி இருதூணிக்குத்தூணி என வரும். இவற்றுட் பண்புத்தொகையும் உள. (௩எ)

உ௪0. உரிவரு காலை நாழிக் கிளவி
இறுதி இகர மெய்யொடுங் கெடுமே
டகர மொற்று மாவயி னன.

இதுவும் அது.

**இதன் பொருள் :** உரிவரு காலை—நாழிமுன்னர் உரி வருமொழியாய் வருங்காலத்து, நாழிக் கிளவி—அந்நாழி யென்னுஞ்

37. தூணிக்கொள் முதலியன பண்புத்தொகை.

சொல், இறுதி இகரம் மெய்யொடுங் கெடும்—தன் இறுதியினின்ற இகரந் தானேறிய மெய்யொடுங் கெடும், ஆவயின் ஆன டகரம் ஒற்றும்—அவ்விடத்து டகரம் ஒற்றாய்வரும் என்றவாறு.

**உதாரணம்:** நாடுரி என வரும். இதனுன் யகாரமும் விலக்குண்டது.

வருமொழி முற்கூறியவதனுன் இருநாடுரி முந்நாடுரி எனவும் ஒட்டுக.

இறுதியிகரமென முன்னும் ஓர் இகரம் உள்ளது போலக் கூறியவதனுன் ஈண்டை நிலைமொழியும் வருமொழியும் நிலைமொழியாய் நின்று பெயரோடு வல்லெழுத்து மிக்கு முடிதலுங் கொள்க. நாழிக்காயம் உரிக்காயம் சுக்கு தோரை பாளிதம் என வரும். (௩அ)

உ௪௧. பனியென வரூஉங் கால வேற்றுமைக்
கத்து மின்னுஞ் சாரியை யாகும்.

இஃது இகர ஈற்று வேற்றுமையுள் ஒன்றற்கு வல்லெழுத்தினோடு சாரியை பெறுமென எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

**இதன் பொருள்:** பனியென வரூஉங் கால வேற்றுமைக்கு—பனியென்று சொல்லவருகின்ற நோயன்றிக் காலத்தை உணர நின்ற வேற்றுமை முடிபுடைய பெயர்க்கு, அத்தும் இன்னுஞ் சாரியை ஆகும்—அத்தும் இன்னுஞ் சாரியையாக வரும் என்றவாறு.

**உதாரணம்:** பனியத்துக்கொண்டான் பனியிற்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும்.

வேற்றுமை யென்றதனுன் இன்பெற்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க. (௩௯)

38. முன்னும் ஒரு இகரம் இருந்தாற்றான் இறுதி இகரமென்றல் வேண்டும். அங்ஙனமின்றாகவும் கூறியதனுல் என்பது கருத்து.



உ௪உ. வளியென வரூஉம் பூதக் கிளவியு
மவ்வியல் நிலையல் செவ்வி தென்ப.

இதுவும் அது.

**இதன் பொருள்:** வளியென வரூஉம் பூதக் கிளவியும்—வளியென்றுசொல்ல வருகின்ற இடக்கரல்லாத ஐம்பெரும் பூதங்களில் ஒன்றை உணரநின்ற சொல்லும், அவ்வியல்நிலையல் செவ்விதென்ப—முன்னைக்கூறிய அத்தும் இன்னும் பெறும் அவ்வியல் பின்கண் நிற்றல் செவ்விதென்று கூறுவர் புலவர் என்றவாறு.

**உதாரணம்:** வளியத்துக்கொண்டான் வளியிற்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும்.

செவ்விதென்றதனுன் இன்பெற்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க. (௪௦)

உ௪௩. உதிமரக் கிளவி மெல்லெழுத்து மிகுமே.

இது மரப்பெயரில் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதிக்கின்றது.*

**இதன் பொருள்:** உதிமரக் கிளவி—உதித்தலென்னுந் தொழிலன்றி உதியென்னும் மரத்தினை உணரநின்றசொல், மெல்லெழுத்து மிகும்—வல்லெழுத்து மிகாது மெல்லெழுத்து மிக்குமுடியும் என்றவாறு.

மரம் **உதாரணம்:** உதிங்கோடு செதிள் தோல் பூ என வரும்.

* அம்முச்சாரியை விதிக்கின்ற புளிமரத்தினை இதன்பின் வைத்தமையான் உதியங்கோடு என இதற்கும் அம்முப்பெறுதல் கொள்க. இஃது இக்காலத்து ஒதியென மருவிற்று. (௪௧)

உ௪௪. புளிமரக் கிளவிக் கம்மே சாரியை.

இது வல்லெழுத்து விலக்கி அம்மு வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

40. இடக்கர் என்பது அபானவாயுவைக் குறித்தது.

41. இதன்பின் என்றது வருஞ் சூத்திரத்தை.

**இதன் பொருள் :** புளிமரக்கிளவிக்கு அம்மே சாரியை— சுவையன்றிப் புளியென்னும் மரத்தினை உணரநின்ற சொல்லிற்கு அம்மென்னுஞ் சாரியை வரும் என்றவாறு.

**உதாரணம் :** புளியங்கோடு செதிள் தோல் பூ என வரும்.

சாரியைப் பேற்றிடை முன்னர்ச் சூத்திரத்து எழுத்துப் பேறு கூறிய வதனால் அம்முப்பெற்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க. (௪௨)

௨௪௫. ஏனைப் புளிப்பெயர் மெல்லெழுத்து மிகுமே.

இது வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

**இதன்பொருள் :** ஏனைப் புளிப்பெயர் மெல்லெழுத்துமிகும் —அம் மரப்பெயரன்றிச் சுவைப்புளி உணர நின்ற பெயர் வல்லெழுத்து மிகாது மெல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

**உதாரணம் :** புளிங்கூழ் சாறு தயிர் பாளிதம் என வரும். பாளிதம் பாற்சோறு. இவற்றிற்கு இரண்டாமுருபு விரிக்க. (௪௩)

௨௪௬. வல்லெழுத்து மிகினு மான மில்லை
யொல்வழி யறிதல் வழக்கத் தான.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

**இதன்பொருள் :** வல்லெழுத்து மிகினும் மானமில்லை— சுவைப்புளி மெல்லெழுத்தே யன்றி வல்லெழுத்து மிக்குமுடியினுங் குற்றமில்லை, ஒல்வழியறிதல் வழக்கத்து ஆன—பொருந்தும் இடம் அறிக வழக்கிடத்து என்றவாறு.

**உதாரணம் :** புளிக்கூழ் சாறு தயிர் பாளிதம் எனவரும்.

ஒல்வழி என்றதனாற் புளிச்சாறு போல ஏனைய வழக்குப் பயிற்சி இலவென்று கொள்க.

42. எழுத்துப்பேறு என்றது, மெல்லெழுத்துப் பெறுமென முன்னர்ச் சூத்திரத்து விதித்ததை.



வழக்கத்தான என்றதனான் இவ் வீற்றுக்கண் எடுத்தோதும் இலேசுமின்றி வருவன வெல்லாவற்றிற்கும் ஏற்குமாறு செய்கையறிந்து முடித்துக்கொள்க. அவை இன்னினிக் கொண்டான் அண்ணணிக் கொண்டான் என்பன அடையடுத்தலின் 'இனியணி' (எழு-௨௩௬) என்ற வழி முடியாவாய் வல்லெழுத்துப் பெற்றன. கப்பிதந்தை சென்னிதந்தை என்பன 'அஃறிணை விரவுப்பெயர்' (எழு-௧௫௫) என்பதனுள் இயல்பெய்தாது ஈண்டு வருமொழித் தகர அகரங் கெட்டுக் கப்பிந்தை சென்னிந்தை என முடிந்தது.

கூதாளி கணவிரி என்பனவற்றிற்கு அம்முக் கொடுத்து இகரங்கெடுத்துக் கூதாளங்கோடு கணவிரங்கோடு செதிள் தோல் பூ என முடிக்க. 'கூதள நறும்பூ' எனக் குறைந்தும் வரும். இனி இவை மகரஈறுபும்வழங்கும். அது 'வெண்கூதாளத்துத் தண்பூங்கோதையர்' என அத்துப்பெற்று மகரங்கெட்டுங் 'கணவிர மாலை யிடூஉக்கழிந்தன்ன' என மகரங்கெட்டுங் கணவிரங்கோடு என மெல்லெழுத்துப் பெற்றும் நிற்கும்.

கட்டி என நிறுத்தி இடி அகல் எனத் தந்து டகரத்தில் இகரங்கெடுத்துக் கட்டிடி கட்டகல் என முடிக்க. பருத்திக்குச் சென்றானென ஈற்று வல்லெழுத்தும் இக்குங் கொடுத்து முடிக்க. துளியத்துக் கொண்டான் துளியிற்கொண்டான் என அத்தும் இன்னுங் கொடுத்து முடிக்க. புளிங்காய் வேட்கைத்தன்று எனவும் புளிம்பழம் எனவும் அம்முப்பெறாது மெல்லெழுத்துப் பெற்று முடிதலுங் கொள்க. இன்னும் இதனானே உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கட்சென்றுழி இயைபு வல்லெழுத்துக் கெடுத்துக் கிளியின்கால் புளியின்கோடு உதியின்கோடு என முடிக்க. (௪௪)

௨௪௭. நாண்முற் றோன்றுந் தொழினிலைக் கிளவிக்
கானிடை வருத லைய மின்றே.

இஃது ஈற்று வல்லெழுத்து விலக்கி ஆன்சாரியை விதிக்கின்றது.

**இதன்பொருள் :** நாள் முன் தோன்றுந் தொழினிலைக் கிளவிக்கு—இகர ஈற்று நாட்பெயர்களின் முன்னர்த் தோன்றுந்

தொழிற் சொற்கு, ஆன் இடைவருதல்ஐயமின்று—ஆன் சாரியை இடைவந்து முடிதல் ஐயமின்று என்றவாறு.

உதாரணம்: பரணியாற் கொண்டான் சோதியாற் கொண் டான் சென்றான் தந்தான் போயினான் என வரும். ஐயமின்றென் றதனால் இயைபு வல்லெழுத்து வீழ்க்க. இதற்குக் கண்ணென் உருபு விரிக்க. (சரு)

உசஅ. திங்கண் முன்வரி னிக்கே சாரியை.

இஃது இயைபு வல்லெழுத்தினோடு இக்கு வருத்தலின் எய்தியதன்மேற் சிறப்புவிதி வருத்தது.

இதன்பொருள்: திங்கள் முன்வரின் இக்கே சாரியை— திங்களை உணரநின்ற இகர ஈற்றுப் பெயர்களின் முன்னர்த் தொழினிலைக் கிளவிவரின் வருஞ்சாரியை இக்குச் சாரியையாம் என்றவாறு.

உதாரணம்: ஆடிக்குக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என இயைபுவல்லெழுத்துக் கொடுத்து முடிக்க. இதற்குங் கண்ணென் உருபு விரிக்க. (சகூ)

உசகூ. ஈகார விறுதி யாகார வியற்றே.

இஃது ஈகார ஈற்றுப்பெயர் அல்வழிக்கண் முடியுமாறு கூறுகின்றது.

இதன் பொருள்: ஈகார இறுதி ஆகார இயற்று—ஈகார ஈற் றுப்பெயர் அல்வழிக்கண் ஆகார ஈற்று அல்வழியின் இயல்பிற் றாய் வல்லெழுத்து வந்துழி அவ் வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

உதாரணம்: ஈக்கடிது தீக்கடிது சிறிது தீது பெரிது என வரும். (சஎ)

உருo. நீயென் பெயரு மிடக்கர்ப் பெயரு
மீயென மரீஇய விடம்வரை கிளவியு
மாவயின் வல்லெழுத் தியற்கை யாகும்.



இஃது எய்தியது விலக்கலும் எய்தாத தெய்துவித்தலுங் கூறுகின்றது.

இதன் பொருள்: நீ என் பெயரும் இடக்கர்ப் பெயரும்—நீ யென்னும் பெயரும் இடக்கர்ப்பெயராகிய ஈகார ஈற்றுப்பெயரும், மீயெனமரீஇய இடம் வரை கிளவியும்—மீயென்று சொல்ல மருவாய் வழங்கின ஓரிடத்தை வரைந்து உணர்த்தும் சொல்லும், ஆவயின் வல்லெழுத்து இயற்கை யாகும்—புணருமிடத்து முற் கூறிய வல்லெழுத்துப் பெறாது இயல்பாய் முடியும் என்றவாறு.

உதாரணம்: நீகுறியை சிறியை தீயை பெரியை எனவும், பீகுறிது சிறிது தீது பெரிது எனவும் இவையிற்றுக்குப் பொது வான் எய்திய வல்லெழுத்து விலக்குண்டன. மீகண் செவி தலை புறம் இஃது இலக்கணத்தோடு பொருந்திய மருவாதலின் எய் தாத தெய்துவித்தது.

நீயென்பது அஃறிணை விரவுப்பெயருள் அடங்காதோ வெனின் மேல் நின்கையெனத் திரிந்து முடிதலின் அடங்காதா யிற்று. மீகண் என்பது மேலிடத்துக் கண்ணென வேற்றுமை யெனினும் இயல்புபற்றி உடன் கூறினர். (சஅ)

உருக. இடம்வரை கிளவிமுன் வல்லெழுத்து மிகூஉ
முடனிலை மொழியு முளவென மொழிப.

இது வல்லெழுத்து மிகுக என்றலின் எய்திய திகந்துபடா மற் காத்தது.

இதன் பொருள்: இடம் வரை கிளவிமுன் வல்லெழுத்து மிகூஉம்—இடத்தை வரைந்து உணர்த்தும் மீயென்னுஞ் சொல் லின் முன்னர் இயல்பாய் முடிதலே யன்றி வல்லெழுத்து மிக் கும் முடியும், உடனிலை மொழியும் உள என மொழிப—தம்மில் ஓசை யியைந்து நிற்றலை யுடைய மொழிகளும் உளவென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

48. கண்ணினதுமீ என்பது மீகண் என நிற்றலின் அல்வழி யன்று என்றார் உரையாசிரியர். இவர் அதனை மேலிடத்துக்கண் என விரித்தல் பொருந்துமோ என்பது ஆராயத்தக்கது.

உதாரணம் : மீக்கோள் மீப்பல் என வரும்.

உடனிலையென்றதனன் மீங்குழி மீங்தோல் என மெல்லெழுத்துப் பெற்று முடிவனவுங் கொள்க. (சகூ)

உருஉ. வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே.

இஃது ஈகார ஈற்றுப்பெயர் வேற்றுமைக்கண் முடியுமாறு கூறுகின்றது.

இதன் பொருள் : வேற்றுமைக்கண்ணும் அதனோரற்று— ஈகார ஈற்றுப்பெயர் வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக்கண்ணும் ஆகார ஈற்று அல்வழிபோல வல்லெழுத்து வந்துழி அவ் வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

உதாரணம் : ஈக்கால் சிறகு தலை புறம், தீக்கடுமை சிறுமை தீமை பெருமை என வரும். (ருo)

உருங. நீயெ னொருபெய ருருபிய னிலையு
மாவயின் வல்லெழுத் தியற்கை யாகும்.

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது, வல்லெழுத்து விலக்கி னகரவொற்றே பெறுக என்றலின்.

இதன் பொருள் : நீயென் ஒருபெயர் உருபியல் நிலையும்— நீயென்னும் ஓரெழுத்தொருமொழி உருபு புணர்ச்சிக்கண் நெடுமுதல் குறுகி னகரம் ஒற்றி நின்றாற்போல ஈண்டுப் பொருட் புணர்ச்சிக்கண்ணும் முடியும், ஆவயின் வல்லெழுத்து இயற்கை யாகும்—அவ்வாறு முடியுமுழி இயைபு வல்லெழுத்து மிகா என்றவாறு.

உதாரணம் : நின்கை செவி தலை புறம் என வரும்.

இஃது ஈகார ஈறு இகர ஈறாய் இகர ஈறு னகர ஈறாய் நின்றுழியும் 'நீயெனொருபெயர்' என்றலிற் றிரிந்ததன் றிரிபதுவே யாயிற்று. இயற்கையாகுமெனவே நிலைமொழித்தொழில் அதிகார வல்லெழுத்தை விலக்காதாயிற்று (ருக)



உருச. உகர விறுதி யகர வியற்றே.

இஃது உகர ஈற்றுப்பெயர் அல்வழிக்கண் முடியுமாறு கூறுகின்றது.

இதன் பொருள்: உகர இறுதி அகர இயற்று—உகர ஈற்றுப் பெயர் அல்வழிக்கண் அகர ஈற்று இயல்பிற்றாய் வல்லெழுத்து வந்துழி அவ் வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

க்காய்

உதாரணம் : கடுக்குறிது சிறிது தீது பெரிது என வரும். (ருஉ)

உருரு. சுட்டின் முன்னரு மத்தொழிற் றாகும்.

இஃது உகர ஈற்றுச் சுட்டு வன்கணத்தோடு முடியுமாறு கூறுகின்றது.

இதன் பொருள் : சுட்டின் முன்னரும் அத்தொழிற்று ஆகும்—உகரஈற்றுச் சுட்டின்முன்னும் வல்லெழுத்து வந்துழி அவ் வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

உதாரணம் : உக்கொற்றன் சாத்தன் தேவன் பூதன் என வரும். (ருங)

உருசூ. ஏனவை வரினே மேனிலை யியல.

இஃது உகர ஈற்றுச் சுட்டு ஒழிந்த கணங்களோடு முடியுமாறு கூறுகின்றது.

இதன் பொருள் : ஏனவை வரின்—உகர ஈற்றுச் சுட்டின் முன் வல்லெழுத்தல்லாத மென்கணம் முதலிய மூன்றும் வரின், மேல்நிலை இயல—அகர ஈற்றுச் சுட்டு முடிந்தாற்போல ஞநமத் தோன்றின் ஒற்று மிக்கும் யவ்வரினும் உயிர்வரினும் வகரம் ஒற்றியுஞ் செய்யுளில் நீண்டு முடியும் என்றவாறு.

உதாரணம் : உஞ்ஞாண் நூல் மணி எனவும், உவ்யாழ் உவ்வட்டு எனவும், உவ்வடை உவ்வாடை எனவும், ஊவயினை எனவும் வரும். (ருச)

உருஎ. சுட்டுமுத லிறுதி யியல்பா கும்மே.

இஃது இவ் வீற்றுட் சிலவற்றிற்கு வல்லெழுத்து விலக்கி இயல்பு கூறுகின்றது.

இதன் பொருள்: சுட்டுமுதல் இறுதி—சுட்டெழுத்தினை முதலாகவுடைய உகர ஈற்றுப்பெயர், இயல்பாகும்—முற்கூறிய வல்லெழுத்து மிகாது இயல்பாய் முடியும் என்றவாறு.

உதாரணம்: அதுகுறிது இதுகுறிது உதுகுறிது சிறிது தீது பெரிது என வரும்.

முற்கூறியவை சுட்டுமாத்திரை, இவை சுட்டுப்பெயராக உணர்க. (ருரு)

* உருஅ. அன்றுவரு காலை யாவா குதலு
மைவரு காலை மெய்வரைந்து கெடுதலுஞ்
செய்யுண் மருங்கி னுரித்தென மொழிப.

இஃது இவ் வீற்றுச் சுட்டுமுதற் பெயர்க்கு ஓர் செய்யுண் முடிபு கூறுகின்றது.

இதன் பொருள்: அன்று வருகாலை ஆவாகுதலும்—அதிகாரத்தால் நின்ற சுட்டுமுதல் உகர ஈற்றின்முன்னர் அன்றென்னும் வினைக்குறிப்புச்சொல் வருங்காலத்து அத் தகரவொற்றின் மேல் ஏறிநின்ற உகரம் ஆகாரமாய்த் திரிந்து முடிதலும், ஐ வருகாலை மெய்வரைந்து கெடுதலும்—அதன்முன்னர் ஐயென்னுஞ் சாரியை வருங்காலத்து அத் தகரவொற்று நிற்க அதன்மேல் ஏறிய உகரங் கெடுதலும், செய்யுண்மருங்கின் உரித்தென மொழிப—செய்யுட்கண் உரித்தென்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

உதாரணம்: அதாஅன்றம்ம இதாஅன்றம்ம உதாஅன்றம்ம 'அதாஅன்றென்ப வெண்பா யாப்பே' எனவும், அதைமற்றம்ம இதைமற்றம்ம உதைமற்றம்ம எனவும் வரும்.

மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின் முடியாததனை முட்டின்றி முடித்த லென்பதனால் அதன்று இதன்று உதன்று என உகரங்கெட்டுத் தகரவொற்று நிற்றல் கொள்க. (ருசு)

உருகூ. வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே.

இஃது இவ் வீற்றுப் பெயர் வேற்றுமைக்கண் முடியுமாறு கூறுகின்றது.



இதன்பொருள்: வேற்றுமைக்கண்ணும்—உகர ஈற்றுப் பெயர் வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக்கண்ணும், அதனோரற்று—அகர ஈற்று அல்வழியோடு ஒருதன்மைத்தாய் வல்லெழுத்து வந்துழி அவ் வல்லெழுத்து மிக்குமுடியும் என்றவாறு.

உதாரணம்: கடுக்காய் செதிள் தோல் பூ எனவும், கடுக்கடுமை எனவும் வரும். (ருஎ)

உசுo. எருவுஞ் செருவு மம்மொடு சிவணித்
திரிபிட னுடைய தெரியுங் காலை
யம்மின் மகரஞ் செருவயிற் கெடுமே
தம்மொற்று மிகூஉம் வல்லெழுத் தியற்கை.

இஃது அவ்வீற்றுள் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கிச் சாரியை விதியும் ஒன்றற்கு வல்லெழுத்தினோடு சாரியை விதியுஞ் சாரியை பெறுதவழி வல்லெழுத்து மெல்லெழுத்துப் பேறுங் கூறுகின்றது.

இதன் பொருள்: எருவுஞ் செருவும் அம்மொடு சிவணி—எருவென்னுஞ் சொல்லும் செருவென்னுஞ் சொல்லும் அம்முச் சாரியையோடு பொருந்தி, திரிபு இடனுடைய தெரியுங் காலை—அதிகார வல்லெழுத்துப் பெறுமல் திரியும் இடனுடைய ஆராயுங் காலத்து, அம்மின் மகரஞ் செருவயிற் கெடும்—ஆண்டு அம்முச்சாரியையினது ஈற்றின் மகரஞ் செருவென்னுஞ் சொல்லிடத்துக் கெட்டு முடியும், வல்லெழுத்து மிகூஉம்—ஆண்டுச் செருவின்கண் வல்லெழுத்து மிக்கு முடியும், இயற்கைத் தம் ஒற்று மிகூஉம்—அம்முப்பெறுதவழி இரண்டிற்குந் தமக்கு இனமாகிய வல்லொற்றும் மெல்லொற்றும் மிக்கு முடியும் என்றவாறு.

உதாரணம்: எருவென நிறுத்திக் குழி சேறு தாது பூழி எனத் தந்து அம்முக்கொடுத்து 'அம்மினிறுதி கசதக்காலை' (எழு-கஉசு) என்பதனால் எருவங்குழி சேறு தாது பூழி யென முடிக்க. செருவென நிறுத்திக் களம் சேனை தானை பறை எனத் தந்து இடை அம்முக்கொடுத்து மகரங் கெடுத்து வல்லெழுத்துக் கொடுத்துச் செருவக்களம் சேனை தானை பறையென முடிக்க. இனி அம்முப் பெறுதவழி எருக்குழி எருங்குழி என வல்

லெழுத்தும் மெல்லெழுத்துங் கொடுத்து முடிக்க. இனிச் செரு விற்கு ஏற்புழிக்கோட லென்பதனாற் செருக்களமென வல் லெழுத்தே கொடுத்து முடிக்க.

தெரியுங்காலை என்றதனான் எருவின் குறுமை செருவின் கடுமை என உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கட் சென்றுழி வல்லெழுத்து வீழ்தலும் எருவஞாற்சி செருவஞாற்சி என இயல்பு கணத்துக்கண் அம்முப்பெறுதலுங் கொள்க. மகரம் 'மென்மையு மிடைமையும்' (எழு-கஅ௦) என்பதனாற் கெடுக்க.

தம்மொற்றுமிகூஉம் என உடம்பொடு புணர்த்துச் சூத்திரஞ் செய்தலின் உகரம் நீடவருதலுங் கொள்க. வரூஉம் தரூஉம் படூஉம் என வரும். (ருஅ)

உகூக. முகர வுகர நீடிட னுடைத்தே
யுகரம் வருத லாவயி னான.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தது, வல்லெழுத் தினோடு உகரம் பெறுதலின்.

**இதன் பொருள்:** முகர உகரம் நீடிடன் உடைத்து—உகர ஈற்றுச் சொற்களுள் முகரத்தோடு கூடிய உகர ஈற்றுச்சொல் நீண்டு முடியும் இடனுடைத்து, ஆவயின் ஆன உகரம் வருதல் —அவ்விடத்து உகரம் வந்து முடியும் என்றவாறு.

**உதாரணம்:** எழூஉக்கதவு சிறை தானை படை என வரும்.

நீடிடனுடைத்து என்றதனான் நீளாதும் உகரம் பெறுதும் வருமாயிற்று. குழூத்தோற்றம் என வரும்.

இன்னும் இதனாற் பழூக்காயென அல்வழிக்கண்ணும் இவ் விதியன்றி வருதல் கொள்க.

ஆவயினான என்றதனாற் பெரும்பான்மை செய்யுட்கண் நீண்டு உகரம்பெற்று

'எழூஉத்தாங்கிய கதவுமலைத்தவர்
குழூஉக்களிற்றுக் குறும்புடைத்தலின்' (புறம்-கூஎ)

எனவும்,



'பழூஉப்பல்லன்ன பருவுகிர்ப்பாவடி' (குறுங்-கஅ௦)
எனவும் வருதல் கொள்க. (ருகூ)

உகூஉ. ஒடுமரக் கிளவி யுதிமர வியற்றே.

இஃது அவ் வீற்று மரப்பெயருள் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தது.

**இதன் பொருள்:** ஒடுமரக் கிளவி—ஒடுவென்னும் மரத் தினை உணர நின்ற சொல், உதிமர இயற்று—உதியென்னும் மரத்தின் இயல்பிற்றாய் மெல்லெழுத்துப் பெற்று முடியும் என்றவாறு.

**உதாரணம்:** ஒடுங்கோடு செதிள் தோல் பூ என வரும். மரமென்றார் ஒடுவென்னும் நோயை நீக்குதற்கு.

முன்னர் உதிமரத்தின்பின்னர் அம்முப் பெறுகின்ற புளி மரம் வைத்த இயைபான் இதற்கு அம்முப்பேறுங் கொள்க. ஒடுவங்கோடு என வரும். (சு௦)

உகூங. சுட்டுமுத லிறுதி யுருபிய னிலையு
மொற்றிடை மிகாஅ வல்லெழுத் தியற்கை.

இது சுட்டுப்பெயர்க்கு வல்லெழுத்து விலக்கிச் சாரியை வகுத்தது.

**இதன் பொருள்:** சுட்டுமுதல் இறுதி உருபியல் நிலை யும்—சுட்டெழுத்தினை முதலாகவுடைய உகர ஈற்றுச் சொற் கள் பொருட்புணர்ச்சிக்கண்ணும் உருபுபுணர்ச்சியிற் கூறிய இயல்பிலே நின்று அன்சாரியை பெற்று உகரங்கெட்டு முடியும், வல்லெழுத்து இயற்கை ஒற்று இடைமிகாஅ—வல்லெழுத்து இயற்கையாகிய ஒற்று இடைக்கண் மிகா என்றவாறு.

**உதாரணம்:** அதன்கோடு இதன்கோடு உதன்கோடு செதிள் தோல் பூ எனவரும். ஒற்றிடைமிகா எனவே சாரியை வருப்ப வல்லெழுத்து வீழாவென்பது பெற்றாம்.

வல்லெழுத்தியற்கை யென்றதனான் உகர ஈற்றுள் எருவுஞ் செருவும் ஒழித்து ஏனையவற்றிற்கும் உருபிற்குச் சென்ற

சாரியை பொருட்கட் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க. கடுவின்குறை ஒடுவின்குறை எழுவின்புறம் கொழுவின் கூர்மை என வரும். இன்னும் இதனானே உதுக்காண் என்றவழி வல்லெழுத்து மிகுதலுங் கொள்க. (௯௧)

௨௯௪. ஊகார விறுதி யாகார வியற்றே.

இது நிறுத்த முறையானே ஊகார ஈறு அல்வழிக்கட் புணருமாறு கூறுகின்றது.

இதன் பொருள் : ஊகார இறுதி ஆகார இயற்று—ஊகார ஈற்றுப்பெயர் அல்வழிக்கண் ஆகார ஈற்று அல்வழியின் இயல்பிற்றாய் வல்லெழுத்து வந்துழி அவ்வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

மேகம்

உதாரணம் : கழூஉக்கடிது கொண்மூக்கடிது சிறிது தீது பெரிது எனவரும். (௯௨)

௨௯௫. வினையெஞ்சு கிளவிக்கு முன்னிலை மொழிக்கு நினையுங் காலை யவ்வகை வரையார்.

இஃது இவ்வீற்று வினையெச்சத்திற்கு மிக்கு முடியுமென்றலின், எய்தாததெய்துவித்ததூஉம் முன்னிலை வினைக்கு இயல்பும் உறழ்பும் மாற்றுதலின் எய்தியது விலக்கியதூஉம் நுதலிற்று.

இதன் பொருள் : வினையெஞ்சு கிளவிக்கும்—ஊகார ஈற்று வினையெச்சமாகிய சொற்கும், முன்னிலை மொழிக்கும்—முன்னிலை வினைச்சொற்கும், நினையுங்காலை அவ்வகை வரையார்—ஆராயுங்காலத்து அவ்வல்லெழுத்து மிக்குமுடியுங் கூற்றினை நீக்கார் என்றவாறு.

உதாரணம் : உண்ணூக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் எனவும், கைதூக்கொற்றா சாத்தா தேவா பூதா எனவும் வரும்.

சூ. 267

நினையுங்காலை என்றதனான் இவ்வீற்று உயர்திணைப் பெயர்க்கும் அல்வழிக்கண் வல்லெழுத்துக்கொடுத்து முடிக்க. ஆடூஉக் குறியன் மகடூஉக்குறியள் எனவரும். உயர்திணைப் பெயர்



எடுத்தோதி முடிப்பாராதலின் அம்முடிபு பெறுமையின் ஈற்றுப் பொதுவிதியான் முடியாது இலேசான் முடித்தாம். (௯௩)

௨௯௬. வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே.

இஃது ஊகார ஈறு வேற்றுமைக்கண் முடியுமாறு கூறுகின்றது.

இதன் பொருள் : வேற்றுமைக்கண்ணும் அதனோரற்று—ஊகார ஈறு வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக்கண்ணும் ஆகார ஈற்று அல்வழிபோல வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

உதாரணம் : கழூஉக்கடுமை சிறுமை தீமை பெருமை, கொண்மூக்குழாம் செலவு தோற்றம் மறைவு எனவரும். (௯௪)

௨௯௭. குற்றெழுத் திம்பரு மோரெழுத்து மொழிக்கு நிற்றல் வேண்டு முகரக் கிளவி.

இஃது இயைபு வல்லெழுத்தினோடு உகரம் வகுத்தலின் எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இதன் பொருள் : குற்றெழுத்து இம்பரும்—குற்றெழுத்தின்பின் வந்த ஊகார ஈற்று மொழிக்கும், ஓரெழுத்து மொழிக்கும்—ஓரெழுத் தொருமொழியாகிய ஊகார ஈற்று மொழிக்கும், உகரக்கிளவி நிற்றல் வேண்டும்—உகரமாகிய எழுத்து நிற்றலை விரும்பும் ஆசிரியன் என்றவாறு.

உதாரணம் : உடூஉக்குறை செய்கை தலை புறம் எனவும், தூஉக்குறை செய்கை தலை புறம் எனவும் வரும். சூ. 153

நிற்றல் என்றதனான் உயர்திணைப் பெயர்க்கும் வல்லெழுத்தும் உகரமுங் கொடுக்க. ஆடூஉக்கை மகடூஉக்கை செவி தலை புறம் எனவரும். இவை தொகை மரபினுள் இயல்பாதல் எய்தியவற்றை ஈண்டு இருவழிக் கண்ணும் முடித்தார், ஈற்றுப் பொது ஒப்புமை கண்டு. (௯௫)

63. ஈற்றுப் பொதுவிதி என்றது, 'ஊகார விறுதி யாகார வியற்றே' என்றதை.

65. இயல்பாத லெய்தியதென்றது - தொகைமரபினுள் ௧௧-ம் சூத்திரத்துச் சொல்லிய விதியால் இயல்பானமையை.

உ௬௮. பூவெ னொருபெய ராயியல் பின்றே
யாவயின் வல்லெழுத்து மிகுதலு முரித்தே.

இஃது ஊகார ஈற்றுள் ஒன்றற்கு உகரமும் இயைபு வல்லெழுத்தும் விலக்கிப் பெரும்பான்மை மெல்லெழுத்துஞ் சிறுபான்மை வல்லெழுத்தும் பெறுமென எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

இதன் பொருள்: பூவென் ஒருபெயர் அ இயல்பு இன்று—பூவென்னும் ஊகார ஈற்றையுடைய ஒருபெயர் மேற் கூறிய உகரமும் வல்லெழுத்தும் பெற்று முடியும் அவ்வியல் பின்மையை உடைத்து, ஆவயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்து—அவ்விடத்து மெல்லெழுத்து மிக்கு முடிதலேயன்றி வல்லெழுத்து மிக்கு முடிதலும் உரித்து என்றவாறு.

உதாரணம்: பூங்கொடி சோலை தாமம் பந்து எனவும், பூக்கொடி செய்கை தாமம் பந்து எனவும் வரும்.

பூவென்பது பொலிவென்னும் வினைக்குறிப்பை உணர்த்தாது நிற்றற்கு ஒருபெய ரென்றார். (௬௬)

உ௬௯. ஊவெ னொருபெய ராவொடு சிவணும்.

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது, உகரமும் வல்லெழுத்தும் விலக்கி னகரம் விதித்தலின்.

இதன் பொருள்: ஊவென் ஒருபெயர்—ஊவெனத் தசையை உணர்த்திநின்ற ஓரெழுத்தொருமொழி, ஆவொடு சிவணும்—ஆகார ஈற்றில் ஆவென்னுஞ் சொல் வல்லெழுத்துப் பெறாது னகர ஒற்றுப் பெற்று முடிந்தாற்போல னகர ஒற்றுப் பெற்று முடியும் என்றவாறு.

உதாரணம்: ஊவென நிறுத்தி னகர ஒற்றுக் கொடுத்து ஊன்குறை செய்கை தலை புறம் என முடிக்க. ஊவென்பது தசையை உணர்த்திநின்ற வழக்கு ஆசிரியர் நூல்செய்த காலத்து வழக்கு. அன்றித் தேயவழக்கேனும் உணர்க. (௬௭)

67. இக்காலத்து ஊன் என்றே வழங்கலின் ஊ நூல் செய்த காலத்து வழக்கென்றார்.



உ௭௦. அக்கென் சாரியை பெறுதலு முரித்தே
தக்கவழி யறிதல் வழக்கத் தான.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இதன் பொருள்: அக்கென் சாரியை பெறுதலும் உரித்து—அதிகாரத்தான் நின்ற ஊவென்னும் பெயர் முற்கூறிய னகரத்தோடு அக்கென்னுஞ் சாரியை பெற்று முடிதலும் உரித்து, வழக்கத்தான தக்கவழி அறிதல்—அம்முடிபு வழக்கிடத்துத் தக்க இடம் அறிக என்றவாறு.

தக்கவழியறிதல் என்றதனாற் சாரியைபெற்றுழி னகரம் விலக்குண்ணாது நிற்றலும் முன் மாட்டேற்றால் விலக்குண்ட வல்லெழுத்துக் கெடாது நிற்றலுங் கொள்க.

உதாரணம்: ஊனக்குறை செய்கை தலை புறம் எனவரும்.

வழக்கத்தான என்றதனான் ஊகார ஈற்றுச் சொல்லிற்கு உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கட் சென்றுழி இயைபு வல்லெழுத்துக் கெடுக்க. கொண்மூவின்குழாம் உடூஉவின்றலை ஊவின்குறை என வரும். (௬௮)

உ௭௧. ஆடூஉ மகடூஉ வாயிரு பெயர்க்கு
மின்னிடை வரினு மான மில்லை.

இது 'குற்றெழுத்திம்பரும்' (எழு-உ௬௭) என்பதனுள் நிற்றலென்ற இலேசான் எய்திய வல்லெழுத்தேயன்றிச் சாரியையும் வகுத்தலின் எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்தியது.

இதன் பொருள்: ஆடூஉ மகடூஉ ஆயிரு பெயர்க்கும்—ஆடூஉ மகடூஉவாகிய உயர்திணைப்பெயர் இரண்டிற்கும், இன் இடைவரினும் மானம் இல்லை—முன்னெய்திய வல்லெழுத்தே யன்றி இன்சாரியை இடையே வரினுங் குற்றமில்லை என்றவாறு.

உதாரணம்: ஆடூஉவின்கை மகடூஉவின்கை செவி தலை புறம் எனவரும்.

மானமில்லை என்றதனான் இன் பெற்றுழி மேல் எய்திய வல்லெழுத்து வீழ்க்க. (௬௯)

உ௭உ. எகர வொகரம் பெயர்க்கீ றாகா
முன்னிலை மொழிய வென்மனார் புலவர்
தேற்றமுஞ் சிறப்பு மல்வழி யான.

இஃது எகர ஒகரம் ஈறாம் இடம் உணர்த்துகின்றது.

**இதன் பொருள் :** தேற்றமுஞ் சிறப்பும் அல்வழி ஆன—தெளிவுபொருளுஞ் சிறப்புப்பொருளும் அல்லாத வேற்றுமைப் பொருண்மையிடத்து அளபெடுத்துக் கூறுதலின் உளவாகிய, எகர ஒகரம் பெயர்க்கு ஈறாகா—எகர ஒகரங்கள் பெயர்க்கு ஈறாய் வாரா, வினைக்கு ஈறாய் வரும், முன்னிலை மொழிய என்மனார் புலவர்—அவைதாந் தன்மையினும் படர்க்கையினும் வாரா, முன்னிலைச் சொல்லிடத்தனவாமென்று கூறுவர் புலவர் என்றவாறு.

எனவே, தெளிவு பொருளினுஞ் சிறப்புப் பொருளினும் வந்து பெயர்க்கு ஈறாம் இடைச்சொல்லாகிய எகர ஒகரம் மூன்றிடத்திற்கும் உரியவாமென்று பொருளாயிற்று. என இங்ஙனம் அருத்தாபத்தியாற் கொண்டதற்கு இலக்கணம் மேலைச் சூத்திரத்தாற் கூறுப.

**உதாரணம் :** ஏஎக்கொற்றா ஓஒக்கொற்றா சாத்தா தேவா பூதா என வரும்.

இவை எனக்கு ஒரு கருமம்பணி எனவும், இங்ஙனஞ் செய்கின்றதனை ஒழியெனவும் முன்னிலையேவற் பொருட்டாய் வந்தன. இதற்கு வல்லெழுத்துப் பெறுமாறு மேலே கூறுப. (௭०)

உ௭௩. தேற்ற வெகரமுஞ் சிறப்பி னொவ்வு
மேற்கூ றியற்கை வல்லெழுத்து மிகா.

இஃது எய்தியது இகந்துபடாமற் காத்து எய்தாத தெய்துவித்தது.

**இதன் பொருள் :** தேற்ற எகரமுஞ் சிறப்பின் ஒவ்வும் மேற்கூறு இயற்கை—முன்னர் அருத்தாபத்தியாற் பெயர்க்கண் வருமென்ற தேற்றப்பொருண்மையில் எகரமுஞ் சிறப்புப் பொருண்மையில் ஒகரமும் மூன்றிடத்தும் வருமென்ற இலக்கணத்தனவாம், வல்லெழுத்து மிகா—வல்லெழுத்து மிக்குமுடியா, எனவே முன்னிலைக்கண் வருமென்ற எகர ஒகரங்கள் வல்லெழுத்து மிக்குமுடியும் என்றவாறு.

**உதாரணம் :** யானேஎகொண்டேன் நீயேஎகொண்டாய் அவனேஎகொண்டான் எனவும், யானோஒகொடியன் நீயோஒ கொடியை அவனோஒகொடியன் எனவும் பெயர்க்கண் ஈறாய் இயல்பாய் வந்தவாறு காண்க. இது முன்னர் எய்திய இலக்கணம் இகவாமற் காத்தார். முன் நின்ற சூத்திரத்தின் முன்னிலைக்கும் வல்லெழுத்து மிகுத்து எய்தாத தெய்துவித்தார். இச்சூத்திரத்திற்கு அளபெடுத்தல் ‘தெளிவினேயும்’ (சொல்-உ௬௪) என்னுஞ் சூத்திரத்தாற் கொள்க. எனவே, முடிவுபெற்றுழி இங்ஙனம் இடைச்சொல்லும் எடுத்தோதிப் புணர்ப்பரென்பதூஉம் பெற்றாம். (௭௧)

உ௭௪. ஏகார விறுதி யூகார வியற்றே.

இது நிறுத்தமுறையானே ஏகார ஈறு அல்வழிக்கட் புணருமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** ஏகார இறுதி—ஏகார ஈற்றுப்பெயர் அல்வழிக்கண், ஊகார இயற்று—ஊகார ஈற்று அல்வழியின் இயல்பிற்றாய் வல்லெழுத்து வந்துழி அவ் வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

**உதாரணம் :** ஏக்கடிது சேக்கடிது சிறிது தீது பெரிது என வரும். (௭உ)

உ௭௫. மாறுகோ ளெச்சமும் வினாவு மெண்ணுங்
கூறிய வல்லெழுத் தியற்கை யாகும்.

இஃது இடைச்சொற்கள் இயல்பாய்ப் புணர்கவென எய்தாததெய்துவித்தது.

**இதன் பொருள் :** மாறுகோள் எச்சமும்—மாறுகோடலையுடைய எச்சப்பொருண்மைக்கண் வரும் ஏகார ஈற்று இடைச்சொல்லும், வினாவும்—வினாப்பொருண்மைக்கண் வரும் ஏகார

70. ஏ - பணி, ஓ - ஒழி.

ஈற்று இடைச்சொல்லும், எண்ணும்—எண்ணுப்பொருண்மைக் கண் வரும் ஏகார ஈற்று இடைச்சொல்லும், கூறிய வல்லெழுத்து இயற்கையாகும்—முற்கூறிய வல்லெழுத்துப் பெறாது இயல்பாய் முடியும் என்றவாறு.

**உதாரணம் :** யானேகொண்டேன் சென்றேன் தந்தேன் போயினேன் என்புழி யான்கொண்டிலேனென மாறுகொண்ட ஒழிபுபட நின்றது. நீயேகொண்டாய் சென்றாய் தந்தாய் போயி ளுய் எனவும், நிலனே நீரே தீயே வளியே கொற்றனே சாத் தனே எனவும் வரும்.

கூறிய என்றதனாற் பிரிநிலை ஏகாரமும் ஈற்றசை ஏகார மும் இயல்பாய் முடிதல் கொள்க. அவருள் இவனே கொண் டான் எனவும், ‘கழியே, சிறுகுரனெய்தலொடு பாடோவாதே - கடலே, பாடெழுந்தொலிக்கும்’ எனவும் வரும். (எ௩)

உ௭௬. வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே.

இஃது இவ் வீற்று வேற்றுமை முடிபு கூறுகின்றது

**இதன் பொருள்:** வேற்றுமைக்கண்ணும்—ஏகார ஈற்று வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண்ணும், அதனோரற்று—ஊகார ஈறு அல்வழிபோல வல்லெழுத்து வந்துழி அவ் வல் லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

**உதாரணம் :** ஏக்கடுமை சிறுமை தீமை பெருமை என வும், வேக்குடம் சாடி தூதை பானை எனவும் வரும்.

வேக்குடம் வேதலையுடைய குடமென விரியும். வேதல் (எ௪)

உ௭௭. ஏயெ னிறுதிக் கெகரம் வருமே.

இது வல்லெழுத்தினோடு எகரம் விதித்தலின் எய்தியதன் மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

**இதன் பொருள் :** ஏயென் இறுதிக்கு எகரம் வரும்—அவ் வேற்றுமைக்கண் ஏயென்னும் இறுதிக்கு எகரம் வரும் என்ற வாறு.



**உதாரணம் :** ஏஎக்கொட்டில் சாலை துளை புழை என வரும்.

வருமொழி வரையாது கூறினமையின் இயல்புகணத்துக் கண்ணும் வருமெனக் கொள்க. ஏஎனெகிழ்ச்சி நேர்மை என வரும். உரையிற் கோடலால் எகாரம் ஏற்புழிக் கொள்க. (எ௫)

உ௭௮. சேவென் மரப்பெய ரொடுமர வியற்றே.

இஃது அவ் வீற்றுள் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தது.

**இதன் பொருள் :** சே என் மரப்பெயர்—பெற்றமன்றிச் சேவென்னும் மரத்தினை உணரநின்ற பெயர், ஒடுமர இயற்று—ஒடுமரம்போல மெல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

**உதாரணம் :** சேங்கோடு செதிள் தோல் பூ எனவரும் (எ௬)

உ௭௯. பெற்ற மாயின் முற்றவின் வேண்டும்.

இஃது இயைபு வல்லெழுத்து விலக்கி இன் வகுத்தது.

**இதன் பொருள் :** பெற்றம் ஆயின்—முற்கூறிய சேவென் பது பெற்றத்தினை உணர்த்திய பொழுதாயின், முற்ற இன் வேண்டும்—முடிய இன்சாரியை பெற்று முடியவேண்டும் என்றவாறு.

**உதாரணம் :** சேவின்கோடு செவி தலை புறம் என வரும்.

முற்ற என்றதனானே முற்கூறிய சேவென்னும் மரப் பெயர்க்கும் ஏவென்பதற்கும் உருபிற்கு எய்திய சாரியை பொருட்கட் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்தல் கொள்க. சேவின்கோடு செதிள் தோல் பூ எனவும், ஏவின்கடுமை சிறுமை தீமை பெருமை எனவும் வரும்.

சாரியைப்பேறு வருமொழி வரையாது கூறினமையின் இயல்புகணத்தும் இன்பெறுதல் கொள்க. சேவினலம் மணி வால் சேவினிமில் சேவினடை சேவினுட்டம் என வரும்.

இன்னும் இதனானே இயல்புகணத்துக்கண் இன் பெறாது வருதலுங் கொள்க. செய்யுட்கண் ‘தென்றற்கு வீணைக்குச் சேம ணிக்குக் கோகிலத்திற்—கன்றிற்கு’ என வரும். (எஎ)

---

77. சேமணி இன்பெறாது வந்தது.

உஅ௦. ஐகார விறுதிப் பெயர்நிலை முன்னர்
வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே.

இஃது ஐகார ஈறு வேற்றுமைக்கண் முடியுமாறு கூறுகின்றது. தொகை மரபினுள் 'வேற்றுமையல்வழி இஐயென்னும்' (எழு-க௫அ) என்பதன்கண் அல்வழி முடித்தார்.

**இதன் பொருள்:** ஐகார இறுதிப் பெயர்நிலை முன்னர்—ஐகாரஈற்றுப் பெயர்ச்சொன் முன்னர் அதிகாரத்தாற் கசதப முதன்மொழி வந்துழி, வேற்றுமையாயின் வல்லெழுத்து மிகும்—வேற்றுமைப்பொருட் புணர்ச்சியாயின் தமக்குப்பொருந்தின வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

**உதாரணம்:** யானைக்கோடு செவி தலை புறம் என வரும்.

வேற்றுமையாயின் என்றதனான் உருபுபுணர்ச்சிக்கண்ணும் யானையைக் கொணர்ந்தானென வல்லெழுத்து மிகுதல் கொள்க. ()

உஅக. சுட்டுமுத லிறுதி யுருபிய னிலையும்.

இது வல்லெழுத்திேனாடு வற்று வருத்தலின் எய்தியதன் மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

**இதன் பொருள்:** சுட்டுமுதல் இறுதி—சுட்டெழுத்தினை முதலாகவுடைய ஐகார ஈற்றுப்பெயர், உருபியல் நிலையும்—உருபு புணர்ச்சியிற் கூறிய இயல்புபோலப் பொருட் புணர்ச்சிக்கண் வற்றுப்பெற்று முடியும் என்றவாறு.

**உதாரணம்:** அவையற்றுக்கோடு இவையற்றுக்கோடு உவையற்றுக்கோடு செவி தலை புறம் எனவரும். இதனை 'வஃகான் மெய்கெட' (எழு-க௨௨) என்பதனான் முடிக்க. (எ௯)

உஅ௨. விசைமரக் கிளவியு ஞெமையு நமையு
மாமுப் பெயருஞ் சேமர வியல.

இது வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

**இதன் பொருள்:** விசைமரக் கிளவியும்—விசைத்தற்றொழிலன்றி விசையென்னும் மரத்தை உணரநின்றசொல்லும், ஞெமையும்—ஞெமை யென்னும் மரத்தினை உணரநின்ற சொல்லும், நமையும்—நமை யென்னும் மரத்தினை உணரநின்றசொல்லும், ஆமுப்பெயரும்—ஆகிய அம்மூன்று பெயரும், சேமர இயல—வல்லெழுத்து மிகாது சேமரம்போல மெல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

**உதாரணம்:** விசைங்கோடு ஞெமைங்கோடு நமைங்கோடு செதிள் தோல் பூ என வரும். இவை கசதப முதலிய மொழி மேல் தோன்றும் மெல்லெழுத்து என்று உணர்க. (அ௦)

உஅ௩. பனையு மரையு மாவிரைக் கிளவியு
நினையுங் காலை யம்மொடு சிவணு
மையெ னிறுதி யரைவரைந்து கெடுமே
மெய்யவ ணொழிய வென்மனார் புலவர்.

இஃது இயைபு வல்லெழுத்து விலக்கி அம்மு வகுத்தது.

**இதன் பொருள்:** பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்—பனையென்னும்பெயரும் அரையென்னும் பெயரும் ஆவிரையென்னும் பெயரும், நினையுங்காலை அம்மொடு சிவணும்—ஆராயுங் காலத்து வல்லெழுத்து மிகாது அம்முச்சாரியையொடு பொருந்தி முடியும், ஐயென் இறுதி அரை வரைந்து கெடும்—அவ்விடத்து ஐயென்னும் ஈறு அரையென்னுஞ் சொல்லை நீக்கி ஏனை இரண்டிற்குங் கெடும், மெய் அவண் ஒழிய என்மனார் புலவர்—தன்னான் ஊரப்பட்ட மெய்கெடாது அச்சொல்லிடத்தே நிற்க என்று கூறுவர் புலவர் என்றவாறு.

**உதாரணம்:** பனை ஆவிரை எனநிறுத்தி அம்மு வருவித்து ஐகாரங் கெடுத்து ஒற்றின் மேலே அகரமேற்றிப் பனங்காய் ஆவிரங்கோடு செதிள் தோல் பூ என வரும். அரையென நிறுத்தி அம்முக்கொடுத்து ஐகாரங்கெடாது அரையங்கோடு செதிள் தோல் பூ என முடிக்க. வல்லெழுத்துக்கேடு மேலே 'கடிநிலையின்று' (எழு-௨அ௫) என்றதனாற் கூறுதும்.

நினையுங்காலை யென்றதனால் தூதுணை வழுதுணை தில்லை ஓலை தாழை என நிறுத்தி அம்முக்கொடுத்து ஐகாரங் கெடுத்

80. 'கசதப முதலிய' என்பது தொகைமரபு க௪௯-ம் சூத்திரம்.

துத் தூதுணங்காய் வழுதுணங்காய் தில்லங்காய் ஓலம்போழ் தாழங்காய் என முடிக்க. (அக)

உ௮௪. பனையின் முன்ன ரட்டுவரு காலை
நிலையின் றாகு மையெ னுயிரே
யாகாரம் வருத லாவயி னான.

இது நிலைமொழிச் செய்கைநோக்கி எய்தாததெய்துவித்தது.

**இதன் பொருள்:** பனையின் முன்னர் அட்டு வருகாலை—முற்கூறியவாறன்றிப் பனையென்னுஞ் சொன்முன்னர் அட்டென்னுஞ்சொல் வருமொழியாய் வருங்காலத்து, நிலையின்று ஆகும் ஐயென் உயிர்—நிற்றலில்லையாகும் ஐயென்னும் உயிர், ஆவயின் ஆன ஆகாரம் வருதல்—அவ்விடத்து ஆகாரம் வந்து அம்மெய்ம் மேலேறி முடிக என்றவாறு.

**உதாரணம்:** பனாஅட்டு என வரும். இதற்கு மூன்றுவதும் ஆறுவதும் விரியும்.

ஆவயினான என்றதனால் ஓராநயம் விச்சாவாதி என்னும் வேற்றுமை முடிபுங் கேட்டாமூலம் பாறுங்கல் என்னும் அல்வழி முடிபுங் கொள்க. இவற்றுள் வடமொழிகளை மறுத்தலும் ஒன்று. (அஉ)

உ௮௫. கொடிமுன் வரினே யையவ ணிற்பக்
கடிநிலை யின்றே வல்லெழுத்து மிகுதி.

இது மேல் ஐகாரங் கெடுத்து அம்முப்பெறுக என்றார், ஈண்டு அது கெடாதுநிற்க என்றலின் எய்தியது இகந்து படாமற் காத்தது. அம்மு விலக்கி வல்லெழுத்து விதித்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்ததுமாம்.

**இதன் பொருள்:** முன் கொடி வரின்—பனையென்னுஞ் சொன்முன்னர்க் கொடியென்னுஞ் சொல்வரின், ஐ அவண் நிற்ப—கேடு ஓதிய ஐகாரம் ஆண்டுக் கெடாது நிற்ப, வல்லெழுத்து மிகுதி கடிநிலையின்று—வல்லெழுத்து மிக்கு முடிதல் நீக்கு நிலைமையின்று என்றவாறு.

**உதாரணம்:** பனைக்கொடி என வரும். இதற்கு இரண்டாவதும் மூன்றாவதும் விரியும்.

கடிநிலையின்று என்றதனன் ஐகார ஈற்றுப் பெயர்களெல்லாம் எடுத்தோத்தானும் இலேசானும் அம்முச்சாரியையும் பிற சாரியையும் பெற்றுழி அதிகார வல்லெழுத்துக் கெடுத்துக் கொள்க.

இன்னும் இதனானே உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கட் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க. பனையின்குறை அரையின்கோடு ஆவிரையின்கோடு விசையின்கோடு ஞெமையின்கோடு நமையின்கோடு எனவும், தூதுணையின்காய் வழுதுணையின்காய் உழையின்கோடு வழையின்கோடு எனவும் வரும்.

பனைத்திரள் பனைந்திரள் என்னும் உறழ்ச்சிமுடிபு தொகைமரபினுட் புறனடையாற் கொள்க; அல்வழியு மாதலின். அன்றி ஈண்டு அவணென்றதனாற் கொள்வாரும் உளர். (அ௩)

உ௮௬. திங்களு நாளு முந்துகிளந் தன்ன.

இஃது இயைபு வல்லெழுத்தினோடு இக்குச் சாரியையும் வல்லெழுத்து விலக்கி ஆன்சாரியையும் வகுத்தலின் எய்தியதன் மேற் சிறப்புவிதியும் எய்தியது விலக்கிப் பிறிதுவிதியுங் கூறுகின்றது.

**இதன் பொருள்:** திங்களும் நாளும்—ஐகார ஈற்றுத் திங்களை உணரநின்ற பெயரும் நாளை உணரநின்ற பெயரும், முந்து கிளந்தன்ன—இகர ஈற்றுத் திங்களும் நாளும்போல இக்கும் ஆனும் பெற்று முடியும் என்றவாறு.

**உதாரணம்:** சித்திரைக்குக் கொண்டான் கேட்டையாற் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும் சித்திரை நாளாயின் ஆன்சாரியை கொடுக்க. வல்லெழுத்துக்கேடு முன்னர்க் 'கடிநிலையின்று' (எழு-உ அ௫) என்றதனாற் கொள்க.

82. வடமொழிகள் என்றது, ஓரா, விச்சா, கோட்டா என்பவைகளை.

திங்கள் முற்கூறிய முறையன்றிக் கூற்றினல் உழைங்கோடு அமைங்கோடு உடைங்கோடு என மெல்லெழுத்துக் கொடுத்துங் கலேங்கோடு கலேக்கோடு என உறழ்ச்சி எய்துவித்துங் கரியவற்றுக்கோடு குறியவற்றுக்கோடு நெடியவற்றுக்கோடு என ஐகார ஈற்றுப் பண்புப்பெயர்க்கு வற்றுக்கொடுத்து ஐகாரங் கெடுத்து வற்றுமிசை யொற்றென்று ஒற்றுக்கெடுத்தும் அவையத்துக்கொண்டான் அவையிற்கொண்டான் என அத்தும் இன்னுங்கொடுத்தும் பனையின் மாண்பு கேட்டையினுட்டினென இயல்புகணத்துக்கண் இன்சாரியை கொடுத்தும் முடிக்க. ஐகார ஈறு இன் சாரியை பெறுதல் தொகைமரபினுட் கூருமையின் ஈண்டுக்கொண்டாம். (அச)

உஅஎ. மழையென் கிளவி வளியிய லிலேயும். கூ. 247

இது வல்லெழுத்தினேடு அத்து வகுத்தலின் எய்தியதன் மேற் சிறப்புவிதியும் இயைபு வல்லெழுத்து விலக்கி இன் வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதியுங் கூறுகின்றது.

இதன் பொருள்: மழையென் கிளவி—மழையென்னும் ஐகார ஈற்றுச்சொல், வளியியல்நிலேயும்—வளியென்னுஞ் சொல் அத்தும் இன்னும் பெற்றுமுடிந்த இயல்பின் கண்ணே நின்று முடியும் என்றவாறு.

உதாரணம்: மழையத்துக்கொண்டான் மழையிற்கொண்டான் சென்முன் தந்தான் போயினுன் என வரும்.

ஈண்டு இன்பெற்றுழி வல்லெழுத்துக்கேடு 'கடிநிலேயின்று' (எழு-உஅடு) என்றதனுற் கொள்க. சாரியைப்பேறு வருமொழி வரையாது கூறினமையின் இயல்புகணத்துக்கண்ணுங் கொள்க. மழையத்துஞான்முன் மழையின்ஞான்முன் நிறுத்தினன் மாட்டினன் வந்தான் அடைந்தான் என ஒட்டுக. (அடு)

உஅஅ. செய்யுண் மருங்கின் வேட்கை யென்னு
மையெ னிறுதி யவாமுன் வரினே
மெய்யொடுங் கெடுத லென்மனர் புலவர்
டகார ணகார மாதல் வேண்டும்.

இது வேற்றுமைக்கட் செய்யுண்முடிபு கூறுகின்றது.



இதன் பொருள்: செய்யுண் மருங்கின் வேட்கை என்னும் ஐயென் இறுதி—செய்யுளிடத்து வேட்கையென்னும் ஐகார ஈற்றுச்சொல், அவா முன் வரின்—அவாவென்னுஞ் சொற்கு முன்னர் வரின், மெய்யொடுங் கெடுதல் என்மனர் புலவர்—அவ்வைகாரந் தான் ஊர்ந்த மெய்யோடுங் கூடக் கெடுமென்று கூறுவர் புலவர், டகாரம் ணகாரம் ஆதல் வேண்டும்—அவ்விடத்து நின்ற டகார ஒற்று ணகார ஒற்ருய்த் திரிதல்வேண்டும் என்றவாறு.

உதாரணம்: 'வேணவாநலிய வெய்யவுயிரா' என வரும்.

வேட்கையாவது பொருள்கள்மேல் தோன்றும் பற்றுள்ளம். அவாவாவது அப்பொருள்களைப் பெறவேண்டுமென்று மேன்மேல் நிகழும் ஆசை. எனவே, வேட்கையானுண்டாகிய அவாவென மூன்றனுருபு விரிந்தது. இதனே வேட்கையும் அவாவுமென அல்வழியென்பாரும் உளர். இங்ஙனங் கூறுவார் பாறங்கல் என்பதனே அம்முக்கொடுத்து ஈண்டு முடிப்பர். (அசு)

உஅகூ. ஓகார விறுதி யேகார வியற்றே.

இஃது ஓகார ஈற்று அல்வழிமுடிபு கூறுகின்றது.

இதன் பொருள்: ஓகார இறுதி ஏகார இயற்று—ஓகார ஈற்றுப் பெயர்ச்சொல் ஏகார ஈற்று அல்வழியின் இயல்பிற்ருய் வல்லெழுத்து வந்துழி அவ் வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

உதாரணம்: ஓக்கடிது சோக்கடிது சிறிது தீது பெரிது என வரும். (அஎ)

உகூ०. மாறுகொ ளெச்சமும் வினவு மையமுங்
கூறிய வல்லெழுத் தியற்கை யாகும்.

இஃது இடைச்சொன்முடிபு கூறலின் எய்தாததெய்துவித்தது.

இதன் பொருள்: மாறுகொள் எச்சமும்—மாறுபாட்டினேக் கொண்ட எச்சப்பொருண்மையை ஒழிபாகவுடைய ஓகாரமும்,

86. பாறங்கல் அஉ-ம் சூத்திரத்து வேற்றுமை முடிபோடு முடிக்கப்பட்டது. இதனே அல்வழி முடிபென்று கொள்பவர் இதனேடு முடிப்பர். இங்கே ஐ கெட்டு அம்முப்பெற்றது.

வினாவும்—வினாப்பொருண்மையையுடைய ஓகாரமும், ஐயமும்—ஐயப்பொருண்மையையுடைய ஓகாரமும், கூறிய வல்லெழுத்து இயற்கையாகும்—முற்கூறிய வல்லெழுத்தின்றி இயல்பாய் முடியும் என்றவாறு.

உதாரணம்: யானோ கொண்டேன் எனவும், நீயோ கொண்டாய் எனவும், பத்தோ பதினொன்றோ புற்றோ புதலோ எனவும் வரும்.

கூறிய என்றதனான் 'யானோ தேறே னவர்பொய் வழங் கலரே' (குறு-உக) எனப் பிரிநிலையும் நன்றோ தீதோ கண்டது எனத் தெரிநிலையும் ஓஒகொண்டான் எனச் சிறப்புங் 'குன் றறழ்ந்த களிறென்கோ கொய்யுளை மாவென்கோ' என எண்ணு நிலையும் வல்லெழுத்து மிகாது இயல்பாய் முடிதல் கொள்க. இதனானே ஈற்றசை வருமேனும் உணர்க. (அஅ)

உகூக. ஒழிந்தத னிலையு மொழிந்தவற் றியற்றே.

இதுவும் அது.

இதன் பொருள்: ஒழிந்ததன் நிலையும் மொழிந்தவற்று இயற்று—ஒழியிசை ஓகாரத்தினது நிலையும் முற்கூறிய ஓகாரங்களின் இயல்பிற்றாய் இயல்பாய் முடியும் என்றவாறு.

உதாரணம்: கொளலோகொண்டான் செலலோசென்றான் தரலோதந்தான் போதலோபோயினான் என ஓசை வேற்றுமையான் ஒருசொல் தோன்றப் பொருள் தந்து நிற்கும். (அகூ)

உகூஉ. வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே
யொகரம் வருத லாவயி னான.

இஃது ஓகார ஈற்று வேற்றுமைமுடிபு கூறுகின்றது.

இதன் பொருள்: வேற்றுமைக்கண்ணும் அதனோரற்று—ஓகார ஈற்று வேற்றுமைக்கண்ணும் அவ் வோகார ஈற்று அல்வழியோடு ஒத்து வல்லெழுத்து மிக்குமுடியும், ஆவயினான ஒகரம் வருதல்—அவ்விடத்து ஒகரம் வருக என்றவாறு.

உதாரணம்: ஓஒக்கடுமை கோஒக்கடுமை சிறுமை தீமை பெருமை என வரும். (கூ௦)

89. கொளலோகொண்டான் - கொள்ளுதலையோ செய்தான். ஏனையவுமன்ன.



உகூந. இல்லொடு கிளப்பி னியற்கை யாகும்.

இஃது எய்தியது விலக்கிற்று. என்னை? முன்னர் வன்கணம் வந்துழி ஒகரம் பெறுகவென வரைந்து கூறுதும் நிலைமொழித்தொழில் வரையாதுங் கூறலின் நான்கு கணத்துக் கண்ணுஞ் சேறலின்.

இதன் பொருள்: இல்லொடு கிளப்பின் இயற்கையாகும்—ஓகார ஈற்றுக் கோவென்னும் மொழியினை இல்லென்னும் வருமொழியோடு சொல்லின் ஒகரம் மிகாது இயல்பாய் முடியும் என்றவாறு.

உதாரணம்: கோவில் என வரும். கோவென்றது உயர்திணைப் பெயரன்றோவெனின், கோவந்தது என்று அஃறிணையாய் முடிதலின் அஃறிணைப்பாற்பட்டதென்க. (கூக)

உகூச. உருபிய னிலையு மொழியுமா ருளவே
யாவயின் வல்லெழுத் தியற்கை யாகும்.

இது வல்லெழுத்து விலக்கிச் சாரியை வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

இதன் பொருள்: உருபியல் நிலையும் மொழியுமாருள—ஓகார ஈற்றுச் சில பொருட்புணர்ச்சிக்கண் உருபுபுணர்ச்சியது இயல்பிலே நின்று ஒன்சாரியை பெற்றுமுடியும் மொழிகளும் உள, ஆவயின் வல்லெழுத்து இயற்கையாகும்—அவ்விடத்து வல்லெழுத்தின்றி இயல்பாய் முடியும் என்றவாறு.

உதாரணம்: கோஒன்கை செவி தலை புறம் என வரும்.

சாரியைப்பேறு வருமொழி வல்லெழுத்தை விலக்காமை இதனானும் பெற்றாம். (கூஉ)

91. கோ - அரசன். இல் - அரண்மனை. கோவந்தது என அஃறிணை வினையோடு முடிதலின் கோ என்னுஞ் சொல் பொருளானுயர்திணையாயினும் சொல்லா லஃறிணையென்றபடி.

92. இதன்கண் வல்லெழுத்து இயற்கையாகுமென்று ஆசிரியர் கூறலின், சாரியைப்பேறு வல்லெழுத்தை விளக்காமை இதனானும் பெற்றாம் என்றார்.

உ௬௫. ஔகார விறுதிப் பெயர்நிலை முன்ன
ரல்வழி யானும் வேற்றுமைக் கண்ணும்
வல்லெழுத்து மிகுதல் வரைநிலை யின்றே
யவ்விரு வீற்று முகரம் வருதல்
செவ்வி தென்ப சிறந்திசி னோரே.

இஃது ஔகார ஈறு இருவழியும் முடியுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள்:** ஔகார இறுதிப் பெயர் நிலை முன்னர்— ஔகாரம் இறுதியாகிய பெயர்ச்சொன் முன்னர் வல்லெழுத்து முதன்மொழி வருமொழியாய் வரின், அல்வழியானும் வேற்றுமைக்கண்ணும்—அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும், வல்லெழுத்து மிகுதல் வரைநிலையின்று—வல்லெழுத்து மிக்குமுடிதல் நீக்கு நிலைமையின்று, அவ்விரு ஈற்றும் உகரம் வருதல் செவ்விதென்ப சிறந்திசினோர்—அவ்விருகூற்று முடிபின்கண்ணும் நிலைமொழிக்கண் உகரம்வந்து முடிதல் செவ்விதென்று சொல்லுவர் சிறந்தோர் என்றவாறு.

**உதாரணம்:** கௌவுக்கடிது சிறிது தீது பெரிது எனவும், கடுமை சிறுமை தீமை பெருமை எனவும் வரும்.

செவ்விதென்றதனான் மென்கணத்தும் இடைக்கணத்தும் உகரம் பெறுதல் கொள்க. கௌவுஞெமிர்ந்தது ஞெமிர்ச்சி எனவும், வெளவு வலிது வலிமை எனவும் வரும்.

நிலைமொழி யென்றதனாற் கௌவின்கடுமை என உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கட் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்வுங் கொள்க.

இன்னும் இதனானே ஐகாரமும் இகரமும் வேற்றுமைக்கண் உருபு தொகையாயுழி இயல்பாதல் கொள்க. (௯௩)

உயிர்மயங்கியல் முற்றிற்று.

93. உருபு தொகையாயுழி - உருபு தொக்கவிடத்து.

அ. புள்ளி மயங்கியல்

உ௬௬. ஞகாரை யொற்றிய தொழிற்பெயர் முன்ன
ரல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
வல்லெழுத் தியையி னவ்வெழுத்து மிகுமே
யுகரம் வருத லாவயி னான.

என்பது சூத்திரம்.

நிறுத்த முறையானே உயிரீறு புணாததுப் புள்ளியீறு வன்கணத்தோடுஞ் சிறுபான்மை ஏனைக் கணத்தோடும் புணருமாறு கூறலின் இவ்வோத்துப் புள்ளிமயங்கியலென்னும் பெயர்த்தாயிற்று.

இச் சூத்திரம் ஞகார ஈறு வன்கணத்தோடு இருவழியும் புணருமாறு கூறுகின்றது.

**இதன் பொருள்:** ஞகாரை ஒற்றிய தொழிற்பெயர் முன்னர்—ஞகாரம் ஈற்றின்கண் ஒன்றுநின்ற தொழிற்பெயரின்முன்னர், அல்லது கிளப்பினும் வேற்றுமைக்கண்ணும்—அல்வழியைச் சொல்லுமிடத்தும் வேற்றுமையைச் சொல்லுமிடத்தும், வல்லெழுத்து இயையின் அவ்வெழுத்து மிகும்—வல்லெழுத்து முதன்மொழி வருமொழியாய்வரின் அவ்வல்லெழுத்து வருமொழிக்கண் மிக்கு முடியும், ஆவயின் ஆன உகரம் வருதல்—அவ்விடத்து உகரம் வரும் என்றவாறு.

**உதாரணம்:** உரிஞுக்கடிது சிறிது தீது பெரிது எனவும், உரிஞுக்கடுமை சிறுமை தீமை பெருமை எனவும் வரும். (௧)

உ௬௭. ஞநமவ வியையினு முகர நிலையும்.

இஃது அவ் வீறு மென்கணத்தோடும் இடைக்கணத்து வகரத்தோடும் முடியுமென எய்தாத தெய்துவித்தது.

**இதன் பொருள்:** ஞநமவ இயையினும் உகரம் நிலையும்—அஞ்ஞகார ஈறு வன்கணமன்றி ஞநமவ முதன்மொழி வருமொழியாய் வரினும் நிலைமொழிக்கண் உகரம் நிலைபெற்று முடியும் என்றவாறு.

உதாரணம்: உரிஞுஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும் வரும்.

யகரத்தோடும் உயிரோடும் புணருமாறு தொகைமரபினுள் 'உகரமொடுபுணரும்' (எழு-கசுஈ) என்பதனாற் கூறினர். (உ)

உகஅ. நகர விறுதியு மதனோ ரற்றே.

இது நகர ஈறு முற்கூறிய கணங்களோடு அல்வழிக்கண் முடியுமாறு கூறி எய்தாத தெய்துவிக்கின்றது.

இதன் பொருள்: நகர இறுதியும்—நகர ஈற்றுப்பெயரும் முற்கூறிய கணங்களோடு புணரும்வழி, அதனோரற்று—அஞ்ஞகர ஈற்றுத் தொழிற்பெயர் இயல்பிற்றாய் வல்லெழுத்து வந்துழி அவ் வல்லெழுத்து மிக்கு உகரம்பெற்றும் ஞநமவ வந்துழி உகரம் பெற்றும் முடியும் என்றவாறு.

உதாரணம்: பொருநுக்கடிது வெரிநுக்கடிது சிறிது தீது பெரிது எனவும், ஞான்றது நீண்டது மாண்டது வலிது என வும் வரும். முடிபு ஒப்புமைநோக்கி நகர ஈறு ஈண்டுப் புணர்த்தார். ஈண்டு வேற்றுமை யொழித்தது மாட்டேறு சென்ற தென்று உணர்க. (ஙு)

உகக. வேற்றுமைக் குக்கெட வகர நிலையும்.

இது நிலைமொழி உகரம் விலக்கி அகரம் வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

இதன் பொருள்: வேற்றுமைக்கு—அந்நகர ஈறு வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கு, உக்கெட அகரம் நிலையும்—மேலெய்

2. உகரமொடு புணரும் என்பது, தொகைமரபு உக-ம் சூத்திரத்து யகரமும் உயிரும் வருவழி உகரம் பெருவென்று விதித்ததை.

3. ஈண்டு வேற்றுமை ஒழித்து மாட்டேறு சென்றதென்றது, நகரவிறுதி வல்லினம் வருங்கால் வேற்றுமையினும் அல்வழியினும் உகரம்பெற்று வல்லெழுத்து மிக்கும், ஞநமவ வந்தால் உகரம்பெற்றும் முடியுமென்று கொள்ள நிற்றலின். அங்ஙனங் கொள்ளாது அல்வழிக்குமாத்திரம் மாட்டேற்றைக் கொள்க என்றபடி. நகரவிறுதிக்கு வேற்றுமை முடிபு வருஞ் சூத்திரத்தாற் கூறுப.



திய உகரங்கெட அகரத்தோடு நிலைபெற்றுப் புணரும் என்றவாறு.

உதாரணம்: பொருநக்கடுமை வெரிநக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வன்மை என வரும். அகரநிலையுமென்னாது உகரங்கெட என்றதனான் உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கட் சென்றுழி இயைபுவல்லெழுத்து வீழ்வுஞ் சிறுபான்மை உகரப்பேறுங் கொள்க. வெரிநின்குறை பொருநின்குறை உரிஞின்குறை எனவும், 'உயவல் யானை வெரிநுச் சென்றனன்' (அகம்—கூடு) எனவும் வரும். யானையினது முதுகின்மேற் சென்றனன் என விரிக்க.

பொருந் என்பது ஒரு சாதிப்பெயரும் பொருந்துதலென்னும் வினைப்பெயருமாம். (ச)

ஙOO. வெரிநெ னிறுதி முழுதுங் கெடுவழி
வருமிட னுடைத்தே மெல்லெழுத் தியற்கை.

இஃது அந்நகர ஈற்றுள் ஒருமொழிக்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

இதன் பொருள்: வெரிந் என் இறுதி—வெரிநென்று சொல்லப்படும் நகர ஈற்றுமொழி, முழுதுங் கெடுவழி—தன் ஈற்று நகரம் முன்பெற்ற உகரத்தோடு எஞ்சாமைக் கெட்ட இடத்து, மெல்லெழுத்து இயற்கை வரும் இடன் உடைத்து—மெல்லெழுத்துப்பெறும் இயல்பு வந்து முடியும் இடனுடைத்து என்றவாறு.

உதாரணம்: வெரிங்குறை செய்கை தலை புறம் என வரும். மெல்லெழுத்து வருமொழி நோக்கி வந்தது. 'வெயில்வெரி நிறுத்த பயிலிதழ்ப் பசுங்குடை' என்பதில் நகர இகரமே இட்டெழுதுப. (ரு)

4. பொருந் என்பது சாதிப் பெயர் என்றது பொருநர் என்னுஞ் சாதியை யுணர்த்திநின்றதென்றபடி. வினைப்பெயர்—தொழிற்பெயர்.

5. நகர இகரமே இட்டெழுதுப என்றது என்னையெனின் வெரின் என னகர விகரமிட்டு எழுதுவாரை விலக்குதற்கு.

௧௦௧. ஆவயின் வல்லெழுத்து மிகுதலு முரித்தே.

இஃது அதற்கு எய்தாத தெய்துவித்தது.

இதன் பொருள்: ஆவயின்—அவ்வெரிந் என்னுஞ் சொல் அவ்வாறு ஈறு கெட்டு நின்ற இடத்து, வல்லெழுத்து மிகுதலும் உரித்து—மெல்லெழுத்தேயன்றி வல்லெழுத்து மிக்குமுடிதலும் உரித்து என்றவாறு.

உதாரணம்: வெரிக்குறை செய்கை தலை புறம் என வரும். (௬)

௧௦௨. ணகார விறுதி வல்லெழுத் தியையின்
டகார மாகும் வேற்றுமைப் பொருட்கே.

இது நிறுத்தமுறையானே ணகார ஈறு வேற்றுமைப் பொருட்கட் புணருமாறு கூறுகின்றது.

இதன் பொருள்: ணகார இறுதி—ணகார ஈற்றுப் பெயர், வல்லெழுத்து இயையின்—வல்லெழுத்து முதன்மொழி வந்து இயையின், டகாரமாகும் வேற்றுமைப்பொருட்கு—டகாரமாகத் திரிந்து முடியும் வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண் என்றவாறு.

உதாரணம்: மட்குடம் சாடி தூதை பானை என வரும். மண்கை புண்கை என்பன இரண்டாவதன் திரிபின் முடிந்தன.

கவண்கால் பரண்கால் என்பன மேல் முடித்தும். (௭)

௧௦௩. ஆணும் பெண்ணு மஃறிணை யியற்கை.

இஃது இவ்வீற்று விரவுப்பெயருட் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

இதன் பொருள்: ஆணும் பெண்ணும்—ஆணென்னும் விரவுப்பெயரும் பெண்ணென்னும் விரவுப்பெயரும், அஃறிணை இயற்கை—தொகைமரபினுள் 'மொழிமுதலாகும்' (எழு-௧௪௭)

7. இரண்டாவதன்றிரிபு என்றது, தொகைமரபு ௧௫-ம் சூத்திரத்தாற் கூறிய இரண்டாம் வேற்றுமைத் திரிபை.



என்பதன்கண் அஃறிணைப்பெயர் முடிந்த இயல்புபோலத் தாமும் வேற்றுமைக்கண் இயல்பாய் முடியும் என்றவாறு.

உதாரணம்: ஆண்கை பெண்கை செவி தலை புறம் என வரும்.

இது தொகைமரபினுள் 'அஃறிணை விரவுப்பெயர்' (எழு-௧௫௫) என்பதனுள் முடிந்த இயல்பன்றோவெனின், இவை ஆண்டு முடிந்தனபோலத் தத்தம் மரபின் வினையாற் பாலறியப் படுவன அன்றி இருதிணைக்கண்ணும் அஃறிணையாய் முடிதலின், அஃறிணைப் பெயரது இயல்போடு மாட்டெறிந்து முடித்தாரென்க. ஆண்கடிது பெண்கடிது என்னும் அல்வழிமுடிபு 'மொழி முதலாகும்' (எழு-௧௪௭) என்பதன்கண் வருமொழி முற்கூறிய வதனான் முடிக்க. (௮)

௧௦௪. ஆண்மரக் கிளவி யரைமர வியற்றே.

இது திரிபுவிலக்கிச் சாரியை வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

இதன் பொருள்: ஆண்மரக் கிளவி—ஆண்பாலை உணர்த்தாது ஆணென்னும் மரத்தினை உணரநின்ற சொல், அரை மர இயற்று—அரையென்னும் மரம் அம்முப்பெற்ற இயல்பிற்றாய்த் தானும் அம்முப்பெற்று முடியும் என்றவாறு.

உதாரணம்: ஆணங்கோடு செதிள் தோல் பூ என வரும்.

ஒன்றென முடித்தலான் இயல்புகணத்துங் கொள்க. ஆணநார் இலை என வரும்.

விரவுப்பெய ரன்றென்றற்கு மரமென்றார். (௯)

௧௦௫. விண்ணென் வரூஉங் காயப் பெயர்வயி
னுண்மையு முரித்தே யத்தென் சாரியை
செய்யுண் மருங்கிற் றொழில்வரு காலை.

இது செய்யுளுள் திரிபு விலக்கிச் சாரியை வகுத்தது.

8. இருதிணைக்கண்ணும் அஃறிணையாய் முடிதல் என்றது, ஆண் வந்தான் ஆண் வந்தது என முடியாமல் இருதிணைக்கண்ணும் ஆண் வந்தது என முடிதலை.

9. விரவுப்பெயரென்றது, ஆண் என்னும் பொதுப்பெயரை.

**இதன் பொருள் :** விண் என வரூஉங் காயப்பெயர்வயின் — விண்ணென்று சொல்லவருகிற ஆகாயத்தை உணரநின்ற பெயர்க்கண், அத்து என் சாரியை மிகுதலும் உரித்து — அத்தென்னுஞ் சாரியை உண்டாதலும் உரித்து இல்லையாதலும் உரித்து, செய்யுள் மருங்கில் தொழில்வருகாலை — செய்யுளிடத்துத் தொழிற்சொல் வருங்காலத்து என்றவாறு.

**உதாரணம் :** 'விண்ணத்துக்கொட்கும் வண்ணத்தமரர்' 'விண்ணத்துக்கொட்கும் விரைசெலலூர்தியோய்' எனவும், 'விண்குத்து நீள்வரை வெற்ப களைபவோ' (நாலடி—உ.உசு) எனவும் வரும். விண்ணென்னும் குறிப்பினை நீக்குதற்குக் காயமென்றார்.

விண்வத்துக்கொட்கும் என உடம்படுமெய் புணர்ந்து நிற்றலுங் கொள்க. அதிகார வல்லெழுத்தன்மையிற் சாரியை வல்லெழுத்துக் கொடுக்க. (கO)

ஙOசு. தொழிற்பெய ரெல்லாந் தொழிற்பெய ரியல.

இஃது இவ் வீற்றுட் சிலவற்றிற்குத் திரிபு விலக்கி உகரமும் வல்லெழுத்தும் விதிக்கின்றது.

**இதன் பொருள் :** தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல — அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும் ஞகார ஈற்றுத் தொழிற்பெயரது இயல்பிற்றாய் வன்கணம் வந்துழி வல்லெழுத்தும் உகரமும் பெற்றும் மென்கணத்தும் இடைக்கணத்து வகரத்தும் உகரம் பெற்றும் முடியும் என்றவாறு.

**உதாரணம் :** மண்ணுக்கடிது பண்ணுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், மண்ணுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வன்மை எனவும் வரும்.

---

**10.** அதிகார வல்லெழுத்தின்மை என்றது, உயிரீற்றுக்காயின் அதிகார வல்லெழுத்து உண்டு; இது மெய்யீருனபடியால் அதிகார வல்லெழுத்தின்று என்றபடி. ஆதலின் வல்லெழுத்துக் கொடுத்து முடிக்க என்றபடி. உயிரீற்றின் முன்னன்றி யாழ வொழிந்த மெய். யீற்றின்முன் வல்லினம் மிகாதென்க.



எல்லாமென்றதனல் தொழிற்பெயரல்லனவும் உகரமும் வல்லெழுத்தும் பெற்றும் இன்சாரியை பெற்றும் புணர்வன கொள்க. வெண்ணுக்கரை 'தாழ்பெயல் கனைகுரல் கடுப்பப் பண்ணுப்பெயர்த்து' எண்ணுப்பாறு வெண்ணின் கரை என வரும். (கக)

ஙOஎ. கிளைப்பெய ரெல்லாங் கொளத்திரி பிலவே.

இஃது இவற்றுட் சிலவற்றிற்குத் திரிபு விலக்கி இயல்பு கூறுதலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறுகின்றது.

**இதன் பொருள் :** கிளைப்பெயரெல்லாம் — ணகார ஈற்றுள் ஓரினத்தை உணரநின்ற பெயரெல்லாம், கொளத்திரிபு இல — திரிபுடையவென்று கருதும்படியாகத் திரிதலின்றாய் இயல்பாய் முடியும் என்றவாறு.

**உதாரணம் :** உமண் என நிறுத்திக் குடி சேரி தோட்டம் பாடி எனத் தந்து முடிக்க.

இனி, எல்லாமென்றதனற் பிற சாரியைபெற்று முடிவனவும் இயல்பாய் முடிவனவுங் கொள்க. மண்ணப்பத்தம் எண்ணநோலை எனவும், கவண்கால் பரண்கால் எனவும் கொள்க.

கொள என்றதனல் ஏழாம் வேற்றுமைப் பொருண்மை உணரநின்ற இடைச்சொற்கள் திரிந்து முடிவனவுங் கொள்க. அங்கட்கொண்டான் இங்கட்கொண்டான் உங்கட்கொண்டான் எங்கட்கொண்டான் எனவும், ஆங்கட்கொண்டான் ஈங்கட்கொண்டான் ஊங்கட்கொண்டான் யாங்கட்கொண்டான் எனவும், அவட்கொண்டான் இவட்கொண்டான் உவட்கொண்டான் எவட்கொண்டான் எனவும் ஒட்டுக. (கஉ)

---

**11.** மண்ணுதல்—கழுவுதல். வெண்—ஓராறு. எண்ணுப்பாறு எண்ணின்கட்பாறு என விரியும். எண்—எள். பாறு—பருந்து.

**12.** மண்ணப்பத்தம்—மண்ணலாகியபத்தம். பந்தம் பத்தம் என்ருயிற்று. பந்தம்—திரள். எண்ணலாகிய நோலை. நோலை—அப்பவகை. மண்ணப்பத்தம், எண்ணநோலை இவை அக்குப்பெற்றன.

௩௦அ. வேற்றுமை யல்வழி யெண்ணெ னுணவுப்பெயர்
வேற்றுமை யியற்கை நிலையலு முரித்தே.

இஃது அவ் வீற்றுள் ஒன்று அல்வழியுள் வேற்றுமை முடிபுபோலத் திரிந்து முடியுமாறு கூறுகின்றது.

இதன் பொருள்: வேற்றுமை அல்வழி—வேற்றுமையல்லாத இடத்து, எண்ணென் உணவுப்பெயர்—வரையறைப்பொருண்மை உணர்த்தாது எண்ணென்று சொல்லப்படும் உணவினை உணர்த்தும்பெயர், வேற்றுமை இயற்கை நிலையலும் உரித்து—வேற்றுமையது திரிந்து முடியும் இயல்பு நிற்றலும் உரித்து என்றவாறு.

உதாரணம்: எட்கடிது சிறிது தீது பெரிது என வரும். உம்மையால் தொகைமரபினுள் 'மொழிமுதலாகும்' (எழு-கசஎ) என்றதனாற் கூறிய இயல்பு பெரும்பான்மையாயிற்று.

அஃது எண்கடிது என வரும். (கங)

௩௦௯. முரணென் றொழிற்பெயர் முதலிய னிலையும்.

இஃது இவ் வீற்றுட் தொழிற்பெயருள் ஒன்றற்குத் தொழிற்பெயர்க்கு எய்திய உகரமும் வல்லெழுத்தும் விலக்கி இவ் வீற்று அல்வழி முடிபும் வேற்றுமை முடிபும் எய்துவித்தது.

இதன் பொருள்: முரண் என் தொழிற்பெயர்—மாறுபாடு உணர்த்தும் முரணென்னுந் தொழிற்பெயர், முதலியல் நிலையும்—தொகைமரபிற் கூறிய அல்வழிக்கண் திரியாது முடிந்த இயல்பின்கண்ணும் ஈண்டு வேற்றுமைக்கண் திரிந்து முடிந்த இயல்பின்கண்ணும் நிலைபெற்று முடியும் என்றவாறு.

உதாரணம்: முரண்கடிது சிறிது தீது பெரிது ஞெகிழ்ந்தது நீண்டது மாண்டது வலிது எனவும், முரட்கடுமை சேனை தானை பறை எனவும்; முரண்ஞெகிழ்ச்சி நீட்சி மாட்சி வலிமை எனவும் வரும். இதனைத் 'தொழிற்பெயரெல்லாம்' (எழு-௩௦௬)

13. 'மொழிமுதலாகும்' என்றது, தொகைமரபு ரு-ம் சூத்திரத்தை.



என்றதன்பின் வையாத முறையன்றிக் கூற்றினுன் முரண்கடுமை முரட்கடுமை, அரண்கடுமை அரட்கடுமை என்னும் உறழ்ச்சியுங் கொள்க. (கச)

௩௧௦. மகர விறுதி வேற்றுமை யாயிற்
றுவரக் கெட்டு வல்லெழுத்து மிகுமே.

இது முறையானே மகர ஈற்றுப்பெயர் வேற்றுமைக்கட் புணருமாறு கூறுகின்றது.

இதன் பொருள்: மகர இறுதி வேற்றுமை ஆயின்—மகர ஈற்றுப்பெயர் வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண்ணாயின், துவரக் கெட்டு வல்லெழுத்து மிகும்—அந் நிலைமொழி மகரம் முற்றக்கெட்டு வருமொழி வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

உதாரணம்: மரக்கோடு செதிள் தோல் பூ என வரும். முண்டகக்கோதை எனவும் வரும்.

துவர என்றதனுன் இயல்புகணத்துக்கண்ணும் உயர்திணைப் பெயர்க்கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் மகரக்கேடு கொள்க. மரஞாண் மரநூல் இவற்றிற்கு நான்கனுருபு விரிக்க. மரமணி யாழ் வட்டு அடை ஆடை என ஒட்டுக. நுங்கை எங்கை செவி தலை புறம் எனவும், தங்கை செவி தலை புறம் எனவும் வரும். ஈண்டு மகரக்கேடே கொள்க; முடிபு மேற்கூறுப. (எழு-௩ ௨௦) (கரு)

௩௧௧. அகர ஆகாரம் வருஉங் காலை
யீற்றுமிசை யகர நீடலு முரித்தே.

இஃது அவ் வீற்று முடிபு வேற்றுமையுடையன கூறுகின்றது.

14. தொகைமரபிற் கூறிய இயல்பின்கண்ணுமென்றது, தொகைமரபு ரு-ம் சூத்திரத்தின்கட் கூறிய இயல்பு முடிபை. ஈண்டு வேற்றுமைக்கட் டிரிந்து முடிந்த இயல்பின் என்றது, இப்புள்ளி மயங்கியல் கூ-ம் சூத்திரத்துக்கூறிய திரிபு முடிபையும் தொகைமரபு கூ-ம் சூத்திரத்துக் கூறிய இயல்பு முடிபையும்.

15. நும்—விரவுப்பெயர்.

இதன் பொருள்: *அகர ஆகாரம் வரூஉங் காலை—அகர முதன்மொழியும் ஆகார முதன்மொழியும் வருமொழியாய் வருங் காலத்து, ஈற்றுமிசை அகரம் நீடலும் உரித்து—மகர ஒற்றின்மேல் நின்ற அகரம் நீண்டு முடிதலும் உரித்து நீடாமையும் உரித்து என்றவாறு.*

உதாரணம்: *மரம் குளம் என நிறுத்தி மகரங்கெடுத்து அடி ஆம்பல் எனத் தந்து ரகர ளகரங்களில் நின்ற அகரம் ஆகாரமாக்கி மராஅடி குளாஅம்பல் என முடிக்க.*

*மேற் 'செல்வழி யறிதல் வழக்கத் தான' (எழு-௩௧௨) என்பதனாற் குளாஅம்பல் என்புழி ஆகாரத்தை அகரமாக்குக.*

*உம்மையான் மரவடி குளவாம்பல் என நீடாமையுங்கொள்க.*

*வருமொழி முற்கூறியவதனான் இவ் வீற்றுப் பிறவும் வேறுபட முடிவன கொள்க. கோணுகோணம் கோணுவட்டம் என வரும். இவற்றிற்கு உள்ளென்னும் உருபு விரிக்க.*

*கோணுகோணத்திற்கு வல்லெழுத்துக்கேடு மேலைச் சூத்திரத்து இலேசாற் கொள்க.* (௧௬)

௩௧௨. மெல்லெழுத் துறழு மொழியுமா ருளவே
செல்வழி யறிதல் வழக்கத் தான.

*இது மகரங்கெட்டு வல்லெழுத்து மிகுதலோடு மெல்லெழுத்தும் உறழ்க என்றலின், எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.*

இதன் பொருள்: *மெல்லெழுத்து உறழும் மொழியுமாருள—மகர ஈற்றுள் வல்லெழுத்தினோடு மெல்லெழுத்துப்பெற்று உறழ்ந்து முடியும் மொழிகளும் உள, வழக்கத்து ஆன செல்வழி அறிதல்—வழக்கத்தின்கண்ணும் வழங்கும் இடம் அறிக என்றவாறு.*

உதாரணம்: *குளங்கரை குளக்கரை சேறு தாது பூழி என வரும். இவற்றுட் குளங்கரை குளக்கரைபோல அல்லன*

16. *மேல் என்றது, வருஞ் சூத்திரத்தை.*



*ஒத்த உறழ்ச்சியாய் வழங்கா வென்றற்குச் செல்வழி யறிதலென்றார்.*

*வழக்கத்தான என்றதனான் குளத்துக்கொண்டான் ஈழத்துச்சென்றான் குடத்துவாய் பிலத்துவாய் என்றாற்போல்வன மகரங்கெட்டு அத்துப் பெற்றன. இவை 'அத்தேவற்றே' (எழு-௧௩௩) என்பதனான் ஒற்றுக்கெடாதாயிற்று, அஃது அல்வழிக்குக் கூறுதலின். மழகளிறு என்பது 'மழவுங் குழவுமிளமைப் பொருள' என்ற உரிச்சொல். அது மகர ஈறன்று. சண்பகங்கோடு என்பது வழக்கிடத்துச் செல்லாது.*

*இன்னும் இதனானே மகரங்கெடாது நிற்பனவுங் கொள்க. 'புலம்புக்கனவே' (புறம்-௨௫௮) 'கலம்பெறு கண்ணுளரொக்கற் றலைவ' (மலைபடு-௫௦) என வரும்.* (௧௭)

௩௧௩. இல்ல மரப்பெயர் விசைமர வியற்றே.

*இஃது இவ் வீற்றுள் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தது.*

இதன் பொருள்: *இல்ல மரப் பெயர்—புக்கு உறையும் இல்லன்றி இல்லமென்னும் மரத்தினை உணரநின்ற சொல், விசைமர இயற்று—விசையென்னும் மரத்தின் இயல்பிற்றாய் மெல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.*

உதாரணம்: *இல்லங்கோடு செதிள் தோல் பூ என வரும்.*

*மேலைச் சூத்திரத்து 'வழக்கத்தான' (எழு-௩௧௨) என்றதனான் மகரக்கேடு கொள்க.* (௧௮)

௩௧௪. அல்வழி யெல்லா மெல்லெழுத் தாகும்.

*இது மகரம் அல்வழிக்கண் திரிக என முற்கூறாமையின் எய்தாததெய்துவித்தது.*

17. *ஒற்றென்றது, நிலைமொழி மகரத்தை.*

**இதன் பொருள்:** அல்வழியெல்லாம் மெல்லெழுத்தாகும்—மகர ஈறு அல்வழிக்கணெல்லாம் மெல்லெழுத்தாய்த்திரிந்து முடியும் என்றவாறு.

**உதாரணம்:** மரங்குறிது சிறிது தீது பெரிது என வரும். மரம் பெரிது என்புழித் திரிபின்றென்பது ஆணைகூறலென்னும் உத்தி.

இனி எல்லாமென்றதனால் அல்வழிக்கண் மகர ஈறு பிறவாற்றான் முடிவனவெல்லாம் முடிக்க. வட்டத்தடுக்கு, சதுரப் பலகை, ஆய்தப்புள்ளி, வேழக்கரும்பு; கலக்கொள் சுக்கு தோரை பயறு; நீலக்கண் என்னும் பண்புப்பெயர்கள் மகரங் கெட்டு வல்லெழுத்து மிக்கு முடிந்தன. ஆய்தவுலக்கை அகர முதல இவை இயல்புகணத்துக்கண் மகரங்கெட்டு முடிந்தன. எல்லாருங்குறியர் நாங்குறியேம் இவை உயர்திணைப்பெயர் மகரந் திரிந்து மெல்லெழுத்தாய் முடிந்தன. கொல்லுங் கொற்றன் உண்ணுஞ் சாத்தன் கவளமாந்துமலைகெழுநாடன் பொருமாரன் தாவுபரி பறக்குநாரை ஓடுநாகம் ஆடுபோர் வருகாலம் கொல்லும்யானை பாடும்பாணன் என இவை மகரந் திரிந்துங் கெட்டும் நிலைபெற்றும் வந்த பெயரெச்சம்.

இன்னும் இதனானே இயல்புகணத்துக்கண்ணும் மகரங் கெடுதலுங் கெடாமையுங் கொள்க. மரஞான்றது நீண்டது மாண்டது எனவும், மரம் யாது வலிது அடைந்தது எனவும் வரும். இன்னும் இதனானே பவளவாயென உவமத்தும் நிலநீரென எண்ணிடத்துங் கேடு கொள்க. (கக)

19. ஆணைகூறலாவது, இவ்வாசிரியனது கருத்து இதுவெனக் கொள்ளவைத்தல். பகரத்திற்கு இனம் மகரமாதலிற் றிரியாது என்பது கருத்து. இவை இயல்புகணத்துக்கண் மகரங்கெட்டு முடிந்தன என்றது, உலக்கை என்பதில் உகரமும் முதல என்பதில் மகரமும் இயல்புக்கணமாதல்பற்றி. மென்கணம், இடைக்கணம் உயிர்க்கணம் என்னும் இவைகள் இயல்புகணங்கள். இயல்புகணமென்றது, ஈண்டு உகர மகரங்களை. கொல்லுங்கொற்றன் உண்ணுஞ்சாத்தன் மகரந் திரிந்தன. கவளமாந்து மலைகெழுநாடன் முதலியன மகரங்கெட்டு நின்றன. கொல்லும் யானை முதலியன மகரம் நிலைபெற்றன.



நகரு. அகமென் கிளவிக்குக் கைமுன் வரினே
முதனிலை யொழிய முன்னவை கெடுதலும்
வரைநிலை யின்றே யாசிரி யர்க்க
மெல்லெழுத்து மிகுத லாவயி னான.

இது மகர ஈற்று அல்வழிக்கண் இம்மொழி இம்முடிபு எய்துக என்றலின் எய்தாத தெய்துவித்தது.

**இதன் பொருள்:** அகம் என் கிளவிக்குக் கை முன் வரின்—அகமென்னுஞ் சொல்லிற்குக் கையென்னுஞ் சொல் முன்னே வருமாயின், முதனிலை ஒழிய முன்னவை கெடுதலும்—முன்னின்ற அகரங் கெடாது நிற்ப அதன் முன்னின்ற ககரமும் மகரவொற்றுங் கெட்டு முடிதலுங் கெடாதுநின்று முடிதலும், வரைநிலை இன்றே யாசிரியர்க்க—நீக்கு நிலைமையின்று ஆசிரியர்க்கு, ஆவயின் ஆன மெல்லெழுத்து மிகுதல்—அவை கெட்ட வழி மெல்லெழுத்து மிக்குமுடியும் என்றவாறு.

**உதாரணம்:** அங்கை எனவரும். அகங்கை எனக் கெடாது முடிந்தவழி 'அல்வழியெல்லாம்' (எழு—நகச) என்றதனான் மகரந் திரிந்து முடிதல் கொள்க. இது பண்புத்தொகை. அதிகாரத்தானும் பொருளானும் வேற்றுமைத் தொகையன்மை உணர்க. (உ0)

நகசா. இலமென் கிளவிக்குப் படுவரு காலை
நிலையலு முரித்தே செய்யு ளான.

இஃது இலமென்பது முற்றுவினைச் சொல்லாகாது குறிப்பாகிய உரிச்சொல்லாய் நிற்குங்கால் அல்வழிக்கண் முடியுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள்:** இலம் என் கிளவிக்கு—இல்லாமையென்னும் குறிப்பாகிய உரிச்சொற்கு, படு வருகாலை—உண்டாதலென்னும் வினைக்குறிப்புப்பெயர் வருமொழியாய் வருங்காலத்து,

20. 'அல்வழியெல்லாம்' என்றது இதற்கு முதற்சூத்திரத்தை. அதிகாரத்தானும் என்றது அல்வழி அதிகாரப்பட்டு நின்றமையை, பொருள் என்றது உள்ளங்கையெனப் பொருள் தருதலை.

செய்யுளான நிலையலும் உரித்து—செய்யுளிடத்து மகரக்கேடுந் திரிபுமின்றி நிற்றலும் உரித்து என்றவாறு.

எனவே, உம்மையாற் பிறசொல் வருங்காலத்துக் கேடுந் திரிபும் பெற்று நிற்றலும் உரித்தெனக் கொள்க.

**உதாரணம் :** 'இலம்படு புலவ ரேற்றகை நிறைய' இதற்கு இல்லாமை உண்டாகின்ற புலவரெனப் பொருள் கூறுக. 'இலம் பாடு நாணுத்தரும்' என்கின்றதோவெனின், இல்லாமை உண்டாதல் நாணுத்தருமென்று பொருள் கூறுக. இதனை நெற்பாடு பெரிதென்றாற்போலக் கொள்க. இது பொருளிலமென முற்று வினைச் சொல்லாமாறும் உணர்க. இலநின்றதெனக் கெட்டவாறும், இலங்கெடவியந்தான் இலஞ்சிறிதாக இலந்தீதென்று எனக் கசதக்கள் வரும்வழித் திரிந்தவாறுங் காண்க.

'எல்லா' (எழு-௩௧௪) மென்றதனான் இலம்வருவதுபோ லும் இலம் யாரிடத்தது என வகர யகரங்களின் முன்னர்க் கெடாது நிற்றல் கொள்க.

இதனை இலத்தாற் பற்றப்பட்ட புலவரென வேற்றுமை யென்றாரால் உரையாசிரியரெனின், பற்றப்பட்ட புலவரென்பது பெயரெச்சமாதலிற் பற்றவென்னுந் தொழில் தோற்றுவிக்கின்ற முதனிலைச் சொல்லைச் சூத்திரத்து ஆசிரியர் எடுத்தோதிற்றில ராதலானும் படுவென்பதுதானும் புலவரென்னும் பெயரோடு முடியுங்கால் இரண்டுகாலமும் காட்டும் ஈறுகள் தொக்க முதனிலைச் சொல்லாய் நிற்றலின், அதனை எடுத்தோதினாராதலானும் ஆசிரியர்க்கு அங்ஙனம் கூறுதல் கருத்தன்மை உணர்க.

21. வினைக்குறிப்புப் பெயரென்றது, குறிப்பாகக் காலங்காட்டும் முதனிலைத் தொழிற்பெயரை. படு என்பது உண்டாகின்ற எனக் குறிப்பாகக் காலங்காட்டல்பற்றிக் குறிப்பு என்றார். இலத்தாற் பற்றப்பட்ட என்று பொருளுரைக்குங்கால் பற்றுதற்கு முதனிலையின் றென்பது நச்சினார்க்கினியர் கருத்து. படு என்பதை வினைத்தொகையாகக் கொள்ளின் இரண்டுகாலத்துக்கும் பொதுவாகும். இரண்டு காலம் என்றது இறப்பு நிகழ்வினை. படு என்பது இரண்டுகாலமும் பற்றி விரியுங்கால் பட்ட படும் என விரியும். அவ்விரண்டுந் தொக்க முதனிலை படு என்பது. படு என்பதை முதனிலைத் தொழிற்பெயராக வைத்து வருமொழியாக ஆசிரியர் எடுத்தோதினரன்றி வினைத்தொகை



அன்றியும் பற்றப்பட்ட என்புழி இரண்டு முதனிலைகூடி ஒன்றாய் நின்று பற்றுதலைச் செய்யப்பட்ட எனப் பொருள் தாராமையானும் அல்வழி யதிகாரமாதலானும் அது பொருளன்மை உணர்க. (உ௧)

௩௧௭. அத்தொடு சிவணு மாயிரத் திறுதி
யொத்த வெண்ணு முன்வரு காலை.

இஃது இவ் வீற்றுள் எண்ணுப்பெயருள் ஒன்றற்குத் தொகைமரபினுள் 'உயிரும் புள்ளியு மிறுதி யாகி' (எழு-௧௬௪) என்பதனான் எய்திய ஏயென்சாரியைவிலக்கி அத்துவகுக்கின்றது.

**இதன் பொருள் :** ஆயிரத்து இறுதி—ஆயிரமென்னும் எண்ணுப்பெயரின் மகரம், ஒத்த எண் முன்வருகாலை—தனக்கு அகப்படும் மொழியாய்ப் பொருந்தின எண்ணுப்பெயர் தன்முன் வருங்காலத்து, அத்தொடு சிவணும்—தொகைமரபிற் கூறிய ஏயென் சாரியை ஒழித்து அத்துச்சாரியையோடு பொருந்தி முடியும் என்றவாறு.

**உதாரணம் :** ஆயிரத்தொன்று ஆயிரத்தொன்பது என ஒன்றுமுதல் ஒன்பதின்காறும் ஒட்டுக. மகரத்தை அத்தின்மிசை யொற்றென்று கெடுத்து 'அத்தினகர மகரமுனையில்லை' (எழு-௧௨௫) என்று முடிக்க. ஆயிரத்தொருபது என்றாற்போல்வனவற்றிற்கும் ஒட்டுக.

நிலைமொழி முற்கூறுகதனான் ஆயிரத்துக்குறை கூறு முதல் என்பனவுங் கொள்க. இன்னும் இதனானே ஆயிரப்பத்தென்புழி மகரங்கெடுத்து வல்லொற்று மிகுத்து முடிக்க. (உ௨)

யாயின் படு புலவர் என்பதில் படு என்பதைப் பிரித்து வருமொழியாகக் கூறுரென்பது கருதி முதனிலையாய் நிற்றலின் அதனை எடுத்தோதினரென்றார். படு என்பது பட்ட என்பதற்கு முதனிலையாருமே யன்றி பற்ற என்பதற்கு முதனிலையாகாதென்பார் இரண்டு முதனிலை கூடி ஒன்றாய்நின்று பற்றுதலைச் செய்யப்பட்ட எனப் பொருள் தராமையானும் என்றார். இங்கே பற்றுதற்குரிய முதனிலையில்லை. ஆதலின் படு என்பது பட்ட எனப் பொருள்தருமன்றிப் பற்றப்பட்ட எனப் பொருள்தராமையின் உரையாசிரியர். கருத்துப் பொருந்தாதென்பது கருத்து.

ஙகஅ. அடையொடு தோன்றினு மதனோ ரற்றே.

இஃது 'அடையொடு தோன்றினும் புணர்நிலைக் குரிய' (எழு-ககо) என்றமையின் அவ்வெண்ணுப் பெயரை அடையடுத்து முடிக்கின்றது.

**இதன் பொருள் :** அடையொடு தோன்றினும்—அவ்வாயிரமென்னும் எண்ணுப்பெயர் அடையடுத்த மொழியோடு வரினும், அதனோரற்று—முற்கூறியதனோடு ஒருதன்மைத்தாய் அத்துப் பெற்று முடியும் என்றவாறு.

**உதாரணம் :** பதினாயிரத்தொன்று இரண்டு இருபதினாயிரத்தொன்று ஆறாயிரத்தொன்று நூறாயிரத்தொன்று முந்நூறாயிரத்தொன்று ஐந்நூறாயிரத்தொன்று என ஒட்டுக. முன்னர் இலேசினான் முடிந்தவற்றையும் அடையடுத்து ஒட்டுக. பதினாயிரத்துக்குறை புறம் கூறு முதல் எனவும், நூறாயிரப்பத்து எனவும் வரும். (உங)

ஙகக. அளவு நிறையும் வேற்றுமை யியல. ஒ 310

இஃது அவ்வெண்ணின் முன்னர் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வந்தால் முடியுமாறு கூறுதலின் எய்தாத தெய்துவித்தது.

**இதன் பொருள் :** அளவும் நிறையும்—அதிகாரத்தால் ஆயிரந் தானே நின்றுழியும் அடையடுத்து நின்றுழியும் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வந்தால், வேற்றுமை இயல—மகர ஈற்று வேற்றுமையோடு ஒத்து வல்லெழுத்து வந்துழி மகரங்கெட்டு வல்லெழுத்துமிக்கும் இயல்புகணம் வந்துழித் 'துவர' (எழு-ஙகо) என்னும் இலேசான் எய்திய மகரங் கெட்டும் புணரும் என்றவாறு.

**உதாரணம் :** ஆயிரம் பதினாயிரம் நூறாயிரம் என நிறுத்திக் கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டில் அகல் உழக்கு எனவும், கஃசு கழஞ்சு தொடி துலாம் பலம் எனவுந் தந்து ஒட்டுக.

வேற்றுமையியல எனவே தாம் வேற்றுமையல்லவாயின. (உச)



ஙஉо. படர்க்கைப் பெயரு முன்னிலைப் பெயருந்
தொடக்கங் குறுகும் பெயர்நிலைக் கிளவியும்
வேற்றுமை யாயி னுருபிய னிலையு
மெல்லெழுத்து மிகுத லாவயி னான.

இஃது உயர்திணைப்பெயரும் விரவுப்பெயரும் உருபியலுள் முடிந்தவாறே ஈண்டுப் பொருட்புணர்ச்சிக்கண்ணும் முடிகவென எய்தாத தெய்துவித்தது.

**இதன் பொருள் :** படர்க்கைப்பெயரும் முன்னிலைப்பெயரும்—எல்லாருமென்னும் படர்க்கைப்பெயரும் எல்லீருமென்னும் முன்னிலைப்பெயரும், தொடக்கங் குறுகும் பெயர்நிலைக் கிளவியும்—கிளைத்தொடர்ச்சிப் பொருளவாய் நெடுமுதல் குறுகி முடியுந் தாம் நாம் யாமென்னும் பெயராகிய நிலைமையையுடைய சொல்லும், வேற்றுமையாயின் உருபியல் நிலையும்—வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண்ணாயின் உருபுபுணர்ச்சிக்குக் கூறிய இயல்பின்கண்ணே நின்று முடியும், ஆவயின் ஆன மெல்லெழுத்து மிகுதல்—மேல் நெடுமுதல் குறுகும் மொழிக்கண் மெல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

எல்லாரு மென்பதனை மகரஒற்றும் உகரமுங் கெடுத்து ரகரப்புள்ளியை நிறுத்திக் கை செவி தலை புறம் எனத் தந்து இடையிலே தம்முச்சாரியையும் இறுதியிலே உம்முச்சாரியையுங் கொடுத்து எல்லார்தங்கையும் செவியும் தலையும் புறமும் என முடிக்க. இதற்கு 'அம்மினிறுதி' (எழு-கஉக) என்னுஞ் சூத்திரத்துள் 'தன்மெய்' என்றதனாற் பிறசாரியைக்கண் மகர ஒற்றுத் திரிந்து 'ஙஞநவாகும்' எனச் செய்கைசெய்து முடிக்க. எல்லீரு மென்பதற்கு இடையிலே நும்முச்சாரியையும் இறுதியிலே உம்முச்சாரியையுங் கொடுத்து முற்கூறிய செய்கைகளெல்லாஞ் செய்து எல்லீர்நுங்கையும் செவியும் தலையும் புறமும் என முடிக்க. தாம் நாம் என்பனவற்றை 'ஏனை யிரண்டு நெடுமுதல் குறுகும்' (எழு-கஅஅ) எனக் குறுக்கி 'மகரவிறுதி' (எழு-ஙகо) என்பதனான் மகரங் கெடுத்துத் தங்கை நங்கை செவி தலை புறம் என முடிக்க. யாம் என்பதனை ஆகாரத்தை எகரமாக்கி யகர ஒற்றைக் கெடுத்து 'மகரவிறுதி' (எழு-ஙகо) என்றதனால் மகரங்கெடுத்து எங்கை செவி தலை புறம் என

முடிக்க. தொடக்கங் குறுகுவனவற்றிற்கு இச்சூத்திரத்தான் மெல்லெழுத்து மிகுக்க.

உருபியல் நிலையும் என்பதனான் வேற்றுமையாதல் பெறு நிற்கவும் பின்னும் வேற்றுமையாயினென்ற மிகையானே படர்க்கைப்பெயரும் முன்னிலைப்பெயரும் இயல்புகணத்து ஞகாரமும் நகாரமும் வந்துழித் தம்முச்சாரியையும் நும்முச்சாரியையும் பெறுதலும் மகரங்கெட்டு உம்முப்பெறுதலும் ஆவயினான என்றதனான் ஒற்று இரட்டுதலுங் கொள்க. எல்லார்தஞ் ஞாணும் எல்லீர்நுஞ் ஞாணும் நூலும் என வரும்.

இனித் தொடக்கங் குறுகுவனவற்றிற்கும் அவ்விரண்டு இலேசானும் மகரங்கெடுதலும் ஒற்று இரட்டுதலுங் கொள்க. தஞ்ஞாண் நஞ்ஞாண் எஞ்ஞாண் நூல் என வரும்.

இன்னும் ஆவயினான என்றதனானே எல்லார்தம் எல்லீர் நும் என நின்றவற்றின் முன்னர் ஏனை மணி யாழ் வட்டு அடை என்பன வந்துழி மகரங்கெடாமையும், உம்முப்பெறுதலுங் கொள்க.

இன்னும் இதனானே தொடக்கங் குறுகுவனவற்றிற்குந் தம்மணி யாழ் வட்டு அடை என மகரங் கெடாமையுங் கொள்க.

இன்னும் இதனானே தமகாணம் நமகாணம் எமகாணம் நுமகாணம் என உருபீற்றுச் செய்கைகளுங் கொள்க.

இன்னும் இதனானே நும் என்பதற்கு மகரத்தை மெல்லொற்றாக்கி நுங்கை செவி தலை புறம் என வருதலும், நுஞ்ஞாண் என ஒற்றிரட்டுதலும், நும்வலி என மகரங் கெடாது நிற்றலுங் கொள்க.

இன்னும் இதனானே எல்லார்கையும் எல்லீர்கையும் எனத் தம்மும் நும்மும் பெறாது நிற்றலுங் கொள்க. (௨௫)

---

25. தமகாணம் - ஆறும்வேற்றுமை அகர உருபு. நும் தொடக்கங் குறுகும் மொழியன்மையின் இலேசினால் முடித்தார். அவ்விரண்டு இலேசு என்றது, வேற்றுமையாயின் என்றதையும் ஆவயினான என்றதையும்.



௩௨௧. அல்லது கிளப்பி னியற்கை யாகும்.

இது முற்கூறிய மூன்று பெயர்க்கும் அல்வழி முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** அல்லது கிளப்பின் இயற்கையாகும்— அம்மூன்று பெயரும் அல்வழியைச் சொல்லுமிடத்து இயல்பாய் முடியும் என்றவாறு.

ஈண்டு இயற்கையென்றது சாரியை பெறுமை நோக்கி. இவற்றின் ஈறுதிரிதல் 'அல்வழியெல்லாம்' (எழு-௩௧௪) என்பதனுள் எல்லாமென்றதனாற் கொள்க.

**உதாரணம் :** எல்லாருங் குறியர் சிறியர் தீயர் பெரியர் எனவும், எல்லீருங் குறியீர் சிறியீர் தீயீர் பெரியீர் எனவும், தாங் குறியர் சிறியர் தீயர் பெரியர் எனவும், தாங்குறிய சிறிய தீய பெரியஎனவும், நாங்குறியம் சிறியம் தீயம் பெரியம்எனவும், யாங் குறியேம் சிறியேம் தீயேம் பெரியேம் எனவும் வரும்.

இன்னும் எல்லா மென்றதனானே இவற்றின் முன்னர் ஞகார நகாரம் வந்தால் அவை அவ்வொற்றாய்த் திரிதல் கொள்க. எல்லாருஞ் ஞான்றார் நீண்டார், எல்லீருஞ் ஞான்றீர் நீண்டீர் எனவும், தாஞ்ஞான்றார் நீண்டார் எனவும், நாஞ்ஞான்றாம் நீண்டாம் எனவும், யாஞ்ஞான்றேம் நீண்டேம் எனவும் வரும்.

இனி எல்லாரும் வந்தார் யாத்தார் அடைந்தார், எல்லீரும் வந்தீர் யாத்தீர் அடைந்தீர் எனவும், தாம்வந்தார் யாத்தார் அடைந்தார் எனவும், நாம் வருதும் யாத்தும் அடைதும், யாம்வருவேம் யாப்பேம் அடைவேம் எனவும் ஏனைக்கணங்களின் முன்னர் மகரந் திரியாது நிற்றலும் 'உயிரீறாகிய உயர் திணைப்பெயரும்' (எழு-௧௫௩) என்பதனான் முடியும். (௨௯)

௩௨௨. அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணு
மெல்லா மெனும்பெய ருருபிய னிலையும்
வேற்றுமை யல்வழிச் சாரியை நிலையாது.

இஃது இவ்வீற்றுள் விரவுப்பெயருள் ஒன்றற்கு அல்வழிக் கண்ணும் வேற்றுமைக்கண்ணும் உருபியலோடு மாட்டெறிந்து எய்தாத தெய்துவித்தது.

**இதன் பொருள்:** அல்லது கிளப்பினும் வேற்றுமைக்கண்ணும்—அல்வழிக்கட் சொல்லினும் வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கட் சொல்லினும், எல்லாமெனும் பெயர் உருபியல் நிலையும்—எல்லாமென்னும் விரவுப்பெயர் உருபுபுணர்ச்சியின் இயல்பிலே நின்று முடியும், வேற்றுமையல்வழிச் சாரியை நிலையாது—அப்பெயர் வேற்றுமைப் பொருட்புணர்ச்சியல்லாத இடத்து வற்றுச் சாரியை நில்லாதாய் முடியும் என்றவாறு.

உருபியனிலையும் என்ற மாட்டேறு அல்வழிக்கண் உம்முப்பெற்று நிற்றலும் பொருட்புணர்ச்சிக்கண் வற்றும் உம்மும் பெற்று நிற்றலும் உணர்த்திற்று.

உம்முச்சாரியை ஒன்றுமே பெற்று முடிகின்ற அல்வழியினையும் வற்றும் உம்மும்பெற்று முடிகின்ற வேற்றுமையோடு உடனோதி அதுவும் வற்றுப்பெறுமாறுபோல மாட்டெறிந்த மிகையானே வன்கணத்து அல்வழிக்கண் நிலைமொழி மகரக்கேடும் வருமொழி வல்லெழுத்துப்பெறும் மென்கணத்து மகரங்கெட்டு உம்முப்பெற்றும் பெறுதும் வருதலும் ஏனைக்கணத்து மகரங்கெட்டு உம்முப்பெற்றும் மகரங்கெடாது உம்முப்பெறுதும் வருதலுங் கொள்க.

**உதாரணம்:** எல்லாக்குறியவும் சிறியவும் தீயவும் பெரியவும் எனவும், எல்லாஞாணும் நாலும் மணியும் எனவும், எல்லாஞான்றன நீண்டன மாண்டன எனவும், எல்லாயாழும் வட்டும் அடையும் எனவும், எல்லாம்வாடின ஆடின எனவும் வரும். இனி வேற்றுமைக்கண் எல்லாவற்றுக்கோடும் செவியும் தலையும் புறமும் என இவை வற்றும் உம்மும் பெற்றன. இவற்றிற்கு மகரம் வற்றின்மிசையொற்றென்று கெடுக்க. இனி மென்கணத்துக்கண் எல்லாவற்றுஞாணும் நூலும் மணியும் எனவும், ஏனைக்கணத்துக்கண் எல்லாவற்றியாப்பும் வலியும் அடையும் எனவும் வரும். ஏனைக்கணமும் வற்றும் உம்மும் பெற்றன. (௨௭)

௩௨௩. மெல்லெழுத்து மிகினு மான மில்லை.

இஃது ஒருசார் வல்லெழுத்தை விலக்கி மெல்லெழுத்து விதித்தலின் எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.



**இதன் பொருள்:** மெல்லெழுத்து மிகினும் மான மில்லை—அவ்வெல்லாமென்பது அல்வழிக்கண் மேல் இலேசினாற் கூறிய வல்லெழுத்தேயன்றி மெல்லெழுத்து மிக்குமுடியினுங் குற்றமில்லை என்றவாறு.

எனவே, வல்லெழுத்துமிகுதலே 'பெரும்பான்மையாயிற்று. முற்கூறிய செய்கைமேலே இது கூறினமையின் மகரக்கேடும் உம்முப்பேறுங் கொள்க.

எல்லாங்குறியவும் சிறியவும் தீயவும் பெரியவும் என வரும்.

மானமில்லை என்றதனான் உயர்திணைக்கண் வன்கணத்து மகரங்கெட்டு வல்லெழுத்துமிக்கு இறுதி உம்முப்பெற்று முடிதலும் இயல்புகணத்துக்கண் மகரங்கெட்டு உம்முப்பெற்று முடிதலுங் கொள்க. எல்லாக்கொல்லரும் சான்றாரும் தச்சரும் பார்ப்பாரும் குறியரும் சிறியரும் தீயரும் பெரியரும் எனவும், எல்லா ஞான்றாரும் நாய்கரும் மணியகாரரும் வணிகரும் அரசரும் எனவும் வரும்.

இன்னும் இதனானே உயர்திணைக்கண் எல்லாங் குறியரும் சிறியரும் தீயரும் பெரியரும் என மகரங்கெட்டு மெல்லெழுத்து மிக்கு உம்முப்பெறுதலும் எல்லாங்குறியர் சிறியர் தீயர் பெரியர் எனவும், குறியீர் குறியம் எனவும் உம்முப்பெறாது வருதலுங் கொள்க.

இன்னும் இதனானே இடைக்கணத்தும் உயிர்க்கணத்தும் மகரங்கெடாது உம்மின்றி வருதலுங் கொள்க. எல்லாம்வந்தேம் அடைந்தேம் என வரும். (௨௮)

௩௨௪. உயர்திணை யாயி னுருபிய னிலையும்.

இஃது எல்லாமென்பதற்கு உயர்திணைமுடிபு கூறுகின்றது.

**இதன் பொருள்:** உயர்திணையாயின் உருபியல் நிலையும்—எல்லாமென்பது உயர்திணையாய் நிற்குமாயின் உருபு புணர்ச்

28. குறியம், குறியீர் என்பவற்றை எல்லாம் குறியம் எல்லாம் குறியீர் என ஒட்டுக. குறியம் என்பது தன்மையைக் காட்டவும் குறியீர் என்பது முன்னிலையைக் காட்டவும் வந்த வருமொழிகள்.

சியின் இயல்பிற்றாய் இடைக்கண் நம்மும் இறுதிக்கண் உம்மும்பெற்று முடியும் என்றவாறு.

உருபியலுள் 'எல்லா மென்னு மிறுதி முன்னர்—வற்றென்சாரியை' (எழு-௧௮௯) வகுத்ததனான் வற்றின் மிசையொற்றென்று மகரங்கெடுத்த அதிகாரத்தான் 'உயர்திணையாயி னம்மிடை வரும்' (எழு-௧௩௦) என நம்மின் முன்னும் மகரங்கெடுத்தார். அதனோடு ஈண்டு மாட்டெறிதலின் அது கொண்டு ஈண்டும் மகரங்கெடுக்க. 'அம்மினிறுதி' (எழு-௧௨௯) என்புழித் 'தன்மெய்' என்றதனான் நம்முச்சாரியையினது மகரந்திரிதல் கொள்க.

எல்லாநங்கையும் செவியும் தலையும் புறமும் என ஒட்டுக.

வருமொழி வரையாது கூறலின் எல்லாநஞ்ஞாற்சியும் நீட்சியும் என ஏற்பனவற்றோடு முடிபு அறிந்து ஒட்டுக. (௨௯)

௩௨௫. நும்மெ னொருபெயர் மெல்லெழுத்து மிகுமே.

இது மகர ஈற்றிற்கு வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தது.

இதன் பொருள்: நும்மென் ஒருபெயர் மெல்லெழுத்து மிகும்—நும்மென்று சொல்லப்படுகின்ற விரவுப்பெயர் பொருட்புணர்ச்சிக்கண் மெல்லெழுத்து மிக்குமுடியும் என்றவாறு.

நுங்கை செவி தலை புறம் என வரும். 'மகரவிறுதி' (எழு-௩௧௦) என்பதனான் மகரங்கெடுக்க.

ஒன்றென முடித்த லென்பதனான் உங்கை என வருவதூஉங் கொள்க. 'துவர' (எழு-௩௧௦) என்றதனான் ஞகர நகரங்கள் வந்துழி மகரங்கெடுதலும் ஒருபெயர் என்றதனான் ஒற்று மிகுதலுங் கொள்க. நுஞ்ஞாண் நூல் எனவரும். இன்னும் ஒருபெயர் என்றதனான் நும்மணி யாழ் வட்டு அடை என மகரங்கெடாமையும் கொள்க. (௩௦)



௩௨௬. அல்லதன் மருங்கிற் சொல்லுங் காலை
யுக்கெட நின்ற மெய்வயி னீவர
இயிடை நிலைஇ யீறுகெட ரகர
நிற்றல் வேண்டும் புள்ளியொடு புணர்ந்தே
யப்பான் மொழிவயி னியற்கை யாகும்.

இது நும்மென்பதற்கு அல்வழி முடிபு கூறுகின்றது.

இதன் பொருள்: அல்லதன் மருங்கிற் சொல்லுங்காலை—நும்மென்பதனை அல்வழிக்கட் கூறுமிடத்து, உ கெடநின்ற மெய்வயின் ஈ வர—நகரத்துள் உகரங்கெட்டுப் போக ஒழிந்து நின்ற நகரவொற்றிடத்தே ஈகாரம் வந்து நிற்ப, இ இடைநிலை இ ஈறுகெட—ஓர் இகரம் இடையிலே வந்து நிலைபெற்று மகரமாகிய ஈறுகெட்டுப்போக, புள்ளி ரகரம் நிற்றல் வேண்டும்—ஆண்டுப் புள்ளி பெற்று ஒரு ரகரம் வந்து நிற்றலை விரும்பும் ஆசிரியன், அப்பால் மொழிவயின்—அக்கூற்றினையுடைய நிலைமொழியிடத்து, இயற்கையாகும்—வருஞ்சொல், இயல்பாய் முடியும் என்றவாறு.

உதாரணம்: நீயிர்குறியீர் சிறியீர் தீயீர் பெரியீர் என வரும்.

சொல்லுங்காலை யென்றதனானே நீயிர்ஞான்றீர் நீண்டீர் மாண்டீர் யாத்தீர் வாடினீர் அடைந்தீர் என வினைக்கணத்தினும் ஒட்டுக. (௩௧)

௩௨௭. தொழிற்பெய ரெல்லாந் தொழிற்பெய ரியல.

இது வேற்றுமைக்கண் மகரங்கெட்டு வல்லெழுத்து மிக்கும் அல்வழிக்கண் மெல்லெழுத்தாய்த் திரிந்தும் வருமென்பதனை விலக்கி ஞகாரஈற்றுத் தொழிற்பெயர் போல நிற்குமெனப் பிறிதுவிதி வகுத்தது.

இதன் பொருள்: தொழிற்பெயரெல்லாம்—மகர ஈற்றுத் தொழிற்பெயரெல்லாம், தொழிற்பெயர் இயல—ஞகார ஈற்றுத் தொழிற் பெயர்போல அல்வழியினும் வேற்றுமையினும் வன்

கணத்து உகரமும் வல்லெழுத்தும் இயல்புகணத்து உகரமும் பெற்று முடியும் என்றவாறு.

**உதாரணம்:** செம்முக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், செம்முக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும் வரும். 'தும்முச் செறுப்ப' வென்பதும் அது. இவை 'குறியதன் முன்னர்த் தன்னுரு விரட்டல்' (எழு-௧௬௦).

எல்லாமென்றதனான் உகரம்பெறாது நாட்டங்கடிது ஆட்டங்கடிது என மெல்லெழுத்தாய் அல்வழிக்கண் திரிதலும் நாட்டக்கடுமை ஆட்டக்கடுமை என வேற்றுமைக்கண் வல்லெழுத்து மிகுதலுங் கொள்க. (௩௨)

௩௨௮. ஈமுங் கம்மு முருமென் கிளவியு
மாமுப் பெயரு மவற்றோ ரன்ன.

இது பொருட்பெயருட் சில தொழிற்பெயரோடு ஒத்து முடிக என எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

**இதன் பொருள்:** ஈமுங் கம்மும் உருமென் கிளவியும் ஆமுப்பெயரும்—ஈமென்னுஞ் சொல்லுங் கம்மென்னுஞ் சொல்லும் உருமென்னுஞ் சொல்லுமாகிய அம்மூன்று பெயரும், அவற்றோரன்ன—முற்கூறிய தொழிற்பெயரோடு ஒருதன்மையவாய் வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும் இயல்புகணத்து உகரமும் பெற்று முடியும் என்றவாறு.

ஈம் என்பது சுடுகாடு; கம்—தொழில்.

**உதாரணம்:** ஈமுக்கடிது கம்முக்கடிது உருமுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், ஈமுக்கடுமை கம்முக்கடுமை உருமுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும் ஒட்டுக.

கிளவியென்றதனான் வேற்றுமைக்கண்ணும் அல்வழிக்கண்ணும் உயிர் வருவழி உகரம்பெறாது ஈமடைவு ஈமடைந்தது என நிற்றலுங் கொள்க.

---

32. செம், தும் என்பன முதனிலைத் தொழிற்பெயர். நாட்டம், ஆட்டம் என்பன விகுதிபெற்ற தொழிற்பெயர்.



தன்னினமுடித்த லென்பதனால் அம்மு தம்மு நம்மு எனச் சாரியைக்கண்ணும் உகரம் வருதல் கொள்க. (௩௩)

௩௨௯. வேற்றுமை யாயி னேனை யிரண்டுந்
தோற்றம் வேண்டு மக்கென் சாரியை.

இது மேல் முடிபுகூறிய மூன்றனுள் இரண்டற்கு வேற்றுமைக்கண் வேறோர் முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள்:** வேற்றுமையாயின்—வேற்றுமைப்பொருட் புணர்ச்சியாயின், ஏனை இரண்டும் தோற்றம் வேண்டும் அக்கென் சாரியை—இறுதியில் உருமொழிந்த இரண்டும் அக்கென்னுஞ் சாரியை தோன்றி முடிதலைவேண்டும் ஆசிரியன்என்றவாறு.

**உதாரணம்:** ஈமக்குடம் கம்மக்குடம் சாடி தூதை பானை எனவும், ஞாற்சி நெருப்பு மாட்சி விறகு எனவும் ஒட்டுக.

அக்கு வருப்பவே நிலைமொழித் தொழிலாகிய உகரங்கெட்டு முற்கூறிய வல்லெழுத்து விலக்கப்படாமையின் நின்றுமுடிந்தது.

வன்கணத்திற்கு முன்னின்ற சூத்திரத்திற் கூறியது குணவேற்றுமைக்கென்றும் ஈண்டுக் கூறியது பொருட் புணர்ச்சிக்கென்றுங் கொள்க. (௩௪)

௩௩௦. வகார மிசையு மகாரங் குறுகும்.

இது முன்னர் 'அரையளவு குறுகல்' (எழு-௧௩) எனவும், 'னகாரை முன்னர்' (எழு-௫௨) எனவுங் கூறிய மகரம் இருமொழிக்கண்ணுங் குறுகுமென அதன் ஈற்றகத்து எய்தாததெய்துவிக்கின்றது.

**இதன் பொருள்:** வகாரமிசையும் மகாரங் குறுகும்—மகாரம் ஒருமொழிக்கண்ணேயன்றி வகாரத்தின்மேலுங் குறுகும் என்றவாறு.

**உதாரணம்:** நிலம்வலிது வரும்வண்ணக்கன் என வரும். (௩௫)

---

34. முற்கூறிய வல்லெழுத்தென்றது, 32-ம் சூத்திரத்தாற் பெற்ற வல்லெழுத்தை. குணவேற்றுமை—கடுமை முதலிய குணச் சொற்கள் வந்து புணரும் வேற்றுமைப் புணர்ச்சியை.

௩௩௧. நாட்பெயர்க் கிளவி மேற்கிளந் தன்ன
வத்து மான்மிசை வரைநிலை யின்றே
யொற்றுமெய் கெடுத லென்மனார் புலவர்.

இஃது இவ்வீற்று நாட்பெயர்க்கு வேற்றுமை முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** நாட்பெயர்க் கிளவி மேற் கிளந்தன்ன—மகர ஈற்று நாட்பெயர் இகர ஈற்று நாட்பெயர் போல ஆன் சாரியைபெற்று முடியும், அத்தும் ஆன்மிசை வரைநிலை இன்று—அத்துச்சாரியை ஆன்சாரியை மேலும் பிறசாரியை மேலும் வருதல் நீக்குநிலைமையின்று, ஒற்று மெய்கெடுதல் என்மனார் புலவர்—ஆண்டு நிலைமொழி மகர ஒற்றுக் கெடுக என்று கூறுவர் புலவர் என்றவாறு.

உம்மையை ஆன்மிசையுமென மாறுக.

**உதாரணம் :** மகத்தாற் கொண்டான் ஓணத்தாற் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என்க. ஏனை நாட்களோடும் ஒட்டுக. மகரஒற்றுக் கெடுத்து 'அத்தி னகர மகரமுனை யில்லை' (எழு-௧௨௫) என அகரங் கெடுத்துக் 'குற்றியலுகரமு மற்றென' (எழு-௧௦௫) என ஆனேற்றி 'ஆனி னகரமும்' (எழு-௧௨௪) என்றதனான் றகரமாக்கி முடிக்க. மகத்துஞான்று கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என ஞான்றென்னுஞ் சாரியைமேல் அத்து வந்தது.

வரையாது கூறினமையின் இம்முடிபு நான்குகணத்துங் கொள்க. மகத்தான் ஞாற்றினான் நிறுத்தினான் மாய்ந்தான் வந்தான் அடைந்தான் என வரும். (௩௬)

௩௩௨. னகார விறுதி வல்லெழுத் தியையின்
றகார மாகும் வேற்றுமைப் பொருட்கே.

இது நிறுத்தமுறையானே னகர இறுதி வேற்றுமைக்கட் புணருமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** னகார இறுதி வல்லெழுத்து இயையின் றகாரமாகும்—னகார ஈற்றுப்பெயர் வல்லெழுத்து முதன்மொழி



வருமொழியாய் வந்து இயையின் றகாரமாகும், வேற்றுமைப் பொருட்டு—வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக்கண் என்றவாறு.

**உதாரணம் :** பொற்குடம் சாடி தூதை பானைஎனவரும். (௩௭)

௩௩௩. மன்னுஞ் சின்னு மானு மீனும்
பின்னு முன்னும் வினையெஞ்சு கிளவியு
மன்ன வியல வென்மனார் புலவர்.

இஃது அவ்வீற்று அசைநிலை இடைச்சொற்களும் ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உணரநின்ற இடைச்சொற்களும் வினையெச்சமும் முடியுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** மன்னுஞ் சின்னும் ஆனும் ஈனும் பின்னும் முன்னும் வினையெஞ்சு கிளவியும்—மன்னென்னுஞ் சொல்லுஞ் சின்னென்னுஞ் சொல்லும் ஆனென்னுஞ் சொல்லும் ஈனென்னுஞ் சொல்லும் பின்னென்னுஞ் சொல்லும் முன்னென்னுஞ் சொல்லும் வினையெச்சமாகிய சொல்லும், அன்ன இயல என்மனார் புலவர்—முற்கூறிய இயல்பினையுடையவாய் னகரம் றகரமாய் முடியுமென்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

**உதாரணம் :** 'அதுமற் கொண்கன் றேரே' 'காப்பும் பூண்டி சிற்கடையும் போகல்' (அகம்-௭) எனவும், ஆற்கொண்டான் ஈற்கொண்டான் பிற்கொண்டான் முற்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் எனவும், வரிற்கொள்ளும் செல்லும் தரும் போம் எனவும் வரும்.

பெயராந்தன்மையவாகிய ஆன் ஈன் என்பனவற்றை முற்கூறாததனான் ஆன்கொண்டான் ஈன்கொண்டான் எனத் திரியாமையுங் கொள்க.

பின் முன் என்பன பெயரும் உருபும் வினையெச்சமுமாய் நிற்றலிற் பெயர் ஈண்டுக் கூறினார். ஏனைய உருபியலுள்ளும் வினையெஞ்சு கிளவி யென்பதன்கண்ணும் முடியும். அப்பெயரை முற்கூறாததனாற் பின்கொண்டான் முன்கொண்டான் எனத் திரியாமையுங் கொள்க

இயலவென்றதனான் ஊனென்னுஞ் சுட்டு ஊன் கொண்டானென இயல்பாய் முடிதல் கொள்க. (௩௮)

38. ஆன் - அவ்விடம். ஈன் - இவ்விடம். ஊன் - உவ்விடம். அப்பெயரை என்றது, அப் பின் முன் என்பவற்றை.

later

நநச. சுட்டுமுதல் வயினு மெகரமுதல் வயினு
மப்பண்பு நிலையு மியற்கைய வென்ப.

இஃது இவ் வீற்றுள் ஏழாம்வேற்றுமை இடப்பொரு ளுணர்த்தும் இடைச்சொற்கு முடிபு கூறுகின்றது.

இதன் பொருள்: சுட்டு முதல் வயினும்—சுட்டெழுத்தினை முதலாகவுடைய வயினென்னுஞ் சொல்லும், எகர முதல் வயினும்—எகரமாகிய முதல் வினாவினையுடைய வயினென்னுஞ் சொல்லும், அப் பண்புநிலையும் இயற்கைய என்ப—மேல் னகரம் றகரமாமென்ற தன்மை நிலைபெற்று முடியும் இயல்பையுடைய வென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

உதாரணம்: அவ்வயிற்கொண்டான் இவ்வயிற்கொண்டான் உவ்வயிற்கொண்டான் +எவ்வயிற்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் எனவரும்.

இயற்கைய என்றதனால் திரியாது இயல்பாய் முடிவனவுங் கொள்க. (நக)

நநரு. குயினென் கிளவி யியற்கை யாகும்.

இது னகாரந் திரியாது இயல்பாக என்றலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

இதன் பொருள்: குயினென் கிளவி இயற்கையாகும்—குயினென்னுஞ்சொல் திரியாது இயல்பாய் முடியும் என்றவாறு.

உதாரணம்: குயின்குழாம் செலவு தோற்றம் பறைவு என வரும். குயினென்பது மேகம். அஃது அஃறிணைப் பெயர்.

தொகைமரபினுள் உயர்திணைப்பெயரும் விரவுப்பெயரும் இயல்பாகவென்றார்.

குயின் வினையுமாம்.

இயர்கை என்றதனாற் கான்கோழி கோன்குணம் வான்கரை என வருவனவுங் கொள்க. (சo)

40. குயின் வினைஎன்றது - குயினுதலை யுணர்த்தும் முதனிலைத் தொழிற்பெயரை. குயினுதல் - துளைசெய்தல்; அழுத்துதல்.



நநசா. எகின்மர மாயி னாண்மர வியற்றே. கு 283.

இது திரிபுவிலக்கி அம்மு வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

இதன் பொருள்: எகின் மரமாயின்—எகினென்பது புள்ளன்றி மரப்பெயராயின், ஆண்மர இயற்று—ஆண்மரத்தின் இயல்பிற்றாய் அம்முப்பெற்று முடியும் என்றவாறு.

எகினங்கோடு செதிள் தோல் பூ என வரும். (சக)

நநஎ. ஏனை யெகினே யகரம் வருமே
வல்லெழுத் தியற்கை மிகுதல் வேண்டும்.

இதுவும் அது, திரிபுவிலக்கி அகரம் விதித்தலின்.

இதன் பொருள்: ஏனை எகினே அகரம் வரும்—மரமல்லாத எகின் நிலைமொழிக்கண் அகரம்பெற்று முடியும், வல்லெழுத்தியற்கை மிகுதல் வேண்டும்—ஆண்டு வருமொழி வல்லெழுத்தியல்பு மிக்கு முடிதலை வேண்டும் ஆசிரியன் என்றவாறு.

உதாரணம்: எகினக்கால் செவி தலை புறம் என வரும்.

மேலைச்சூத்திரத்தோடு இதனை ஒன்றாக ஓதாததனான் இயல்பு கணத்தும் அகரப்பேறு கொள்க. எகினஞாற்சி நீட்சி மாட்சி வலிமை யாப்பு அடைவு என வரும்.

இயற்கை யென்றதனான் அகரத்தோடு மெல்லெழுத்துப் பேறுங் கொள்க. எகினங்கால் செவி தலை புறம் என வரும்.

இனிச் சிறுபான்மை எகின்சேவல் எகினச்சேவல் பெடை என்பன ஆறனுருபு விரிவுழி ஈண்டை இலேசான் முடிக்க பண்பு கருதியவழி இவ்வோத்தின் புறனடையான் முடிக்க. ? (சஉ)

நநஅ. கிளைப்பெய ரெல்லாங் கிளைப்பெய ரியல.

இது னகரந் திரிதலை விலக்கி இயல்பாக என்றலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

42. பண்பு — பண்புத்தொகை. எகினாகிய சேவல் — பண்புத் தொகை.

இதன் பொருள்: கிளைப்பெயரெல்லாம்—னகர ஈற்றுக் கிளைப்பெயரெல்லாம், கிளைப்பெயர் இயல—ணகர ஈற்றுக் கிளைப் பெயர்போலத் திரியாது இயல்பாய் முடியும் என்றவாறு.

உதாரணம்: எயின்குடி சேரி தோட்டம் பாடி என வரும். எயின் வந்தது என்று அஃறிணைக்கும் எய்துதலின் தொகை மரபினுள் முடியாதாயிற்று, ஆண்டு உயர்திணைக்கே கூறுதலின்.

இனி எல்லாமென்றதனனே எயினக்கன்னி பிள்ளை என அக்கும் வல்லெழுத்தும் பெறுதலும், எயினவாழ்வு என வல்லெழுத்துப் பெறாமையுங் கொள்க.

இன்னும் இதனனே பார்ப்பனக்கன்னி குமரி சேரி பிள்ளை என ஆகாரங்குறுகி அக்கும் வல்லெழுத்துங் கொடுத்தும் பார்ப்பனவாழ்க்கை என வல்லெழுத்துக் கொடாதும் முடிக்க.

இன்னும் இதனனே நான்கு கணத்துக்கண்ணும் வெள்ளாளனென நின்றதனை அன்கெடுத்துப் பிரித்து ளகாரவொற்றினை ணகாரவொற்றாக்கி வெள்ளாண்குமரி பிள்ளை மாந்தர் வாழ்க்கை ஒழுக்கம் என முடிக்க.

இன்னும் இதனனே முதலெழுத்தை நீட்டி ளகாரவொற்றினைக் கெடுத்து வேளாணென முடிக்க.

இதனனே பொருந வாழ்க்கையும் முடிக்க.

வேட்டுவக்குமரி யென்பது மரூஉவழக்கு. (சங)

நகக. மீனென் கிளவி வல்லெழுத் துறழ்வே.

இதுவும் அது, தன் திரிபு வல்லெழுத்திேனாடு உறழ்க என்றலின்.

இதன் பொருள்: மீனென்கிளவி வல்லெழுத்து உறழ்வு—மீனென்னுஞ் சொல் திரிபு வல்லெழுத்திேனாடு உறழ்ந்து முடியும் என்றவாறு.

43. வேட்டுவக்குமரி, இதில் வேடன், வேட்டுவன் என மரீஇயிற்று.



உதாரணம்: மீன்கண் மீற்கண், மீன்சினை மீற்சினை, மீன்றலை மீற்றலை, மீன்புறம் மீற்புறம் என வரும். (சச)

நசாo. தேனென் கிளவி வல்லெழுத் தியையின்
மேனிலை யொத்தலும் வல்லெழுத்து மிகுதலு
மாமுறை யிரண்டு முரிமையு முடைத்தே
வல்லெழுத்து மிகுவழி யிறுதி யில்லை.

இதுவும் அது, மேலதனேடு மாட்டெறிதலின்.

இதன் பொருள்: தேன் என் கிளவி வல்லெழுத்து இயையின்—தேனென்னுஞ்சொல் வல்லெழுத்து முதன்மொழி வருமொழியாய்வரின், மேல் நிலை ஒத்தலும்—மீனென்பதற்குக் கூறிய திரிபுறழ்ச்சி நிலை ஒத்து முடிதலும், வல்லெழுத்து மிகுதலும்—வருமொழி வல்லெழுத்து மிக்கு முடிதலுமாகிய, ஆ முறை இரண்டும் உரிமையும் உடைத்து—அம்முறைமையினை யுடைய இரண்டினையும் உரித்தாதலையும் உடைத்து, வல்லெழுத்து மிகுவழி இறுதியில்லை—வல்லெழுத்து மிக்கு வருமிடத்து இறுதியினின்ற னகரங் கெடும் என்றவாறு.

உரிமையுமென்னும் உம்மை 'மெல்லெழுத்து மிகினும்' (எழு—நசக) என மேல்வருகின்றதனை நோக்கிற்று.

உதாரணம்: தேன்குடம் தேற்குடம் சாடி தூதை பானை என மேனிலை ஒத்தன தேக்குடம் சாடி தூதை பானை என னகரங்கெட்டு வல்லெழுத்து மிக்கன. (சரு)

நசக. மெல்லெழுத்து மிகினு மான மில்லை.

இதுவும் அது, உறழ்ச்சியும் வல்லெழுத்தும் விலக்கி மெல்லெழுத்து விதித்தலின்.

இதன் பொருள்: மெல்லெழுத்து மிகினும் மானமில்லை—முற்கூறிய தேனென்கிளவி வல்லெழுத்து வந்தால் அவ்வல்லெழுத்து மிகுதலே யன்றி மெல்லெழுத்து மிகினுங் குற்றமில்லை என்றவாறு.

னகரக்கேடு அதிகாரத்தாற் கொள்க.

உதாரணம்: தேங்குடம் சாடி தூதை பானை என வரும். (சசு)

கசஉ. மெல்லெழுத் தியையி னிறுதியொ டுறழும்.

இது தொகைமரபினுள் 'வேற்றுமைக்கண்ணும் வல்லெழுத்தல்வழி' (எழு-கசஅ) என்பதனாற் கூறிய இயல்பை விலக்கி உறழுமென்றலின் எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

**இதன் பொருள் :** மெல்லெழுத்து இயையின்—அத்தேனென்கிளவி மெல்லெழுத்து முதன்மொழி வந்து இயையின், இறுதியொடு உறழும்—நிலைமொழியிறுதியின் னகர வொற்றுக் கெடுதலுங் கெடாமையுமாகிய உறழ்ச்சியாய் முடியும் என்றவாறு.

**உதாரணம் :** தேன்ஞெரி தேஞெரி தேனுனி தேநுனி தேன்மொழி தேமொழி என வரும்.

மேல் 'ஆமுறை' (எழு-கச0) என்றதனால் தேஞெரி தேஞ்ஞெரி தேநுனி தேந்நுனி தேமொழி தேம்மொழி என னகரங் கெட்டுத் தத்தம் மெல்லெழுத்து மிக்கும் மிகாதும் முடிந்தனவுங் கொள்க.

இனி மேல் 'மானமில்லை' (எழு-கசக) என்றதனான் ஈறு கெட்டு மெல்லெழுத்து மிகாது இயல்பாய் முடிவனவுங் கொண்டு தேஞெரி தேநுனி தேமொழி என்பன காட்டின் அவை முற்கூறியவற்றுள் அடங்குமென்க. (சஎ)

கசங. இருஅற் றொற்ற மியற்கை யாகும்.

இஃது அத் தேனென்பதற்கு உயிர்க்கணத்து ஒருமொழி முடிபு வேற்றுமை கூறுகின்றது.

**இதன் பொருள் :** இருஅற் றொற்றம்—தேனென்னுஞ் சொல் இருலென்னும் வருமொழியது தோற்றத்துக்கண், இயற்கையாகும்—நிலைமொழியின் னகரங் கெடாதே நின்று இயல்பாய் முடியும் என்றவாறு.

**உதாரணம் :** தேனிறால் என வரும். (சஅ)

47. மேல் என்றது சகூ-ம் சூத்திரத்தை. அதிலுள்ள மானமில்லை என்றதனான்......என்பன காட்டின் அவை இச்சூத்திரத்து 'இறுதியோடுறழும்' என்ற உறழ்ச்சி இயல்பில் அடங்குமென்றபடி.



கசச. ஒற்றுமிகு தகரமொடு நிற்றலு முரித்தே.

இதுவும் அதற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

**இதன் பொருள் :** ஒற்றுமிகு தகரமொடு நிற்றலும் உரித்து—அத்தேனென்பது இறாலொடு புணருமிடத்துப் பிறிதுமோர் தகரத்தோடு நின்று முடிதலும் உரித்து என்றவாறு.

'வல்லெழுத்து மிகுவழி யிறுதி யில்லை' (எழு-கச0) என்றதனான் நிலைமொழி ஈறு கெடுக்க. தகரம் மிகுமென்னாது ஒற்றுமிகு தகரமென்றதனான் ஈரொற் றாக்குக.

**உதாரணம் :** தேத்திறால் என வரும்.

மேலைச் சூத்திரத்தோடு இதனை யொன்றாக ஓதாததனாற் பிறவருமொழிக்கண்ணும் இம்முடிபு கொள்க. தேத்தடை தேத்தீ என வரும்.

தோற்றமென்றதனால் தேனடை தேனீ என்னும் இயல்புங் கொள்க. (சகூ)

கசரு. மின்னும் பின்னும் பன்னுங் கன்னு
மந்நாற் சொல்லுந் தொழிற்பெய ரியல.

இஃது அல்வழிக்கண் இயல்பாயும் வேற்றுமைக்கண் திரிந்தும் வருக என எய்துவித்த முடிபை விலக்கித் தொழிற்பெயரியல்பாமெனப் பிறிதுவிதி வகுத்தது.

**இதன் பொருள் :** மின்னும் பின்னும் பன்னுங் கன்னும் அந் நாற்சொல்லும்—மின்னென்னுஞ் சொல்லும் பின்னென்னுஞ் சொல்லும் பன்னென்னுஞ் சொல்லுங் கன்னென்னுஞ் சொல்லுமாகிய அந்நான்கு சொல்லும், தொழிற்பெயர் இயல—அல்வழியினும் வேற்றுமையினும் ஞகார ஈற்றுத் தொழிற்பெயர்போல வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும், மென்கணத்தும் இடைக்கணத்து வகரத்தும் உகரமும் பெற்றுமுடியும் என்றவாறு.

'மின்னுச்செய் விளக்கத்துப் பின்னுப்பிணி யவிழ்ந்த' எனவும், பன்னுக்கடிது கன்னுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், மின்னுக்கடுமை பின்னுக்கடுமை பன்னுக்கடுமை கன்னுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும் வரும்.

தொழிற்பெயரெல்லாந் தொழிற்பெயரியல என்று ஓதாது கிளந்தோதினர். இவை தொழினிலைக்கண்ணன்றி வேறு தம் பொருளுணர நின்றவழியும் இம்முடிபு எய்துமென்றற்கு.

மின்னென்பது மின்னுதற்றொழிலும் 'மின்னுநிமிர்ந்தன்ன' என மின்னெனப்படுவதோர் பொருளும் உணர்த்தும். ஏனையவும் அன்ன. (௫௦)

௩ ௪ ௬. வேற்றுமை யாயி னேனை யெகினொடு
தோற்ற மொக்குங் கன்னென் கிளவி.

இது நிலைமொழிக்கண் உகரம்விலக்கி அகரம் வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

**இதன் பொருள் :** வேற்றுமையாயின் ஏனை எகினொடு தோற்றம் ஒக்கும்—வேற்றுமைப் பொருட் புணர்ச்சியாயின் ஒழிந்த மரமல்லாத எகினொடு தோற்றம் ஒத்து அகரமும் வல்லெழுத்தும் பெற்றுமுடியும், கன் என் கிளவி—கன்னென்னுஞ் சொல் என்றவாறு.

**உதாரணம் :** கன்னக்குடம் சாடி தூதை பானை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை என வரும். கன்னக்கடுமை எனக் குணவேற்றுமையுஞ் சிறுபான்மை கொள்க.

தோற்றமென்றதனால் அல்வழிக்கண் வன்கணத்து அகரமும் மெல்லெழுத்தும் ஏனைக்கணத்து அகரமுங் கொள்க. கன்

---

50. மின் என்பது, மின்னுதற் றொழிலன்றி மின்னலை உணர்த்துமிடத்துப் பெயராம். அதுபற்றிப் பொருள் என்றார். பின் – பின்னுதல், பின்னிய கூந்தலையு முணர்த்தும். பன் – சொல்லுதலையும் சொல்லையுமுணர்த்தும். கன் – கன்னான்தொழிலையும் கன்னானையுமுணர்த்தும்.



னங்கடிது சிறிது தீது பெரிது எனவும், கன்னஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும் வரும். கன்னங்கடுமை எனக் குணவேற்றுமைக்கண்ணும் இவ்விதி கொள்க.

'பொன்னகர் வரைப்பிற் கன்னந் தூக்கி' (ஐங்குறு–உ௪எ) என்பதோவெனின், அது மகர ஈற்றுப் பொருட்பெயர். (௫௧)

௩ ௪ எ. இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்
முதற்கண் மெய்கெட வகர நிலையு
மெய்யொழித் தன்கெடு மவ்வியற் பெயரே.

இஃது 'அஃறிணை விரவுப்பெய ரியல்புமா ருளவே' எழு–க௫௫) என்றதற்கு ஈண்டுத் திரிபுகூறலின் எய்தாத தெய்துவித்தது.

**இதன் பொருள் :** இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்—இவ் வீற்று விரவுப்பெயருள் இயற்பெயரின் முன்னர்த் தந்தையெனனும் முறைப்பெயர் வருமொழியாய் வருமாயின், முதற்கண் மெய்கெட அகரம் நிலையும்—அத்தந்தை யென்பதன் முதற்கணின்ற தகரவொற்றுக்கெட அதன் மேலேறிநின்ற அகரங் கெடாது நிற்கும், அவ்வியற்பெயர் மெய்யொழித்து அன்கெடும்—அந் நிலைமொழியாகிய இயற்பெயர் அன்னென்னுஞ் சொல்லில் அகரம் ஏறிநின்ற மெய்யை ஒழித்து அவ்வன்தான் கெட்டுமுடியும் என்றவாறு.

**உதாரணம் :** சாத்தந்தை கொற்றந்தை என வரும்.

முதற்கண் மெய்யென்றதனால் சாத்தன்றந்தை கொற்றன்றந்தை என்னும் இயல்பு முடிபுங் கொள்க. (௫உ)

௩ ௪ அ. ஆதனும் பூதனுங் கூறிய வியல்பொடு
பெயரொற் றகரந் துவரக் கெடுமே.

இது மேலதற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

---

51. குணவேற்றுமை என்றது, கன்னக்கடுமை என்பதிற் போல வேற்றுமைக்கட் பண்புச்சொல் வந்து புணர்தலை. கடுமை – பண்பு.

**இதன் பொருள் :** ஆதனும் பூதனும்—முற்கூறிய இயற்பெயருள் ஆதனும் பூதனும் என்னும் இயற்பெயர்கள் தந்தையென்னும் முறைப்பெயரோடு முடியுங்கால், கூறிய இயல்பொடு—முற்கூறிய நிலைமொழி அன் கெடுதலும் வருமொழித் தகரவொற்றுக் கெடுதலுமாகிய செய்கைகளுடனே, பெயரொற்று அகரந் துவரக்கெடும்—நிலைமொழிப்பெயரில் அன்கெட நின்ற தகரவொற்றும் வருமொழியில் தகரவொற்றுக்கெட நின்ற அகரமும் முற்றக்கெட்டு முடியும் என்றவாறு.

**உதாரணம் :** ஆந்தை பூந்தை என வரும்.

இயல்பென்றதனாற் பெயரொற்றும் அகரமும் கெடாதே நிற்றலுங் கொள்க. ஆதந்தை பூதந்தை என வரும்.

இனித் துவரவென்றதனான் அழான் புழான் என நிறுத்தித் தந்தை என வருவித்து நிலைமொழி னகரமும் வருமொழித் தகரமும் அகரமும் கெடுத்து அழாந்தை புழாந்தை என முடிக்க. (௫௩)

௧௪௯. சிறப்பொடு வருவழி யியற்கை யாகும்.

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

**இதன் பொருள் :** சிறப்பொடு வருவழி—அவ்வியற்பெயர் பண்பு அடுத்து வரும்வழி, இயற்கையாகும்—முற்கூறிய இருவகைச் செய்கையுந் தவிர்ந்து இயல்பாய் முடியும் என்றவாறு.

**உதாரணம் :** பெருஞ்சாத்தன்றந்தை பெருங்கொற்றன்றந்தை என வரும். கொற்றங் கொற்றன்றந்தை சாத்தங் கொற்றன்றந்தை என்றாற்போல்வன பண்பன்றி அடை அடுத்தனவாதலிற் புறனடையான் முடிக்க. (௫௪)

௧௫௰. அப்பெயர் மெய்யொழித் தன்கெடு வழியு
நிற்றலு முரித்தே யம்மென் சாரியை
மக்கண் முறைதொகூஉ மருங்கி னான.

இது மேலதற்கு வேறோர் வருமொழிக்கண் எய்தாத தெய்துவித்தது.



**இதன் பொருள் :** அப்பெயர் மக்கள் ஆனமுறைதொகூஉம் மருங்கினும்—அவ்வியற்பெயர் முன்னர்த் தந்தையன்றி மகனாகிய முறைப்பெயர்வந்து தொகுமிடத்தினும், மெய்யொழித்து அன் கெடுவழி அம்மென் சாரியை நிற்றலும் உரித்து—அவ்வியற்பெயரில் தான்ஏறிய மெய்நிற்க அன்கெட்டு அம்முச்சாரியை வந்து நிற்றலும் உரித்து என்றவாறு.

ஆன என்பதனை மக்களோடும், உம்மையை மருங்கினோடுங் கூட்டுக. முறைதொகூஉ மருங்கினென்றது இன்னாற்கு மகனென்னும் முறைப்பெயராய்ச் சேருமிடத், தென்றவாறு.

**உதாரணம் :** கொற்றங்கொற்றன், சாத்தங்கொற்றன் என நிலைமொழி அன் கெட்டுழி அம்மு வந்தது. இவற்றிற்கு அதுவெனுருபு விரியாது அதன் உடைமைப்பொருள் விரிக்க. இது முறைப்பெயர்.

இனி உம்மையாற் கொற்றங்குடி சாத்தங்குடி எனப் பிறபெயர் தொக்கனவுங் கொள்க.

மெய்யொழித் தென்றதனானே கொற்றமங்கலம் சாத்தமங்கலம் என்பனவற்றின்கண் அம்மின் மகரங்கெடுதலும் வேட்டமங்கலம் வேட்டங்குடி என்பனவற்றின் நிலைமொழியொற்று இரட்டுதலுங் கொள்க. (௫௫)

௧௫௧. தானும் பேனுங் கோனு மென்னு
மாமுறை யியற்பெயர் திரிபிட னிலவே.

இது மேலதற்கு ஒருவழி எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

**இதன் பொருள் :** தானும் பேனுங் கோனும் என்னும் ஆமுறை இயற்பெயர்—அவ்வியற்பெயருள் தானும் பேனுங் கோனுமென்னும் அம்முறையினையுடைய இயற்பெயர்கள் தந்தையொடும் மக்கள் முறைமையொடும் புணரும்வழி, திரிபிடனில—முற்கூறிய திரிபுகளின்றி இயல்பாய் முடியும் என்றவாறு.

---

**55.** கொற்றங்குடி – இது அன்கெட்டு அம்முப்பெற்றுத் திரிந்து முடிந்தது. வேட்டமங்கலம் - வேடன் அன்கெட்டு அம்முப்பெற்று மகரங்கெட்டு டகரமிரட்டி வேட்டமங்கலமென்றாயிற்று.

**உதாரணம்:** *தான்றந்தை பேன்றந்தை கோன்றந்தை எனவும், தான்கொற்றன் பேன்கொற்றன் கோன்கொற்றன் எனவும் வரும். பேன் கோன் என்பன முற்காலத்து வழக்கு. இவை தொகைமரபினுள் 'அஃறிணை விரவுப் பெயர்' (எழு-௧௫௫) என்புழி இயல்பாயினவேனும் ஈண்டு இவ்வீற்றிற்குத் திரிபு கூறுதலின் அதனையும் விலக்கி இயல்பாமென்பதூஉங் கூறினார்.* (௫௬)

௱௫௨. *தான்யா னெனும்பெய ருருபிய னிலையும்.*

*இஃது எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வகுத்தது, தொகைமரபினுள் 'அஃறிணை விரவுப்பெயர்' (எழு-௧௫௫) என்பதனானே இயல்பாய் நின்ற தான் என்பதனையும் 'உயிரீறாகிய' (எழு-௧௫௩) என்பதனால் இயல்பாய் நின்ற யானென்பதனையும் அவ்வியல்புவிலக்கி உருபியலோடு மாட்டெறிதலின்.*

**இதன் பொருள்:** *தான் யான் எனும் பெயர்—தானென்னும் விரவுப்பெயரும் யானென்னும் உயர்திணைப்பெயரும், உருபியல் நிலையும்—உருபியலிற் கூறிய இயல்பிலே நிலைபெற்றுத் தானென்பது நெடுமுதல் குறுகித் தன்னென்றும் யானென்பது ஆகாரம் எகரமாய் யகரங்கெட்டு என்னென்றும் முடியும் என்றவாறு.*

**உதாரணம்:** *தன்கை என்கை செவி தலை புறம் எனவரும்.*

*வருமொழி வரையாது கூறினமையின் இயல்பு கணத்துக் கண்ணுந் தன்ஞாண் என்ஞாண் நூல் மணி யாழ் வட்டு அடை ஆடை என வரும்.* (௫௭)

௱௫௩. *வேற்றுமை யல்வழிக் குறுகலுந் திரிதலுந்*
*தோற்ற மில்லை யென்மனார் புலவர்.*

*இஃது அல்வழிக்கண் இயல்பாக என்றலின் எய்தாத தெய்துவித்தது.*

**இதன் பொருள்:** *வேற்றுமை அல்வழி—முற்கூறிய தான் யானென்பன வேற்றுமைப் புணர்ச்சியல்லாதவிடத்து; குறுகலுந்*



*திரிதலுந் தோற்றமில்லை என்மனார் புலவர்—தானென்பது நெடுமுதல் குறுகுதலும் யானென்பது அவ்வாறு திரிதலுந் தோற்றமின்றி இயல்பாய் முடியுமென்று கூறுவர் புலவர் என்றவாறு.*

**உதாரணம்:** *தான்குறியன் சிறியன் தீயன் பெரியன் ஞான்றான் நீண்டான் மாண்டான் வலியன் எனவும், யான் குறியேன் சிறியேன் தீயேன் பெரியேன் ஞான்றேன் நீண்டேன் மாண்டேன் வலியேன் எனவும் வரும்.*

*தோற்றமென்றதனான் வேற்றுமைக்கண் அவ்வாறன்றி னகரந் திரிதலுங் கொள்க. தற்புகழ் தற்பாடி, எற்புகழ் எற்பாடி என வரும்.* (௫௮)

௱௫௪. *அழனே னிறுதிகெட வல்லெழுத்து மிகுமே.*

*இது வேற்றுமைக்கண் அகரந் திரியாது கெடுக என்றலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.*

**இதன் பொருள்:** *அழன் என் இறுதி கெட—அழனென்னுஞ்சொல் தன் ஈற்று னகரங் கெட, வல்லெழுத்து மிகும்—வல்லெழுத்து மிக்குமுடியும் என்றவாறு.*

பிணக்குடம்

**உதாரணம்:** *அழக்குடம் சாடி தூதை பானை என வரும். அழக்குடமென்பது பிணக்குடத்தை.* (௫௯)

௱௫௫. *முன்னென் கிளவி முன்னர்த் தோன்று*
*மில்லென் கிளவிமிசை றகர மொற்ற*
*றொல்லியன் மருங்கின் மரீஇய மரபே.*

*இது 'மருவின்றொகுதி' (எழு-௧௧௧) என்பதனாற் கூறிய இலக்கண மரூஉக்களில் ஒன்றற்கு முடிபு கூறுகின்றது.*

**இதன் பொருள்:** *முன் என் கிளவி முன்னர்த் தோன்றும் இல் என் கிளவிமிசை—முன்னென்னுஞ் சொல்லின் முன்னே வரும் இல்லென்னுஞ் சொல்லின்மேலே, றகரம் ஒற்றல்—ஒரு றகரவொற்று வந்துநின்று முடிதல், தொல்லியல் மருங்கின்*

---

58. *தற்புகழ் முதலிய ஆறும் வேற்றுமை.*

மரீஇயமரபு — பழையதாகிய இயல்பினையுடைய வழக்கிடத்து மருவிவந்த இலக்கண முடிபு என்றவாறு.

இலக்கணப் போலி.

**உதாரணம் :** முன்றில் என வரும். இன்முன் என நிற்கற்பாலது முன்றிலென்று தலைதடுமாறுதலின் மரூஉவாயிற்று. முன்னென்பதற்கு ஒற்றிரட்டுதல் இலக்கணமேனும் அதுவன்றித் தனக்கு இனமாயதோர் றகரவொற்றுப் பெறுதலின் வேறு முடிபாயிற்று. (௬௦)

௩௫௬. பொன்னென் கிளவி யீறுகெட முறையின்
முன்னர்த் தோன்றும் லகார மகாரஞ்
செய்யுண் மருங்கிற் றொடரிய லான.

இஃது அவ் வீற்றுப்பெய ரொன்றற்குச் செய்யுள்முடிபு கூறுதலின் எய்தாத தெய்துவித்தது.

**இதன் பொருள் :** பொன் என் கிளவி ஈறு கெட — பொன்னென்னுஞ் சொல் தன்னீறாகிய னகரங்கெடாநிற்க, முன்னர் லகார மகாரம் முறையிற் றோன்றும் — அதன் முன்னர் லகாரமும் மகரவொற்றும் முறையானே வந்து நிற்கும், செய்யுள் மருங்கில் தொடரியலான — அங்ஙனம் நிற்பது செய்யுளிடத்துச் சொற்கள் தம்முள் தொடர்ச்சிப்படும் இயல்பின்கண் என்றவாறு.

முறையினென்றதனான் மகரம் ஒற்றாதல் கொள்க.

**உதாரணம் :** ‘பொலம்படப் பொலிந்த கொய்சுவற்புரவி’ என வரும்.

தொடரியலான என்றதனானே வன்கணத்துக்கண்ணும் லகரம் நிற்க மகரம் வல்லெழுத்திற்கேற்ற மெல்லெழுத்தாகத் திரிதல் கொள்க. ‘பொலங்கலஞ்சுமந்த பூண்டாங்கிளமுலை’ (அகம்—௧௬) ‘பொலஞ்சுட ராழி பூண்டதேரே’ ‘பொலந்தேர்க் குட்டுவன்’ என வரும்.

இன்னும் இதனானே ‘பொலனறுந்தெரியல்’ (புறம்—௨௯) ‘பொலமலராவிரை’ என்றாற்போல மகரங்கெட்டுப் பிறகணத்து முடிதலுங் கொள்க. (௬௧)



௩௫௭. யகர விறுதி வேற்றுமைப் பொருள்வயின்
வல்லெழுத் தியையி னவ்வெழுத்து மிகுமே.

இது முறையானே யகர ஈற்றிற்கு வேற்றுமை முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** யகர இறுதி வேற்றுமைப் பொருள்வயின் — யகர ஈற்றுப்பெயர் வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக்கண், வல்லெழுத்து மிகும் — வல்லெழுத்து முதன்மொழி வந்து இயையின் அவ் வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

**உதாரணம் :** நாய்க்கால் செவி தலை புறம் எனவரும். (௬௨)

௩௫௮. தாயென் கிளவி யியற்கை யாகும்.

இது விரவுப்பொருள் ஒன்றற்கு எய்திய வல்லெழுத்து விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

**இதன் பொருள் :** தாயென் கிளவி இயற்கையாகும் — தாயென்னுஞ்சொல் வல்லெழுத்து மிகாது இயல்பாய் முடியும் என்றவாறு.

**உதாரணம் :** தாய்கை செவி தலை புறம் என வரும்.

மேலைச் சூத்திரத்தான் மிகுதியுங் கூறுதலின் அஃறிணை விரவுப் பெயருள் அடங்காதாயிற்று. (௬௩)

௩௫௯. மகன்வினை கிளப்பின் முதனிலை யியற்றே.

இஃது எய்தாத தெய்துவித்தது, தாயென்பது அடையடுத்துழி வல்லெழுத்து மிகுக என்றலின்.

**இதன் பொருள் :** மகன் வினைகிளப்பின் — தாயென்னுஞ் சொல் தனக்கு அடையாய் முன்வந்த மகனது வினையைப் பின்னை ஒருவன் கூறுமிடத்து, முதல் நிலை இயற்று — இவ் வீற்றுள் முதற்கட் கூறிய நிலைமையின் இயல்பிற்றாய் வல்லெழுத்து வந்துழி அவ் வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

உதாரணம் : மகன்றாய்க்கலாம் செரு துறத்தல் பகைத்தல் என வரும். மகன் தாயோடு கலாய்த்த கலாம் என விரியும். ஏனையவற்றிற்கும் ஏற்கும் உருபு விரிக்க. வினை ஈண்டுப் பகைமேற்று. (௯௪)

௩௯௦. மெல்லெழுத் துறழு மொழியுமா ருளவே.

இஃது எய்தாத தெய்துவித்தது.

இதன் பொருள் : மெல்லெழுத்து உறழும் மொழியுமாருள—யகர ஈற்றுள் அதிகார வல்லெழுத்தினோடு மெல்லெழுத்து மிக்கு உறழ்ந்து முடிவனவும் உள என்றவாறு.

உதாரணம் : வேய்க்குறை வேய்ங்குறை செய்கை தலை புறம் என வரும். (௯௫)

௩௯௧. அல்வழி யெல்லா மியல்பென மொழிப.

இஃது அவ் வீற்று அல்வழிக்கு எய்தாத தெய்துவித்தது.
இதன் பொருள் : அல்வழி எல்லாம் இயல்பென மொழிப—யகர ஈற்று அல்வழியெல்லாம் இயல்பாய் முடியும் என்று கூறுவர் புலவர் என்றவாறு.

உதாரணம் : நாய்கடிது சிறிது தீது பெரிது என வரும்.

எல்லாமென்றதனால் அவ்வாய்க்கொண்டான் இவ்வாய்க்கொண்டான் உவ்வாய்க்கொண்டான் எவ்வாய்க்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என உருபின் பொருள்பட முடிவனவும், தாய்க்கொண்டான் தூய்ப்பெய்தான் என்றாற்போலும் வினையெச்சமும், பொய்ச்சொல் மெய்ச்சொல் எய்ப்பன்றி என்றாற்போலும் பண்புத்தொகையும், வேய்கடிது வேய்க்கடிது என்னும் அல்வழி யுறழ்ச்சி முடிவுங் கொள்க. (௯௯)

௩௯௨. ரகார விறுதி யகார வியற்றே.

இது நிறுத்தமுறையானே ரகார ஈற்று வேற்றுமை முடிபு கூறுகின்றது.

இதன் பொருள் : ரகார இறுதி—ரகார ஈற்றுப்பெயர் வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண், யகார இயற்று—யகார



ஈற்று இயல்பிற்றாய் வல்லெழுத்து வந்துழி அவ் வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

உதாரணம் : தேர்க்கால் செலவு தலை புறம் என வரும்.

இம் மாட்டேற்றினை யகர ஈற்று வேற்றுமை அல்வழியென்னும் இரண்டையுங் கருதி மாட்டெறிந்தாரென்பார் அல்வழி முடிபும் ஈண்டுக் காட்டுவர். யாம் இவ்வோத்தின் புறனடையாற் காட்டுதும்.

இது ழகர ஈற்றிற்கும் ஒக்கும்.

மாட்டேற்றான் உறழ்ச்சியுங் கொள்க. வேர்ங்குறை வேர்க்குறை என வரும். (௯௭)

௩௯௩. ஆரும் வெதிருஞ் சாரும் பீரு
மெல்லெழுத்து மிகுதன் மெய்பெறத் தோன்றும்.

இஃது இவ் வீற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

இதன் பொருள்: ஆரும் வெதிருஞ் சாரும் பீரும்—ஆரென்னுஞ்சொல்லும் வெதிரென்னுஞ்சொல்லுஞ் சாரென்னுஞ்சொல்லும் பீரென்னுஞ்சொல்லும், மெல்லெழுத்து மிகுதல் மெய்மை பெறத் தோன்றும்—மெல்லெழுத்து மிக்குமுடிதல் மெய்ம் பெறத் தோன்றும் என்றவாறு.

உதாரணம் : ஆர்ங்கோடு வெதிர்ங்கோடு சார்ங்கோடு பீர்ங்கொடி செதிள் தோல் பூ என வரும்.

பீர் மரமென்பார் பீர்ங்கோடென்பர். 'பீர்வாய்ப் பிரிந்த நீர் நிறை முறைசெய்து' என்றாற்போலச் சான்றோர் பலருஞ் செய்யுள் செய்தவாறு காண்க.

மெய்பெற என்றதனான் 'ஆரங் கண்ணி யடுபோர்ச் சோழர்' (அகம்–௯௩) என ஆர் அம்முப்பெறுதலும் 'மாரிப்பீரத்தலர் சிலர்கொண்டே' (குறு–௯௮) எனப் பீர் அத்துப்பெறுதலுங் கொள்க. இதனை அதிகாரப் புறனடையான் முடிப்பாரும் உளர்.

இன்னும் இதனானே கூர்ங்கதிர்வேல் ஈர்ங்கோதை என்றாற் போலவுங் குதிர்ங்கோடு விலர்ங்கோடு அயிர்ங்கோடு துவர்ங் கோடு சிலிர்ங்கோடு என்றாற்போலவும் மெல்லெழுத்து மிகுவன கொள்க.

இன்னும் இதனானே துவரங்கோடு என அம்முப்பெறு தலுங் கொள்க. (௬௮)

௩௯௪. சாரென் கிளவி காழ்வயின் வலிக்கும்.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தது.

இதன் பொருள்: சார் என் கிளவி காழ் வயின் வலிக்கும்— சாரென்பது காழென்பதனோடு புணருமிடத்து வல்லெழுத்து மிக்குப் புணரும் என்றவாறு.

உதாரணம்: சார்க்காழ் என வரும். சாரினது வித்தென் பதே பொருள். இதனை வயிரமெனிற் கிளந்தோதுவாரென்று உணர்க. (௬௯)

௩௯௫. பீரென் கிளவி யம்மொடுஞ் சிவணும்.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தது.

இதன் பொருள்: பீர் என் கிளவி அம்மொடுஞ் சிவணும்— பீரென்னுஞ்சொல் மெல்லெழுத்தேயன்றி அம்முப்பெற்றும் முடியும் என்றவாறு.

உதாரணம்: பீரங்கொடி செதிள் தோல் பூ எனவும், 'பொன்போற் பீரமொடு பூத்த புதன்மலர்' (நெடுநல்வாடை— ௧௪) எனவும் வரும். உம்மை இறந்தது தழீஇயிற்று. (௭௦)

௩௯௬. லகார விறுதி னகார வியற்றே.

இது முறையானே லகார ஈற்றை வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கட் புணர்க்கின்றது.

68. பீர், கொடி யென்பது இவர் கருத்துப்போலும். மரமென் பாருமுளர் என்றமையின். குதிர் முதலியன மரம்.



இதன் பொருள்: லகார இறுதி னகார இயற்று—லகார ஈற்றுப்பெயர் வன்கணம் வந்துழி னகார ஈற்று இயல்பிற்றாய் லகாரம் றகரமாய்த் திரிந்துமுடியும் என்றவாறு.

உதாரணம்: கற்குறை சிறை தலை புறம் நெற்கதிர் சோறு தலை புறம் என வரும். (௭௧)

௩௯௭. மெல்லெழுத் தியையி னகார மாகும்.

இது னகாரமாமென்றலின் அவற்றிற்கு எய்தாத தெய்து வித்தது.

இதன் பொருள்: மெல்லெழுத்து இயையின் னகாரமா கும்—அவ் வீறு மென்கணம் வந்து இயையின் னகாரமாகத் திரிந்து முடியும் என்றவாறு.

உதாரணம்: கன்ஞெரி நுனி முரி என வரும்.

இச் சூத்திரத்தினை வேற்றுமை யிறுதிக்கண் அல்வழியது எடுத்துக் கோடற்கட் சிங்கநோக்காக வைத்தமையான் அல்வ ழிக்கும் இம்முடிபு கொள்க. கன்ஞெரிந்தது நீண்டது மாண்டது என வரும். (௭௨)

௩௯௮. அல்வழி யெல்லா முறழென மொழிப.

இஃது அவ் வீற்று அல்வழிமுடிபு கூறுகின்றது.

இதன் பொருள்: அல்வழியெல்லாம் உறழென மொழிப— இவ் வீற்று அல்வழிகளெல்லாந் தந்திரிபு வல்லெழுத்தினோடு உறழ்ந்துமுடியுமென்று கூறுவர் புலவர் என்றவாறு.

உதாரணம்: கல்குறிது கற்குறிது சிறிது தீது பெரிது என வரும்.

எல்லாமென்றதனாற் கல்குறுமை கற்குறுமை சிறுமை தீமை பெருமை எனக் குணம்பற்றி வந்த வேற்றுமைக்கும் உறழ்ச்சி கொள்க.

இன்னும் இதனானே வினைச்சொல்லீறு திரிந்தனவும் உருபு திரிந்தனவுங் கொள்க. வந்தானாற்கொற்றன் பொருவானாற்போ

கான் எனவும், அத்தாற்கொண்டான் இத்தாற்கொண்டான் உத்தாற்கொண்டான் எத்தாற்கொண்டான் எனவும் வரும்.

அக்காற்கொண்டான் என்றாற்போலப் பிறவும் முடிபு உள்ளனவெல்லாம் இதனான் முடித்துக்கொள்க. (௭௩)

௩௬௯. தகரம் வருவழி யாய்த நிலையலும்
புகரின் றென்மனார் புலமை யோரே.

இது லகரம் றகரமாய்த் திரிதலேயன்றி ஆய்தமாகத் திரியுமென்றலின் எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

**இதன் பொருள் :** தகரம் வருவழி ஆய்தம் நிலையலும்—தகரம் முதலாகிய மொழி வந்தால் லகரம் றகரமாய்த் திரிதலேயன்றி ஆய்தமாகத் திரிந்துநிற்றலும், புகர் இன்று என்மனார் புலமையோர்—குற்றமின்றென்று சொல்லுவார் ஆசிரியர் என்றவாறு.

**உதாரணம் :** கஃறீது கற்றீது என வரும்.

புகரின்றென்றதனால் 'நெடியதனிறுதி' (எழு-௩௭௦) என்பதனுள் வேறீது வேற்றீது என்னும் உறழ்ச்சி முடிபுங் கொள்க. (௭௪)

௩௭௦. நெடியத னிறுதி யியல்புமா ருளவே.

இஃது 'அல்வழியெல்லாமுறழ்' (எழு-௩௬௮) என்றதனை விலக்கி இயல்பாக என்றலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

**இதன் பொருள் :** நெடியதன் இறுதி இயல்புமாருள—நெட்டெழுத்தின் ஈற்று லகார ஈறு குறியதன் இறுதிக்கண் நின்ற லகாரம்போலத் திரிந்து உறழ்தலேயன்றி இயல்பாய் முடிவனவும் உள என்றவாறு.

---

73. அதனால் என்பது அத்தால் என நின்றதுபோலும். ஏனையவுமன்ன. அக்கால்—அப்பொழுது. இவற்றின் ஈறுகள் திரியும் என்றபடி.



**உதாரணம் :** பால்கடிது சிறிது தீது பெரிது என வரும். இயல்பாகாது திரிந்தன வேற்கடிது என்றாற்போல்வன. (௭௫)

௩௭௧. நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லு
மல்லது கிளப்பினும் வேற்றுமை யியல.

இஃது அல்வழிக்கண் உறழ்ந்துமுடிக என்றதனை வேற்றுமை முடிபென்றலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது

**இதன் பொருள் :** நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லும்—நெல்லென்னுஞ் சொல்லுஞ் செல்லென்னுஞ் சொல்லுங் கொல்லென்னுஞ் சொல்லுஞ் சொல்லென்னுஞ் சொல்லுமாகிய இந் நான்கு சொல்லும், அல்லது கிளப்பினும் வேற்றுமை இயல—அல்வழியைச் சொல்லுமிடத்துந் தாம் வேற்றுமை முடிபின் இயல்பிற்றாய் லகரம் றகரமாய்த் திரிந்து முடியும் என்றவாறு.

உம்மை சிறப்பு.

**உதாரணம் :** நெற்காய்த்தது செற்கடிது கொற்கடிது சொற்கடிது சிறிது தீது பெரிது என வரும். (௭௬)

௩௭௨. இல்லென் கிளவி யின்மை செப்பின்
வல்லெழுத்து மிகுதலு மையிடை வருதலு
மியற்கை யாதலு மாகாரம் வருதலுங்
கொளத்தகு மரபி னாகிட னுடைத்தே.

இஃது இவ் வீற்று வினைக்குறிப்புச் சொல்லுள் ஒன்றற்கு எய்தாத தெய்துவித்தது.

**இதன் பொருள் :** இல்லென்கிளவி இன்மைசெப்பின்—இல்லென்னுஞ்சொல் இருப்பிடமாகிய இல்லை உணர்த்தாது ஒரு பொருளினது இல்லாமையை உணர்த்தும் இடத்து, வல்லெழுத்து மிகுதலும்—வல்லெழுத்து முதன்மொழி வந்துழி அவ் வல்லெழுத்து மிக்கு முடிதலும், ஐ இடைவருதலும்—ஐகாரம் இடையே வருதலும், இயற்கையாதலும்—இரண்டும் வாராது இயல்பாய் முடிதலும், ஆகாரம் வருதலும்—ஆகாரம்வந்து முடி-

தலுமாகிய இந் நான்கு முடிபும், கொளத்தகு மரபின்—சொற்கு முடிபாகக் கொளத்தகும் முறைமையானே, ஆகிட னுடைத்து—தன்முடிபாம் இடன் உடைத்து என்றவாறு.

கொளத்தகு மரபினென்றதனான் வல்லெழுத்து முதன் மொழி வந்துழி ஐகாரம் வருதலும், ஐகாரம் வந்துழி வல்லெழுத்து மிகுதலும் மிகாமையும், ஆகாரம் வந்துழி வல்லெழுத்து மிக்கு முடிதலுங் கொள்க.

உதாரணம்: இல்லென நிறுத்திக் கொற்றன் சாத்தன் தெளிவு பொருள் எனத் தந்து வல்லெழுத்தும் ஐகாரமுங் கொடுத்து இல்லைக் கொற்றனென ஏனையவற்றோடும் ஒட்டுக.

இன்னும் அவ்வாறே நிறுத்தி ஐகாரமே கொடுத்து இல்லை கொற்றன் சாத்தன் தெளிவு பொருள் என வல்லெழுத்து மிகாது முடிக்க.

இன்னுங் கொளத்தகு மரபினென்றதனான் ஏனைக் கணத்தின் முன்னும் ஐகாரமே கொடுத்து இல்லைஞாண் நூல் மணி வானம் ஆடை என ஒட்டுக.

இஃது இல்லென்பதோர் முதனிலை நின்று வருமொழியோடு இங்ஙனம் புணர்ந்ததென்பது உணர்தற்கு இல்லென் கிளவியென்றும் இயற்கையாதலுமென்றுங் கூறினர். இம்முடிபு வினையியலுள் விரவுவினைக்கண் 'இன்மை செப்பல்' என்புழி 'இல்லை இல்' (எழு-உஉஉ) என்று உரைகூறியவதனானும், அவனில்லை என்றாற்போல்வன உதாரணமாக எல்லா ஆசிரியருங் காட்டியவாற்றானும் உணர்க.

இதனானே இங்ஙனம் புணர்த்தசொல்லன்றி இல்லையென ஐகார ஈறாய் நிற்பதோர் சொல் இன்மையும் உணர்க. ஆயின், இன்மை முதலியவற்றையும் இவ்வாறே புணர்க்கவெனின் அவை வருமொழியின்றி ஒரு சொல்லாய் நிற்றலிற் புணர்க்காராயினர்.

இனி இயல்பு வருமாறு:—எண்ணில் குணம் செய்கை துடி பொருள் எனவும், பொய்யில் ஞானம் மையில் வாண்முகம் எனவும் வரும்.



இனி ஆகாரம் வருமாறு:—இல்லாக்கொற்றன் சாத்தன் தேவன் பொருள் என ஆகாரம் வல்லெழுத்துப்பெற்றன. பிற்கூறிய இரண்டும் இல்லென்னும் வினைக்குறிப்பு முதனிலையடியாகத் தோன்றிய பெயரெச்ச மறை தொக்கும் விரிந்தும் நின்றன.

இயல்புமுற் கூறுததனால் இம்முடிபிற்கு வேண்டுஞ் செய்கை செய்க. தாவினீட்சி என்றாற்போல வேறுபட வருவனவற்றிற்கும் வேண்டுஞ் செய்கை செய்து முடிக்க. (எஎ)

நஎந. வல்லென் கிளவி தொழிற்பெய ரியற்றே.

இஃது இருவழியுந் திரிந்தும் உறழ்ந்தும் வருமென எய்தியதனை விலக்கித் தொழிற்பெயரோடு மாட்டெறிதலிற் பிறிது விதி வகுத்தது.

இதன் பொருள்: வல் என் கிளவி—வல்லென்னுஞ் சொல் அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும், தொழிற்பெயர் இயற்று—ஞகார ஈற்றுத் தொழிற்பெயர் இயல்பிற்றாய் வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும், மென்கணத்தும் இடைக்கணத்து வகாரத்தும் உகரமும் பெற்றுமுடியும் என்றவாறு.

உதாரணம்: வல்லுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், வல்லுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வன்மை எனவும் வரும். (எஅ)

நஎச. நாயும் பலகையும் வரூஉங் காலை
யாவயி னுகரங் கெடுதலு முரித்தே
யுகரங் கெடுவழி யகர நிலையும்.

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

---

**77.** பிற்கூறிய இரண்டும் என்றது, எண்ணில் குணம் என்பதையும் இல்லாக்கொற்றன் என்பதையும். எண்ணில் குணம் என்பது எண்ணில்லாத குணமென விரிதலின் பெயரெச்சமறை தொக்கதென்றார். இல்லாக்கொற்றன் (இல்லாத கொற்றன்) என்பது விரிந்து வந்தது; தகர அகரம் தொக்கது. வேண்டும் செய்கை என்பது ஐ வருமிடத்து லகர மிரட்டித்தலும், தாவில்+நீட்சி என்பதில் லகரங் கெடுதலும் நகரந் திரிதலும். லகரம் கெடுதற்கு விதி தொகைமரபு கசு-ம் சூத்திரத்து மிகையாற் கொள்க.

**இதன் பொருள் :** நாயும் பலகையும் வரூஉங் காலை—வல் லென்பதன்முன் நாயென்னுஞ்சொல்லும் பலகையென்னுஞ் சொல்லும் வருமொழியாய் வருங்காலத்து, ஆவயின் உகரங் கெடு தலும் உரித்து—அவ்விடத்து உகரங் கெடாது நிற்றலேயன்றிக் கெட்டு முடியவும் பெறும், உகரங் கெடுவழி அகரம் நிலையும்— அவ்வுகரங் கெடுமிடத்து அகரம் நிலைபெற்று முடியும் என்ற வாறு.

**உதாரணம் :** வல்லநாய் வல்லப்பலகை என வரும்.

உம்மை எதிர்மறையாகலான் உகரங் கெடாதேநின்று வல்லு நாய் வல்லுப்பலகை என வருதலுங் கொள்க.

அகரம் நிலையுமென்றது உகரங் கெடுமென்றதனாற் பிற வருமொழிக்கண்ணும் இவ்வகரப்பேறு கொள்க. வல்லக்கடுமை சிறுமை தீமை பெருமை என வரும். (௭௯)

௩௭௫. பூல்வே லென்றா வாலென் கிளவியொ
டாமுப் பெயர்க்கு மம்மிடை வருமே.

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

**இதன் பொருள் :** பூல் வேல் என்றா ஆலென்கிளவியொடு ஆமுப்பெயர்க்கும்—பூலென்னுஞ் சொல்லும் வேலென்னுஞ் சொல்லும் ஆலென்னுஞ் சொல்லுமாகிய அம்மூன்றுபெயர்க்கும், அம் இடைவரும்—வேற்றுமைக்கண் திரிபின்றி அம்முச்சாரியை இடைவந்து முடியும் என்றவாறு.

**உதாரணம் :** பூலங்கோடு வேலங்கோடு ஆலங்கோடு செதிள் தோல் பூ என வரும்.

வருமொழி வரையாது கூறினமையின் இயல்புகணத்தும் ஒட்டுக. பூலஞெரி வேலஞெரி ஆலஞெரி நீழல் விறகு என வரும். என்றா என எண்ணிடையிட்டமையாற் பூலாங்கோடு பூலாங்கழி என ஆகாரம் பூலுக்குக் கொள்க. (௮௦)

80. பூலாங்கோடு ஆகாரமும் மெல்லெழுத்தும் பெற்று வந்தது.



௩௭௬. தொழிற்பெய ரெல்லாந் தொழிற்பெய ரியல.

இஃது இவ் வீற்றுத் தொழிற்பெயர்க்கு அல்வழிக்கண் ணும் வேற்றுமைக்கண்ணுந் திரிபும் உறழ்ச்சியும் விலக்கித் தொழிற்பெயரோடு மாட்டெறிதலின் எய்தியதுவிலக்கிப் பிறிது விதி வகுத்தது.

**இதன் பொருள் :** தொழிற்பெயரெல்லாம்—லகார ஈற்றுத் தொழிற்பெயரெல்லாம், தொழிற்பெயர் இயல—ஞகார ஈற்றுத் தொழிற் பெயரின் இயல்பினவாய் இருவழியும் வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும், மென்கணத்தும் இடைக்கணத்து வகரத்தும் உகரமும் பெற்றுமுடியும் என்றவாறு.

**உதாரணம் :** புல்லுக்கடிது கல்லுக்கடிது வல்லுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், வல்லுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வன்மை எனவும் வரும். இவற்றிற்குப் புல்லுதல் கல் லுதல் வல்லுதல் எனப் பொருளுரைக்க.

இனி எல்லாமென்றதனாற் றொழிற்பெயர்விதி எய்தாது பிற விதி எய்துவனவுங் கொள்க. கன்னல்கடிது பின்னல்கடிது கன்னற்கடுமை பின்னற்கடுமை எனவும் வரும். இதனானே மென்கணம் வந்துழிப் பின்னன் ஞான்றது நீண்டது மாண்டது பின்னன் ஞாற்சி நீட்சி மாட்சி என ஒட்டுக.

இனி ஆடல் பாடல் கூடல் நீடல் முதலியனவும் அல்வழிக் கண் இயல்பாயும் வேற்றுமைக்கண் திரிந்தும் முடிதல் இதனாற் கொள்க. (௮௧)

௩௭௭. வெயிலென் கிளவி மழையிய னிலையும்.

இது திரிபுவிலக்கி அத்தும் இன்னும் வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

**இதன் பொருள் :** வெயில் என் கிளவி மழையியல் நிலை யும்—வெயிலென்னுஞ் சொல் மழையென்னுஞ் சொற்போல அத்தும் இன்னும் பெற்றுமுடியும் என்றவாறு.

மழையென்பதனை 'வளியென வரூஉம்' (எழு-உ௪உ) என்பதனுடனும் வளியென்பதனைப் 'பனியென வரூஉம்' (எழு-உ௪௧) என்பதனுடனும் மாட்டெறிந்தவாறு காண்க.

உதாரணம்: வெயிலத்துக் கொண்டான் வெயிலிற் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும். இஃது அத்துமிசை யொற்றுக் கெடாதுநின்ற இடம். இஃது 'அவற்று முன் வரூஉம் வல்லெழுத்து' (எழு-௧௩௩) மிக்கது அதிகார வல்லெழுத்தின்மையின் இயல்புகணத்துங் கொள்க. சாரியை வருமொழி வரையாது கூறினமையின். (௮௨)

௧௭௮. சுட்டுமுத லாகிய வகர விறுதி
முற்படக் கிளந்த வுருபிய னிலையும்.

இது முறையானே வகர ஈறு வேற்றுமைக்கட் புணருமாறு கூறுகின்றது.

இதன் பொருள்: சுட்டுமுதலாகிய வகர இறுதி—வகர ஈற்றுப் பெயர் நான்கனுட் சுட்டெழுத்தினை முதலாகவுடைய வகர ஈற்றுப்பெயர் மூன்றும், முற்படக் கிளந்த உருபியல் நிலையும்—முற்படக்கூறிய உருபு புணர்ச்சியின் இயல்பிற்றாய் வற்றுப் பெற்று முடியும் என்றவாறு.

உதாரணம்: அவற்றுக்கோடு இவற்றுக்கோடு உவற்றுக் கோடு செவி தலை புறம் என வரும்.

முற்படக்கிளந்த என்றதனானே வற்றினோடு இன்னும் பெறுதல் கொள்க. அவற்றின்கோடு இவற்றின்கோடு உவற்றின்கோடு செவி தலை புறம் என ஒட்டுக. இஃது ஏனைக் கணத்தோடு ஒட்டுக. (௮௩)

௧௭௯. வேற்றுமை யல்வழி யாய்த மாகும்.

இது மேலனவற்றிற்கு அல்வழிமுடிபு கூறுகின்றது.

இதன் பொருள்: வேற்றுமையல்வழி ஆய்தமாகும்—அச்சுட்டுமுதல் வகரம் வன்கணத்துக்கண் வேற்றுமையல்லாத இடத்து ஆய்தமாய்த் திரிந்து முடியும் என்றவாறு.

82. சாரியை இயல்பு கணத்துக்கொள்க என மாற்றுக.



உதாரணம்: அஃகடிய இஃகடிய உஃகடிய சிறிய தீய பெரிய என வரும். இவ்வழக்கு இக்காலத்து அரிது. (௮௪)

௧௮௦. மெல்லெழுத் தியையி னவ்வெழுத் தாகும்.

இஃது எய்தாத தெய்துவித்தது.

இதன் பொருள்: மெல்லெழுத்து இயையின் அவ்வெழுத் தாகும்—அவ்வகர ஈறு மென்கணம்வந்து இயையுமாயின் அவ் வகரவொற்று அவ்வவ் மெல்லெழுத்தாய்த் திரிந்துமுடியும் என்றவாறு.

உதாரணம்: அஞ்ஞாண் இஞ்ஞாண் உஞ்ஞாண் நூல் மணி என வரும். (௮௫)

௧௮௧. ஏனவை புணரி னியல்பென மொழிப.

இதுவும் அது, அவ் வீறு ஏனைக் கணங்களோடு புணருமாறு கூறுதலின்.

இதன் பொருள்: ஏனவை புணரின்—அச்சுட்டுமுதல் வகர ஈற்றோடு இடைக்கணமும் உயிர்க்கணமும் வந்து புணருமாயின், இயல்பென மொழிப—அவ்வகரந் திரியாது இயல்பாய் முடியுமென்று கூறுவர் புலவர் என்றவாறு.

உதாரணம்: அவ்யாழ் இவ்யாழ் உவ்யாழ் வட்டு அடை ஆடை என ஒட்டுக.

ஈண்டுக் கூறியது நிலைமொழிக்கென்றும் ஆண்டு 'நின்ற சொன்முனியல்பாகும்' (எழு-௧௪௪) என்றது வருமொழிக்கென்றும் உணர்க. (௮௬)

௧௮௨. ஏனை வகரந் தொழிற்பெய ரியற்றே.

இஃது எய்தாத தெய்துவித்தது.

இதன் பொருள்: ஏனைவகரம்—'வகரக்கிளவி நான்மொழி யீற்றது' (எழு-௮௧) என்றதனுள் ஒழிந்துநின்ற உரிச்சொல் லாகிய வகரம் இருவழியும், தொழிற்பெயர் இயற்று—ஞகர ஈற்றுத் தொழிற்பெயர் இயல்பிற்றாய் வன்கணத்து உகரமும்

வல்லெழுத்தும் மென்கணத்தும் இடைக்கணத்து வகரத்தும் உகரமும் பெற்று முடியும் என்றவாறு.

**உதாரணம் :** தெவ்வுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், தெவ்வுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வன்மை எனவும் வரும்.

உரையிற்கோடலென்பதனாற் றெம்முனை என வகரவொற்று மகரவொற்றாகத் திரிதல் கொள்க. (௮௭)

௩௮௩. ழகார விறுதி ரகார வியற்றே. 362

இது நிறுத்தமுறையானே ழகார ஈற்று வேற்றுமை முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** ழகார இறுதி ரகார இயற்று—ழகார ஈற்றுப்பெயர் வன்கணம் வந்தால் வேற்றுமைக்கண் ரகார ஈற்றின் இயல்பிற்றாய் வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

**உதாரணம் :** பூழ்க்கால் சிறகு தலை புறம் என வரும். (௮௮)

௩௮௪. தாழென் கிளவி கோலொடு புணரி
னக்கிடை வருத லுரித்து மாகும்.

இஃது இவ் வீற்றுள் ஒன்றற்கு எய்தியதன்மேற் சிறப்பு விதி கூறுகின்றது, வல்லெழுத்தினோடு அக்கு வகுத்தலின்.

**இதன் பொருள் :** தாழ் என் கிளவி கோலொடு புணரின்—தாழென்னுஞ்சொற் கோலென்னுஞ் சொல்லோடு புணரும் இடத்து, அக்கு இடைவருதலும் உரித்தாகும்—வல்லெழுத்து மிகுதலேயன்றி அக்குச்சாரியை இடையே வந்து நிற்றலும் உரித்து என்றவாறு.

எனவே, அக்குப்பெறாது வல்லெழுத்து மிகுதல் வலியுடைத்தாயிற்று.

**உதாரணம் :** தாழக்கோல் தாழ்க்கோல் என வரும்.

இது தாழைத் திறக்குங் கோல் என விரியும். (௮௯)



௩௮௫. தமிழென் கிளவியு மதனோ ரற்றே.

இதுவும் அது.

**இதன் பொருள் :** தமிழ் என் கிளவியும்—தமிழென்னுஞ் சொல்லும், அதனோரற்று—வல்லெழுத்து மிக்கு முடிதலேயன்றி அக்குச்சாரியையும் பெற்று முடியும் என்றவாறு.

அதனோரற்றே என்றதனால் இதற்குத் தமிழ்க்கூத்தென வல்லெழுத்து மிகுதலே வலியுடைத்து.

**உதாரணம் :** தமிழக்கூத்து சேரி தோட்டம் பள்ளி என வரும். தமிழையுடைய கூத்து என விரிக்க. தமிழவரையர் என்றாற்போல வல்லெழுத்துப்பெறாது அக்குப் பெற்றன, 'உணரக் கூறிய' (எழு—௪௦௫) என்னும் புறனடையாற் கொள்க. தமிழநாடு தமிழ்நாடு என ஏனைக்கணத்து முடிபு 'எப்பெயர்முன்னரும்' (எழு—௧௨௮) என்பதனுள் 'முற்ற' என்றதனான் முடித்தாம். (௯௦)
* → Tamil

௩௮௬. குமிழென் கிளவி மரப்பெய ராயிற்
365 பீரென் கிளவியொ டோரியற் றாகும்.

இது வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்தும் அம்மும் வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறுகின்றது.

**இதன் பொருள் :** குமிழ் என் கிளவி மரப்பெயர் ஆயின்—குமிழென்னுஞ் சொற் குமிழ்த்தலென்னுந் தொழிலன்றி மரப் பெயராயின், பீர் என் கிளவியொடு ஓர் இயற்று ஆகும்—பீரென்னுஞ் சொல்லோடு ஓரியல்பிற்றாய் ஒருவழி மெல்லெழுத்தும் ஒருவழி அம்மும் பெற்றுமுடியும் என்றவாறு.

**உதாரணம் :** குமிழ்ங்கோடு குமிழங்கோடு செதிள் தோல் பூ என வரும்.

ஓரியற்றென்றதனாற் பிறவற்றிற்கும் இம்முடிபு கொள்க. மகிழ்ங்கோடு மகிழங்கோடு என ஒட்டுக. (௯௧)

௩௮௭. பாழென் கிளவி மெல்லெழுத் துறழ்வே.

இது வல்லெழுத்தினோடு மெல்லெழுத்துப் பெறுக என்றலின் எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

**இதன் பொருள் :** பாழ் என் கிளவி மெல்லெழுத்து உறழ்வு—பாழென்னுஞ் சொல்லீறு வல்லெழுத்தினோடு மெல்லெழுத்துப்பெற்று உறழ்ந்து முடியும் என்றவாறு.

**உதாரணம் :** பாழ்க்கிணறு பாழ்ங்கிணறு சேரி தோட்டம் பாடி என ஒட்டுக. இது பாழூட்கிணறு என விரியும், பாழ்த்த கிணறு என வினைத்தொகை முடியாமையின். (௯௨)

௩௮௮. ஏழென் கிளவி யுருபிய னிலையும்.

இஃது எண்ணுப்பெயர் இவ்வாறு முடிக என்றலின் எய்தாத தெய்துவித்தது.

**இதன் பொருள் :** ஏழ் என் கிளவி—ஏழென்னும் எண்ணுப் பெயர் இறுதி, உருபியல் நிலையும்—உருபு புணர்ச்சிக்கட் கூறிய இயல்பின்கண்ணே நிலைபெற்று அன்பெற்று முடியும் என்றவாறு.

அஃது 'அன்னென்சாரியை யேழனிறுதி' (எழு—௧௯௪) என்பதாம்.

**உதாரணம் :** ஏழன்காயம் சுக்கு தோரை பயறு என வரும். இயைபு வல்லெழுத்து ஒத்தின் புறனடையான் வீழ்க்க. இஃது ஏழனாற் கொண்ட காயம் என விரியும். (௯௩)

௩௮௯. அளவு நிறையு மெண்ணும் வருவழி
நெடுமுதல் குறுகலு முகரம் வருதலுங்
கடிநிலை யின்றே யாசிரி யற்க.

இது மேலதற்கு எய்தாத தெய்துவித்தது.

**இதன் பொருள் :** அளவும் நிறையும் எண்ணும் வருவழி—அவ்வேழென்பதன்முன்னர் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் எண்ணுப்பெயரும் வருமொழியாய் வருமிடத்து, நெடுமுதல் குறுகலும் உகரம் வருதலுங் கடிநிலையின்றே ஆசிரியற்க—முன்னின்ற நெட்டெழுத்தின் மாத்திரை குறுகலும் ஆண்டு உகரம் வருதலும் நீக்கு நிலைமையின்று ஆசிரியற்கு என்றவாறு.



**உதாரணம் :** எழுகலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி எனவும், எழுகழஞ்சு தொடி பலம் எனவும், எழுமூன்று எழுநான்கு எனவும் வரும்.

நிலையென்றதனான் வன்கணத்துப் பொருட்பெயர்க்கும் இம்முடிபு கொள்க. எழுகடல் சிலை திசைபிறப்பு என வரும். (௯௪)

௩௯௦. பத்தென் கிளவி யொற்றிடை கெடுவழி
நிற்றல் வேண்டு மாய்தப் புள்ளி.

இது மேலதற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தது, வருமொழி நோக்கி விதித்தலின்.

**இதன் பொருள் :** பத்து என் கிளவி ஒற்றிடை கெடுவழி—அவ்வேழனோடு பத்தென்பது புணருமிடத்து அப்பத்தென் கிளவி இடையொற்றுக் கெடுவழி, ஆய்தப்புள்ளி நிற்றல் வேண்டும்—ஆய்தமாகிய புள்ளி நிற்றலை விரும்பும் ஆசிரியன் என்றவாறு.

**உதாரணம் :** எழுபஃது என வரும். (௯௫)

௩௯௧. ஆயிரம் வருவழி யுகரங் கெடுமே.

இது நெடுமுதல் குறுகிநின்று உகரம்பெறுது என்றலின் எய்தியது ஒருமருங்கு மறுத்தது.

**இதன் பொருள் :** ஆயிரம் வருவழி—ஏழென்பதன் முன் ஆயிரமென்னும் எண்ணுப்பெயர் வருமொழியாய் வருமிடத்து, உகரங்கெடும்—நெடுமுதல் குறுகிநின்று உகரம்பெறுது முடியும் என்றவாறு.

**உதாரணம் :** எழாயிரம் என வரும். (௯௬)

௩௯௨. நூறூர்ந்து வரூஉ மாயிரக் கிளவிக்குக்
கூறிய நெடுமுதல் குறுக்க மின்றே.

இஃது எய்தியது முழுவதூஉம் விலக்கிற்று, உகரங்கெட்டு அதன்மேலே நெடுமுதல் குறுகாது என்றலின்.

இதன் பொருள்: நூறு ஊர்ந்து வரூஉம் ஆயிரக் கிளவிக்கு—அவ்வேழென்பது நூறென்னுஞ் சொன்மேல் வரும் ஆயிரமென்னுஞ் சொல்லிற்கு, கூறிய நெடுமுதல் குறுக்க மின்று—முற்கூறிய நெடுமுதல் குறுகி உகரம் பெறுதலின்று என்றவாறு.

உதாரணம்: ஏழ்நூறாயிரம் என வரும்.

கூறிய என்றதனான் நெடுமுதல்குறுகி உகரம்பெற்று எழுநூறாயிரமெனவும் வரும்.

இதனானே ஏழாயிரமென மேல் முதனிலை குறுகாமையுங் கொள்க.

இதனானே எழுஞாயிறு எழுநாள் எழுவகை என இயல்பு கணத்து நெடுமுதல் குறுகி உகரம் பெறுதலும் கொள்க. (௯௭)

௩௯௩. ஐயம் பல்லென வரூஉ மிறுதி
யல்பெய ரெண்ணினு மாயிய னிலையும்.

இதுவும் அது.

இதன் பொருள்: ஐ அம் பல் என வரூஉம் இறுதி—அவ்வேழன்முன்னர் ஐயென்றும் அம்மென்றும் பல்லென்றும் வருகின்ற இறுதிகளையுடைய, அல்பெயர் எண்ணினும்—பொருட்பெயரல்லாத எண்ணுப்பெயராகிய தாமரை வெள்ளம் ஆம்பல் என்பன வந்தாலும், ஆ இயல் நிலையும்—நெடுமுதல்குறுகி உகரம் பெறாது அவ்வியல்பின்கண்ணே நின்று முடியும் என்றவாறு.

உதாரணம்: ஏழ்தாமரை ஏழ்வெள்ளம் ஏழாம்பல் என வரும். (௯௮)



௩௯௪. உயிர்முன் வரினு மாயிய றிரியாது.

இதுவும் அது.

இதன் பொருள்: உயிர்முன் வரினும்—அவ்வேழென்பதன் முன்னர் அளவுப்பெயரும் எண்ணுப்பெயருமாகிய உயிர் முதன்மொழி வரினும், ஆ இயல் திரியாது—நெடுமுதல் குறுகி உகரம் பெறாது முடியும் இயல்பிற் றிரியாது முடியும் என்றவாறு.

உதாரணம்: ஏழகல் ஏழுழக்கு ஏழொன்று ஏழிரண்டு என வரும். (௯௯)

௩௯௫. கீழென் கிளவி யுறழத் தோன்றும்.

இஃது இவ் வீற்றுள் ஒன்றற்கு வேற்றுமைக்கண் உறழ்ச்சி கூறுகின்றது.

இதன் பொருள்: கீழ் என் கிளவி உறழத் தோன்றும்—கீழென்னுஞ் சொல் உறழ்ச்சியாய்த் தோன்றி முடியும் என்றவாறு.

தோன்றுமென்றதனான் நெடுமுதல் குறுகாது வல்லெழுத்துப்பெற்றும் பெறாதும் வருமென்ற இரண்டும் உறழ்ச்சியாய் வருமென்று கொள்க. இவையு வல்லெழுத்து அதிகாரத்தாற் கொள்க.

உதாரணம்: கீழ்க்குளம் கீழ்குளம் சேரி தோட்டம் பாடி என வரும். (௧௦௦)

௩௯௬. ளகார விறுதி ணகார வியற்றே.

இது நிறுத்தமுறையானே ளகார ஈற்றுச்சொல் வேற்றுமைக்கட் புணருமாறு கூறுகின்றது.

இதன் பொருள்: ளகார இறுதி ணகார இயற்று—ளகார ஈற்றுப் பெயர் ணகார ஈற்றின் இயல்பிற்றாய் வன்கணம் வந்துழி டகாரமாய்த் திரிந்துமுடியும் என்றவாறு.

உதாரணம்: முட்குறை சிறை தலை புறம் என வரும். (௧௦௧)

௩௯௭. மெல்லெழுத் தியையின் ணகார மாகும்.

இது மேலதற்கு மென்கணத்துமுடிபு கூறுகின்றது.

இதன் பொருள் : மெல்லெழுத்து இயையின் ணகாரமாகும்—ளகார ஈறு மெல்லெழுத்து முதன்மொழி வருமொழியாய் வந்து இயையின் ணகாரமாய்த் திரிந்துமுடியும் என்றவாறு.

உதாரணம் : முண்ஞெரி நுனி மரம் என வரும்.

இதனை வேற்றுமையிறுதிக்கண் அல்வழியது எடுத்துக் கோடற்கட் சிங்கநோக்காக வைத்தலின் அல்வழிக்கும் இம்முடிபு கொள்க. முண்ஞெரிந்தது நீண்டது மாண்டது என வரும். (௧௦௨)

௩௯௮. அல்வழி யெல்லா முறழென மொழிப.

இது மேலதற்கு அல்வழிமுடிபு கூறுகின்றது.

இதன் பொருள் : அல்வழியெல்லாம்—ளகார ஈறு அல்வழிக்கணெல்லாம், உறழென மொழிப—திரியாதும் டகாரமாய்த் திரிந்தும் உறழ்ந்துமுடியுமென்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

உதாரணம் : முள்கடிது முட்கடிது சிறிது தீது பெரிது என வரும்.

எல்லாமென்றதனாற் குணவேற்றுமைக்கண்ணும் இவ்வுறழ்ச்சி கொள்க. முள்குறுமை முட்குறுமை சிறுமை தீமை பெருமை எனவும், கோள்கடுமை கோட்கடுமை வாள்கடுமை வாட்கடுமை எனவும் ஒட்டுக.

இதனானே அதோட்கொண்டான் இதோட்கொண்டான் உதோட்கொண்டான் எதோட்கொண்டான் சென்றான் தந்தான் போயினானென உருபு வாராது உருபின் பொருள்பட வந்தனவுங் கொள்க. (௧௦௩)

௩௯௯. ஆய்த நிலையலும் வரைநிலை யின்றே
தகரம் வருஉங் காலை யான.

இது மேலதற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது, தகரம் வருவழி உறழ்ச்சியேயன்றி ஆய்தமாகத் திரிந்து உறழ்க என்றலின்.



இதன் பொருள்: தகரம் வருஉங் காலையான—தகர முதன்மொழி வருமொழியாய் வருங்காலத்து, ஆய்தம்நிலையலும் வரைநிலையின்று—ளகாரம் டகாரமாகத் திரிதலேயன்றி ஆய்தமாகத் திரிந்து நிற்றலும் நீக்கும் நிலைமையின்று என்றவாறு.

உதாரணம் : முஃடீது முட்டீது என வரும். (௧௦௪)

௪௦௦. நெடியத னிறுதி யியல்பா குநவும்
வேற்றுமை யல்வழி வேற்றுமை நிலையலும்
போற்றல் வேண்டு மொழியுமா ருளவே.

இது மேலதற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

இதன் பொருள் : நெடியதன் இறுதி இயல்பு ஆகுநவும்—அவ் வீற்று நெடியதன் இறுதி திரியாது இயல்பாய் முடிவனவற்றையும், வேற்றுமை அல்வழி வேற்றுமை நிலையலும்—வேற்றுமையல்லாத இடத்து வேற்றுமையின் இயல்பையுடையனவாய்த் திரிந்து முடிதலையும், போற்றல்வேண்டும் மொழியுமாருள—போற்றுதல் வேண்டுஞ் சொற்களும் உள என்றவாறு.

உதாரணம் : கோள்கடிது வாள்கடிது சிறிது தீது பெரிது எனவும், 'புட்டேம்பப் புயன்மாறி' (பட்டினப்பாலை—௪) எனவும் வரும்.

போற்றல்வேண்டும் என்றதனால் உதளங்காய் செதிள் பூ தோல் என அம்முப் பெறுதலுங் கொள்க. உதளென்பது யாட்டினை உணர்த்துங்கால் முற்கூறிய முடிபுகள் இருவழிக்கும் ஏற்றவாறே முடிக்க. உதட்கோடு உதள்கடிது உதணன்று என ஒட்டுக. 'மோத்தையுந் தகரு முதளு மப்பரும்' (மரபியல்—௪௭) என்றார் மரபியலில். (௧௦௫)

௪௦௧. தொழிற்பெய ரெல்லாந் தொழிற்பெய ரியல.

இஃது இவ் வீற்றுத் தொழிற் பெயர்க்கு இருவழியும் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

இதன் பொருள் : தொழிற்பெயரெல்லாம்—ளகார ஈற்றுத் தொழிற்பெயரெல்லாம் இருவழியும், தொழிற்பெயர் இயல—ஞகார ஈற்றுத் தொழிற்பெயர்போல வன்கணத்து உகரமும்

வல்லெழுத்தும், மென்கணத்தும் இடைக்கணத்து வகரத்தும் உகரமும் பெற்று முடியும் என்றவாறு.

**உதாரணம் :** துள்ளுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், துள்ளுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வன்மை எனவும் வரும்.

எல்லா மென்றதனானே இருவழியுந் தொழிற் பெயர்கள் உகரமும் வல்லெழுத்தும் பெறாது திரிந்தும் திரியாதும் முடிவனவுங் கொள்க. கோள்கடிது கோட்கடிது, கோள்கடுமை கோட்கடுமை என்பன போல்வன பிறவும் வரும்.

இனி வாள்கடிது வாட்கடிது சிறிது தீது பெரிது எனவும் வாள்கடுமை வாட்கடுமை எனவுங் காட்டுக. வாள்—கொல்லுதல். (௧௦௬)

௪௦௨. இருளென் கிளவி வெயிலிய னிலையும். ஆ. 377

இது திரிபுவிலக்கி அத்தும் இன்னும் வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

**இதன் பொருள் :** இருள் என் கிளவி—இருளென்னுஞ் சொல் வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண், வெயிலியல் நிலையும்—வெயிலென்னுஞ் சொற்போல அத்தும் இன்னும் பெற்று முடியும் என்றவாறு.

**உதாரணம் :** இருளத்துக்கொண்டான் இருளிற்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும்.

சாரியை வரையாது கூறினமையின் இயல்பு கணத்தும் ஒட்டுக. இருளத்துஞான்றான் நீண்டான் மாண்டான் இருளின் ஞான்றான் நீண்டான் மாண்டான் என வரும். (௧௦௭)

௪௦௩. புள்ளும் வள்ளுந் தொழிற்பெய ரியல.

இதுவும் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது, திரிபும் இயல்பும் விலக்கித் தொழிற்பெயர்விதி வகுத்தலின்.

**இதன் பொருள்:** புள்ளும் வள்ளும்—புள்ளென்னுஞ் சொல்லும் வள்ளென்னுஞ் சொல்லும் இருவழிக்கண்ணும், தொழிற்பெயர் இயல—ஞகார ஈற்றுத் தொழிற்பெயர்போல வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும், மென்கணத்தும் இடைக்கணத்து வகரத்தும் உகரமும் பெற்று முடியும் என்றவாறு.

**உதாரணம் :** புள்ளுக்கடிது வள்ளுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், புள்ளுக்கடுமை வள்ளுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வன்மை எனவும் வரும்.

இதனைத் ‘தொழிற் பெயரெல்லாம்’ (எழு-௪௦௧) என்பதன்பின் வையாததனால் இருவழியும் வேற்றுமைத்திரிபு எய்தி முடிவனவுங் கொள்க. புட்கடிது வட்கடிது சிறிது தீது பெரிது எனவும், புட்கடுமை வட்கடுமை சிறுமை தீமை பெருமை எனவும், புண்ஞான்றது நீண்டது மாண்டது எனவும், புண்ஞாற்சி நீட்சி மாட்சி எனவும் வரும். புள்ளுவலிது புள்வலிது புள்ளுவன்மை புள்வன்மை என வகரத்தின் முன்னர் உகரம் பெற்றும் பெறாதும் வருதலின் ‘நின்றசொன்மு னியல்பாகும்’ (எழு-௧௪௪) என்றதனான் முடியாமை உணர்க. இது வள்ளிற்கும் ஒக்கும். (௧௦௮)

௪௦௪. மக்க ளென்னும் பெயர்ச்சொ லிறுதி
தக்கவழி யறிந்து வலித்தலு முரித்தே.

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது, ‘உயிரீறாகிய உயர்திணைப்பெயர்’ (எழு-௧௫௩) என்பதனுட் கூறிய இயல்பு விலக்கித் திரிபு வகுத்தலின்.

**இதன் பொருள் :** மக்கள் என்னும் பெயர்ச்சொல் இறுதி—மக்களென்னும் பெயர்ச்சொல்லிறுதி இயல்பேயன்றி, தக்கவழி அறிந்து வலித்தலும் உரித்து—தக்க இடம் அறிந்து வல்லொற்றாகத் திரிந்து முடிதலும் உரித்து என்றவாறு.

தக்கவழியென்றார் பெரும்பான்மை மக்கள் உடம்பு உயிர் நீக்கிக் கிடந்தகாலத்தின் அஃது இம்முடிவுபெறும் என்றற்கு.

**உதாரணம் :** மக்கட்கை செவி தலை புறம். ‘இக்கிடந்தது மக்கட்டலை’ என்பதனான் அவ்வாறுதல் கொள்க. மக்கள் கை செவி தலை புறம் எனத் திரியாது நின்றது உயிருண்மை பெற்று.

இனிச் சிறுபான்மை மக்கட் பண்பு மக்கட்சுட்டு எனவும் வரும். (௧௦௯)

109. உயிருள்ள மக்களை யுணர்த்தும் மக்கள் என்னுஞ் சொல் திரியாது என்றபடி.

௪௦௫. உணரக் கூறிய புணரியன் மருங்கிற்
கண்டுசெயற் குரியவை கண்ணினர் கொளலே.

இஃது இவ்வோத்தின்கண் எடுத்தோத்தானும் இலேசானும் முடியாது நின்றவற்றிற்கெல்லாம் இதுவே ஒத்தாகக்கொண்டு சாரியை பெறுவனவற்றிற்குச் சாரியையும், எழுத்துப் பெறுவன வற்றிற்கு எழுத்துங் கொடுத்து முடித்துக்கொள்க என்கின்றது.

**இதன் பொருள் :** உணரக் கூறிய புணரியன் மருங்கின்— உணரக் கூறப்பட்ட புள்ளியீறு வருமொழியோடு புணரும் இயல்பிடத்து, கண்டு செயற்கு உரியவை—மேல் முடித்த முடி பன்றி வழக்கினுட் கண்டு முடித்தற்கு உரியவை தோன்றியவழி, கண்ணினர் கொளல்—அவற்றையுங் கருதிக்கொண்டு எற்றவாறே முடிக்க என்றவாறு.

**உதாரணம் :** மண்ணப்பத்தம் என அல்வழிக்கண் ணகர ஈறு அக்குப் பெற்றது. மண்ணங்கட்டி என அம்முப் பெற்றது. பொன்னப்பத்தம் என னகர ஈறு அக்குப் பெற்றது. பொன்னங் கட்டி என அம்முப் பெற்றது. கானங்கோழி என வேற்றுமைக் கண் அம்முப் பெற்றது. மண்ணாங்கட்டி கானாங்கோழி என்பன மரூஉ. வேயின்றலை என யகர ஈற்று உருபிற்குச் சென்றசாரியை பொருட்கட் சென்றுழி வல்லெழுத்துக் கெடுக்க. நீர் குறிது என ரகர ஈறு அல்வழிக்கண் இயல்பாயிற்று. வேர்குறிது வேர்க் குறிது இது ரகர ஈறு அல்வழி உறழ்ச்சி. வடசார்க்கூரை மேல் சார்க்கூரை இவை வல்லெழுத்து மிக்க மரூஉமுடிபு. அம்பர்க் கொண்டான் இம்பர்க்கொண்டான் உம்பர்க்கொண்டான் எம்பர்க் கொண்டான் என இவ்வீறு ஏழனுருபின் பொருள்பட வந்தன வல்லொற்றுப் பெற்றன. தகர்க்குட்டி புகர்ப்போத்து என்பன பண்புத்தொகை கருதிற்றேல் ஈண்டு முடிக்க. வேற்றுமையாயின் முன்னர் முடியும். விழலென்னும் லகர ஈறு வேற்றுமைக்கண் றகரமாகாது னகரமாய் முடிதல் கொள்க. விழன்காடு செறுதாள் புறம் என வரும். கல்லம்பாறை உசிலங்கோடு எலியாலங்காய் புடோலங்காய் என அவ் வீறு அம்முப்பெற்றது. கல்லாம்பாறை என்பது மரூஉ. அழலத்துக் கொண்டான் என அவ்வீறு அத்துப் பெற்றது. அழுக்கற்போர் புழுக்கற்சோறு என்பன அவ் வீற்று அல்வழித்திரிபு. யாழ்குறிது என்பது ழகர ஈற்று அல்வழி யியல்பு. வீழ்குறிது வீழ்க்குறிது என்பன அவ் வீற்று அல்வழி



யுறழ்ச்சி. தாழப்பாவை என்பது அவ் வீற்று அல்வழி அக்குப் பெற்றது. யாழின்கோடு செய்கை தலை புறம் என அவ் வீற்று உருபிற்குச் சென்றசாரியை பொருட்கட்சென்றுழி வல்லெழுத்து வீழ்க்க. முன்னாளைவாழ்வு முன்னாளைப்பரிசு ஒருநாளைக்குழவி ஒருதிங்களைக்குழவி என்றாற் போல்வன ளகார ஈறு ஐகாரமும் அதனோடு வல்லெழுத்தும் பெறுதல் கொள்க. பிறவும் இவ் வோத்தின் வேறுபட வருவன வெல்லாங் கொணர்ந்து இதனான் முடிக்க. குளத்தின்புறம் மரத்தின்புறம் என உருபிற்கு எய்திய அத்தோடு இன்பெறுதலுங் கொள்க.

இனிக் 'கடிசொல்லில்லை' (சொல்-௪௫௨) என்பதனான் வழக்கின்கண்ணுஞ் செய்யுட்கண்ணும் வந்து திரிந்து முடியுஞ் சொற்களும் உள. அவற்றைக் கண்ணினர் கொளலே என்பத னான் மண்ணுக்குப்போனான் பொன்னுக்குவிற்றான் பொருளுக் குப்போனான் நெல்லுக்குவிற்றான் கொள்ளுக்குக்கொண்டான் பதினேழு என்றாற்போல வழக்கின்கண் உகரம் பெறுவனவும், 'விண்ணுக்குமேல்' 'மண்ணுக்குநாப்பண்'

'பல்லுக்குத் தோற்ற புனிமுல்லை பைங்கிளிகள்
சொல்லுக்குத் தோற்றின்னந் தோன்றினவா—னெல்லுகத்
தாரோஒ தாறென்பா னுடங்கிடைக்கும் வன்முலைக்கு
மாரோமா லன்றளந்த மண்.'

என்றாற்போலச் செய்யுட்கண் உகரம் பெறுவனவும், பிறவும் முடிக்க.

பற்கு நெற்கு என்பன முதலியனவுங் கொள்க. இவை உருபின் பொருள்பட வாராது உருபின்கண் வந்தனவேனும் ஈண்டுக் காட்டினும், ஆண்டுப் 'புள்ளியிறுதியும்' (எழு-௨௦௨) என்னும் உருபியற் சூத்திரத்து இலேசு கோடற்கு இடனின் றென்று கருதி. இனி அச்சூத்திரத்துத் 'தேருங்காலை' என்ற தனான் முடித்தலும் ஒன்று. (௧௧௦)

புள்ளிமயங்கியல் முற்றிற்று.

## ௯. குற்றியலுகரப்புணரியல்

ச௦௬. ஈரெழுத் தொருமொழி யுயிர்த்தொட ரிடைத்தொட
ராய்தத் தொடர்மொழி வன்றொடர் மென்றொட
ராயிரு மூன்றே யுகரங் குறுகிடன்.

என்பது சூத்திரம். இவ்வோத்துக் குற்றியலுகரமென்று கூறப்பட்ட எழுத்துப் பொருட்பெயரோடும் எண்ணுப்பெயர் முதலியவற்றோடும் புணரும் முறைமை உணர்த்தினமையிற் குற்றியலுகரப் புணரியலென்னும் பெயர்த்தாயிற்று. இது 'மெய்யேயுயிரென்றாயீரியல' (எழு-௧௦௩) என்றவற்றுள் உயிரினது விகாரமாய்நின்ற குற்றுகரத்தை இருமொழிக்கண்ணும் புணர்க்கின்றமையின் மேலை ஓத்தினோடு இயைபுடைத்தாயிற்று இத்தலைச்சூத்திரம் மொழிமரபினகத்து இருவழிய என்ற குற்றுகரம் இதனகத்து இனைத்து மொழியிறுதி வருமென்று அவற்றிற்குப் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துகின்றது. அப்பெயர்பெயர், அம்முறைமுறை, அத்தொகைதொகை. 'தொடர்மொழியீற்று' (எழு-௩௬) வருமென்று ஆண்டுக் கூறியவதனை ஈண்டு ஐந்துவகைப்படுத்தி அதனோடு 'நெட்டெழுத்திம்பரும்' (எழு-௩௬) என்றது ஒன்றேயாதலின் அதனையுங் கூட்டி அறுவகைத்தென்றார்.

**இதன் பொருள் :** ஈரெழுத் தொருமொழி—இரண்டெழுத்தானாகிய ஒருமொழியும், உயிர்த்தொடர்—உயிர்மேல்வரும் மெய்யைத் தொடர்ந்து நின்ற சொல்லும், இடைத்தொடர்—இடையொற்று மேல்வரும் மெய்யைத் தொடர்ந்து நின்ற சொல்லும், ஆய்தத் தொடர்மொழி—ஆய்தமாகிய எழுத்து மேல்வரும் மெய்யைத் தொடர்ந்து நின்ற சொல்லும், வன்றொடர்—வல்லொற்று மேல்வரும் மெய்யைத் தொடர்ந்து நின்ற சொல்லும், மென்றொடர்—மெல்லொற்று மேல்வரும் மெய்யைத்தொடர்ந்து நின்ற சொல்லும், ஆயிருமூன்றே—ஆகிய அவ் வாறுசொல்லுமே, உகரங் குறுகு இடன்—குற்றியலுகரங் குறுகிவரும் இடன் என்றவாறு.

**உதாரணம்:** நாகு, வரகு, தெள்கு, எஃகு, கொக்கு, குரங்கு என வரும்.



இதனை ஏழென்று கொள்வார்க்குப் பிண்ணாக்கு சுண்ணாம்பு ஆமணக்கு முதலியன முடியாமை உணர்க. (௧)

ச௦௭. அவற்றுள்
ஈரொற்றுத் தொடர்மொழி யிடைத்தொட ராகா.

இஃது அவ்வாறனுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

**இதன் பொருள் :** அவற்றுள்—அவ்வாறனுள், ஈரொற்றுத் தொடர்மொழி—இரண்டொற்று இடைக்கண் தொடர்ந்து நிற்குஞ் சொல்லிற்கு இடையின ஒற்று முதல் நின்றால், இடைத் தொடராகா—மேல் இடையினந் தொடர்ந்துநில்லா, வல்லினமும் மெல்லினமும் தொடர்ந்து நிற்கும் என்றவாறு.

**உதாரணம் :** ஆர்க்கு, ஈர்க்கு, நொய்ம்பு, மொய்ம்பு என வரும். (௨)

ச௦௮. அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணு
மெல்லா விறுதியு முகர நிலையும்.*

1. இதனை ஏழென்று கொள்வது அசைபற்றி. அசைகளாவன நேரசை நான்கும் நிரையசை நான்கும். அவையாவன:–

௧. அது–குறில்தனியேவந்த நேரசை. ௨. கொக்கு.–குறில் ஒற்றோடு வந்த நேரசை. ௩. காடு–நெடில் தனியே வந்த நேரசை. ௪. பாட்டு–நெடில் ஒற்றோடு வந்த நேரசை. ௫. மரபு–குறிலிணை தனியே வந்த நிரையசை. ௬. வரம்பு–குறிலிணை ஒற்றோடு வந்த நிரையசை. ௭. பலாசு–குறில் நெடில் இணைந்த நிரையசை. ௮. கராம்பு–குறில் நெடில் ஒற்றோடு வந்த நிரையசை என்பனவாம். இவற்றுள் குற்றெழுத்துக்குப் பின்வந்த உகரம் முற்றிய லுகரமாகலின் அதனை நீக்கி ஏனைய ஏழசைப்பின்னும் வந்தன குற்றிய லுகரமாதல் காண்க. இதனை 'நெடிலே குறிலிணை குறினெடி லென்றிவை–ஒற்றொடு வருதலொடு குற்றொற் றிறுதியென்–றேழ்குற் றுகரக் கிடனென மொழிப' என்னுஞ் சூத்திரத்தானறிக.

இங்ஙனம் ஏழசைபற்றிக் குற்றியலுகரங் கொள்வார்க்குப் பிண்ணாக்கு, சுண்ணாம்பு, பட்டாங்கு முதலியனவும் வருவது போவது முதலியனவும் ஏழசையு ளடங்காவாதலின் அசைகொள்ளப்படாவென மறுப்பர் நன்னூல் விருத்தியுரைகாரரும். [நன்னூல்-சூ. ௯௪.]

* நிறையும் எனவும் பாடம்.

இஃது 'இடைப்படிற்குறுகு மிடனுமாருண்டே' (எழு-௩௭) என்றதனாற் புணர்மொழிக்கண் அரைமாத்திரையினுங் குறுகுமென எய்தியதனை விலக்கி 'அவ்விய னிலையு மேனை மூன்றே' (எழு-௧௨) என்ற விதியே பெறுமென்கின்றது.

**இதன் பொருள்:** அல்லது கிளப்பினும்—அல்வழியைச் சொல்லுமிடத்தும், வேற்றுமைக்கண்ணும்—வேற்றுமைப்புணர்ச்சிக்கண்ணும், எல்லா இறுதியும் உகரம் நிலையும்—ஆறு ஈற்றின் கண்ணும் உகரந் தன் அரைமாத்திரையைப் பெற்றுநிற்கும் என்றவாறு.

வருமொழியானல்லது அல்வழியும் வேற்றுமையும் விளங் காமையின் 'அல்லது கிளப்பினும் வேற்றுமைக்கண்ணும்' எனவே இருமொழிப் புணர்ச்சியென்பது பெற்றாம். இவ்விரு மொழிக்கட் பழைய அரைமாத்திரைபெற்றே நிற்குமென்றார். அன்றி இருமொழிப் புணர்ச்சிக்கண் ஒருமாத்திரை பெறுமென் றார்க்குப் பன்மொழிப் புணர்ச்சியாகிய செய்யுளிலக்கணங் குற் றுகரத்தான் நேர்பசை நிரைபசை கோடலும் அவற்றான் அறு பது வஞ்சிச்சீர்கோடலும் பத்தொன்பதினாயிரத் திருநூற்றுத் தொண்ணூற்றொரு தொடைகோடலும் இன்றாய், முற்றியலுகர மாகவே கொள்ளவேண்டுதலின் மாறுகொளக் கூறலென்னுங் குற்றந் தங்குமென்று உணர்க.

**உதாரணம்:** நாகுகடிது வரகுகடிது நாகுகடுமை வரகு கடுமை என வரும். இவை தம் அரைமாத்திரை பெற்றன. ஏனையவற்றோடும் ஒட்டுக.

---

3. இச்சூத்திரத்தில் 'நிலையும்' என்பதை 'நிறையும்' என்று பாடங்கொள்பவர் இளம்பூரணர். பேராசிரியரும் அங்ஙனமே பாடங் கொள்வர். பேராசிரியர் செய்யுளியலுள் ஞாயிறு முதலியன முற்றிய லுகரம்போலக் கொள்ளப்படுமன்றிக் குற்றியலுகரம் முற்றியலுகர மாகாதென்றும் அங்ஙனம் கொள்ளின் குற்றியலுகரப் புணரியலில் நிறையும் என்று ஆசிரியர் பாடங்கொண்டதற்கு ஒருபயனின்றாமென் றும் (செய். ௪-௫-௧௨) கூறியதை நோக்கும்பொழுது ஈண்டும் பேரா சிரியர்க்கு நிறைவதுபோல வைத்துப் புணர்க்கப்படும் என்பதே கருத் தாதல் பெறப்படும். ஏனெனில் குற்றியலுகரம் மாத்திரை குறைந் தமைபற்றி மெய்யாக வைத்துப் புணர்க்கப்படுமோ உயிராக வைத் துப் புணர்க்கப்படுமோ என மாணுக்கருக்கு ஐயம் வரும். அவ்



இனி இது 'மால்யாறுபோந்து கால்சுரந்துபாய்ந்து' எனத் தொடர்மொழிக்கண்ணும் அரைமாத்திரை பெற்றது என்னைக் கால் வஞ்சிச்சீ ரின்றாமாறு உணர்க. (௩)

௪௰௬. வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வரு
தொல்லை யியற்கை நிலையலு முரித்தே. [வழித்

இது முன்னின்ற சூத்திரத்தான் அரைமாத்திரை பெறும் என்றதனை விலக்கி 'இடைப்படிற் குறுகுமிடனும்' (எழு-௩௭) என்றதனான் அரைமாத்திரையினுங் குறுகுமென்று ஆண்டு விதித்தது ஈண்டு வல்லொற்றுத் தொடர்மொழிக்கண்ணே வரு மென்கின்றது.

**இதன் பொருள்:** வல்லொற்றுத் தொடர்மொழி—வல் லொற்றுத் தொடர்மொழிக் குற்றுகரம், வல்லெழுத்து வருவழி—வல்லெழுத்து முதன்மொழி வருமொழியாய் வருமிடத்து, தொல்லை இயற்கை நிலையலும் உரித்து—'இடைப்படிற்குறுகும்' (எழு-௩௭) என்பதனாற் கூறிய அரைமாத்திரையினுங் குறுகி நிற்கும் என்ற இயல்பிலே நிற்றலும் உரித்து என்றவாறு.

உம்மை எதிர்மறை.

**உதாரணம்:** கொக்குக்கடிது கொக்குக்கடுமை என அரை மாத்திரையிற் குறைந்தவாறு கூரங்குகடிதென்பது முதலியவற் றோடு படுத்துச் செவிகருவியாக உணர்க.

முன்னின்ற சூத்திரத்து* உகரநிறையுமென்று பாடம் ஓதி அதற்கு உகரம் அரைமாத்திரையிற் சிறிது மிக்கு நிற்குமென்று பொருள் கூறி இச்சூத்திரத்திற்குப் பழைய அரைமாத்திரை பெற்று நிற்குமென்று கூறுவாரும் உளர். (௪)

---

வையத்தை நீக்க உயிர்போல நிறைவதாக வைத்துப் புணர்க்கப் படும் என்பது பொருத்தமாதலின்.

4. சிறிது மிக்குநிற்கும் என்பது, குற்றியலுகரம் என்பதனோடு மாறுபடுமாதலிற் பொருந்தாது.

* சீர்நிலை கோடற்கண் இவ்வாசிரியரும் நிறையுமென்றாளுப.

௪௧௦. யகரம் வருவழி யிகரம் குறுகு
முகரக் கிளவி துவரத் தோன்றாது.

இது குற்றியலிகரம் புணர்மொழியகத்து வருமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** யகரம் வருவழி உகரக்கிளவி துவரத் தோன்றாது—யகரமுதன்மொழி வருமொழியாய் வருமிடத்து நிலைமொழிக் குற்றுகரவெழுத்து முற்றத்தோன்றாது, இகரங் குறுகும்—ஆண்டு ஓர் இகரம் வந்து அரைமாத்திரை பெற்று நிற்கும் என்றவாறு.

**உதாரணம் :** நாகியாது வரகியாது தெள்கியாது எஃகியாது கொக்கியாது குரங்கியாது என வரும். 'துவர' என்றார், ஆறு ஈற்றின்கண்ணும் உகரங் கெடுமென்றற்கு. (௫)

௪௧௧. ஈரெழுத்து மொழியு முயிர்த்தொடர் மொழியும்
வேற்றுமை யாயி னொற்றிடை யினமிகத்
தோற்றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி.

இது முற்கூறிய ஆறனுள் முன்னர்நின்ற இரண்டற்கும் வேற்றுமைப் பொருட்புணர்ச்சி முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** ஈரெழுத்து மொழியும் உயிர்த்தொடர் மொழியும்—ஈரெழுத் தொருமொழிக் குற்றுகர ஈற்றிற்கும் உயிர்த் தொடர்மொழிக் குற்றுகர ஈற்றிற்கும், வேற்றுமை யாயின்—வேற்றுமைப் பொருட் புணர்ச்சியாயின், இன ஒற்று இடைமிக—இனமாகிய ஒற்று இடையிலேமிக, வல்லெழுத்து மிகுதி தோற்றம் வேண்டும்—வல்லெழுத்து மிகுதி தோன்றி முடிதலை விரும்பும் ஆசிரியன் என்றவாறு.

**உதாரணம் :** யாட்டுக்கால் செவி தலை புறம் எனவும், முயிற்றுக்கால் சினை தலை புறம் எனவும் வரும். கயிற்றுப் புறம் வயிற்றுத்தீ என்பனவுமாம்.

தோற்றம் என்றதனான் ஏனைக்கணத்தும் இம்முடிபு கொள்க. யாட்டு ஞாற்சி நிணம் மணி வால் அதள் எனவும், முயிற்று ஞாற்சி நிணம் முட்டை வலிமை அடை ஆட்டம் எனவும் வரும். (௬)



௪௧௨. ஒற்றிடை யினமிகா மொழியுமா ருளவே
யத்திறத் தில்லை வல்லெழுத்து மிகலே.

இஃது எய்தியது ஒருமருங்கு மறுக்கின்றது.

**இதன் பொருள் :** ஒற்று இடை இனம் மிகா மொழியுமாருள—முற்கூறிய இரண்டனுள் இனவொற்று இடைமிக்கு முடியாத மொழிகளும் உள, வல்லெழுத்து மிகல் அத்திறத் தில்லை—வல்லெழுத்து மிக்குமுடிதல் அக்கூற்றுளில்லை என்றவாறு.

**உதாரணம் :** நாகுகால் செவி தலை புறம் எனவும், வரகு கதிர் சினை தாள் பதர் எனவும் வரும்.

அத்திறமென்றதனான் உருபிற்கு எய்திய சாரியை பொருட் கட் சென்றவழி இயைபுவல்லெழுத்து வீழ்க்க. யாட்டின்கால் முயிற்றின்கால் நாகின்கால் வரகின் கதிர் என வரும்.

அத்திறமென்றதனான் ஏனைக்கணத்தும் ஒற்றிடை மிகாமை கொள்க. நாகுஞாற்சி நீட்சி மாட்சி வலிமை என ஒட்டுக. (௭)

௪௧௩. இடையொற்றுத் தொடரு மாய்தத் தொடரு
நடையா வியல வென்மனார் புலவர்.

இஃது இடைநின்ற இரண்டற்கும் முடிபு கூறுகின்றது

**இதன் பொருள் :** இடையொற்றுத் தொடரும் ஆய்தத் தொடரும்—இடையொற்றுத் தொடர்மொழிக் குற்றுகர ஈறும் ஆய்தத்தொடர்மொழிக் குற்றுகர ஈறும், நடை ஆ இயல என்மனார் புலவர்—நடைபெற நடக்குமிடத்து முற்கூறிய அவ்வியல்பு முடிபினையுடைய என்று கூறுவர் புலவர் என்றவாறு.

**உதாரணம் :** தெள்குகால் சிறை தலை புறம் எனவும், எஃகு கடுமை சிறுமை தீமை பெருமை எனவும் வரும். (௮)

௪௧௪. வன்றொடர் மொழியு மென்றொடர் மொழியும்
வந்த வல்லெழுத் தொற்றிடை மிகுமே
மெல்லொற்றுத்தொடர்மொழி மெல்லொற்றெல்
வல்லொற் றிறுதி கிளையொற் றாகும். [லாம்

இது பின்னின்ற இரண்டற்கும் முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** வன்றொடர் மொழியும் மென்றொடர் மொழியும்—வன்றொடர்மொழிக் குற்றுகர ஈறும், மென்றொடர் மொழிக் குற்றுகர ஈறும், வந்த வல்லெழுத்து ஒற்று இடை மிகும்—வருமொழியாய் வந்த வல்லெழுத்தினது ஒற்று இடையிலே மிக்குமுடியும், மெல்லொற்றுத் தொடர்மொழி மெல்லொற்றெல்லாம்—அவ்விரண்டனுள் மெல்லொற்றுத் தொடர்மொழிக் கண் நின்ற மெல்லொற்றெல்லாம், இறுதி வல்லொற்று—இறுதிக்கணின்ற வல்லொற்றும், கிளை ஒற்று ஆகும்—கிளையாகிய வல்லொற்றுமாய் முடியும் என்றவாறு.

இறுதி வல்லொற்று வருதலாவது குற்றுகரம் ஏறிநின்ற வல்லொற்றுத் தானே முன்னர்வந்து நிற்றலாம். கிளைவல்லொற்று வருதலாவது ணகாரத்திற்கு டகாரமும் னகாரத்திற்கு றகாரமும் புணர்ச்சியும் பிறப்பும் நோக்கிக் கிளையாமாதலின், அவை முன்னர் வந்து நிற்றலாம்.

**உதாரணம் :** கொக்குக்கால் சிறகு தலை புறம், குரங்குக் கால் செவி தலை புறம், குரக்குக்கால் செவி தலை புறம், எட்குக் குட்டி செவி தலை புறம், எற்புக்காடு சுரம் தலை புறம் என வரும். அற்புத்தளை என்பது அன்பினாற் செய்த தளையென வேற்றுமையும் அன்பாகிய தளையென அல்வழியுமாம்.

வந்த என்றதனான் இவ்விரண்டிற்கும் உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கட் சென்றவழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க. கொக்கின்கால் குரங்கின்கால் என வரும்.

9. இறுதிவல்லொற்றென்றது—உகரமூர்ந்த இறுதிவல்லொற்றை. அவ்வல்லொற்றாக இடையில்நின்ற மெல்லொற்றுத் திரியுமென்றபடி. உதாரணமாக குரங்கு என்பதிலுள்ள மெல்லொற்று, குரக்கு என இறுதிநின்ற வல்லொற்றாய்த் திரிதல் காண்க.

கிளையொற்றென்றது—மெல்லொற்றுக்கினமாகிய வல்லொற்றை. உதாரணமாக எண்கு என்புழி ணகரம் எட்கு எனத் தனக்கினமாகிய



எல்லாமென்றதனாற் பறம்பிற்பாரி குறும்பிற்சான்றார் என மெல்லொற்றுத் திரியாமையுங் கொள்க.

ஒற்றென்ற மிகுதியான் இயல்புகணத்துக்கண்ணும் குரக்கு ஞாற்சி நிணம் முகம் விரல் உகிர் என மெல்லொற்றுத் திரிந்து வருமாறு கொள்க. சிலப்பதிகாரமென்பதும் அது.

வன்றொடர்மொழி இயல்புகணத்துக்கண் வருதல் 'ஞநமயவ' (எழு-௧௪௪) என்பதனான் முடியும். (௯)

௪௧௫. மரப்பெயர்க் கிளவிக் கம்மே சாரியை.

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறுகின்றது, அம்மு வகுத்தலின்.

**இதன் பொருள்:** மரப்பெயர்க்கிளவிக்கு அம்மே சாரியை—குற்றியலுகர ஈற்று மரப்பெயர்க்கு வருஞ் சாரியை அம்முச் சாரியை என்றவாறு.

**உதாரணம் :** தேக்கங்கோடு செதிள் தோல் பூ என வரும்.

கமுகங்காய் தெங்கங்காய் சீழ்கம்புல் கம்பம்புல் பயற்றங்காய் என்றாற்போலும் புல்லினையும் மரமென அடக்கி மாறுகொளக் கூறலெனக் தழீஇக்கொண்ட சிதைவென்பதாம் இச்சூத்திரமென்று உணர்க. (௧௦)

௪௧௬. மெல்லொற்று வலியா மரப்பெயரு முளவே.

இது மென்றொடர்மொழிக்கு எய்தியது ஒருமருங்கு மறுக்கின்றது.

**இதன் பொருள் :** மெல்லொற்று வலியா மரப்பெயரும் உள—மெல்லொற்று வல்லொற்றாகத் திரியாது மெல்லொற்றாய் முடியும் மரப்பெயரும் உள என்றவாறு.

டகரமாகத் திரிதல் காண்க. பிறவுமன்ன. சிலப்பதிகாரம் என்புழிச் சிலம்பு சிலப்பு என்றாயிற்று.

உதாரணம் : புன்கங்கோடு செதிள் தோல் பூ எனவும், குருந்தங்கோடு செதிள் தோல் பூ எனவும் வரும்.

வலியாமரப்பெயருமுள எனவே வலிக்கும் மரப்பெயரும் உளவென்று கொள்க. வேப்பங்கோடு கடப்பங்காய் ஈச்சங்குலை என வரும். (௧௧)

௪௧௭. ஈரெழுத்து மொழியும் வல்லொற்றுத் தொடரு
மம்மிடை வரற்கு முரியவை யுளவே
யம்மர பொழுகு மொழிவயி னான.

இஃது ஈரெழுத் தொருமொழிக்கும் வன்றொடர் மொழிக்கும் எய்தாத தெய்துவித்தது, முன்னர் எய்தியதனை விலக்கி அம்மு வகுத்தலின்.

இதன் பொருள் : ஈரெழுத்துமொழியும் வல்லொற்றுத் தொடரும்—ஈரெழுத் தொருமொழிக் குற்றியலுகரமும் வன்றொடர்மொழிக் குற்றியலுகரமும், அம்இடை வரற்கும் உரியவை உள—முன் முடித்துப்போந்த முடிபுகளன்றி அம்முச்சாரியை இடையேவந்து முடிதற்கு உரியனவும் உள; யாண்டெனின், அம்மரபு ஒழுகும் மொழிவயினான—அவ்விலக்கணம் நடக்கும் மொழியிடத்து என்றவாறு.

உதாரணம் : ஏறங்கோள் சூதம்போர் வட்டம்போர் புற்றம் பழஞ்சோறு என வரும்.

உம்மை எதிர்மறையாகலின், அம்முப்பெறுதன நாகுகால் கொக்குக்கால் என முன்னர்க் காட்டினவேயாம்.

அம்மர்பொழுகும் என்றதனால் அரசக்கன்னி முரசக்கடிப்பு என அக்கும் வல்லெழுத்துங் கொடுத்தும் அரசவாழ்க்கை முரச வாழ்க்கை என அக்குக்கொடுத்தும் முடிக்க.

இன்னும் அதனானே இருட்டத்துக்கொண்டான் விளக்கத்துக்கொண்டான் என அத்தும் வல்லெழுத்துங் கொடுத்தும் மயிலாப்பிற்கொற்றன் பறம்பிற்பாரி என இன் கொடுத்துங் கரியதன்கோடு நெடியதன்கோடு என அன் கொடுத்தும் முடிக்க. (௧௨)

12. அரசக்கன்னி, முரசக்கடிப்பு இவற்றில் அரசு முரசு என்பன குற்றுகரவீறு.



௪௧௮. ஒற்றுநிலை திரியா தக்கொடு வரூஉ
மக்கிளை மொழியு முளவென மொழிப.

இது மென்றொடர்மொழியுட் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

இதன் பொருள் : ஒற்று நிலைதிரியாது அக்கொடுவரூஉம்—ஒற்று முன்னின்ற நிலைதிரியாது அக்குச்சாரியையோடும் பிற சாரியையோடும் வரும், அக்கிளை மொழியும்உள என மொழிப—அக்கிளையான சொற்களும் உள என்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

இதற்கு உம்மையை முன்னர் மாறுக

உதாரணம் : குன்றக்கூகை மன்றப்பெண்ணை என வரும். உம்மையாற் கொங்கத்துழவு வங்கத்துவாணிகம் என அத்தும் பெற்றன.

நிலையென்றதனான் ஒற்று நிலைதிரியா அதிகாரத்துக்கண் வருஞ் சாரியைக்கு இயைபு வல்லெழுத்து வீழ்க்க. அக்கிளையென்றார், இரண்டு சாரியை தொடர்ந்து முடிவனவும் உளவென்றற்கு. பார்ப்பனக்குழவி சேரி தோட்டம் பிள்ளை என அன்னும் அக்கும் வந்தன. இவற்றிற்கு உடைமை விரிக்க. பார்ப்பினுட்குழவி என்றுமாம். பார்ப்பானாகிய குழவி என்றால் ஈண்டு முடியாதென்று உணர்க. பார்ப்பனமகன் பார்ப்பனவனிதை என்பனவும் பார்ப்பான் சாதி உணர்த்தின. (௧௩)

௪௧௯. எண்ணுப்பெயர்க் கிளவி யுருபிய னிலையும்.

இது குற்றுகர ஈற்று எண்ணுப்பெயரோடு பொருட் பெயர் முடிக்கின்றது.

இதன் பொருள் : எண்ணுப்பெயர்க் கிளவி—எண்ணுப் பெயராகிய சொற்கள் பொருட்பெயரோடு புணருமிடத்து, உரு

13. ஈண்டு முடியாதென்றது னகரவீறுதலின். பார்ப்பான் சாதி என்றார்; பார்ப்பன மகன் என்பதற்கு பார்ப்பு என்பது நிலைமொழி யென அறிவித்தற்கு. பார்ப்பினுடைய மகன் என விரிக்க.

பியல் நிலையும்—உருபு புணர்ச்சியின் இயல்பின்கண்ணே நின்று அன்பெற்றுப் புணரும் என்றவாறு.

**உதாரணம் :** ஒன்றன்காயம் இரண்டன்காயம் சுக்கு தோரை பயறு என ஒட்டுக. ஒன்றனுற்கொண்ட காயமென விரியும். வருமொழி வரையாது கூறினமையின், இயல்பு கணத்துக்கண்ணுங் கொள்க. ஒன்றன்ஞாண் நூல் மணி யாழ் வட்டு அடை என வரும். மேலைச் சூத்திரத்து ‘ நிலை ’ (எழு—௪௧௮) என்றதனுன் இயைபு வல்லெழுத்து வீழ்க்க. (௧௪)

௪௨௦. வண்டும் பெண்டு மின்னொடு சிவணும்.

இது மென்றொடர்மொழியுட் சிலவற்றிற்குப் பிற முடிவு கூறுகின்றது.

**இதன் பொருள் :** வண்டும் பெண்டும் இன்னொடு சிவணும்—வண்டென்னுஞ் சொல்லும் பெண்டென்னுஞ் சொல்லும் இன்சாரியையோடு பொருந்தி முடியும் என்றவாறு.

**உதாரணம் :** வண்டின்கால் பெண்டின்கால் என வரும். இதற்கு முற்கூறிய இலேசினுன் வல்லெழுத்து வீழ்க்க. (௧௫)

௪௨௧. பெண்டென் கிளவிக் கன்னும் வரையார்.

இது மேற்கூறியவற்றுள் ஒன்றற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

**இதன் பொருள் :** பெண்டு என் கிளவிக்கு அன்னும் வரையார்—பெண்டென்னுஞ்சொற்கு இன்னேயன்றி அன்சாரியை வருதலையும் நீக்கார் ஆசிரியர் என்றவாறு.

**உதாரணம் :** பெண்டன்கை செவி தலை புறம் என வரும். (௧௬)

௪௨௨. யாதெ னிறுதியுஞ் சுட்டுமுத லாகிய ரூ 200
வாய்த விறுதியு முருபிய னிலையும்.

இஃது ஈரெழுத்தொருமொழிக் குற்றியலுகரத்துள் ஒன்றற்குஞ் சுட்டுமுதலாகிய ஆய்தத்தொடர்மொழிக் குற்றியலுகரத்திற்கும் வேறுமுடிபு கூறுகின்றது.



**இதன் பொருள் :** யாது என் இறுதியுஞ் சுட்டு முதலாகிய ஆய்த இறுதியும்—யாதென்னும் ஈறுஞ் சுட்டெழுத்து முதலாகிய ஆய்தத்தொடர்மொழிக் குற்றியலுகர ஈறும், உருபியல் நிலையும்—உருபு புணர்ச்சியின் இயல்பின்கண்ணே நின்று அன் பெற்றுச் சுட்டுமுதலிறுதி ஆய்தங்கெட்டு முடியும் என்றவாறு.

**உதாரணம் :** யாதன்கோடு அதன்கோடு இதன்கோடு உதன்கோடு செவி தலை புறம் என வரும். ஆய்தங்கெடாமுன்னே அன்னின் அகரத்தைக் குற்றுகரத்தின்மேல் ஏற்றுக, ஆய்தங் கெட்டால் அது முற்றுகரமாய் நிற்றலின். (௧௭)

அல்வழியிற் சுட்டுப்பெயர்.

௪௨௩. *முன்னுயிர் வருமிடத் தாய்தப் புள்ளி
மன்னல் வேண்டு மல்வழி யான.

இது முற்கூறியவற்றுட் சுட்டுமுதலுகரத்திற்கு ஒருவழி அல்வழி முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** முன்னுயிர் வருமிடத்து—சுட்டுமுதலாகிய ஆய்தத்தொடர்மொழிக் குற்றுகர ஈற்றின்முன்னே உயிர் முதன்மொழி வருமிடத்து, ஆய்தப்புள்ளி மன்னல் வேண்டும்—ஆய்தவொற்று முன்போலக் கெடாது நிலைபெற்று முடிதலை விரும்பும் ஆசிரியன், அல்வழியான—அல்வழிக்கண் என்றவாறு.

**உதாரணம் :** அஃது இஃது உஃது என நிறுத்தி அடை ஆடை இலை ஈயம் உரல் ஊர்தி எழு ஏணி ஐயம் ஒடுக்கம் ஓக்கம் ஔவியம் என ஒட்டுக.

முன்னென்றதனுன் வேற்றுமைக்கண்ணும் இவ் விதி கொள்க. அஃதடைவு அஃதொட்டம் என ஒட்டுக. இவற்றிற்கு இரண்டாமுருபு விரிக்க. இன்னும் இதனுனே ஏனை இலக்கணம் முடியுமாறு அறிந்து முடிக்க. (௧௮)

௪௨௪. ஏனைமுன் வரினே தானிலை யின்றே.

இது மேலவற்றிற்குப் பிறகணத்தோடு அல்வழி முடிபு கூறுகின்றது.

---

18. அஃதடைவு - அதனை அடைதல் எனவிரியும். அஃதொட்டம் - அதனை ஒட்டல் எனவிரியும்.

இதன் பொருள்: ஏனை முன் வரின்—முற்கூறிய ஈறுகளின் முன்னர் உயிர்க்கணமல்லன வருமாயின், தான் நிலையின்று—அவ்வாய்தங் கெட்டுமுடியும் என்றவாறு.

உதாரணம்: அதுகடிது இதுகடிது உதுகடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது யாது வலிது என ஒட்டுக. (௧௯)

௪௨௫. அல்லது கிளப்பி னெல்லா மொழியுஞ்
சொல்லிய பண்பி னியற்கை யாகும்.

இஃது ஆறு ஈற்றுக் குற்றுகரத்திற்கும் அல்வழி முடிபு கூறுகின்றது.

இதன் பொருள்: அல்லது கிளப்பின்—அல்வழியைச் சொல்லுமிடத்து, எல்லா மொழியும்—ஆறு ஈற்றுக் குற்றுகரமும், சொல்லிய பண்பின் இயற்கையாகும்—மேல் ஆசிரியன் கூறிய குணத்தையுடைய இயல்பாய் முடியும் என்றவாறு

உதாரணம்: நாகுகடிது வரகுகடிது தெள்குகடிது எஃகு கடிது குரங்குகடிது சிறிது தீது பெரிது என வரும். ஏனைக் கணத்துக்கண் 'நின்ற சொன்மு னியல்பாகும்' (எழு—௧௪௪) என்றதனாற் கொள்க.

எல்லாமொழியும் என்றதனால் வினைச்சொல்லும் வினைக் குறிப்புச்சொல்லும் இயல்பாய் முடிதல் கொள்க. கிடந்தது குதிரை கரிதுகுதிரை என வரும்.

சொல்லிய என்றதனான் இருபெயரொட்டுப் பண்புத்தொகை வன்கணத்துக்கண் இனவொற்றுமிக்கு வல்லெழுத்துப்பெற்று முடிதலும் இயல்புகணத்துக்கண் இனவொற்றுமிக்கு முடிதலுங் கொள்க. கரட்டுக்காணம் குருட்டுக்கோழி திருட்டுப்புலையன் களிற்றுப்பன்றி வெளிற்றுப்பனை எயிற்றுப்பல் எனவும், வரட்டாடு குருட்டெருது எனவும் வரும்.

பண்பினென்றதனால் மெல்லொற்று வல்லொற்றாய் ஐகாரம் பெற்று முடிவனவும், மெல்லொற்று வல்லொற்றாய் ஐகாரமும் வல்லெழுத்தும் பெற்றுமுடிவனவும், மெல்லொற்று வல்லொற்



றாகாது ஐகாரமும் வல்லெழுத்தும் பெற்றுமுடிவனவுங் கொள்க. ஓர்யாட்டையானை ஐயாட்டையெருது எனவும், அற்றைக்கூத்தர் இற்றைக்கூத்தர் எனவும், மன்றைத்தூதை மன்றைப்பானை பண்டைச்சான்றார் எனவும் வரும். (௨௦)

௪௨௬. வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து மிகுமே.

இஃது அவ்வாறு ஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

இதன் பொருள்: வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து மிகும்—வல்லொற்றுத்தொடர்மொழிக் குற்றுகர ஈறு வல்லெழுத்து வருவழி வல்லெழுத்து மிக்கு முடியும் என்றவாறு.

உதாரணம்: கொக்குக்கடிது பாக்குக்கடிது பட்டுக்கடிது சிறிது தீது பெரிது என வரும் (௨௧)

௪௨௭. சுட்டுச்சினை நீடிய மென்றொடர் மொழியும்
யாவினா முதலிய மென்றொடர் மொழியு
மாயிய றிரியா வல்லெழுத் தியற்கை.

இதுவும் அவ் ஆறு ஈற்றுள் ஒன்றன்கண் ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உணரநின்ற இடைச்சொற்கு முடிபு கூறுகின்றது.

இதன் பொருள்: சுட்டுச் சினை நீடிய மென்றொடர் மொழியும்—சுட்டாகிய சினையெழுத்து நீண்ட மென்றொடர்க் குற்றுகர ஈறும், யாவினா முதலிய மென்றொடர்மொழியும்—யாவென்னும் வினாமுதலாகிய மென்றொடர்மொழிக் குற்றுகர ஈறும், வல்லெழுத்தியற்கை ஆ இயல் திரியா—வல்லெழுத்துப் பெற்று முடியுந் தன்மையாகிய அவ்வியல்பிற் றிரியாது முடியும் என்றவாறு.

உதாரணம்: ஆங்குக்கொண்டான் ஈங்குக்கொண்டான் ஊங்குக்கொண்டான் யாங்குக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும்.

இயற்கையென்றதனான் மென்றொடர்மொழிக் குற்றியலுகர ஈற்று வினையெச்சம் இயல்பாயும் வன்றொடர்மொழிக் குற்றியலுகர ஈற்று வினையெச்சம் மிக்கும் முடிவன கொள்க. இருந்து கொண்டான் ஆண்டு சென்றான் தந்து தீர்ந்தான் வந்து போயினான் எனவும், செத்துக்கிடந்தான் செற்றுச்செய்தான் உய்த்துக் கொண்டான் நட்டுப்போனான் எனவும் வரும். (௨௨)

௪௨௮.* யாவினா மொழியே யியல்பு மாகும்.

இது மேலனவற்றுள் ஒன்றற்கு எய்தியதன்மேற் சிறப்பு விதி கூறுகின்றது. வல்லெழுத்து விலக்கி இயல்பாமென்றலின்.

இதன் பொருள் : யாவினா மொழியே இயல்புமாகும்—அவற்றுள் யாவென்னும் வினாவையுடைய சொல் முற்கூறியவாறன்றி இயல்பாயும் முடியும் என்றவாறு.

உதாரணம் : யாங்குகொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும். இஃது எப்படியென்னும் வினாப்பொருளை உணர்த்திற்று. உம்மையான் மிக்குமுடிதலே வலியுடைத்து. ஏகாரம் பிரிநிலை. (௨௩)

௪௨௯. அந்நான் மொழியுந் தந்நிலை திரியா.

இது மேலனவற்றிற்கு நிலைமொழிச் செய்கை கூறுகின்றது.

இதன் பொருள் : அந்நான்மொழியும்—சுட்டுமுதன் மூன்றும் யாமுதன் மொழியுமாகிய அந்நான்குமொழியும், தம் நிலை திரியா—தம் மெல்லொற்றாய தன்மை திரிந்து வல்லொற்றாகாது முடியும் என்றவாறு.

உதாரணம் : முற்காட்டியவே. தந்நிலையென்றதனான் மெல்லொற்றுத் திரியாது வல்லெழுத்து மிக்குமுடிவன பிறவுங் கொள்க. அங்குக்கொண்டான் இங்குக்கொண்டான் உங்குக் கொண்டான் எங்குக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும்.



இனி முன்னர் யா மொழியென்னாது வினாவென்றதனான் ஏழாவதன் இடப்பொருட்டாகிய பிறவும் இயல்பாய் முடிவனவுங் கொள்க. முந்துகொண்டான் பண்டுகொண்டான் இன்றுகொண்டான் அன்றுகொண்டான் என்றுகொண்டான் என வரும். (௨௪)

௪௩௰.* உண்டென் கிளவி யுண்மை செப்பின்
முந்தை யிறுதி மெய்யொடுங் கெடுதலு
மேனிலை யொற்றே ளகார மாதலு
மாமுறை யிரண்டு முரிமையு முடைத்தே
வல்லெழுத்து வரூஉங் காலை யான.

இது மென்றொடர்மொழியுள் வினைக்குறிப்பாய் நின்றதோர் சொற் பண்பை உணர்த்துங்கால் வேறுமுடிவு பெறுதல் கூறுகின்றது.

இதன் பொருள் : உண்டென்கிளவி உண்மைசெப்பின்—உண்டென்னுஞ்சொல் வினைக்குறிப்பைபுணர்த்தாது ஒருபொருள் தோன்றுங்கால் தோன்றி அது கெடுந்துணையும் உண்டாய் நிற்கின்ற தன்மையாகிய பண்பை உணர்த்திநிற்குமாயின், முந்தை இறுதி மெய்யொடுங்கெடுதலும்—முன்னர் நின்ற குற்றுகரந் தான் ஏறிநின்ற மெய்யொடுங்கெடுதலும், மேனிலை ஒற்றே ளகாரமாதலும்—அதற்கு மேல் நின்ற ணகார ஒற்று ளகார ஒற்றாதலுமாகிய, ஆ முறை இரண்டும் உரிமையும் உடைத்து—அம்முறையினையுடைய இரண்டு நிலையும் உரித்து அஃது உரித்தன்றி முன்னர் நின்ற நிலையிலே கேடுந் திரிபும் இன்றி நிற்றலும் உடைத்து, வல்லெழுத்து வரூஉங் காலையான—வல்லெழுத்து முதன்மொழியாய் வருங்காலத்து என்றவாறு.

வல்லெழுத்து அதிகாரத்தால் வாராநிற்ப வல்லெழுத்து வரூஉங்காலை என்றதனான் அவ்விருமுடிபும் உளது பண்பை புணர்த்தும் பகரம் வரும் மொழிக்கண்ணேயென்பதூஉம் ஏனைக் கசதக்களினும் இயல்புகணத்தினும் உண்டென நின்று வினைக் குறிப்பாயுஞ் சிறுபான்மை பண்பாயும் நிற்குமென்பதூஉங் கொள்க.

உதாரணம் : உள்பொருள் உண்டுபொருள் என வரும். இது பொருண்மை சுட்டாது உண்மைத்தன்மைப் பண்பை

ஈண்டு உணர்த்திற்று. இனி உண்டுகாணம் உண்டுசாக்காடு உண்டுதாமரை உண்டுஞானம் நூல் மணி யாழ் வட்டு அடை ஆடை என வருவனவெல்லாங் கேடுந் திரிபுமின்றி வினைக்குறிப் பாயுஞ் சிறுபான்மை பண்பாயும் நின்றன. இவற்றின் வேறு பாடு வினையியலுள் வினைக்குறிப்பு ஓதும் வழி உணர்க.

உள்பொருளென்பது பண்புத்தொகை முடிபன்றேவெ னின், அஃது ஓசை ஒற்றுமைபடச் சொல்லும் வழியதுபோ லும். இஃது ஓசை இடையறவுபடச் சொல்லும் வழிய தென்க. (௨௫)

௪௩௧. இருதிசை புணரி னேயிடை வருமே.

இது குற்றுகர ஈற்றுத் திசைப்பெயர்க்கு அல்வழி முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** இருதிசை புணரின்—இரண்டு பெருந் திசையுந் தம்மிற் புணரின், ஏ இடை வரும்—ஏயென்னுஞ் சாரியை இடை நின்று புணரும் என்றவாறு.

**உதாரணம் :** தெற்கேவடக்கு கிழக்கேமேற்கு இவை உம்மைத் தொகை. (௨௬)

௪௩௨. திரிபுவேறு கிளப்பி னொற்று முகரமுங்
கெடுதல் வேண்டு மென்மனார் புலவ
ரொற்றுமெய் திரிந்து னகார மாகும்
தெற்கொடு புணருங் காலை யான.

இது பெருந்திசைகளோடு கோணத்திசைகள் புணர்த்த லின் எய்தாத தெய்துவித்தது.

**இதன் பொருள் :** திரிபுவேறு கிளப்பின்—அப் பெருந் திசைகளோடு கோணத்திசைகளை வேறாகப் புணர்க்குமிடத்து, ஒற்றும் உகரமுங் கெடுதல் வேண்டும் என்மனார் புலவர்— அவ்வுகரம் ஏறி நின்ற ஒற்றும் அவ் வீற்று உகரமுங் கெட்டு முடிதல் வேண்டுமென்று சொல்லுவர் புலவர், தெற்கொடு புண ருங்காலை—அது தெற்கென்னுந் திசையொடு புணருங்காலத்து, ஆன ஒற்று மெய் திரிந்து னகாரமாகும்—அத்திசைக்குப்



பொருந்திநின்ற றகார ஒற்றுத் தன்வடிவு திரிந்து னகர ஒற் றாய் நிற்கும் என்றவாறு.

திரிந்தென்றதனான் வடக்கென்பதன்கண் நின்ற ககர ஒற் றுக் கெடுத்து முடித்துக்கொள்க.

**உதாரணம் :** வடகிழக்கு வடமேற்கு தென்கிழக்கு தென் மேற்கு என வரும்.

வேறென்றதனால் திசைப்பெயரோடு பொருட்பெயர்வரினும் இம்முடிபு கொள்க. வடகடல் வடசுரம் வடவேங்கடம் தென் குமரி தென்சுரம் தென்னிலங்கை என வரும்.

மெய்யென்றதனான் உயிர் கெட்டுந் திரிந்தும் மெய் கெட் டும் முடிவனவும் உள, திசைப்பெயர் முன்னர்ப் பொருட்பெயர் வந்துழியென்று உணர்க. கிழக்கு என்பது கரை கூரை என்ப வற்றோடு புணருமிடத்துக் கீழ்கரை கீழ்கூரை என நிலைமொழி யிறுதி உகரம் மெய்யொடுங் கெட்டு அதன்மேல்நின்ற ககர ஒற்றும் ழகரத்தில் அகரமுங் கெட்டு முதலெழுத்து நீண்டு முடிந்தன. மேற்கு, கரை கூரை, மீகரை மீகூரை என நிலை மொழி ஈற்று உகரம் மெய்யொடுங்கெட்டு அதன்மேல் நின்ற றகர ஒற்றுங் கெட்டு ஏகாரம் ஈகாரமாகி முடிந்தன. இன்னும் இதனானே மேன்மாடு மேல்பால் மேலச்சேரி என்றாற்போல் வனவுஞ் செய்கையறிந்து முடிக்க. (௨௭)

௪௩௩. ஒன்றுமுத லாக வெட்ட னிறுதி
யெல்லா வெண்ணும் பத்தன் முன்வரிற்
குற்றிய லுகர மெய்யொடுங் கெடுமே
முற்ற வின்வரூஉ மிரண்டலங் கடையே.

நிறுத்தமுறையானே ஆறு ஈற்றுக் குற்றுகரமும் புணரு மாறு உணர்த்தி இனி அவ்வீற்று எண்ணுப்பெயர் முடிக் கின்றார்; இஃது அவற்றுட் பத்தென்னும் எண்ணுப்பெய ரோடு எண்ணுப்பெயர்வந்து புணருமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** ஒன்று முதலாக எட்டன் இறுதி எல்லா எண்ணும்—ஒன்றென்னும் எண்முதலாக எட்டென்னும் எண்

ணீருயுள்ள எல்லா எண்ணுப்பெயர்களும், பத்தன்முன்வரின்—பத்தென்னும் எண்ணுப்பெயரின் முன்வரின், குற்றியலுகரம் மெய்யொடுங் கெடும்—அப்பத்தென்னுஞ் சொல்லிற் குற்றியலுகரந் தான் ஏறி நின்ற மெய்யோடுங் கெடும், இரண்டலங் கடை முற்ற இன்வரூஉம்—ஆண்டு இரண்டல்லாத எண்ணுப் பெயர்களிடத்து முடிய இன்சாரியை இடைவந்து புணரும் என்றவாறு.

**உதாரணம் :** பதினொன்று பதின்மூன்று பதினான்கு பதினைந்து பதினாறு பதினேழு பதினெட்டு என வரும்.

நிலைமொழி முற்கூறுதலதனாற் பிறவெண்ணின் முன்னர்ப் பிறபெயர் வந்துழியும் இன்பெறுதல் கொள்க. ஒன்பதின்கூறு ஒன்பதின்பால் என வரும். முற்றவென்றதனாற் பதினொன் கென்புழி வந்த இன்னின் னகரம் வருமொழிக்கட் கருவிசெய்து கெடுத்து முடிக்க. (௨௮)

பத்த னொற்றுக்கெட னகார மிரட்ட
லொத்த தென்ப விரண்டுவரு காலை.

இது மேல் இன்பெறுமென்று விலக்கிய இரண்டற்குப் பிறிதுவிதி கூறுகின்றது.

**இதன் பொருள் :** பத்தன் ஒற்றுக்கெட னகாரம் இரட்டல்—பத்தென்னுஞ் சொல்லின் நின்ற தகர ஒற்றுக் கெட னகர ஒற்று இரட்டித்து வருதல், இரண்டு வருகாலை ஒத்த தென்ப—இரண்டென்னுமெண் வருங்காலத்திற் பொருந்திற் றென்பர் ஆசிரியர் என்றவாறு.

**உதாரணம் :** பன்னிரண்டு என வரும்.

'குற்றியலுகர மெய்யொடுங்கெடும்' (எழு-௪௩௩) என்ற விதி இதற்கும் மேலனவற்றிற்குங் கொள்க. (௨௯)

௪௩௫. ஆயிரம் வரினு மாயிய றிரியாது.

இஃது ஆயிரமென்னும் எண்ணுப்பெயர்வரின் வரும் முடிபு கூறுகின்றது.



**இதன் பொருள் :** ஆயிரம் வரினும் ஆயியல் திரியாது—முற்கூறிய பத்தன் முன்னர் ஒன்று முதலியனவேயன்றி ஆயிரமென்னுமெண் வந்தாலும் ஈறுகெட்டு இன்பெற்று முடியும் இயல்பில் திரியாது என்றவாறு.

**உதாரணம் :** பதினாயிரம் என வரும்.

உம்மை இறந்தது தழீஇயிற்று. (௩௦)

௪௩௬. நிறையு மளவும் வரூஉங் காலையுங்
குறையா தாகு மின்னென் சாரியை.

இஃது எண்ணுப்பெயரோடு நிறைப்பெயரும் அளவுப் பெயரும் புணர்கின்ற புணர்ச்சி கூறுகின்றது.

**இதன் பொருள் :** நிறையும் அளவும் வரூஉங்காலையும்—முற்கூறிய பத்தென்பதன் முன்னர் நிறைப்பெயரும் அளவுப் பெயரும் வருங்காலத்தும், இன்னென்சாரியை குறையாதாகும்—அவ்வின்னென்னுஞ் சாரியை குறையாது வந்து முடியும் என்றவாறு.

**உதாரணம் :** பதின்கழஞ்சு தொடி பலம் எனவும், பதின் கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி எனவும், பதிற்றகல் பதிற்றுழக்கு எனவும் வரும்.

குறையாதாகு மென்றதனாற் பொருட்பெயரும் எண்ணுப் பெயரும் நிறைப்பெயரும் வந்துழியும் இன் கொடுத்து வேண்டுஞ்செய்கை செய்து முடிக்க. பதிற்றுவேலி யாண்டு அடுக்கு முழம் எனவும், பதின்றிங்கள் எனவும், பதிற்றுத்தொடி எனவும் வரும். பதிற்றொன்று என்பதுபோல இரண்டுமுதற் பத்தளவும் ஒட்டுக.

இவ் வீற்றின் னகரம் றகரமாதல் 'அளவாகுமொழிமுதல்' (எழு-௧௨௧) என்பதனுள் 'நிலைஇய' என்றதனால் முடிக்க. இவற்றிற்கு ஒற்றிரட்டுதலும் உகரம்வருதலும் வல்லெழுத்துப்

31. அளவாகும் என்பது அளவுப்பெயருக்கே கூறிய விதியாதலினால் நிறைப்பெயர் முதலியவற்றிற்கு இந்த "நிலையே" என்ற இலே

பெறுதலும் 'ஒன்றுமுதலாக' (எழு-௪௩௩) என்பதனுள் 'முற்ற' என்றதனாற் கொள்க. (௩௧)

௪௩௭. ஒன்றுமுத லொன்பா னிறுதி முன்னர்
நின்ற பத்த னொற்றுக்கெட வாய்தம்
வந்திட நிலையு மியற்கைத் தென்ப
கூறிய வியற்கை குற்றிய லுகர
மாற னிறுதி யல்வழி யான.

இஃது எண்ணுப் பெயரோடு பத்தென்னும் எண்ணுப் பெயர்க்கு முடிபு கூறுகின்றது.

இதன் பொருள்: ஒன்றுமுதல் ஒன்பான் இறுதிமுன்னர்—ஒன்றுமுதல் ஒன்பது ஈறாகக் கூறுகின்ற எண்ணுப் பெயர்களின் முன்னர், நின்ற பத்தன் ஒற்றுக்கெட—வருமொழியாக வந்துநின்ற பத்தென்னுஞ் சொல்லினது தகர ஒற்றுக் கெட, ஆய்தம் வந்து இடைநிலையும் இயற்கைத் தென்ப—ஆய்தமானது வந்து இடையே நிலைபெறும் இயல்பையுடைத்தென்று கூறுவர் ஆசிரியர், ஆறன் இறுதி அல்வழியான—அவற்றுள் ஆறென்னும் ஈறல்லாதவிடத்து, குற்றியலுகரங் கூறிய இயற்கை—குற்றியலுகரம் முற்கூறிய இயற்கையாய் மெய்யொடுங்கெட்டு முடியும் என்றவாறு.

இங்ஙனம் வருமாறு மேற்சூத்திரங்களுட் காட்டுதும்

வந்தென்றதனால் ஆய்தமாகத் திரியாது தகர ஒற்றுக் கெட்டு ஒருபது என்று நிற்றலுங் கொள்க. (௩௨)

௪௩௮. முதலீ ரெண்ணினொற்று ரகர மாகு
முகரம் வருத லாவயி னான.

இது மேற்கூறியவற்றிற் சிலவற்றிற்கு நிலைமொழிச் செய்கை கூறுகின்றது.

---

சினைற் கொள்ளப்பட்டது. பதிற்று என்பதில் இற்று சாரியை யென்பர் நன்னூலார்.



இதன் பொருள்: முதலீ ரெண்ணி னொற்று ரகரம் ஆகும்—அவற்றின் முதற்கண் நின்ற இரண்டெண்ணினுடைய னகரஒற்றும் ணகரஒற்றும் ரகர ஒற்றாகத் திரிந்துநிற்கும், ஆவயினான உகரம் வருதல்—அவ்விடத்து உகரம் வருக என்றவாறு.

உதாரணம்: ஒருபஃது என வரும். ஒன்றென்பதன் ஈற்றுக் குற்றுகரம் மெய்யொடுங் கெடுத்து னகர ஒற்றினை ரகர ஒற்றாக்கி உகரமேற்றி ஒருவென நிறுத்தி நின்ற பத்தென்பதன் தகர ஒற்றுக் கெடுத்து ஆய்தமாக்கிப் பஃதென வருவித்து ஒருபஃது என முடிக்க மேல்வருவனவற்றிற்குஞ் சூத்திரங்களாற் கூறுஞ் சிறப்புவிதி ஒழிந்தவற்றிற்கு இதுவே முடிபாகக் கொள்க. (௩௩)

௪௩௯. இடைநிலை ரகர மிரண்டெ னெண்ணிற்கு
நடைமருங் கின்றே பொருள்வயி னான.

இதுவும் அது.

இதன் பொருள்: இரண்டெ னெண்ணிற்கு இடைநிலை ரகரம்—இரண்டென்னு மெண்ணிற்கு இடைநின்ற ரகரம், பொருள்வயினான—அம்மொழி பொருள்பெறும் இடத்து, நடைமருங்கின்று—நடக்கும் இடமின்றிக் கெடும் என்றவாறு.

உதாரணம்: இருபஃது என வரும். இதற்கு ரகர வுயிர்மெய் இதனாற் கெடுத்து ஏனைய கூறியவாறே கூட்டி முடிக்க.

பொருளெனவே எண்ணல்லாப் பெயருங் கொள்க. இரு கடல் இருவினை இருபிறப்பு என வரும். (௩௪)

௪௪௦. மூன்று மாறு நெடுமுதல் குறுகும்.

இதுவும் அது.

இதன் பொருள்: மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகும்—மூன்றென்னு மெண்ணும் ஆறென்னு மெண்ணும் நெடுமுதல் குறுகி முடியும் என்றவாறு.

அறு எனக் குறுக்கிப் பஃது என வருவித்து அறுபஃது என முடிக்க. (௩௫)

௪௪௧. மூன்ற னொற்றே பகார மாகும்.

இதுவும் அது

**இதன் பொருள் :** மூன்றன் ஒற்றே பகாரமாகும்—மூன்றென்னும் எண்ணின்கண் நின்ற னகர ஒற்றுப் பகர ஒற்றாய் முடியும் என்றவாறு.

**உதாரணம் :** முப்பஃது என வரும். (௩௬)

௪௪௨. நான்க னொற்றே றகார மாகும்.

இதுவும் அது.

**இதன் பொருள் :** நான்கன் ஒற்றே றகாரமாகும்—நான்கென்னும் எண்ணின்கண் நின்ற னகர ஒற்று றகர ஒற்றாய் முடியும் என்றவாறு

**உதாரணம் :** நாற்பஃது என வரும். (௩௭)

௪௪௩. ஐந்த னொற்றே மகார மாகும்.

இதுவும் அது.

**இதன் பொருள் :** ஐந்தனொற்றே மகாரமாகும்—ஐந்தென்னு மெண்ணின்கண் நின்ற நகர ஒற்று மகர ஒற்றாய் முடியும் என்றவாறு.

**உதாரணம் :** ஐம்பஃது என வரும்.

ஏழு குற்றியலுகர ஈறன்மை உருபியலுட் காண்க. (௩௮)

௪௪௪. எட்ட னொற்றே ணகார மாகும்.

இதுவும் அது.

**இதன் பொருள் :** எட்டனொற்றே ணகாரமாகும்—எட்டென்னு மெண்ணின்கண் நின்ற டகர ஒற்று ணகர ஒற்றாய் முடியும் என்றவாறு.

**உதாரணம் :** எண்பஃது என வரும். (௩௯)



௪௪௫. ஒன்பா னொகரமிசைத் தகர மொற்று
முந்தை யொற்றே ணகார மிரட்டும்
பஃதென் கிளவி யாய்தபக ரங்கெட
நிற்றல் வேண்டு மூகாரக் கிளவி
யொற்றிய தகரம் றகர மாகும்.

இஃது எய்தாத தெய்துவித்தது.

**இதன் பொருள் :** ஒன்பான் ஒகரமிசைத் தகரம் ஒற்றும்—ஒன்பது என நிறுத்திப் பஃது என வருவித்து முடிக்குங்கால், நிலைமொழியாகிய ஒன்பதென்னும் எண்ணினது ஒகரத்திற்கு முன்னாக ஒரு தகர ஒற்றுத் தோன்றி நிற்கும், முந்தை ஒற்றே ணகாரம் இரட்டும்—முன் சொன்ன ஒகரத்திற்கு முன்னர் நின்ற னகர ஒற்று ணகர ஒற்றாய் இரட்டித்து நிற்கும், பஃதென் கிளவி ஆய்த பகரங்கெட—வருமொழியாகிய பஃதென்னுஞ் சொல் தன்கண் ஆய்தமும் பகரமுங் கெட்டுப்போக, ஊகாரக் கிளவி நிற்றல்வேண்டும்—நிலைமொழியில் இரட்டிய ணகரத்தின் பின்னர் ஊகாரமாகிய எழுத்து வந்துநிற்றலை ஆசிரியன் விரும்பும், ஒற்றிய தகரம் றகரமாகும்—வருமொழியாகிய பத்தென்பதன் ஈற்றின்மேலேறிய உகரங் கெடாது பிரிந்துநிற்ப ஒற்றாய் நின்ற தகரம் றகர ஒற்றாய் நிற்கும் என்றவாறு.

**உதாரணம் :** தொண்ணூறு என வரும். இதனை ஒற்றாய் வந்துநின்ற தகர ஒற்றின்மேல் நிலைமொழி ஒகரத்தை ஏற்றித் தொவ்வாக்கி ணகர ஒற்று இரட்டி அதன்மேல் வருமொழிக்கட் பகரமும் ஆய்தமுங்கெட வந்த ஊகாரமேற்றித் தொண்ணூ வாக்கிப் பகரவாய்தமென்னாது முறையன்றிக் கூற்றினான் நிலைமொழிக்கட் பகரமும் ஆய்தமுங் கெடுத்துக் குற்றியலுகரம் மெய்யொடுங்கெடுத்து வருமொழி இறுதித் தகர ஒற்றுத் திரிந்து நின்ற றகர ஒற்றின்மேலே நின்ற உகரமேற்றித் தொண்ணூறென முடிக்க. (௪௦)

௪௪௬. அளந்தறி கிளவியு நிறையின் கிளவியுங்
கிளந்த வியல தோன்றுங் காலை.

இது மேற்கூறிய ஒன்றுமுதல் ஒன்பானெண்களோடு அளவுப்பெயரும் நிறைப்பெயரும் முடியுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** அளந்தறி கிளவியும் நிறையின் கிளவியுந் தோன்றுங்காலை—முற்கூறிய ஒன்றுமுதல் ஒன்பான்களின் முன்னர் அளந்தறியப்படும் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வந்து தோன்றுங்காலத்து, கிளந்த இயல—ஆறன் ஈறு அல்வழிக் குற்றுகரம் மெய்யொடுங்கெட்டு முதலீரெண்ணினொற்று ரகாரமாய் உகரம் வந்து இடைநிலை ரகரங்கெட்டு மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகி நான்கனொற்று வன்கணத்து றகரமாய் எட்டனொற்று ணகரமாய் முடியும் என்றவாறு.

**உதாரணம் :** ஒருகலம் இருகலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி எனவும், ஒருகழஞ்சு இருகழஞ்சு கஃசு தொடி பலம் எனவும் வரும். அகல் உழக்கு என்பன முன்னர் முடித்தும். இவை முதலீரெண்ணின் செய்கை.

தோன்றுங்காலையென்றதனான் இவ்வெண்ணின் முன்னர் எடுத்தோத்தானும் இலேசானும் முடியாதுநின்ற எண்ணுப் பெயர்களெல்லாம் இவ்விதியும் பிறவிதியும் எய்துவித்து முடித்துக்கொள்க. ஒருமூன்று ஒருநான்கு இருமூன்று இருநான்கு ஒருகால் இருகால் ஒருமுந்திரிகை இருமுந்திரிகை ஒருமுக்கால் இருமுக்கால் என்பன பிறவுங் கொணர்ந்து ஒட்டுக. இனிப் பிறவிதி எய்துவன ஓரொன்று ஓரிரண்டு ஓரைந்து ஓராறு ஓரேழு ஓரெட்டு ஓரொன்பது எனவும், ஈரொன்று ஈரிரண்டு ஈரைந்து ஈராறு ஈரேழு ஈரெட்டு ஈரொன்பது எனவும், மூவொன்று மூவிரண்டு மூவைந்து மூவாறு மூவேழு மூவெட்டு மூவொன்பது எனவும், 'முதலீரெண்ணின்முனுயிர்' (எழு-௪௫௫) என்னுஞ் சூத்திரத்தான் உயிர்க்கு எய்திய பிறவிதியும் 'மூன்றன் முதனிலை நீடலுமுரித்து' (எழு-௪௫௭) என்ற பிறவிதியும் பெற்றுப் பிறசெய்கைகளும் பெற்று முடிந்தன. நாலொன்று நாலிரண்டு நாலைந்து நாலாறு நாலேழு நாலெட்டு நாலொன்பது என்பன 'நான்கனொற்றேலகாரமாகும்' (எழு-௪௫௩) என்ற விதிபெற்று முடிந்தன. பிறவும் இதுவாறேயன்றி அளவும் நிறையுமன்றி வருவனவெல்லாம் இவ்விலேசான் முடிக்க. (௪௧)

41. முதலீரெண்ணின் முன் உயிர் [குற்-௫௦-ம் சூ] மூன்றன் முதனிலை நீடலு முரித்தே. [குற்-௫௨-ம் சூ]



௪௪௭. மூன்ற னொற்றே வந்த தொக்கும்.

இது மேல் மாட்டேற்றோடு ஒவ்வாததற்கு வேறு முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** மூன்றனொற்றே வந்ததொக்கும்—மூன்றா மெண்ணின்கணின்ற னகர ஒற்று வருமொழியாய் வந்த அளவுப்பெயர் நிறைப்பெயர்களின் முன்னர் வந்த வல்லொற்றோடு ஒத்த ஒற்றாய்த் திரிந்து முடியும் என்றவாறு.

**உதாரணம் :** முக்கலம் சாடி தூதை பானை எனவும், முக்கழஞ்சு கஃசு தொடி பலம் எனவும் வரும்.

'நான்கனொற்றே றகாரமாகும்' (எழு-௪௪௨) என்ற முன்னை மாட்டேறு நிற்றலின் நாற்கலம் சாடி தூதை பானை எனவும், நாற்கழஞ்சு தொடி பலம் எனவும் வரும். (௪௨)

௪௪௮. ஐந்த னொற்றே மெல்லெழுத் தாகும்.

இதுவும் அது.

**இதன் பொருள்:** ஐந்தனொற்றே மெல்லெழுத்தாகும்—ஐந்தாவதன்கண் நின்ற நகர ஒற்று வருமொழி வல்லெழுத்துக்கு ஏற்ற மெல்லெழுத்தாகத் திரிந்து முடியும் என்றவாறு.

**உதாரணம் :** ஐங்கலம் சாடி தூதை பானை எனவும், ஐங்கழஞ்சு தொடி பலம் எனவும் வரும். ஏகாரம் ஈற்றசை. (௪௩)

௪௪௯. கசதப முதன்மொழி வரூஉங் காலை.

இது முற்கூறிய மூன்றற்கும் ஐந்தற்கும் வருமொழி வரையறுக்கின்றது.

**இதன் பொருள் :** கசதப முதன்மொழி வரூஉங் காலை—மூன்றனொற்று வந்ததொப்பதூஉம் ஐந்தனொற்று மெல்லெழுத்தாவதூஉம் அவ்வளவுப்பெயர் ஒன்பதினும் வன்கணமாகிய கசதபக்கள் முதன்மொழியாய் வந்த இடத்து என்றவாறு.

அது முன்னர்க் காட்டினும். ஆறு ‘நெடுமுதல்குறுகும்’ (எழு-௪௪௦) என்ற மாட்டேற்றானே ஆறு நெடுமுதல் குறுகி நின்றது.

**உதாரணம் :** அறுகலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி எனவும், அறுகழஞ்சு தொடி பலம் எனவும் வரும். அகல் உழக்கு என்பன மேற்காட்டினும். ஏழு குற்றுகர ஈறன்மையின் மாட்டேறு ஏலாதாயிற்று. (௪௪)

௪௫௦. நமவ வென்னு மூன்றொடு சிவணி
யகரம் வரினு மெட்டன் முனியல்பே.

இது வேண்டாது கூறி வேண்டியது முடிக்கின்றது, ‘ஞநமயவ’ (எழு-௧௪௪) என்னுஞ் சூத்திரத்துட் கூறியவற்றைக் கூறுதலின்.

**இதன் பொருள் :** எட்டன்முன்—எட்டென்பதன் முன்னர், நமவ என்னும் மூன்றொடு சிவணி அகரம் வரினும்—அளவுப்பெயர்களின் முன்னர் மென்கணத்து இரண்டும் இடைக்கணத்து ஒன்றுமாகிய நமவ என்னும் மூன்றனோடு பொருந்தி உயிர்க்கணத்து அகரம் வரினும், உம்மையான் உயிர்க்கணத்து உகரம் வரினுங் கூறாத வல்லெழுத்துக்கள் வரினும், இயல்பு—முற்கூறியவாறே டகாரம் ணகாரணமாய் வேறோர் விகாரமின்றி இயல்பாய் முடியும் என்றவாறு.

நமவவென்னும் மூன்றும் வந்தாற்போல அகரம்வரினு மென்பது பொருள்.

**உதாரணம் :** எண்ணாழி மண்டை வட்டி எனவும் எண்ணகல் எண்ணுழக்கு எனவும், எண்கலம் சாடி, தூதை பானை எனவும் வரும்.

ஒன்றென முடித்தலான் வன்கணத்து நிறைப்பெயருங் கொள்க. எண்கழஞ்சு தொடி பலம் என வரும்

இவ் வேண்டா கூறலான் எண்ணகலெனக் குற்றுகர ஈறாய்க் கேடுந் திரிவும் பெற்று உயிர்வருமொழியான தொடர்மொழிக்கண் ஒற்றிரட்டுதல் கொள்க. (௪௫)

---

45. வேண்டியது உயிர்முதன் மொழிவருதற்கண் ஒற்றிரட்டுதல்.



௪௫௧. ஐந்து மூன்று நமவரு காலை
வந்த தொக்கு மொற்றிய னிலையே.

இதுவும் மேல் மாட்டேற்றோடு ஒவ்வாமுடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** ஐந்தும் மூன்றும் நம வருகாலை—ஐந்தென்னு மெண்ணும் மூன்றென்னு மெண்ணும் நகர முதன் மொழியும் மகரமுதன்மொழியும் வருமொழியாய் வருங்காலத்து, ஒற்றியல் நிலை—நிலைமொழிக்கண் நின்ற ஒற்று நடக்கும் நிலைமை கூறின், வந்தது ஒக்கும்—மேற் கூறியவாறே மகாரமும் பகாரமுமாகாது வருமொழிமுதல் வந்த ஒற்றோடு ஒத்த ஒற்றாய் முடியும் என்றவாறு.

a measure.

**உதாரணம் :** ஐந்நாழி ஐம்மண்டை முந்நாழி மும்மண்டை என வரும்.

மூன்றும் ஐந்தும் என்னாத முறையன்றிக் கூற்றினால் நானாழி நான்மண்டை என்புழி நிலைமொழி னகரம் றகரமாகாது நின்றவாறே நின்று முடிதலும் வருமொழி முதனின்ற நகரம் னகரமாகத் திரிய நிலைமொழி நகரங் கெடுதலுங் கொள்க. (௪௬)

௪௫௨. மூன்ற னொற்றே வகரம் வருவழித்
தோன்றிய வகரத் துருவா கும்மே.

இதுவும் அது.

**இதன் பொருள் :** மூன்றனொற்று—மூன்றுமெண்ணின்கணின்ற னகர ஒற்று, வகரம் வருவழி—வகரமுதன்மொழி வருமிடத்து, தோன்றிய வகரத்து உருவாகும்—அவ்வருமொழியாய்த் தோன்றிய வகரத்தின் வடிவாய் முடியும் என்றவாறு.

**உதாரணம் :** முவ்வட்டி என வரும்.

தோன்றிய என்றதனானே முதல் நீண்டு வகர ஒற்றின்றி மூவட்டி என்றுமாம். (௪௭)

௪௫௩. நான்க னொற்றே லகார மாகும்.

இதுவும் அது.

இதன் பொருள் : நான்கனொற்று—நான்காமெண்ணின்கணின்ற னகர ஒற்று லகாரமாகும்—வகரமுதன்மொழி வந்தால் லகர ஒற்றாகத்திரிந்து முடியும் என்றவாறு.

உதாரணம் : நால்வட்டி என வரும். (௪௮)

௪௫௪. ஐந்த னொற்றே முந்தைய துகெடுமே.

இதுவும் அது.

இதன் பொருள் : ஐந்தனொற்று—ஐந்தா மெண்ணின்கணின்ற நகர ஒற்று, முந்தையது கெடும்—வகரமுதன்மொழி வந்தால் முன்னின்ற வடிவு கெட்டு முடியும் என்றவாறு.

உதாரணம் : ஐவட்டி என வரும்.

முந்தையென்றதனால் நகர ஒற்றுக் கெடாது வகர ஒற்றாகத் திரிந்து ஐவ்வட்டியெனச் சிறுபான்மை வரும். (௪௯)

௪௫௫. முதலீ ரெண்ணின்மு னுயிர்வரு காலைத்
தவலென மொழிப வுகரக் கிளவி
முதனிலை நீட லாவயி னான.

இது மாட்டேற்றான் எய்திய உகரத்திற்குக் கேடுகூறி முதனீள்க என்றலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறுகின்றது.

இதன் பொருள் : முதலீரெண்ணின் முன் உயிர் வருகாலை—ஒரு இரு என முடிந்துநின்ற இரண்டெண்ணின் முன்னர் உயிர் முதன்மொழி வருமொழியாய் வருங்காலத்து, உகரக் கிளவி தவலென மொழிப—நிலைமொழி யுகரமாகிய எழுத்துக் கெடுதலாமென்று சொல்லுவர் புலவர், ஆவயினான முதனிலை நீடல் — அவ்விரண்டெண்ணின்கணின்ற முதலெழுத்துக்கள் நீண்டு முடியும் என்றவாறு.

ஒன்று + அகல்

உதாரணம் : ஓரகல் ஈரகல் ஓருழக்கு ஈருழக்கு என வரும். (௫௦)

50. இங்கே மாட்டேறு என்றது 'அளந்தறிகிளவியும்' என்ற ௪௧-ம் சூத்திரத்துக் கூறிய மாட்டேற்றை.



௪௫௬. மூன்று நான்கு மைந்தென் கிளவியுந்
தோன்றிய வகரத் தியற்கை யாகும்.

இதுவும் அது.

இதன் பொருள்: மூன்றும் நான்கும் ஐந்தென் கிளவியும்—மூன்றென்னுமெண்ணும் நான்கென்னுமெண்ணும் ஐந்தென்னுமெண்ணும், தோன்றிய வகரத்து இயற்கையாகும்—முன்னர்த் தோன்றிநின்ற வகரம் வருமொழிக்குக் கூறிய இயல்பாக மூன்றின்கண் வகர ஒற்றாயும், நான்கின்கண் லகர ஒற்றாயும் ஐந்தின்கண் ஒற்றுக்கெட்டும் முடியும் என்றவாறு.

உதாரணம் : முவ்வகல் முவ்வுழக்கு என இதற்குத் தோன்றிய என்றதனால் ஒற்றிரட்டுதல் கொள்க நாலகல் நாலுழக்கு ஐயகல் ஐயுழக்கு என வரும்.

தோன்றிய என்றதனால் மேல் மூன்றென்பது முதல்நீண்ட இடத்து நிலைமொழி னகரவொற்றுக்கெடுத்துக்கொள்க. இயற்கையென்றதனால் தொடர்மொழிக்கண் ஒற்றிரட்டுதல் கொள்க. 'மூன்றனொற்றே' முதலிய மூன்று சூத்திரமுங் கொணர்ந்து முடிக்க. (௫௧)

௪௫௭. மூன்றன் முதனிலை நீடலு முரித்தே
யுழக்கென் கிளவி வழக்கத் தான.

இது முன்னர்க் குறுகுமென்றதனை நீண்டுமுடிக என்றலின் எய்தியது விலக்கிற்று.

இதன் பொருள் : மூன்றன் முதனிலை நீடலும் உரித்து—மூன்றென்னு மெண்ணின் முதனின்ற எழுத்து நீண்டுமுடிதலும் உரித்து, அஃதியாண்டெனின், உழக்கு என்கிளவி வழக்கத்தான—உழக்கென்னுஞ் சொன் முடியும் வழக்கிடத்து என்றவாறு.

உதாரணம் : மூவுழக்கு என வரும்.

வழக்கத்தான என்பதனான் அகலென்கிளவிக்கு முதனிலை நீடலுங் கொள்க. மூவகல் என வரும். இன்னும் அதனானே நிலைமொழி னகர ஒற்றுக் கெடுக்க.

முழக்கு முழாக்கென்னும் மருமுடிபு இவ்வோத்தின் புறனடையான் முடிக்க. (௫௨)

௪௫௮. ஆறென் கிளவி முதனீ டும்மே.

இதுவும் அது.

**இதன் பொருள் :** ஆறென்கிளவி— ஆறென்னுமெண்ணுப் பெயர் அகல் உழக்கு என்பன வரின், முதல் நீடும்—முன்னர்க் குறுகிநின்ற முதலெழுத்து நீண்டு முடியும் என்றவாறு.

அறுவென்னாது ஆறென்றார், திரிந்ததன் றிரிபது என்னும் நயத்தால்.

**உதாரணம் :** ஆறகல் ஆறுழக்கு என வரும், (௫௩)

௪௫௯. ஒன்பா னிறுதி யுருபுநிலை திரியா
தின்பெறல் வேண்டுஞ் சாரியை மொழியே.

இது குற்றுகரம் மெய்யொடுங் கெடாது நின்று இன்பெறுக என்றலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

**இதன் பொருள் :** ஒன்பான் இறுதி உருபுநிலை திரியாது— அளவும் நிறையும் வருவழி ஒன்பதென்னும் எண்ணின் இறுதிக் குற்றுகரந் தன்வடிவு நிலைதிரியாது நின்று, சாரியை மொழி இன் பெறல்வேண்டும்—சாரியைச் சொல்லாகிய இன் பெற்று முடிதலை விரும்பும் ஆசிரியன் என்றவாறு.

**உதாரணம் :** ஒன்பதின்கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு எனவும், கழஞ்சு தொடி பலம் எனவும் வரும்.

சாரியைமொழி யென்றதனான் இன்னோடு உகரமும் வல்லெழுத்துங் கொடுத்துச் செய்கைசெய்து முடிக்க. ஒன்பதிற்றுக்கலம் சாடி என எல்லாவற்றோடும் ஒட்டுக.

உருபென்பதனான் ஒன்பதிற்றென ஒற்றிரட்டுதல் எல்லாவற்றிற்குங் கொள்க.



இன்னும் இதனானே ஒன்பதினாழியென்புழி வந்த இன்னின் னகரக் கேடுங் கொள்க. ‘அளவாகுமொழிமுதல்’ (எழு–௧௨௧) என்பதனானும் ‘நிலைஇய’ என்னும் இலேசானும் இன்னின் னகரம் றகரமாதல் கொள்க. (௫௪)

௪௬௦. நூறுமுன் வரினுங் கூறிய வியல்பே.

இஃது ஒன்றுமுதல் ஒன்பான்களோடு நூறென்பதனைப் புணர்க்கின்றது.

**இதன் பொருள் :** முன்—ஒன்றுமுதல் ஒன்பான்களின் முன்னர், நூறுவரினும்—நூறென்னு மெண்ணுப்பெயர் வந்தாலும், கூறிய இயல்பு—மேற் பத்தென்பதனோடு புணரும்வழிக் கூறிய இயல்பு எய்தி முடியும் என்றவாறு.

அது குற்றுகரம் மெய்யொடுங்கெட்டு மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகி முதலீரெண்ணி னொற்று ரகரமாய் உகரம் பெற்று இடைநிலை ரகரம் இரண்டன்கட் கெட்டு முடிதலாம்.

**உதாரணம் :** ஒருநூறு இருநூறு அறுநூறு எண்ணூறு என வரும் இவை மாட்டேற்றான் முடிந்தன. மாட்டேறு ஒவ்வாதன மேற்கூறி முடிப்ப. (௫௫)

௪௬௧. மூன்ற னொற்றே நகார மாகும்.

இது மாட்டேற்றோடு ஒவ்வாததற்கு வேறு முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** மூன்றனொற்றே னகாரமாகும்—மூன்றுமெண்ணின்கணின்ற னகரவொற்று நகரவொற்றாகும் என்றவாறு.

**உதாரணம் :** முந்நூறு என வரும். (௫௬)

௪௬௨. நான்கு மைந்து மொற்றுமெய் திரியா.

இதுவும் அது.

55. மாட்டேறு ஒவ்வாதன மேற்கூறி முடிப்ப என்றது, மாட்டேற்றினாற் பெற்ற முன்னை விதிகளுக்குப் பொருந்தாது வருவனவற்றிற்கு இனி விதி சொல்லப்படும் என்பதை.

இதன் பொருள் : நான்கும் ஐந்தும் ஒற்று மெய்திரியா—நான்கென்னு மெண்ணும் ஐந்தென்னுமெண்ணுந் தம்மொற்றுக்கள் நிலைதிரியாது முடியும் என்றவாறு.

உதாரணம் : நானூறு ஐந்நூறு என வரும்.

மெய்யென்றதனான் நானூறென்புழி வருமொழி நகரத்துள் ஊகாரம் பிரித்து 'லனவெனவரூஉம்' (எழு—௪௱௪௰௯) என்பதனான் னகர வொற்றாக்கி ஊகாரமேற்றி நிலைமொழி னகரங் கெடுத்துக் கொள்க (௫௭)

௪௱௩. ஒன்பான் முதனிலை முந்துகிளந் தற்றே
முந்தை யொற்றே ளகார மிரட்டு
நூறென் கிளவி நகார மெய்கெட
ஊவா வாகு மியற்கைத் தென்ப
வாயிடை வருத லிகார ரகார
மீறுமெய் கெடுத்து மகர மொற்றும்.

இதுவும் அது.

இதன் பொருள் : ஒன்பான் முதனிலை முந்து கிளந்தற்று—ஒன்பதென்னு மெண்ணின் முதனின்ற ஒகரம் மேற் பத்தென் பதனோடு புணரும்வழிக் கூறியவாறுபோல ஒரு தகரம் ஒற்றி அதன்மேல் ஏறிமுடியும், முந்தை ஒற்றே ளகாரம் இரட்டும்—அவ்வொகரத்தின் முன்னின்ற னகர ஒற்று ளகர ஒற்றாய் இரட்டித்து நிற்கும், நூறென்கிளவி நகார மெய்கெட ஊ ஆவா கும் இயற்கைத்தென்ப—வருமொழியாகிய நூறென்னுமெண்ணுப்பெயர் நகரமாகிய மெய்கெட அதன்மேல் ஏறிய ஊகாரம் ஆகாரமாம் இயல்பையுடைத்தென்பர் புலவர், ஆயிடை இகர ரகரம் வருதல்—அம்மொழியிடை ஓர் இகரமும் ரகாரமும் வருக, ஈறு மெய் கெடுத்து மகரம் ஒற்றும்—ஈறாகிய குற்றுகரத்தினையும் அஃது ஏறிநின்ற றகர ஒற்றினையும் கெடுத்து ஓர் மகர ஒற்று வந்து முடியும் என்றவாறு.

மெய்யென்பதனான் நிலைமொழிக்கட் பகரங் கெடுக்க.

உதாரணம் : தொள்ளாயிரம் என வரும்.



இதனை ஒன்பதென்னும் ஒகரத்தின்முன்னர் வந்த தகர ஒற்றின்மேலே ஒகரத்தையேற்றிப் பகரங் கெடுத்துக் குற்றிய லுகரம் மெய்யொடுங் கெடுத்துநின்ற னகர ஒற்றினை இரண்டு ளகர ஒற்றாக்கி நூறென்பதன் நகரங்கெடுத்து ஊகாரம் ஆகாரமாக்கி ளகரத்தின் மேலேற்றி இகரமும் ரகரமும் வருவித்து விகாரப்பட்ட உயிராகிய ஆகாரத்தின்முன் உடம்படு மெய் யகாரம் வருவித்து றகர உகரங் கெடுத்து மகர ஒற்று வருவித்து முடிக்க. (௫௮)

௪௱௪. ஆயிரக் கிளவி வரூஉங் காலை
முதலீ ரெண்ணி னுகரங் கெடுமே.

இஃது அவ்வொன்றுமுதல் ஒன்பான்களோடு ஆயிரம்புணரு மாறு கூறுகின்றது.

இதன் பொருள் : ஆயிரக்கிளவி வரூஉங் காலை—ஆயிரமென்னுஞ் சொல் ஒன்றுமுதல் ஒன்பான்கள் முன்வருங்காலத்து, முதல் ஈரெண்ணின் உகரம் கெடும்—ஒரு இரு என்னும் இரண்டெண்ணின்கட் பெற்று நின்ற உகரங் கெட்டு முடியும் என்றவாறு.

உகரங் கெடுமெனவே ஏனையன முன்னர்க் கூறியவாறே நிற்றல் பெற்றாம்

உதாரணம் : ஓராயிரம் இராயிரம் என வரும். (௫௯)

௪௱௫. முதனிலை நீடினு மான மில்லை.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இதன் பொருள் : முதனிலை நீடினும் மானமில்லை—அம் முதலீரெண்ணின் முதற்கணின்ற ஒகார இகாரங்கள் நீண்டு முடியினுங் குற்றமில்லை என்றவாறு.

உதாரணம் : ஓராயிரம் ஈராயிரம் என வரும். (௬௦)

௪௱௬. மூன்ற னொற்றே வகார மாகும்.

இது மூன்றென்னுமெண் ஆயிரத்தோடு புணருமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** மூன்றனொற்றே வகாரமாகும்—மூன்றென்னு மெண்ணின்கணின்ற னகர ஒற்று வகர ஒற்றாகத் திரிந்து முடியும் என்றவாறு

**உதாரணம் :** முவ்வாயிரம் என வரும்.

முன்னிற் சூத்திரத்து நிலை என்றதனான் இதனை முதனிலை நீட்டி வகர ஒற்றுக் கெடுத்து மூவாயிரம் என முடிக்க (௬௧)

௪௬௭. நான்க னொற்றே லகார மாகும்.

இது நான்கென்னுமெண் அதனோடு புணருமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** நான்கனொற்றே லகாரமாகும்—நான்கென்னு மெண்ணின்கணின்ற னகர ஒற்று லகர ஒற்றாகத் திரிந்து முடியும் என்றவாறு.

**உதாரணம் :** நாலாயிரம் என வரும். (௬௨)

௪௬௮. ஐந்த னொற்றே யகார மாகும்.

இஃது ஐந்தென்னுமெண் அதனோடு புணருமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** ஐந்தனொற்றே யகாரமாகும்—ஐந்தென்னு மெண்ணின்கணின்ற நகர ஒற்று யகர ஒற்றாகத் திரிந்து முடியும் என்றவாறு.

ஐயாயிரம் என வரும். (௬௩)

௪௬௯. ஆறன் மருங்கிற் குற்றிய லுகர
மீறுமெய் யொழியக் கெடுதல் வேண்டும்.

இஃது ஆறென்னு மெண் அதனோடு புணருமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** ஆறன் மருங்கிற் குற்றியலுகரம்—ஆறென்னு மெண்ணின்கணின்ற குற்றியலுகரம் நெடுமுதல் குறுகி அறுவென முற்றுகரமாய் நிற்றலின், மெய் ஒழிய ஈறு கெடுதல் வேண்டும்—அது தானேறிய மெய்யாகிய றகர ஒற்றுக் கெடாது நிற்ப முற்றுகரமாகிய ஈறு தான் கெட்டுப் புணர்தலை விரும்பும் ஆசிரியன் என்றவாறு.



**உதாரணம் :** அறுயிரம் என வரும்.

முன்னர் ‘ நெடுமுதல் குறுகும் ’ (எழு—௪௪௦) என்றவழி அறுவென நின்ற முற்றுகரத்திற்கே ஈண்டுக் கேடு கூறினரென்பது பெற்றாம், என்னை? குற்றியலுகரமாயின் ஏறிமுடிதலின். இது குற்றுகரந் திரிந்து முற்றுகரமாய் நிற்றலின் ஈண்டு முடிபு கூறினர். முற்றியலுகரம் ஈறு மெய்யொழியக் கெடுமெனவே குற்றுகரங் கெடாது ஏறிமுடியுமென்பது அருத்தாபத்தியாற் பெறுதும். ஆறுயிரம் என வரும்.

மருங்கென்றதனாற் பிறபொருட் பெயர்க்கண்ணும் நெடுமுதல் குறுகாது நின்று முடிதல் கொள்க. ஆறுகுவதே என வரும். (௬௪)

௪௭௦. ஒன்பா னிறுதி யுருவுநிலை திரியா
தின்பெறல் வேண்டுஞ் சாரியை மரபே.

இஃது ஒன்பதென்னுமெண் அதனோடு புணருமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** ஒன்பான் இறுதி—ஒன்பதென்னு மெண்ணின் இறுதிக் குற்றுகரம், உருவுநிலை திரியாது—தன் வடிவு நிலை திரிந்து கெடாது, சாரியை மரபு இன் பெறல்வேண்டும்—சாரியையாகிய மரபினையுடைய இன் பெற்றுமுடிதலை விரும்பும் ஆசிரியன் என்றவாறு.

**உதாரணம் :** ஒன்பதினாயிரம் என வரும்.

உருவென்றும் நிலையென்றுஞ் சாரியை மரபென்றுங் கூறிய மிகையால் ஆயிரமல்லாத பிறவெண்ணின்கண்ணும் பொருட் பெயரிடத்தும் இன்னும் உகரமும் வல்லெழுத்தும் பெற்று

---

**64.** ஆறுயிரம் என்புழி ஆறு குற்றியலுகரம்; அருத்தாபத்தி விதியால் வருமொழியாகிய ஆயிரம் ஏறி முடிந்தது.

முடியும் முடிபு கொள்க. ஒன்பதிற்றுக்கோடி ஒன்பதிற்றொன்பது ஒன்பதிற்றுத்தடக்கை ஒன்பதிற்றெழுத்து என வரும்.

இன்னும் இவ்விலேசானே வேறொரு முடிபின்மையிற் கூறாதொழிந்த எண்ணாயிர மென்றவழி ஒற்றிரட்டுதலும் ஈண்டுக் கூறியவற்றிற்கு ஒற்றிரட்டுதலுங் கொள்க. 'அளவாகு மொழி முதல்' (எழு-௧௨௧) என்பதனுள் 'நிலைஇய' என்றதனான் னகரம் றகரமாதல் கொள்க. (௬௫)

௪௭௧. நூறா யிரமுன் வரூஉங் காலை
நூற னியற்கை முதனிலைக் கிளவி.

இஃது ஒன்றுமுதல் ஒன்பான்களோடு நூறென்னுமெண் அடையடுத்த ஆயிரம் முடியுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** நூறாயிரம் முன் வரூஉங் காலை—நூறாயிரமென்னும் அடையடுத்தமொழி ஒன்றுமுதல் ஒன்பான்கள் முன்வருமொழியாய் வருங்காலத்து, முதனிலைக் கிளவி நூறன் இயற்கை—ஒன்றென்னும் முதனிலைக் கிளவி ஒன்று முன் நூறென்னுமெண்ணோடு முடிந்தாற்போல விகாரமெய்தி முடியும். எனவே, வழிநிலைக்கிளவியாகிய இரண்டுமுதலிய எண்கள் விகாரமெய்தியும் எய்தாது இயல்பாயும் முடியும் என்றவாறு.

**உதாரணம் :** ஒருநூறாயிரம் என வரும். ஏனையன இருநூறாயிரம் இரண்டு நூறாயிரம், முந்நூறாயிரம் மூன்று நூறாயிரம், நானூறாயிரம் நான்கு நூறாயிரம், ஐந்நூறாயிரம் ஐந்து நூறாயிரம், அறுநூறாயிரம் ஆறு நூறாயிரம், எண்ணூறாயிரம் எட்டு நூறாயிரம், ஒன்பதுநூறாயிரம் என வரும். இவ்விகாரப்பட்டனவற்றிற்குக் குற்றுகரம் மெய்யொடுங் கெடுத்து முதலீரெண்ணினொற்று ரகரமாக்கி உகரம் வருவித்து மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுக்கி மூன்றனொற்று நகரமாக்கி நான்கும் ஐந்தும் ஒற்று மெய்திரியா வாக்கி எட்டனொற்று ணகாரமாக்கி இலேசு

65. கூறாத எண்ணாயிரம் என்றது, எட்டோடு ஆயிரம் புணருங்கால் ணகரமிரட்டுதற்கு விதி சூத்திரத்தாற் கூறாமையை. னகரம் றகரமாதல் என்றது ஒன்பதிற்றுக்கோடி முதலியவற்றில் னகரம் றகரமாதலை.



களாற்கொண்ட செய்கைகளில் வேண்டுவனவுங் கொணர்ந்து முடிக்க.

ஏற்புழிக்கோட லென்பதனாற் றொள்ளாயிரமென்ற முடிபினோடு மாட்டேறு சென்றதேனும் அவ்வாறு முடியாதென்று கொள்க. முன்னென்பதனான் இன்சாரியை பெற்று ஒன்பதினூறாயிரம் என்றுமாம். நிலையென்றதனான் மூன்றும் ஆறும் இயல்பாக முடிவுழி நெடுமுதல் குறுகாமை கொள்க. (௬௬)

௪௭௨. நூறென் கிளவி யொன்றுமுத லொன்பாற்
கீறுசினை யொழிய வினவொற்று மிகுமே.

இது நூறென்பதனோடு ஒன்றுமுதல் ஒன்பான்களைப் புணர்க்கின்றது.

**இதன் பொருள் :** நூறு என் கிளவி—நூறென்னு மெண்ணுப்பெயர், ஒன்று முதல் ஒன்பாற்கு—ஒன்றுமுதல் ஒன்பான்களோடு புணருமிடத்து, ஈறு சினையொழிய—ஈறாகிய குற்றுகரந் தன்னாற் பற்றப்பட்ட மெய்யொடுங் கெடாதுநிற்ப, இன ஒற்று மிகும்—அச்சினைக்கு இனமாகிய றகர ஒற்று மிக்கு முடியும் என்றவாறு.

**உதாரணம் :** நூற்றொன்று என வரும். இரண்டு முதல் ஒன்பது அளவுஞ் செய்கை யறிந்து ஒட்டுக.

ஈறுசினை என்று ஓதிய மிகையான் நூறென்பதனோடு பிற எண்ணும் பிறபொருட்பெயரும் இவ்விதியும் பிறவிதியும் எய்தி முடிதல் கொள்க. நூற்றுப்பத்து நூற்றுக்கோடி நூற்றுத்தொண்ணூறு எனவும், நூற்றுக்குறை நூற்றிதழ்த்தாமரை நூற்றுக்காணம் நூற்றுக்கான்மண்டபம் எனவும் இன ஒற்று மிக்கன கொள்க. இன்னும் இதனானே இருநூற்றொன்று இரண்டு நூற்றொன்று என நூறு அடையடுத்தவழியுங் கொள்க. (௬௭)

66. நூறனியற்கை என்று மாட்டியதால் ஒன்பதனோடு நூறு புணருங்கால் தொள்ளாயிரம் என வந்தாற்போல ஒன்பதன்முன் நூறாயிரம் வருங்காலும் தொள்ளாயிர ஆயிரம் எனத்திரிந்து முடியுமென்பது பட்டதேனும் அங்ஙனம் முடியாதென்பது கருத்து.

67. ஈறு என்பதே அமையவும் சினையென்றது மிகையென்க.

௪௭௩. அவையூர் பத்தினு மத்தொழிற் றாகும்.

இஃது அந்நூறென்பதனோடு ஒன்றுமுதல் ஒன்பான்கள் அடையடுத்தவழிப் புணருமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** அவை ஊர்பத்தினும்—அந்நூறென்பது நின்று முற்கூறிய ஒன்றுமுதல் ஒன்பான்களை ஊர்ந்து வந்த பத்தென்பதனோடு புணருமிடத்தும், அத்தொழிற்றாகும்—ஈறு சினையொழிய இன ஒற்று மிக்கு முடியும் என்றவாறு.

**உதாரணம் :** நூற்றொருபஃது இருபஃது முப்பஃது நாற்பஃது ஐம்பஃது அறுபஃது எழுபஃது எண்பஃது என வரும். மற்று நூற்றொன்பது அவை ஊரப்பட்டு வந்தது அன்மை உணர்க.

ஆகுமென்றதனான் ஒருநூற்றொருபஃது இருநூற்றொருபஃது என நிலைமொழி அடையடுத்து முடியும் முடிபுங் கொள்க. (௬௮)

௪௭௪. அளவு நிறையு மாயிய றிரியாது
குற்றிய லுகரமும் வல்லெழுத் தியற்கையு
முற்கிளந் தன்ன வென்மனார் புலவர்.

இது நூறென்பதனோடு அளவுப்பெயரும் நிறைப்பெயரும் முடியுமாறு கூறுகின்றது.

**இதன் பொருள் :** அளவும் நிறையும் ஆயியல் திரியாது—நூறென்பதனோடு அளவுப்பெயரும் நிறைப்பெயரும் புணருமிடத்து முற்கூறிய இயல்பிற் றிரியாது இன ஒற்று மிக்கு முடியும், குற்றியலுகரமும் வல்லெழுத்தியற்கையும்—அவ்விடத்துக் குற்றியலுகரங் கெடாமையும் இன ஒற்று மிக்கு வன்றொடர்மொழியாய் நிற்றலின் வருமொழி வல்லெழுத்து மிகும் இயல்பும், முற்கிளந்தன்ன என்மனார் புலவர்—'வல்லொற்றுத் தொடர் மொழி வல்லெழுத்து மிகுமே' (எழு—௪௨௬) என வன்றொடர்மொழிக்குக் கூறிய தன்மையவாய் முடியுமென்று கூறுவர் புலவர் என்றவாறு.

**உதாரணம் :** நூற்றுக்கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு எனவும், கழஞ்சு தொடி பலம் எனவும் வரும்.



திரியாதென்றதனால் நூறென்பது அடையடுத்த வழியும் இவ்விதி கொள்க. அஃது ஒருநூற்றுக்கலம் இருநூற்றுக்கலம் என வரும். (௬௯)

௪௭௫. ஒன்றுமுத லாகிய பத்தூர் கிளவி
யொன்றுமுத லொன்பாற் கொற்றிடைமிகுமே
நின்ற வாய்தங் கெடுதல் வேண்டும்.

இஃது ஒன்றுமுதல் எட்டு ஈறாகிய எண்கள் அடையடுத்த பத்தனோடும் ஒன்றுமுதல் ஒன்பான்களைப் புணர்க்கின்றது.

**இதன் பொருள் :** ஒன்று முதலாகிய பத்து ஊர்கிளவி—ஒன்றுமுதல் எட்டு ஈறாகப் பத்தென்னும் எண் ஏறி ஒருசொல்லாகி நின்ற ஒருபஃது முதலிய எண்கள், ஒன்றுமுதல் ஒன்பாற்கு—ஒன்றுமுதல் ஒன்பான்கள்வருமொழியாய் வந்துபுணரும் இடத்து, நின்ற ஆய்தங் கெடுதல் வேண்டும்—பஃதென்பதன் கண் நின்ற ஆய்தங்கெட்டு முடிதலை விரும்பும் ஆசிரியன், ஒற்று இடைமிகும்—ஆண்டு இன ஒற்றாகிய ஒரு தகர ஒற்று இடைமிக்கு முடியும் என்றவாறு.

**உதாரணம் :** ஒருபத்தொன்று இருபத்தொன்று ஒருபத்திரண்டு இருபத்திரண்டு என எல்லாவற்றோடும் ஒட்டுக. இவற்றுள் ஒருபத்தொன்று ஒருபத்திரண்டு என்னும் எண்கள் அதிகாரத்தால் நின்ற நூறென்பதனோடு அடுத்து வருமென்று உணர்க. (௭௦)

௪௭௬. ஆயிரம் வரினே யின்னென் சாரியை
யாவயி னொற்றிடை மிகுத லில்லை.

இஃது ஒருபஃது முதலியவற்றோடு ஆயிரத்தைப் புணர்க்கின்றது.

**இதன் பொருள் :** ஆயிரம் வரின் இன்னென் சாரியை—அவ்வொன்று முதலாகிய பத்து ஊர் கிளவி ஆயிரத்தோடு புண

---

70. ஒருபத்தொன்று ஒருபத்திரண்டு என்னும் எண்கள் அதிகாரத்தால் நின்ற நூறென்பதனோடு அடுத்துவருமென்றது, நூற்றொருபத்தொன்று, நூற்றொருபத்திரண்டு என நூறோடு அடுத்துவருதலை. அதிகாரமென்றது ௬௭-ம் சூத்திரம்முதலாக நூறு அதிகாரப்பட்டுவருதலை.

ரும் இடத்து இன்சாரியை பெறும், ஆவயின் ஒற்று இடை மிகுதல் இல்லை—அவ்விடத்துத் தகர ஒற்று இடைவந்து மிகாது என்றவாறு.

**உதாரணம் :** ஒருபதினாயிரம் இருபதினாயிரம் என எண் பதின்காறும் ஒட்டுக. இவை நூற்றொருபதினாயிரம் எனவும் வரும்.

ஆவயின் என்றதனால் நூறாயிரத்தொருபத்தீராயிரம் என் றாற்போல அத்துப் பெறுதலும் பிறவுங் கொள்க. (௭௧)

✱ ௪௭௭. அளவு நிறையு மாயிய றிரியா.

இஃது ஒன்று முதலாகிய பத்து ஊர் கிளவி முன்னர் அள வுப்பெயரும் நிறைப்பெயரும் புணர்க்கின்றது.

**இதன் பொருள் :** அளவும் நிறையும் ஆயியல் திரியா—ஒருபஃது முதலிய எண்களின் முன்னர் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வந்தால் ஒற்று இடைமிகாது இன்சாரியை பெற்று முடியும் என்றவாறு.

**உதாரணம் :** ஒருபதின்கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு எனவும், ஒருபதின் கழஞ்சு தொடி பலம் எனவும் வரும். இவற்றிற்கு நூறு அடையடுத்து ஒட்டுக.

திரியா என்றதனான் ஒருபதிற்றுக்கலம் இருபதிற்றுக் கலம் என்னும் தொடக்கத்தனவற்றிற்கண் இன்னின் அகரம் றகரமாகத் திரிந்து இரட்டுதலும் உகரமும் வல்லெழுத்தும் பெறுதலுங் கொள்க. இன்னும் இதனானே ஒருபதினாழி என்ற வழி வருமொழி நகரந் திரிந்துழி நிலைமொழி னகரக்கேடுங் கொள்க.

அளவு நிறையு மதனோ ரன்ன என்று பாடம் ஓதுவார் முன்னர்ச் சூத்திரத்து 'ஆவயின்' என்றதனானும் அதன் முன்னர்ச் சூத்திரத்து 'நின்ற' என்றதனானும் இவற்றை முடிப்பார். (௭௨)



௪௭௮. முதனிலையெண்ணின்முன் வல்லெழுத்துவரினு
ஞநமத் தோன்றினும் யவவந் தியையினு
முதனிலை யியற்கை யென்மனார் புலவர்.

இஃது ஒன்றுமுதல் ஒன்பான்களோடு பொருட்பெயரைப் புணர்க்கின்றது.

**இதன் பொருள் :** முதனிலை எண்ணின்முன் வல்லெழுத்து வரினும்—ஒன்றென்னும் எண்ணின்முன் வல்லெழுத்து முதன் மொழி வரினும், ஞநம தோன்றினும்—ஞநமக்களாகிய மெல் லெழுத்து முதன்மொழி வரினும், யவவந்து இயையினும்—யவக்களாகிய இடையெழுத்து முதன் மொழிவரினும், முதனிலை இயற்கை என்மனார் புலவர்—அவ்வொன்றுமுதல் ஒன்பான்கள் முன்னெய்திய முடிபு நிலைமை எய்தி முடியுமென்று கூறுவர் புலவர் என்றவாறு.

எனவே வழிநிலையெண்ணாகிய இரண்டு முதலாகிய எண் கள் அம்மூன்றுகணமும் முதன்மொழியாய் வரின் முதனிலை முடிபாகி விகாரம் எய்தியும் எய்தாது இயல்பாயும் முடியும்.

**உதாரணம் :** ஒருகல் சுனை துடி பறை ஞாண் நூல் மணி யாழ் வட்டு எனவும், இருகல் இரண்டுகல் சுனை துடி பறை ஞாண் நூல் மணி யாழ் வட்டு எனவும் ஒட்டுக. இவ்வெண்களிற் குற்றிய லுகரம் மெய்யொடுங் கெட்டு முதலீரெண்ணின் ஒற்று ரகாரமாய் உகரம் வந்தது. இருகல் முதலியவற்றிற்கு இடைநிலை ரகாரங் கெடுக்க. முக்கல் மூன்றுகல் சுனை துடி பறை ஞாண் நூல் மணி யாழ் வட்டு என ஒட்டுக இதற்கு நெடுமுதல் குறுக்கி 'மூன்ற னொற்றே வந்ததொக்கும்' (எழு-௪௪௭) என்பதனான் முடிக்க. முன்னர் எண்ணுப்பெயரும் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வருவழிக் கூறிய விகாரங்களிற் பொருட்பெயர்க்கும் ஏற்பன கொணர்ந்து முடித்து எல்லாவற்றிற்கும் நிலையென்றதனான் ஒற்றுத் திரிந்து முடிக்க. அவை மூன்றற்கும் ஐந்தற்கும் ஞகாரம் வருவழி ஞகர ஒற்றுதலும் மூன்றற்கு யகரம் வருவழி வகர ஒற்றுதலுமாம். நாற்கல் நான்குகல் சுனை துடி பறை, நான் ஞாண் நான்குஞாண் நூல் மணி யாழ் வட்டு; ஐங்கல் ஐந்து கல் சுனை துடி பறை, ஐஞ்ஞாண் ஐந்து ஞாண் நூல் மணி,

ஐயாழ் ஐந்துயாழ் ஐவட்டு ஐந்துவட்டு; அறுகல் ஆறுகல் சுனை துடி பறை ஞாண் நால் மணி யாழ் வட்டு; எண்கல் எட்டுக்கல் சுனை துடி பறை, எண்ஞாண் எட்டுஞாண் நால் மணி யாழ் வட்டு; ஒன்பதுகல் சுனை துடி பறை ஞாண் நால் மணி யாழ் வட்டு என ஒட்டுக. ஒன்பதின்கல் எனச் சென்றதேனும் வழக்கின்மையின் ஒழிக்க. இன்னும் மாட்டேறின்றி வருவனவற்றிற் கெல்லாம்முடிபு 'நிலை' யென்றதனான் முடிக்க. (௭௩)

௪௭௯. * அதனிலை யுயிர்க்கும் யாவரு காலை
முதனிலை யொகர மோவா கும்மே
ரகரத் துகரந் துவரக் கெடுமே.

இஃது ஒன்றுமுதல் ஒன்பான்களோடு பொருட்பெயருள் உயிர் முதன்மொழி முடியுமாறும் மேற்கூறிய யகரம் வேறுபட முடியுமாறுங் கூறுகின்றது.

இதன் பொருள் : முதனிலைக்கு—ஒன்றென்னும் எண்ணின் திரிபாகிய ஒரு என்னும் எண்ணிற்கு, உயிரும் யாவும் வருகாலை—உயிர்முதன் மொழியும் யாமுதன்மொழியும் வருமொழியாய் வருங்காலத்து, அதன் நிலை—அம்முதனிலையின் தன்மை இவ்வாறும், ஒகரம் ஓவாகும்—ஒகரம் ஓகாரமாய் நீளும், ரகரத்து உகரந் துவரக் கெடும்—ரகரத்து மேனின்ற உகரம் முற்றக் கெட்டு முடியும் என்றவாறு.

நான்காவதனை முதனிலையோடு கூட்டி அதன்கண் நின்ற உம்மையை உயிரோடும் யாவோடுங் கூட்டுக. எனவே வழிநிலையெண்கள் உயிர் முதன்மொழி வந்த இடத்து முற்கூறியவாறே இருவாற்றானும் முடியும்.

உதாரணம் : ஓரடை ஓராகம் ஓரிலை ஓரீட்டம் ஓருலை ஓரூசல் ஓரெழு ஓரேடு ஓரையம், ஓரொழுங்கு ஓரோலை ஓரௌவியம் என வரும். குற்றியலுகரம் மெய்யொடுங் கெடுத்து முதலெண்ணினொற்று ரகரமாக்குக. ஓர் யாழ் ஓர் யானை என

73. ஒற்று என்றது மூன்று ஐந்து என்பவற்றின் னகர நகர ஒற்றுக்களை. ஏனையவற்றிற்கு ஒற்றுத் திரிதற்கு முன் விதி சொல்லப்பட்டது.



வரும். துவர என்றதனான் இரண்டென்னும் எண்ணின் இகரத்தை நீட்டி ரகரத்துள் உகரத்தைக் கெடுத்து ஈரசை ஈர் யானை எனவும், மூன்றென்னும் எண்ணின் னகரவொற்றுக் கெடுத்து மூவசை மூயானை எனவும் முடிக்க இவை செய்யுண் முடிபு. இன்னும் இதனானே இங்ஙனம் வருவன பிறவும் அறிந்து முடித்துக்கொள்க. (௭௪)

௪௮௦. இரண்டுமுத லொன்பா னிறுதி முன்னர்
வழங்கியன் மாவென் கிளவி தோன்றின்
மகர வளவொடு நிகரலு முரித்தே.

இஃது இரண்டுமுதல் ஒன்பான்களின் முன்னர் அளவு முதலிய மூன்றற்கும் உரிய மாவென்பது புணருமாறு கூறுகின்றது.

இதன் பொருள் : இரண்டுமுதல் ஒன்பான் இறுதி முன்னர்—இரண்டென்னுமெண் முதலாக ஒன்பதென்னுமெண் ஈறாக நின்ற எண்ணுப்பெயர்களின் முன்னர், வழங்கு இயல் மா என் கிளவி தோன்றின்—வழக்கின் கண்ணே நடந்த அளவுமுதலிய வற்றிற்கு உரிய மா வென்னுஞ் சொல் வருமொழியாய் வரின், மகர அளவொடு நிகரலும் உரித்து—அவ்வெண்ணுப் பெயர்களின் முன்னர்த் தந்து புணர்க்கப்படும் மண்டையென்னும் அளவுப் பெயரோடு ஒத்து விகாரப்பட்டு முடிதலும் உரித்து; உம்மையான் விகாரப்படாது இயல்பாய் முடிதலும் உரித்து என்றவாறு.

வழக்கியல் வழங்கியலென விகாரம். மகர அளவு மகர முதன்மொழியாகிய அளவுப்பெயரெனப் பண்புத்தொகை. அஃது 'அளந்தறிகிளவியும்' (எழு—௪௪௯) என்பதனுள் ஒரு மண்டை என முடித்ததாம்.

உதாரணம் : இருமா மும்மா நான்மா ஐம்மா அறுமா எண்மா ஒன்பதின்மா என முன்னர்க்கூறிய சூத்திரங்களான் விகாரப்படுத்தி முடிக்க. இனி உம்மையான் விகாரப்படுத்தாது இரண்டுமா மூன்றுமா நான்குமா ஐந்துமா ஆறுமா எட்டுமா ஒன்பதுமா என முடிக்க புள்ளிமயங்கியலுள் 'அளவுநிறையும்' (எழு—௩௮௯) என்னுஞ் சூத்திரத்தான் நெடுமுதல் குறுகி

உகரம் வந்து புணருமாறு கூறினர். அதனன் ஈண்டு ஏழுமா என முடிக்க. ஏழ்மாவென முடிதல் வழக்கின்று.

இரண்டுமுதல் ஒன்பானென்று எடுத்தோதினமையின், ஒன்றற்கு ஒருமாவென்னும் முடிபேயன்றி ஒன்றுமா வென்னும் முடிபு இல்லையாயிற்று.

வழங்கியன்மா என்றார் விலங்குமாவை நீக்குதற்கு. (எரு)

ச அக. லனவென வரூஉம் புள்ளி யிறுதிமுன்
னும்முங் கெழூவு முளப்படப் பிறவு
மன்ன மரபின் மொழியிடைத் தோன்றிச்
செய்யுட் டொடர்வயின் மெய்பெற நிலையும்
வேற்றுமை குறித்த பொருள்வயி னான.

இது புள்ளி மயங்கியலுள் ஒழிந்துநின்ற செய்யுண்முடிபு கூறுகின்றது.

**இதன் பொருள் :** லன என வரூஉம் புள்ளி இறுதி முன்—லகார னகாரமென்று கூற வருகின்ற புள்ளியீற்றுச் சொற்களின் முன்னர், உம்முங் கெழுவும் உளப்பட—உம்மென்னுஞ் சாரியையுங் கெழுவென்னுஞ் சாரியையும் உட்பட, பிறவும் அன்ன மரபின் மொழியிடைத்தோன்றி—பிறசாரியையும் அப்பெற்றிப்பட்ட மரபினையுடைய மொழியிடத்தே தோன்றி, செய்யுள் தொடர்வயின் மெய்பெறநிலையும்—செய்யுட்சொற்களைத்தொடர்புபடுத்திக் கூறுமிடத்துப் பொருள்பட நிற்கும், வேற்றுமை குறித்த பொருள்வயினான—வேற்றுமையைக் குறித்த பொருட்புணர்ச்சிக்கண் என்றவாறு.

**உதாரணம் :** 'வானவரி வில்லுந் திங்களும் போலும்' இதற்கு உம்மென்னுஞ் சாரியையின் மகரத்தை 'அம்மினிறுதி' (எழு—கஉகூ) என்னுஞ் சூத்திரத்துள் 'தன்மெய்' என்றதனாற் பிறசாரியையுந் திரியுமென நகர ஒற்றாக்கி நிலைமொழி லகர ஒற்றின்மேல் உயிரேற்றி முடிக்க. வில்லுந்திங்களும் போலுமென்பதற்கு வில்லிடைத்திங்கள் போலுமென ஏழனுருபு விரித்துப் பொருளுரைக்க. 'கல்கெழுகானவர் நல்குறுமகளே' (குறுந்—எக) இதற்குக் கல்லைக் கெழீஇயின என உரைக்க.



'மாநிதிக்கிழவனும்போன்ம்' (அகம்—கூகூ) இதற்குக் கிழவனைப் போன்மென உரைக்க. இவ்வும்மை சிறப்பன்று. 'கான்கெழுநாடு' (அகம்—கூஅ) இதற்குக் கானைக்கெழீஇய என உரைக்க.

இனி அன்னமரபின் மொழியிடை என்றதனாற் கெழுவென்றது பிறசொல்லிடத்தே 'பணைகெழு பெருந்திறற் பல்வேன் மன்னர்' 'துறைகொழுமாந்தை' (நற்றிணை—நரு) என இயல்பாக வருவனவும் 'வளங்கெழு திருநகர்' (அகம்—கஎ) 'பயங்கெழுமாமழை' (புறம்—உகூகூ) என நிலைமொழியீற்றெழுத்துத் திரிய வருவனவுங் கொள்க.

இன்னும் இதனானே இச்சாரியையது உகரக்கேடும் எகர நீட்சியுங் கொள்க. 'பூக்கேழ் தொடலை நுடங்க வெழுந்து' (அகம்—உஅ) 'துறைகேழூரன் கொடுமை நாணி' (ஐங்குறு-கக) இவற்றிற்கு இரண்டாவதும் ஏற்புழி மூன்றாவதும் விரிக்க. 'செங்கேழ் மென்கொடி' (அகம்—அ௦) என்புழிக் கெழுவென்னும் உரிச்சொல் 'எழுத்துப் பிரிந்திசைத்தல்' (சொல்—நகூரு) என்பதனான் நீண்டதென்று உணர்க. மெய்யென்றதனாற் பூக்கேழன்புழி வல்லொற்று மிகுதல் கொள்க.

இன்னுஞ் சான்றோர் செய்யுட்கட் பிறசாரியை பெற்று விகாரங்கள் எய்தி முடிவனவற்றிற்கெல்லாம் இச்சூத்திரமே விதியாக முடித்துக்கொள்க. (எசு)

ச அஉ. உயிரும் புள்ளியு மிறுதி யாகிக்
குறிப்பினும் பண்பினு மிசையினுந் தோன்றி
நெறிப்பட வாராக் குறைச்சொற் கிளவியு
முயர்திணை யஃறிணை யாயிரு மருங்கி
னைம்பா லறியும் பண்புதொகு மொழியுஞ்
செய்யுஞ் செய்த வென்னுங் கிளவியின்
மெய்யொருங் கியலுந் தொழிறொகு மொழியுந்
தம்மியல் கிளப்பிற் றம்முற் றம்வரூஉ
மெண்ணின் றொகுதி யுளப்படப் பிறவு
மன்னவை யெல்லா மருவின் பாத்திய
புணரிய னிலையிடை யுணரத் தோன்றா.

76. வளங்கெழு என்பதில் மகரம் ஙகரமாகத் திரிந்தது.

இஃது இவ்வதிகாரத்தாற் புணர்க்கப்படாத சொற்கள் இவையென அவற்றை எடுத்து உணர்த்துகின்றது.

**இதன் பொருள் :** உயிரும் புள்ளியும் இறுதியாகி—கூறுங் கால் உயிரும் புள்ளியும் ஈறாக நிற்பதோர் சொல்லாகி, குறிப் பினும் பண்பினும் இசையினுந் தோன்றி—குறிப்பினானும் பண் பினானும் இசையினானும் பிறந்து, நெறிப்பட வாராக் குறைச் சொற் கிளவியும்—ஒருவழிப்பட வாராத சொற்றன்மை குறைந்த சொற்களாகிய உரிச்சொற்களும், உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின்—உயர்திணை அஃறிணையென்னும் அவ்விரண்டிடத்தும் உளவாகிய, ஐம்பாலறியும் பண்புதொகு மொழியும்—ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல என்னும் ஐந்துபாலினையும் அறிதற்குக் காரணமாகிய பண்புகொள்பெயர் தொகுந் தொகைச்சொல்லும், செய்யுஞ் செய்த என்னுங் கிளவியின்—செய்யுஞ் செய்த என்னும் பெயரெச்சச் சொற்களினுடைய, மெய் ஒருங்கு இயலுந் தொழில் தொகுமொழியும்—காலங்காட்டும் உம்மும் அகரமும் ஒருசொற்கண்ணே சேர நடக்கும் புடைபெயர்ச்சி தொக்கு நிற்குஞ் சொற்களும், தம்இயல் கிளப்பின்—தமது தன்மை கூறுமிடத்து, தம்முன் தாம் வரூஉம் எண்ணின்றொகுதி உளப் பட—நிறுத்தசொல்லுங் குறித்துவரு கிளவியுமாய் வாராது தம்முன்னர்த் தாமே வந்து நிற்கும் எண்ணுப்பெயரினது தொகுதியும் உளப்பட, அன்ன பிறவும் எல்லாம்—அத்தன்மை யாகிய பிறவுமெல்லாம், மருவின் பாத்திய—உலகத்து மருவி நடந்த வழக்கினது பகுதியைத் இலக்கணமாகவுடைய, புணரியல் நிலை இடை யுணரத் ே ஒன்றனேடொன்று புணருதல் நடந்த தன்மை இடம் தோன்று என்ற வாறு.

**உதாரணம் :** கண் விண்ணவிணைத்தது விண்விணைத்தது இவை குறிப்புரிச்சொல்; ஆடை வெள்ள விளர்த்தது வெள் விளர்த்தது இவை பண்புரிச்சொல்; கடல் ஒல்லெனவொலித்தது ஒல்லொலித்தது இவை இசை யுரிச்சொல். 'ஒல்லொலிநீர் பாய் வதே போலுந் துறைவன்' என்றார் செய்யுட்கண்ணும். இவை உயிரீறும் புள்ளியீறும் நிற்றலின் ஒன்றன்கண் அடக்கலாகா மையின் நெறிப்படவாரா என்றார். விண்ணவிணைத்தது தெறிப் புத்தோன்றத் தெறித்ததென்றும் விண்விணைத்தது தெறிப்புத்



தெறித்ததென்றும் ஆம். ஏனையவற்றிற்கும் இவ்வாறே உணர்க. இங்ஙனம் நிற்றலிற் றன்மை குறைந்த சொல்லாயிற்று. 'வினை யேகுறிப்பே' (சொல்–உ௫௮) என்னுஞ் சூத்திரத்திற் கூறிய என என்பதனை இவற்றொடு கூட்டியவழி இடைச்சொல்லா தலின் விண்ணென விணைத்தது எனப் புணர்க்கப்படுமாறு உணர்க.

இனிக் கரும்பார்ப்பான் கரும்பார்ப்பனி கரும்பார்ப்பார் கருங்குதிரை கருங்குதிரைகள் என வரும் இவற்றுட் கரியனாகிய பார்ப்பான் கரியளாகிய பார்ப்பனி கரியராகிய பார்ப்பார் கரிய தாகிய குதிரை கரியனவாகிய குதிரைகள் என ஐம்பாலினை யும் உணர்த்தும் பண்புகொள்பெயர் தொக்கவாறு காண்க. இவற்றுட் கருமை என்னும் பண்புப்பெயர் தொக்கதேற் கரு மையாகிய பார்ப்பானென விரித்தல் வேண்டும்; அங்ஙனம் விரியாமையிற் பண்புகொள் பெயர் தொக்கதென்று உணர்க.

வெற்றிலை வெற்றுப்பிலி வெற்றடி வெற்றெனத்தொடுத் தல் என்றாற்போல்வனவற்றுள் வெறுவிதாகிய இலையென்பது பாக்குங் கோட்டு நூறுங் கூடாததாய பண்புணர்த்தி ஈறு தொகுதலின் மருவின் பாத்தியவாய் நின்று ஒற்றடுத்தது. வெறுவிதாகிய உப்பிலியென்றது சிறிதும் உப்பிலியென்னின்றது. ஏனையவும் அன்ன. இங்ஙனம் ஐம்பாலுந் தொகுத்தற்கு உரிய முதனிலையாதலிற் புணர்த்தலாகாமை கூறினார்.

இனி ஆடரங்கு செய்குன்று புணர்பொழுது அரிவாள் கொல்யானை 'செல்செலவு என நிலம் முதலாகிய பெயரெச்சந் தொக்க வினைத்தொகைகளை விரிக்குங்கால், ஆடினவரங்கு எனச் செய்த என்னும் பெயரெச்சத்து ஈறு விரிந்த அகர ஈறு இறப்பு உணர்த்தியும், ஆடாநின்றவரங்கு ஆடுமரங்கு எனச் செய்யு மென்னும் பெயரெச்சத்து ஈறு விரிந்த உம்மீறு நிகழ்வும் எதிர்வும் உணர்த்தியும், அவற்றானாய புடைபெயர்ச்சியைத் தோற்றுவித்து இரண்டு பெயரெச்சமும் ஒருசொற்கண் ஒருங்கு தொக்கு நிற்றலின் அதனை ஒரு பெயரெச்சத்தின்கண் அடக் கிப் புணர்க்கலாகாமையிற் புணர்க்கலாதென்றார். உம்மிறுதி நிகழ்வும் எதிர்வும் உணர்த்துமாறு 'வினையின்றொகுதி' (சொல்–௪௧௫) என்னும் எச்சவியற் சூத்திரத்துட் கூறுதும். இவ்வும்

ஈறுஇரண்டு காலமும் ஒருங்குணர்த்துதற் சிறப்புநோக்கிச் செய்த என்பதனை ஆசிரியர் முற்கூறுராயினர்.

இனிப் பத்து என நிறுத்திப் பத்தெனத் தந்து புணர்க்கப் படாது பப்பத்தெனவும் பஃபத்தெனவும் வழங்குமாறு உணர்க. ஒரோவொன்றென்பதும் அது. அதுதானே ஓரொன்றேரொன் றுகக் கொடு என்றுற் புணர்க்கப்படும்.

இனி அன்னபிறவும் என்றதனானே உண்டானென்புழி உண் ணென்னும் முதனிலையுங் காலங்காட்டும் டகாரமும் இடனும் பாலும் உணர்த்தும் ஆனும் ஒன்றனோடொன்று புணர்க்கப்படா, அவை நிறுத்த சொல்லுங் குறித்துவருகிளவியும் அன்மையின். கரியனென்புழிக் கருவென நிறுத்தி அன்னெனத் தந்து புணர்க் கப்படா, அது இன்னனென்னும் பொருடருதலின். ஏனைவினைச் சொற்களும் இவ்வாறே பிரித்துப் புணர்க்கலாகாமை உணர்க. இன்னும் அதனானே கொள்ளெனக்கொண்டான் என்புழிக் கொள்ளென்பதனை என என்பதனோடு புணர்க்கப்படாமையும் ஊரன் வெற்பன் முதலிய வினைப்பெயர்களும் பிறவும் புணர்க் கப்படாமையுங் கொள்க. இவ்வாசிரியர் புணர்க்கப்படாத இச் சொற்களையும் வடநூற்கண்முடித்த அனகன் அனபாயன் அக ளங்கன் முதலிய வடசொற்களையும் பின்னுள்ளோர் முடித்தல் முதனூலோடு மாறுகொளக் கூறலாமென்று உணர்க. (௭௭)

௪௮௩. கிளந்த வல்ல செய்யுளுட் டிரிநவும்
வழங்கியன் மருங்கின் மருவொடு திரிநவும்
விளம்பிய வியற்கையின் வேறுபடத் தோன்றின்
வழங்கியன் மருங்கி னுணர்ந்தன ரொழுக்க
னன்மதி நாட்டத் தென்மனார் புலவர்.

இஃது இவ் வதிகாரத்து எடுத்தோத்தானும் இலேசானும் முடியாது நின்றவற்றை யெல்லாம் இதனானே முடிக்க என அதிகாரப் புறனடை கூறுகின்றது.

77. பண்புப்பெயர் - கருமை. பண்புகொள்பெயர் - கரியன் முத லிய ஐம்பாற்சொற்கள். கோட்டுநூறு - சுண்ணம்பு. பின்னுள்ளோர் என்றது-சின்னூலாரையும், நன்னூலாரையும், வீரசோழியகாரரையும் போலும்.



**இதன்பொருள் :** கிளந்த அல்ல செய்யுளுள் திரிநவும்— முன்னர் எடுத்தோதப்பட்டன அல்லாத சொற்கள் செய்யுளிடத் துத் திரிந்து முடிவனவும், வழங்கியல் மருங்கின் மருவொடு திரி நவும் —நால்வகை வழக்கும் நடக்குமிடத்து மருவுதலோடு திரிந்து முடிவனவும், விளம்பிய இயற்கையின் வேறுபடத் தோன்றின் — முன்னர்க் கூறிய இலக்கண முறைமையினின்றும் வேறுபடத் தோன்றுமாயின் அவற்றை, நன்மதி நாட்டத்து —நல்ல அறிவி னது ஆராய்ச்சியாலே, வழங்கியன் மருங்கின்—வழக்கு முடிந்து நடக்குமிடத்தே, உணர்ந்தனர் ஒழுக்கல் என்மனார் புலவர்— முடிபு வேறுபாடுகளை அறிந்து நடாத்துக என்று கூறுவர் புலவர் என்றவாறு.

உதாரணம் : 'தடவுத்திரை' என உகரமும் வல்லெழுத் தும் பெற்றுந் 'தடவுநிலை' (புறம்-௧௪௦) என உகரம் பெற்றும் அகர ஈற்று உரிச்சொல் வந்தது. அதவத்தங்கனி என வேற்று மைக்கண் அகர ஈறு அத்துப்பெற்றது. கசதபத் தோன்றின் என அகர ஈற்றின் முன்னர்த் தகரங்கொடுக்க.

'நறவங் கண்ணி நற்போர்ச் செம்பியன்
குரவ னீடிய கொன்றைபங் கானல்'

என ஆகார இறுதி குறியதனிறுதிச் சினைகெட்டுழி இரு வழியும் அம்முப்பெற்றன.

'முளவுமா தொலைச்சிய பைந்நிணப் பிளவைப்
பிணவுநாய் முடுக்கிய தடியொடு விரைஇ' (மலைபடு-௧௭௬)

என அவ்வீறு அவ்வழிக்கண் அம்முப்பெறாத முடிவுபெற் றன. 'திண்வளி விசித்த முழவொ டாகுளி' (மலைபடு-௩) 'சுற வெறிமீன்' 'இரவழுங்குசிறுநெறி' (அகம்-௩௧௮) இவை உகரம் பெறாமல் வந்தன. 'கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை' (அகம்-௯௭) என இகரஈறு வேற்றுமைக்கண் அம்முப்பெற்றன. 'தீயினன்ன வொண் செங்காந்தள்' (மலைபடு-௧௪) என ஈகார ஈறு வேற்றுமைக்கண் இன்பெற்றது. 'நல்லொழுக்கங் காக்குந் திருவத்தவர்' (நாலடி-௫௭) என உகர ஈறு வேற்றுமைக்கண் அத் துப்பெற்றது. 'ஏப்பெற்றமான் பிணைபோல' (சிந்தா-௨௯௯௫) என உகர ஈறு வேற்றுமைக்கண் ஏகாரம் பெறாது வந்தது 'சைத்

துண்டாம்போழ்தே' (நாலடி-௧௧) 'கைத்தில்லர்நல்லர்' எனவும், 'புன்னையங்கானல்' (அகம்-௮௦) 'முல்லையந்தொடையல்' எனவும் ஐகார ஈறு வேற்றுமைக்கண் அத்தும் அம்மும் பெற்றன. 'அண்ணன்கோயில் வண்ணமே' (சிந்தா-நாமகள்-௧௨௯) என ஓகார ஈறு யகர உடம்படுமெய் பெற்றது.

இனி, 'அஞ்செவிநிறையவாலின' (முல்லைப்-௮௯) என அல்வழிக்கட் ககரமும் அகரமுங் கெட்டன. 'மரவம் பாவை வயிறுரப் பருகிய' 'மரவநாகம் வணங்கி மாற்கணம்' என இருவழியும் மகரம் விகாரப்பட்டு அம்முப் பெற்றன. 'காரெதிர் கானம் பாடினேமாக' 'பொன்னங் திகிரி முன்சமத் துருட்டி' 'பொன்னங் குவட்டிற் பொலி வெய்தி' என னகர ஈறு இருவழியும் அம்முப் பெற்றன. 'வேர்பிணி வெதிரத்துக் கால்பொரு நாலிசை' என ரகர ஈறு வேற்றுமைக்கண் அத்துப்பெற்றது. 'நாவலந்தண் பொழில்' 'கானலம்பெருந்துறை' என லகர ஈறு வேற்றுமைக்கண் அம்முப்பெற்றன. 'நெய்தலஞ் சிறுபறை' இஃது அல்வழிக்கண் அம்முப்பெற்றது. 'ஆயிடை யிருபேராண்மை செய்தபூசல்' (குறுந்-௪௩) என்புழி ஆயிடையென்பது உருபாதலின் 'நீடவருதல்' (எழு-௨௧௮) என்பதனான் முடியாது நீண்டு வகர ஒற்று வேறுபட முடிந்தது. தெம்முனை எனத் தெவ்வென்புழி வகரங்கெட்டு மகர ஒற்றுப் பெற்று முடிந்தது. அ என்னுஞ் சுட்டு 'அன்றியனைத்தும்' எனத் திரிந்தது. 'முதிர்கோங்கின் முகை' (குறிஞ்சிக்கலி-௨௦) எனவுங் 'காய்மாண்ட தெங்கின் பழம்' (சிந்தா-௩௧) எனவுங் குற்றுகர ஈறு இன்பெறுதலுங் கொள்க. 'தொண்டுதலையிட்ட பத்துக்குறை' என ணகரம் இரட்டாது தகர ஒற்று டகர ஒற்றாய்க் குற்றியலுகரம் ஏறி முடிந்தது.

இங்ஙனஞ் செய்யுளுட் பிறவுந் திரிவன உளவேனும் இப்புறனடையான் முடிக்க. அருமருந்தானென்பது ரகரவுகரங் கெட்டு அருமந்தானென முடிந்தது. சோழனாடு சோணாடு என அன்கெட்டு முடிந்தது. பாண்டிநாடும் அது. தொண்டைமானாடு தொண்டை நாடென ஈற்றெழுத்துச் சில கெட்டு முடிந்தது. மலையமானாடு மலாடு என முதலெழுத்தொழிந்தன பலவுங் கெட்டு முடிந்தது. பொதுவிலென்பது பொதியிலென உகரந் திரிந்து இகரமாய் யகர உடம்படுமெய் பெற்று முடிந்தது. பிறவும் இவ்வாறே திரிந்து மருவி வழங்குவன எல்லாம் இப்புறனடையான் அமைத்துக்கொள்க. (௭௮)

78. அகஞ்செவி அஞ்செவியெனக் ககர உயிர் மெய்கெட்டு நின்றது என்றபடி. ஒன்பது தலையிட்ட - தொண்டுதலையிட்ட எனத்திரிந்து புணர்ந்ததென்பது நச்சினார்க்கினியர் கருத்து. ஒன்பதோடு த்கரப் நிரீஇ னகரத்தை ணகரமாக்கித் தொண்பது எனவைத்துப் பது என்பதிற் பகர அகரங் கெடுத்துத் தகர உகரத்திலுள்ள தகரத்தை டகரமாக்கி உகரமேற்றித் தொண்டு என முடிக்க. தொண்டு என்பது ஒன்பது என்றாயிற்றென்பர் சிலர்.



குற்றியலுகரப் புணரியல் முற்றிற்று.

## எழுத்ததிகாரம் முற்றிற்று.

நூலின் மரபு மொழிமரபு நுண்பிறப்பு
மேலைப் புணர்ச்சி தொகைமரபு—பாலா
முருபியலின் பின்னுயிர் புள்ளி மயக்கந்
தெரிவரிய குற்றுகரஞ் செப்பு.

எழுத்ததி காரத்துச் சூத்திரங்க ளெல்லா
மொழுக்கிய வொன்பதோத் துள்ளும்—வழுக்கின்றி
நானூற் றிருநாற்பான் மூன்றென்று நாவலர்கண்
மேனாற்று வைத்தார் விரித்து.



# சூத்திர அகராதி


| சூத்திரம் | பக்கம் |
|---|---|
| **அ** | |
| அ ஆ உ ஊ | 173 |
| அ ஆ வென்னு | 177 |
| அ இ உ அம் | 62 |
| அஃறிணை விரவு பெயர் | 154 |
| அகமென் கிளவிக்குக் | 259 |
| அகர ஆகாரம் | 255 |
| அகர இகர | 86 |
| அகர உகர | 86 |
| அகரத் திம்பர் | 86 |
| அகர விறுதிப் | 192 |
| அக்கென் சாரியை | 233 |
| அடையொடு தோன்றினு | 262 |
| அணரி நுனிநா | 105 |
| அண்ணஞ் சேர்ந்த | 106 |
| அண்ண நண்ணிய | 104 |
| அதனிலை யுயிர்க்கும் | 354 |
| அந்தவண் வரினும் | 204 |
| அத்திடை வரூஉங் | 168 |
| அத்தி னகர | 131 |
| அத்தே வற்றே | 137 |
| அத்தொடு சிவணு | 261 |
| அந்நான் மொழியுந் | 326 |
| அப்பெயர் மெய்யொழித் | 282 |
| அம்மி னிறுதி | 133 |
| அம்மூ வாறும் | 55 |
| அரையளவு குறுகன் | 50 |
| அரையென வரூஉம் | 166 |
| அல்லதன் மருங்கிற் | 269 |
| அல்லது கிளப்பி னியற்கை | 265 |
| அல்லது-மெனும் | 265 |
| அல்லது-விறுதி | 313 |
| அல்லது கிளப்பி னெல்லா | 324 |
| அல்வழி யெல்லா மியல் | 288 |
| அல்வழி யெல்லா முற | 291 |
| அல்வழி யெல்லா முற | 306 |
| அல்வழி யெல்லா மெல் | 257 |
| அவற்றுள்-அ ஆ ஆயிரண் | 101 |
| அவற்றுள்-அ இ உ | 41 |
| அவற்றுள் இகர விறுபெயர் | 154 |
| அவற்றுள்-இன்னி னிகர | 127 |
| அவற்றுள்-ஈரொற்றுத் | 313 |
| அவற்றுள்-கரமுங்கானு | 138 |
| அவற்றுள்-ணனஃகான் | 59 |
| அவற்றுள்-நிறுத்தசொல்லி | 114 |
| அவற்றுள்-மெய்யீ றெல்லாம் | 111 |
| அவற்றுள்-மெல்லெழுத் | 147 |
| அவற்றுள்-ரகார ழகாரங் | 80 |
| அவற்றுள்-லளஃகான் | 58 |
| அவற்றுவழி மருங்கிற் | 125 |
| அவைதாங்-குற்றியலிகரங் | 38 |
| அவைதாம்-இயற்கைய | 186 |
| அவைதாம்-இன்னே | 126 |
| அவைதான்-முன்னப் | 143 |
| அவைதாம்-மெய்பிறிதாதன் | 116 |
| அவையூர் பத்தினும் | 350 |
| அவ்வழி-பன்னீ ருயிருந் | 101 |
| அவ்வா றெழுத்து | 104 |
| அவ்விய னிலையு | 50 |
| அழனெ னிறுதிகெட | 285 |
| அழனே புழனே | 184 |
| அளந்தறி கிளவியு | 335 |
| அளபிறந் துயிர்த்தலு | 63 |
| அளவாகு மொழிமுத | 128 |
| அளவிற்கு நிறையிற்கு | 169 |
| அளவு நிறையு மாயிய | 352 |

| சூத்திரம் | பக்கம் |
|---|---|
| அளவு நிறையு மாயிய | 350 |
| அளவு நிறையு மெண் | 302 |
| அளவு நிறையும்வே | 262 |
| அன்றுவரு காலை | 226 |
| அன்ன வென்னு | 196 |
| அன்னென் சாரியை | 185 |
| **ஆ** | |
| ஆ ஈ ஊ ஏ ஐ | 42 |
| ஆஎ ஒஎனு | 90 |
| ஆ ஏ ஓ அம் | 63 |
| ஆகார விறுதி | 205 |
| ஆடூஉ மகடூஉ | 233 |
| ஆணும் பெண்ணு | 251 |
| ஆண்மரக் கிளவி | 251 |
| ஆதனும் பூதனுங் | 285 |
| ஆயிரக் கிளவி | 340 |
| ஆயிரம் வரினு | 330 |
| ஆயிரம் வரினே | 350 |
| ஆயிரம் வருவழி | 303 |
| ஆய்த நிலையலும் | 306 |
| ஆரும் வெதிருஞ் | 289 |
| ஆவயின் வல்லெழுத்து | 250 |
| ஆவு மாவும் | 207 |
| ஆவோ டல்லகி | 90 |
| ஆறனுருபி னகர | 123 |
| ஆறனுருபினு | 163 |
| ஆறன் மருங்கிற் | 346 |
| ஆறென் கிளவி | 342 |
| ஆனி னகரமு | 130 |
| ஆனொற் றகரமொடு | 112 |
| ஆன்முன் வரூஉ | 213 |
| **இ** | |
| இ ஈ எ ஏ ஐயென | 102 |
| இகர யகர | 87 |
| இகர விறுதிப் | 214 |
| இக்கி னிகர | 131 |
| இடம்வரை கிளவி | 223 |
| இடைநிலை ரகர | 333 |

| சூத்திரம் | பக்கம் |
|---|---|
| இடைப்படிற் குறுகு | 69 |
| இடையெழுத் தென்ப | 55 |
| இடையொற்றுத் | 317 |
| இதழியைந்து பிறக்கும் | 106 |
| இயற்பெயர் முன்னர் | 281 |
| இரண்டு முதலொன்பான் | 355 |
| இராவென் கிளவிக் | 209 |
| இருதிசை புணரி | 328 |
| இருளென் கிளவி | 308 |
| இலமென் கிளவிக்கு | 259 |
| இல்ல மரப்பெயர் | 257 |
| இல்லென் கிளவி | 293 |
| இல்லொடு கிளப்பி | 245 |
| இறுதியு மிடையு | 278 |
| இனியணி யென்னுங் | 215 |
| இன்றி யென்னும் | 215 |
| இன்னிடை வரூஉ | 179 |
| இன்னென வரூஉம் | 134 |
| **ஈ** | |
| ஈகார விறுதி | 222 |
| ஈமுங் கம்மு | 270 |
| ஈரெழுத்து மொழியுயிர் | 316 |
| ஈரெழுத்து மொழியும்வல் | 220 |
| ஈரெழுத் தொருமொழி | 312 |
| ஈறியன் மருங்கி னிவை | 170 |
| ஈறியன் மருங்கினு | 70 |
| **உ** | |
| உ ஊ ஒஓ வென்னு | 89 |
| உ ஊ ஒ ஓ ஔவென | 102 |
| உ ஊ கார நவவொடு | 94 |
| உகரமொடு புணரும் | 164 |
| உகர விறுதி | 225 |
| உச்ச கார மிரு | 95 |
| உச்ச காரமொடு | 98 |
| உட்பெறு புள்ளி | 51 |
| உணரக் கூறிய | 310 |
| உண்டென் கிளவி | 327 |
| உதிமரக் கிளவி | 291 |





| சூத்திரம் | பக்கம் |
|---|---|
| உந்தி முதலா | 100 |
| உப்ப காரமொடு | 98 |
| உப்ப காரமொன்றென | 95 |
| உம்மை யெஞ்சிய | 206 |
| உயர்திணைப் பெயரே | 125 |
| உயர்திணை யாயி னம்மிடை | 182 |
| உயர்திணை யாயி னுருபிய | 267 |
| உயிரிறு சொன்முனுயிர் | 113 |
| உயிரீ றாகிய முன்னிலைக் | 151 |
| உயிரீ றாகிய வுயர்திணைப் | 152 |
| உயிரும்புள்ளியுமிறுதியாகிய | 165 |
| உயிரும்புள்ளியுமிறுதியாகிக் | 357 |
| உயிர்ஔ வெஞ்சிய | 92 |
| உயிர்முன் வரினுமாயிய | 305 |
| உயிர்முன் வரினு மாயிய | 195 |
| உயிர்மெய் யல்லன | 88 |
| உயிர்மெய் யீறு | 113 |
| உரிவரு காலை | 217 |
| உருபிய னிலையு | 245 |
| உருவினு மிசையினு | 71 |
| உரைப்பொருட் கிளவி | 200 |
| **ஊ** | |
| ஊகார விறுதி | 230 |
| ஊவெ னொருபெயர் | 232 |
| **எ** | |
| எ-என வருமுயிர் | 93 |
| எகர ஒகரத் | 52 |
| எகர வொகரம் | 234 |
| எகின்மர மாயின் | 275 |
| எஞ்சிய வெல்லா | 96 |
| எட்டனொற்றே | 334 |
| எண்ணி னிறுதி | 187 |
| எண்ணுப் பெயர்க் கிளவி | 321 |
| எப்பெயர் முன்னரும் | 132 |
| எருவுஞ் செருவு | 227 |
| எல்லா மென்னு | 181 |
| எல்லா மொழிக்கு | 141 |
| எல்லாரு மென்னும் | 182 |
| எல்லா வெழுத்தும் | 108 |

| சூத்திரம் | பக்கம் |
|---|---|
| எழுத்தெனப்படுவ | 25 |
| எழுத்தோ ரன்ன | 142 |
| **ஏ** | |
| ஏ ஓ எனுமுயிர் | 94 |
| ஏகார விறுதி | 235 |
| ஏயெ னிறுதிக் | 236 |
| ஏழ னுருபிற்குத் | 189 |
| ஏழென் கிளவி | 302 |
| ஏனவை புணரின் | 299 |
| ஏனவை வரினே | 225 |
| ஏனைப் புளிப்பெயர் | 220 |
| ஏனைமுன் வரினே | 323 |
| ஏனை யெகினே | 275 |
| ஏனை வகரந் | 299 |
| ஏனை வகர மின்னொடு | 179 |
| **ஐ** | |
| ஐஒடு குஇன் | 121 |
| ஐஔ வென்னு | 73 |
| ஐகார ஔகாரங் | 139 |
| ஐகார விறுதிப் | 238 |
| ஐந்த னொற்றே மகார | 334 |
| ஐந்த னொற்றே முந்தை | 340 |
| ஐந்த னொற்றே மெல் | 337 |
| ஐந்த னொற்றே யகார | 346 |
| ஐந்து மூன்று | 339 |
| ஐயம் பல்லென | 304 |
| ஐயின் முன்னரு | 132 |
| **ஒ** | |
| ஒடுமரக் கிளவி | 229 |
| ஒவ்வு மற்றே | 93 |
| ஒழிந்தத னிலையு | 244 |
| ஒற்றிடை யினமிகா | 317 |
| ஒற்றுநிலை திரியா | 321 |
| ஒற்றுமிகு தகரமொடு | 279 |
| ஒன்பா னிறுதி மரபே | 347 |
| ஒன்பா னிறுதி-மொழி | 342 |
| ஒன்பா னொகரமிசைத் | 335 |
| ஒன்பான் முதனிலை | 344 |

| சூத்திரம் | பக்கம் |
|---|---|
| ஒன்றுமுத லாகப் | 187 |
| ஒன்றுமுத லாக வெட்ட | 329 |
| ஒன்றுமுத லொன்பான் | 332 |
| ஒன்று முதலாகிய | 351 |
| **ஓ** | |
| ஓகார விறுதிக் கொன்னே | 177 |
| ஓகார விறுதி யேகார | 243 |
| ஓரள பாகு மிடனுமா | 87 |
| ஓரெழுத் தொருமொழி | 75 |
| **ஔ** | |
| ஔகார விறுதிப் | 246 |
| ஔகார விறுவாய்ப் | 47 |
| ஔவென வரூஉம் | 152 |
| **க** | |
| ககார ஙகார | 103 |
| கசதப முதலிய | 144 |
| கசதப முதன்மொழி | 337 |
| கண்ணிமை நொடியென | 45 |
| கதந பமவெனு | 88 |
| கவவோ டியையி | 93 |
| **கா** | |
| காரமுங் கரமுங் | 138 |
| **கி** | |
| கிளந்த வல்ல | 360 |
| கிளைப்பெயரெல்லாங்கிளை | 275 |
| கிளைப்பெயரெல்லாங்கொ | 253 |
| **கீ** | |
| கீழென் கிளவி | 305 |
| **கு** | |
| குமிழென் கிளவி | 301 |
| குயினென் கிளவி | 274 |
| குறுயத னிறுதிச் | 213 |
| குறியதன் முன்னரு | 208 |
| குறியதன் முன்ன | 69 |
| குறிமையு நெடுமையு | 81 |

| சூத்திரம் | பக்கம் |
|---|---|
| குறையென் கிளவி | 167 |
| குற்றிய விகர | 66 |
| குற்றிய லுகரக் கின்னே | 167 |
| குற்றிய லுகரத் திறுதி | 185 |
| குற்றிய லுகர முறைப் | 91 |
| குற்றிய லுகரமு மற் | 112 |
| குற்றெழுத் திம்பரு | 231 |
| குற்றெழுத் தைந்து | 74 |
| குன்றிசை மொழிவயி | 72 |
| **கொ** | |
| கொடிமுன் வரினே | 240 |
| **ங** | |
| ஙஞண நமன வெனும் | 58 |
| **ச** | |
| சகரக் கிளவியு | 89 |
| சகார ஞகார | 103 |
| **சா** | |
| சாரென் கிளவிய | 290 |
| சார்ந்துவரி னல்லது | 107 |
| சாவ வென்னுஞ் | 196 |
| **சி** | |
| சிறப்பொடு வருவழி | 282 |
| **சு** | |
| சுட்டி னியற்கை | 216 |
| சுட்டின் முன்னரு | 225 |
| சுட்டின் முன்னர் | 194 |
| சுட்டுச்சினை நீடிய | 325 |
| சுட்டுமுத லாகிய வகர | 298 |
| சுட்டுமுத லாகிய விகர | 161 |
| சுட்டுமுதலாகிய வையெ | 175 |
| சுட்டுமுத லிறுதி யியல் | 225 |
| சுட்டுமுத லிறுதி யுருபிய | 229 |
| சுட்டுமுத லிறுதி யுருபிய | 238 |
| சுட்டுமுத லுகர | 174 |
| சுட்டுமுதல் வகர | 178 |
| சுட்டுமுதல் வயினு | 274 |





| சூத்திரம் | பக்கம் |
|---|---|
| **செ** | |
| செய்யா வென்னும் | 205 |
| செய்யுண் மருங்கின் | 242 |
| செய்யு ளிறுதிப் | 83 |
| **சே** | |
| சேவென் மரப்பெய | 237 |
| **ஞ** | |
| ஞகாரை யொற்றிய | 247 |
| ஞண நம னயரல | 97 |
| ஞநம யவவெனு முத | 145 |
| ஞநமவ வியையினு | 247 |
| ஞ ந ம வ வென்னும் | 59 |
| ஞநவென் புள்ளிக் | 178 |
| **ட** | |
| டகார ணகார | 103 |
| ட ற ல ள வென்னும் | 57 |
| **ண** | |
| ணகார விறுதி | 250 |
| ணளவென்புள்ளிமுன்டண | 150 |
| ணனவென் புள்ளிமுன்யா | 148 |
| **த** | |
| தகரம் வருவழி | 292 |
| தத்தந் திரிபே | 102 |
| தமிழென் கிளவியு | 301 |
| தம்மியல் கிளப்பி | 78 |
| **தா** | |
| தாநா மென்னு | 180 |
| தாயென் கிளவி | 287 |
| தாழென் கிளவி | 300 |
| தானும் பேனுங் | 283 |
| தான்யா னெனும்பெயர் | 284 |
| தான்யா னென்னு | 184 |
| **தி** | |
| திங்கண் முன்வரின் | 222 |
| திங்களு நாளு | 241 |
| திரிபுவேறு கிளப்பி | 328 |

| சூத்திரம் | பக்கம் |
|---|---|
| **தே** | |
| தேற்ற வெகாமுஞ் | 234 |
| தேனென் கிளவி | 277 |
| **தொ** | |
| தொடர விறுதி | 201 |
| தொழிற்பெய ரெல்லாந் | 252 |
| தொழிற்பெய ரெல்லாந் | 269 |
| தொழிற்பெய ரெல்லாந் | 297 |
| தொழிற்பெய ரெல்லாந் | 307 |
| **ந** | |
| நகர விறுதியு | 248 |
| நமவ வென்னு | 338 |
| நாட்பெயர்க் கிளவி | 272 |
| நாண்முற் றோன்றுந் | 221 |
| நாயும் பலகையும் | 295 |
| நாவிளிம்பு வீங்கி | 105 |
| நான்க னொற்றே லகார | 339 |
| நான்க னொற்றே லகார | 346 |
| நான்க னொற்றே றகார | 334 |
| நான்கு மைந்து | 343 |
| **நி** | |
| நிலாவென் கிளவி | 209 |
| நிறுத்த சொல்லுங் | 117 |
| நிறையு மளவும் | 331 |
| **நீ** | |
| நீட வருதல் | 195 |
| நீட்டம் வேண்டின் | 43 |
| நீயெ னொருபெய ருருபிய | 224 |
| நீயெ னொருபெயர் | 176 |
| நீயென் பெயரு | 222 |
| **நு** | |
| நும்மெ னிறுதி யியற்கை | 180 |
| நும்மெ னிறுதியு | 164 |
| நும்மெ னொருபெயர் | 268 |
| நுனிநா வணரி | 105 |

| சூத்திரம் | பக்கம் |
|---|---|
| நூ | |
| நூறா யிரமுன் | 348 |
| நூறுமுன் வரினுங் | 343 |
| நூறூர்ந்து வரூஉம் | 304 |
| நூறென் கிளவி | 349 |
| நெ | |
| நெடியத-யியல்பா | 307 |
| நெடியத-யியல்புமா | 292 |
| நெடியதன் முன்ன | 162 |
| நெட்டெழுத் திம்பருந் | 67 |
| நெட்டெழுத் திம்பரொற் | 186 |
| நெட்டெழுத் தேழே | 73 |
| நெல்லுஞ் செல்லுங் | 293 |
| ப | |
| படர்க்கைப் பெயரு | 263 |
| பதக்குமுன் வரினே | 217 |
| பத்த னொற்றுக்கெட | 330 |
| பத்தென் கிளவி | 303 |
| பலரறி சொன்முன் | 171 |
| பலவற் றிறுதி நீடு | 200 |
| பலவற் றிறுதி யுருபிய | 205 |
| பல்லவை நுதலிய | 174 |
| பல்லித ழியைய | 106 |
| பனியென வரூஉங் | 218 |
| பனையின் முன்ன | 240 |
| பனையு மரையு | 239 |
| பனை யெனளவுங் | 168 |
| பன்னீ ருயிரு | 88 |
| பா | |
| பாழென் கிளவி | 302 |
| பீ | |
| பீரென் கிளவி | 290 |
| பு | |
| புணரிய னிலையிடை | 67 |
| புளிமரக் கிளவிக் | 219 |
| புள்ளி யில்லா | 52 |
| புள்ளி யிறுதியும் சொல் | 189 |
| புள்ளியிறுதியுட்-வல் | 156 |

| சூத்திரம் | பக்கம் |
|---|---|
| புள்ளி யீற்றுமுன் | 139 |
| புள்ளும் வள்ளுந் | 308 |
| பூ | |
| பூல்வே லென்றா | 296 |
| பூவெ னொருபெய | 232 |
| பெ | |
| பெண்டென் கிளவிக் | 322 |
| பெயருந் தொழிலும் | 135 |
| பெற்ற மாயின் | 237 |
| பொ | |
| பொன்னென் கிளவி | 286 |
| ம | |
| மஃகான் புள்ளிமு னத்தே | 179 |
| மஃகான் புள்ளிமுன் வவ் | 60 |
| மகப்பெயர்க் கிளவிக் | 204 |
| மகரத் தொடர்மொழி | 99 |
| மகர விறுதிவேற் | 255 |
| மகன்வினை கிளப்பின் | 287 |
| மக்க ளென்னும் | 309 |
| மரப்பெயர்க்-கம் | 319 |
| மரப்பெயர்க் கிளவிமெல் | 203 |
| மருவின் றொகுதி | 118 |
| மழையென் கிளவி | 242 |
| மன்னுஞ் சின்னு | 273 |
| மா | |
| மாமரக் கிளவியு | 2;1 |
| மாறுகோளெ-மைய | 243 |
| மாறுகோளெ-மெண் | 235 |
| மி | |
| மின்னும் பின்னும் | 279 |
| மீ | |
| மீனென் கிளவி | 276 |
| மு | |
| முதலா வேன | 90 |
| முதலீ ரெண்ணினொற்று | 332 |
| முதலீ ரெண்ணின்முன் | 340 |





| சூத்திரம் | பக்கம் |
|---|---|
| முதனிலை நீடினு | 345 |
| முதனிலை யெண்ணின்முன் | 353 |
| முரணென் றொழிற் | 254 |
| முற்றிய லுகரமொடு | 91 |
| முன்னுயிர் வருமிடத் | 323 |
| முன்னென் கிளவி | 285 |
| மூ | |
| மூவள பிசைத்த | 42 |
| மூன்ற னொற்றே நகார | 343 |
| மூன்ற னொற்றே வகரம் | 339 |
| மூன்ற னொற்றே வகார | 345 |
| மூன்ற னொற்றே பகார | 334 |
| மூன்ற னொற்றே வந்த | 337 |
| மூன்றன் முதனிலை | 341 |
| மூன்று தலையிட்ட | 110 |
| மூன்றுமாறு | 333 |
| மூன்றும் நான்கு | 341 |
| மெ | |
| மெய்ந்நிலைச் சுட்டி | 61 |
| மெய்யி னளவே | 49 |
| மெய்யி னியக்கம் | 77 |
| மெய்யி னியற்கை | 51 |
| மெய்யின் வழிய | 54 |
| மெய்யுயிர் நீங்கிற் | 141 |
| மெய்யோ டியையினும் | 49 |
| மெல்லெழுத் தாறும் | 107 |
| மெல்லெழுத் தியையி | 278 |
| மெல்லெழுத் தியையி | 291 |
| மெல்லெழுத் தியையி | 299 |
| மெல்லெழுத் தியையின் | 306 |
| மெல்லெழுத்து மிகினும் | 266 |
| மெல்லெழுத்து மிகினும் | 277 |
| மெல்லெழுத்து மிகுவழி | 157 |
| மெல்லெழுத்துறழு-ருளவே | 288 |
| மெல்லெழுத்துறழும்-வழக்க | 256 |
| மெல்லெழுத் தென்ப | 54 |
| மெல்லொற்று வலியா | 319 |
| மென்மையு மிடைமையும் | 133 |

| சூத்திரம் | பக்கம் |
|---|---|
| மொ | |
| மொழிப்படுத் திசைப்பினுந் | 84 |
| மொழிமுத லாகு | 149 |
| ய | |
| யகரம் வருவழி | 316 |
| யகர விறுதி | 287 |
| ய ர ழ வென்னும் புள்ளி | 60 |
| ய ர ழ வென்னும் மூன்று | 79 |
| யவமுன் வரினே | 194 |
| யா | |
| யாதெ னிறுதியுஞ்-ஞன | 183 |
| யாதெ னிறுதி-நிலையும் | 322 |
| யாமரக் கிளவியும் | 210 |
| யாவினா மொழியே | 326 |
| யாவென் வினாவி | 176 |
| யாவென் வினாவு | 174 |
| ர | |
| ரகார விறுதி | 288 |
| ல | |
| லகார விறுதி | 290 |
| லன வென வரூஉம் | 150 |
| லன வென வரூஉம் | 356 |
| வ | |
| வஃகான் மெய்கெடச் | 129 |
| வகரக் கிளவி | 99 |
| வகார மிசையு | 271 |
| வண்டும் பெண்டு | 322 |
| வரன்முறை மூன்றும் | 139 |
| வல்லென் கிளவி | 295 |
| வல்லெழுத்தியற்கை | 202 |
| வல்லெழுத்து-மில்லை | 210 |
| வல்லெழுத்து மிகினும்-வழ | 220 |
| வல்லெழுத்து முதலிய | 122 |
| வல்லெழுத் தென்ப | 54 |
| வல்லொற்றுத்தொடர் | 315 |
| வல்லொற்றுத்-மிகுமே | 325 |

| சூத்திரம் | பக்கம் |
|---|---|
| வளியென வருஉம் | 219 |
| வன்றொடர்மொழியு | 318 |
| **வா** | |
| வாழிய வென்னுஞ் | 199 |
| **வி** | |
| விசை மரக் கிளவியு | 238 |
| விண்ணென வருஉங் | 251 |
| வினையெஞ்சு கிளவிக்கு | 230 |
| வினையெஞ்சு கிளவியு | 193 |
| **வெ** | |
| வெயிலென் கிளவி | 297 |
| வெரிநெ னிறுதி | 249 |
| **வே** | |
| வேற்றுமை குறித்த | 120 |
| வேற்றுமைக் கண் | 203 |
| வேற்றுமைக்கண் | 208 |
| வேற்றுமைக்கண் | 224 |
| வேற்றுமைக்கண் | 226 |
| வேற்றுமைச்சண் | 231 |
| வேற்றுமைக்கண் | 236 |

| சூத்திரம் | பக்கம் |
|---|---|
| வேற்றுமைக்கண்-வல் | 149 |
| வேற்றுமைக்கண்-ஞன | 244 |
| வேற்றுமைக் குக்கெட | 248 |
| வேற்றுமை யல்வழியாய்த | 298 |
| வேற்றுமை யல்வழி இஐ | 160 |
| வேற்றுமை யல்வழியெண் | 254 |
| வேற்றுமை யல்வழிக்குறு | 284 |
| வேற்றுமையாயின் னேனை | 271 |
| வேற்றுமையாயின்னேனை | 280 |
| வேற்றுமை வழிய | 124 |
| **ழ** | |
| ழகர வுகர | 228 |
| ழகார விறுதி | 300 |
| **ள** | |
| ளகார விறுதி | 305 |
| **ன** | |
| னஃகான் றஃகா | 130 |
| னகார விறுவாய்ப் | 48 |
| னகார விறுதி | 272 |
| னகாரை முன்னர் | 84 |


# உதாரண அகராதி

(எண்—சூத்திரஎண்)


அகத்தியனார் 45
அகல் 120, 319
அகங்கை 315
அக்கொற்றன் 31
அக்காற்கொண்டான் 368
அச்குறிது 203
அக்கொற்றன் 204
அங்குக்கொண்டான் 429
அங்கை 315
அங்கட்கொண்டான் 307
அங்காக்கொண்டான் 231
அச்சோ 75
அஞ்ஞை 73
அஞ்ஞாண் 205, 380
அடை 59, 320, 352
அடைப்பையாய்கோறு 57
அடைந்தீர் 326
அடைந்தான் 155, 209, 287, [331
அடைவு 337.
அடைந்தார் 321
அடைந்தீர் 321
அடைதும் 321
அடைவேம் 321
அடையும் 322
அணிக்கொண்டான் 236
அணுக்கு 36
அண்ணஅதேரி 133, 226
அண்ணணிக்கொண்டான் 246
அத 77
அதற்கு 123
அதவத்துக்கண் 133
அதன் 411
அதனை 176
அதக்குறிது 203
அதங்கோடு 217
அதன்று 258
அதன்கோடு 263, 422
அதாஅன்றம்ம 258
அதினை 176
அது 77
அதுமற்கொண்கன்றேரே 333
அதுகடிது 424
அதுகொரேழி 160
அதுகுறிது 257
அதுசெல்க 210 .
அதோட்கொண்டான் 398
அதோளிக்கொண்டான் 159
அத்தாற்கொண்டான் 368
அந்தோ 77
அந்தை 1:0
அந்நூல் 205
அப்பு 30
அமைங்கோடு :86
அம்மை 30
அம்மி 77
அம்மு 328
அம்பர்க்கொண்டான் 405
அம்மணி 205
அம்மகொற்றா 210
அம்மாகொற்றா 210
அயிர்ங்கோடு 363
அரவு 45
அரசகும் 323
அரசக்கன்னி 153, 417
அரவுயர்கொடி 234
அரண்கடுமை 309
அரட்கடுமை 309
அராஅப்பாம்பு 223
அராசக்குட்டி 223
அரையங்கோடு 283
அரையின்குறை 285
அலிக்கொற்றன் 158
அவற்றுக்கோடு 112, 133
அவன்கண் 114

பக். ௧௮௯

அப்பால்மொழி - அப்பகுதியான மொழி என்றது ஒற்று மிகத் தோன்றாத மொழிகளை. இவை அல்வழி என்றதனால் ஒற்று மிகத் தோன்றாத மொழி என்பது பெறப்படும்

பக். ௧௯௦

மூவகைப்பொருள் உயர்திணைப் பெயர் அஃறிணைப்பெயர் விரவுப்பெயர் என்னும் மூவகைப் பெயர், பொருள்—பெயர்

மத்திகை - சவுக்கு

பழுக்காய் - பாக்கு

தடா - மிடா

பக். ௧௯௨

வினைக்குறிப்புப்பண்பு - பண்படியாகப் பிறந்த குறிப்புவினை

நுணா - ஒருமரம்

அத - ,,

தன்னை - எழுத்தாகிய தன்னை

தட - வளைவு

தவ - மிக

வய - வலி

குழ - இளமை

பக். ௧௯௩

இவ்விலேசு என்றது தத்தமொத்த என்ற இலேசினை

பக். ௧௯௪

கம - நிறைவு

இருசொல் - தான்சேர்ந்த சொல்லும் வருசொல்லும்

இவ்வுரையில், இடைச்சொல்லோத்தென்றது சொல்லோத்து என்றிருத்தல்வேண்டும்

அது என்றது இரட்டுதலை

மேல் என்றது வருஞ்சூத்திரத்தை

பக். ௧௯௫

நீட்டும் வழி நீட்டல் - செய்யுள் விகாரங்களுளொன்று

பக். ௧௯௮

கண்ணுத - கருதாத

மறை - எதிர்மறை

தகர் - ஆட்டுக்கடா

பக். ௨௦௨

அருத்தாபத்தி - பொருட்பேறு

பக். ௨௦௩

இருவிள - ஓலை,—ஒருருமாம்

பக். ௨௦௪

மகப்பால் யாடு - மகவுக்குரிய பாலாடு

பக். ௨௦௫

மூங்கா - கீரி

பொருள் என்றது ஈண்டுவருமொழியை

பக். ௨௦௯

இறா - ஒருமீன்

அரா - பாம்பு

உவா - பூரணை

பதினன்கு - சதுர்த்தசி

பெயரெச்சமறை - எதிர்மறைப் பெயரெச்சம்

பக். ௨௧௦

யா - ஒருமரம்

பிடா - ,,

தளா - ,,

பக். ௨௧௨

இறுதிச்சினை - இறுதி எழுத்து. சொல் முதலும், அதனுளடங்கிய எழுத்துக்கள் சினையாதலும் நோக்கிச் சினை என்றார்

கெடுதல். ஈண்டு மாத்திரை குறைதல்

மாட்டேறு என்றது ‘அவற்றுள் ளன்ன’ என்று ௨௨௯-ம் ௨௩௦-ம் சூத்திரங்களோடு மாட்டினமையை

பக். ௨௧௫

இனி - இப்பொழுது



அணி - அணிபவிடம்

உருபின் பொருள் படவந்த வேற்றுமை - வேற்றுமைப் பொருட் புணர்ச்சி

பக். ௨௨௦

பாளிதம் - குழம்பு; சோறு

பக். ௨௨௧

கப்பி - சென்னி இவை அக்காலத்துத் தேய வழக்குப் பெயர்கள்

கூதாளி - ஒருசெடி. தூதுளை யென்பாருமுளர்

கணவிரி - அலரி

பக். ௨௨௨

திங்கள் - மாதம்

பக். ௨௨௭

செரு - போர்

பக். ௨௨௮

உடம்பொடு புணர்த்தது என்றது, மிசும் என்ற உகர வீற்றுச் சொல்லை மிகூஉமென நீட்டிக் கூறி உகர மூகாரமாகுமென்னும் விதியை அதனு ளமைத்தமையை.

பக். ௨௩௧

ஈற்றுப் பொதுவிதி யென்றது, ௨௯௪-ம் சூத்திரவிதியை

பக். ௨௩௩

மாட்டேற்றால் - ௨௯௯—ம் சூத்திரத்து ஆவொடுசிவணும் என்னும் மாட்டேற்றுவிதியால்

மேல் எய்திய வல்லெழுத்து—௨௭௦-ம் சூத்திரத்து விதித்த வல்லெழுத்து

பக். ௨௩௪

மேல் - பின்

பக். ௨௩௫

இகவாமை - வழுவாமை

பக். ௨௩௭

ஏ - அம்பு

சே - மாமரம், எருது

பக். ௨௩௮

விசை - ஒருமரம்

ஞெமை - ஒருமரம்

நமை - ஒருமரம்

பக். ௨௩௯

அரை - ஒருமரம்

பக். ௨௪௨

உழை - பெண்மான்

கலை - ஆண்மான்

முறையன்றிக்கூற்றினுலென்றது, நாளுந்திங்களுமென்னுது திங்களுநாளுமென்று முறைமாறிக் கூறியதனுலென்றதை.

பக். ௨௪௩

சோ - மதில்

வேட்கை - பொருள்கண்மேற் றோன்றும் பற்றுள்ளம்.

அவா - ஆசை

பக். ௨௫௧

ஆண் - ஒருமரம்

காயம் - ஆகாயம்

பக். ௨௫௨

மண் - மண்ணுதல்கழுவல்

பண் - பண்ணுதல்செய்தல்

பக். ௨௫௩

உமண் - உப்பமைக்குஞ்சாதி உமணர்.

பக். ௨௫௪

எண் - எள்

முரண் - முரணுதல், மாறுபடுதல்

பக். ௨௫௭

இல்லம் - தேக்கு

பக் ௨௬௭

செய்கை - புணர்ச்சி

பக். ௨௬௯

அல்லது - வேற்றுமை அல்லாதது அல்வழி

பக். உஎக

முற்கூறிய வல்லெழுத்தென்றது, ௩உஅ-ம் சூத்திரத்து விதித்த வல்லெழுத்தை

குணவேற்றுமையென்றது, பண்புச் சொல் வந்துபுணரும் வேற்றுமைப்புணர்ச்சியை

பக். உஎஉ

நான் - நாண்மீன் (நக்ஷத்திரம்)

பக். உஎ௩

வினையெஞ்சுகிளவி - வினையெச்சச்சொல்

பக். உஎஎ

னகாக்கேடு அதிகாரத்தாற்கொள்கவென்றது, தேனென்னுஞ் சொற்குக்கேடு முதற்சூத்திரத்ததிகாரப்பட்டு நிற்றலின் அவ்வதிகாரத்தாலிதர்குங் கொள்க என்றபடி.

பக். உஅ௦

மின் - மின்னுதல்; தொழில்
மின் - பொருள், பெயர்

பக். உஅஉ

புறனடை - புறனடுத்துவருவது
அழான்,புழான் இவையக்காலத்து வழங்கிய இயற்பெயர்கள்

பக். உஅ௩

தான், பேன், கோன், இவையக்காலத்து வழங்கிய இயற்பெயர்கள் பிறவுமன்ன

பக். உஅஎ

மேலைச்சூத்திரமென்றது வருஞ் சூத்திரத்தை (௩௫௧)
மகன்வினைபென்றது கலாமென்றதை

பக். உஅகூ

ஆர் - ஆத்தி
வெதிர் - மூங்கில்

பீர் - ஒருகொடி, ஒருமரமென்பாருமுளர்.

பக். உகூ௫

வல் - சூதாடுகருவி

பக். உகூசு

பூல் - புல்லாந்தி
வேல் - ஒருமரம்

பக். ௩௦௦

பூழ் - காடை

பக். ௩௦சு

அதோள் - அவ்விடம், இதோள் முதலியனவுமன்ன ; இவையக் காலத்து வழங்கியன

பக். ௩கக

தாழ் - தாழ்ப்பாள்

பக். ௩க௩

ஆர்க்கு - கெட்டு
ஈர்க்கு - இக்காலத்து ஈக்கு என்பர்
நொய்ம்பு -

பக். ௩௩௩

நடைமருங்கு - நடக்குமிடம்

பக். ௩௩௫

ஒற்றியதகரம் - ஒற்றாய்நின்ற தகரம்

பக். ௩௩அ

சிவணல் - பொருந்தல்
வழக்கத்தான - வழக்கிடத்து.
ஆன் ஆனவெனத் திரிந்து நின்றது

பக். ௩சஅ

முதனிலைக்கிளவி - ஒன்று
வழிநிலைக்கிளவி - இரண்டு

## முற்பதிப்புக்களில் விளக்கப்படாத மேற்கோள் விளக்கம்

"தூஉஉத்தீம்புகைத்தொல்விசும்பு" [மலைபடு. இறுதி-வெண்பா]
6-ம் சூ. "இலாஅர்க்கில்லைத்தமர்" [நாலடியார் 283]
"விராஅஅய்ச்செய்யாமை நன்று" [நாலடி--246]
"மரீஇஇப் பின்னைப்பிரிவு" [ நாலடி-220]
40-ம் சூ. "கண்ண்டண் ணெனக்கண்டுங் கேட்டும்" [மலைபடுக 352]
50-ம் சூ. "குரங்குளைப் பொலிந்த கொய்சுவற்புரவி" [அகம். ச.]
51-ம் சூ. "அந்நூலை முந்நூலாக் கொள்வானும்போன்ம்"[கலித்-103]
"சிதையுங் கலத்தைப் பயினாற்றிருத்தித்
"திசையறி மீகானும் போன்ம்" [பரி-10-55]
57-ம் சூ. "கௌவை நீர்வேலிகூற்று" (வெண்பா-IV. 23)
64-ம் சூ. "ஞமலிதந்த மனவுச்சூலுடும்பு" (பெரும்பாண்-132)
111-ம் சூ. "இரும்பு திரித்தன்ன மாயிருமருப்பிற்
பரலவல்லடைய விரலை தெறிப்ப" (அகம்-4)
"கருங்கா லோமைக் காண்பின் பெருஞ் சினை" (அகம்-3)
"தெய்வமால்வரைத் திருமுனியருளால்" (சிலப்-3 - காதை)
119-ம் சூ. "எடுத்த நறவின் குலையலங் காந்தள்" (கலி-40)
131-ம் சூ. "அகடு சேர்பு பொருந்தியளவினிற் றிரியாது" (மலைபடு-33)
140-ம் சூ. "ஏஎயிவளொருத்தி பேடியோ" (சீவக–652)
157-ம் சூ. " மழவரோட்டிய " (அகம்–1)
" வரைவாழ் வருடை " (மலை–503)
176-ம் சூ. " கண்ணரக்காணக்கதவு " (முத்தொள்–42)
180-ம் சூ. "ஒன்றுகநின்ற கோவினையடர்க்க வந்த" (சிந்தா–)
191-ம் சூ. "எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை" (குறள்–582)
246-ம் சூ. "வெண்கூதாளந்துத்தண்பூங்கோதையர்" (பட்டின-85)
"கணவிரமாலையிடூஉக்கழிந்தன்ன" (அகம்–31)
290-ம் சூ. "குன்றுறழ்ந்த களிறென்கோ
"கொய்யுளை மா வென்கோ" (புறம். 387)
300-ம் சூ. "வெயில் வெரிநிறுத்த பயிலிதழ்ப்பசுங்குடை" (அகம்-37)
306-ம் சூ. "தாழ்பெயல் கனைகுரல் கடுப்பப் பண்ணுப்பெயர்த்து" (மதுரை–560)
316-ம் சூ. "இலம்படுபுலவ ரேற்றகை நிறைய" (மலை. 576)
345-ம் சூ. "மின்னு நிமிர்ந்தன்ன" (புறம்-57)
356-ம் சூ. "பொலம்படப்பொலிந்த கொய்சுவற்புரவி" (மலைப-574)
483-ம் சூ. ' கைத்தில்லார் நல்லர் ' (நான்மணி)
' காரெதிர் கானம்பாடினேமாக ' (புறம்-144)
' வேர்பிணி வெதிரத்துக்கால் பொரு நரலிசை ' (நற்றி–62)
' நாவலந்தண் பொழில் ' (பெரும்பாண். 465)
' கானலம் பெருந்துறை ' (ஐங்குறு–158)
327-ம் சூ. 'தும்புச் செறுப்ப' (குறள்–கருகஅ.)
356-ம் சூ. 'பொலமலரா விரை' (கலி–138)

# விஷய அகராதி

[எண்—பக்க எண்]


**அ**

அக்குச்சாரியையின் முதலொழிய ஏனைய கெடுதல் 132
அகக்கருவி 36
அகச்செய்கை 37
அகப்புறக்கருவி 36
அகப்புறச்செய்கை 37
அகம் என்னுஞ் சொல் கையென் பதனோடு புணருதல் 259
அகர ஆகார உகர ஊகார ஏகார ஔகாரவீற்று மொழிகள் வேற்றுமை யுருபுகளோடு புணருதல் 173
அகரச்சுட்டின் முன் வரும் மெல்லினம் மிகுதல் 194
அகரச்சுட்டின் முன் உயிர் புணர்தல் 195
அகரச்சுட்டுச் செய்யுளிடத்து நீளல் 195
அகரச்சுட்டின் முன் இடையெழுத்து முதன்மொழி வரின் வகரந் தோன்றுதல் 194
அகரத்தின் பின் யகரமெய் நின்று ஐகாரம் போல ஒலிக்குமென்பது 87
அகர ஆகாரம் பிறக்குமியல்பு 101
அகரவீறு வல்லினம் வரின் வேற்றுமையில் மிகுமென்பது 203
அகரவீற்று மரப்பெயர் முன் வேற்றுமையில் மெல்லினம் மிகுதல் 203
அகரமும் இகரமும் ஐகாரம்போன்றொலித்தல் 86
அகரவீற்று வினைச்சொல் இடைச்சொற்களின் முன் வல்லினம் வரின் மிகுதல் 193
அகரவீற்றுப் பெயர்ச்சொற்களின் முன் வல்லினம் மிகுதல் 192
அகலவுரை யின்னதென்பது 18
அகரமும் உகரமும் ஔகாரம் போல ஒலித்தல் 87
அடையடுத்த ஆயிரம் புணரு 262
அத்துச்சாரியை முதல் கெடு 131
அதிகாரத்தின் பொருள் 25
அம்சாரியையி னீறு வன்கணத்தின் முன் திரிதல் 133
அம்சாரியையி னீறு மென்கணத்தின் முன்னும் இடைக்கணத்தின் முன்னும் கெடுதல் 133
அம்மவென்னு முறையசை யிடைச்சொல் லிறுதி நீளுமென்பது 200
அரையென்னுஞ் சொல் ஏயென் சாரியை பெறுமை 166
அழன் புழன் என்பன உருபு வருங்காலடையும் முடிபு 184
அழன் என்னுஞ் சொல் வல்லினத்தோடு புணருமாறு 285
அளபெடை 43
அளத்தலின் வகை 46
அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும் 63
அளபெடையில் நெட்டெழுத்தின் பின் அவ்வவற்றிற் கினமான குற்றெழுத்து இசை நிறைத்தல் 72
அளவுப்பெயரும் எண்ணுப்பெயரும் நிறைப்பெயரும் புணருமாறு 165
அளவுக்கும் நிறைக்கு மொழிக்கு முதலா மெழுத்துக்க ளிவையெனல் 169
அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வருங்கால் ஐந்தும் மூன்றும் அடையுந் திரிபு 339
அறுவகைத் தொடர்க் குற்றுகரமும் அல்வழியில் வல்லினம்வரினியல்பாதல் 324

அன்ன வென்னு முவமக் கிளவி முதலிய அகரவீற்றுச் சொற்க ளியல்பாதல் 196

ஆ

ஆகாரவீறு அல்வழியில் முடியுமாறு 205
ஆகாரவீற்று உம்மைத் தொகை முடியுமாறு 206
ஆகாரவீறு வேற்றுமைக்கண் முடியுமாறு 208
ஆடூஉ மகடூஉ முதலியன வேற்றுமைக்கண் இன் சாரியை பெறுதல் 233
ஆண் என்னும் மரப்பெயர்முன் வல்லினம் புணர்தல் 251
ஆண் பெண் என்பனவற்றிற்கு முன் வல்லினம் புணர்தல் 250
ஆதனும் பூதனுந் தந்தையொடு புணர்தல் 281
ஆ-மா விளிப்பெயர் முதலிய ஆகாரவீறுகள் அல்வழியில் முடியுமாறு 207
ஆய்தம் உருவினும் இசையினும் அளபெடுத்து வருமென்பது 71
ஆய்தம் புணர்மொழியகத்தும் வருமென்பது 71
ஆய்தம் வருமாறு 69
ஆயிரம் அத்துச்சாரியை பெறுதல் 261
ஆயிரமும் - அடையடுத்த ஆயிரமும் அளவுப்பெயர் நிறைப்பெயர்களோடு புணருதல் 262
ஆயிரம் வருங்கால் முதலீரெண்ணின் உகரங்கெடுதல் 345
ஆயிரம் வருங்கால் முதலீரெண்கள் முதனிலை நீடல் 345
ஆயிரம் வருங்கால் மூன்றனொற்றடையுந்திரிபு 345
ஆயிரம் வருங்கால் நான்கனொற்று அடையுந்திரிபு 346
ஆயிரம் வருங்கால் ஐந்தனொற்று அடையுந்திரிபு 346
ஆயிரம் வருங்கால் ஆறடையுந் திரிபு 346
ஆர் முதலியவற்றின் முன் மெல்லெழுத்து மிகுதல் 289
ஆறனுருபினகரங் கெடுதல் 123
ஆறனுருபிற்கும் நான்கனுருபிற்கும் முன்னிற்கும் குற்றொற்றிரட்டாமை 163
ஆறனுருபும் நான்கனுருபும் வருமிடத்து நும்மெனிறுதி புணருமாறு 164
ஆறன்முதனிலை அகலும் உழக்கும் வருங்காலடையுந் திரிபு 342
ஆனீறு பொருட்புணர்ச்சிக் கட்டிரிதல் 130
ஆனொற்று அகரம் பெறுமென்பது 212
ஆனொற்றின் முன் ஈகார பகரம் குறுகுதல் 213

இ

இ ஈ எ ஏ ஐ என்பவற்றின் பிறப்பு 102
இகரவீற்றின் முன் இக்குச்சாரியை முதல் கெடல் 131
இகரவீற்றுயர் திணைப்பெயர் திரிதல் 154
இகரஐகாரவீறுகள் வல்லினம் வர முடியுமாறு 160
இகரவிறுதிப் பெயர்கள் வேற்றுமைக்கண் மிகுதல் 214
இகரவீற்றுச் சுட்டுப்பெயர் முடியுமாறு 216
இசைமரக்கிளவி முதலியன முடியுமாறு 238
இடைத்தொடராகாமை 313
இடைத்தொடராய்தத் தொடர்க் குற்றுகரங்கள் முன் வல்லினம் வந்து புணர்தல் 317
இடையின மெய்கள் 55
இடைநிலை மயக்கம் 55
இயற்பெயர் பண்படுத்து வருங்காலியல்பாதல் 282



இயற்பெயர் அம்சாரியை பெறுதல் 282
இரண்டாம் வேற்றுமைத் திரிபு புணர்ச்சி 157
இரண்டு முதல் ஒன்பான் முன் 'மா' வென்னும் அளவுப்பெயர் புணர்தல் 355
இராவென் கிளவி வேற்றுமைக்கண் முடியுமாறு 209
இருள் என்பது அத்துப் பெறுமாறு 308
இருமொழிகளில் மாத்திரம் சகர உகரம் ஈறாகுமென்பது 95
இல்லம் என்னும் மரப்பெயர் வல்லினத்தோடு புணர்தல் 257
இல்லென்கிளவி வல்லினத்தொடு புணர்தல் 293
இலம் என்பது படுவென்பதனோடு புணர்தல் 259
இன்சாரியை முதல் திரிதல் 127
இன்சாரியை ஈறுதிரிதல் 128
இன்னுருபிற்கு இன்சாரியை வாராமை 134
இன்றியென்னும் வினையெச்சம் முடியுமாறு 216
இனவொற்றுமிகும் குற்றுகரம் இன்சாரியை பெறாதென் 186
இனி அணியென்னும் இடைச்சொற்கள் முடியுமாறு 215

ஈ

ஈகாரவிறுதி அல்வழியில் பெறும் முடிவு 222
ஈகாரவிறுதி வேற்றுமையில் பெறும் முடிபு 224
ஈதலியல்பு 3
ஈம், கம், உரும் என்பன உகரம் பெறுதல் 270
ஈமும் கம்மும் அக்குச்சாரியை பெறுதல் 271
ஈரொற்றாய் மயங்கும் எழுத்துக்கள் 79
ஈவோரின்வகை 2
ஈறாகாதஎழுத்துக்கள்ஈறாமிடம் 94

உ

உ,ஊ,ஒ,ஓ, ஒள பிறக்குமாறு 103
உகரத்தோடு சேர்ந்தபுள்ளியிறுதி முன் உயிரும் யகரமும் வந்து புணர்தல் 164
உகரவிறுதி அல்வழியில் முடியுமாறு 225
உகரவீற்றுச் சுட்டின்முன் அல்வழியில் வல்லினம் வந்து புணர்தல் 225
உகரவீற்றுச் சுட்டுப்பெயர் மெல்லினம் முதலியன வருங்கால் முடியுமாறு 225
உகரவீற்றுச் சுட்டுப்பெயர் செய்யுள் முடிபு பெறுமாறு 226
உகரவீற்றுப்பெயர் வேற்றுமையில் முடியுமாறு 226
உகரவீற்றுச் சுட்டுப்பெயர் முடியுமாறு 229
உகரங் குறுகுமிடம் 312
உகரம்அரைமாத்திரைபெறல் 314
உடம்பொடு புணர்த்தல் 38
உடம்படுமெய் தோன்றுதல் 141
உண்டு என்னுங் குற்றியலுகரத்தின் முடிபு 327
உதிமரக்கிளவிவேற்றுமையில்முடியுமாறு 219
உயர்திணைப் பெயர்முன் நாற்கணமும் புணர்தல் 152
உயிரெழுத்துக்கள் 47
உயிர், மெய்யொடுகூடினும் அளவு திரியாமை 49
உயிர்மெய் வழங்குமாறு 52
உயிர்மெய் ஒலிக்குமாறு 54
உயிர்மெய் மொழிக்குமுதலாத 88
உயிர்கள் மொழிக்கு ஈறுமாறு 92
உயிரெழுத்துக்களின் பிறப் 101
உயிர்மெய்யீறு உயிரீறாகக் கொள்ளப்படுதல் 113
உரியென்கிளவி நாழியொடு புணர்தல் 217
உருபு வருங்கால் ஒற்றிரட்டும் குற்றியலுகரவீறுகள் 186

உருபு வருங்கால் நீயென்பது திரியுமாறு 176

ஊ

ஊகாரவிறுதி அல்வழியில் முடியுமாறு 230
ஊகாரவீற்று வினையெச்சமும் முன்னிலைமொழியும் அல்வழியில் பெறும் முடிபு 230
ஊகாரவீற்று வேற்றுமைப் புணர்ச்சி 231
ஊவென்பெயர் வேற்றுமையில் முடியுமாறு 232
ஊவென்னும் பெயர் அக்குச்சாரியை பெறுதல் 233

எ

எஃகுதல் 38
எகரஒகரம் புள்ளிபெறுதல் 52
எகரஒகரம் ஈறாகுமிடம் 234
எகின் என்பது புணருமாறு 275
எகின் என்னும் பறவைப்பெயர் புணருமாறு 275
எச்சவுரை 18
எட்டுவகை 25
எடுத்தல் படுத்தல் நலிதல் விலங்கல் 103
எடுத்தோத்தானும் இலேசானும் முடியாதனவற்றை முடித்ததற்குவிதி 360
எண்ணென்னும் உணவுப்பெயர் அல்வழியிற் புணர்தல் 254
எண்ணுப்பெயர்க் குற்றுகரங்கள் பெறுஞ்சாரியை 187
எருவுஞ் செருவும் வேற்றுமைக்கண் முடியுமாறு 227
எல்லாம் என்னும் பெயர்பெறுஞ்சாரியை 181
எல்லாம்என்னும் தன்மைப்பெயர் பெறுஞ்சாரியை 182
எல்லாரும்எல்லீரும்என்பன உருபு வருங்கால் முடியும் முடிபு 182
எல்லாரும்எல்லீரும்என்பன வேற்றுமைக்கட் புணர்தல் 265
எல்லாமென்பது இருவழியிலும் புணருமாறு 265
எல்லாமென்பது அல்வழிக்கண் மெல்லெழுத்து மிகப்பெறுமாறு 266
எல்லாம் என்னுந் தன்மைப் பெயர் வேற்றுமைக்கண் புணருமாறு 267
எழுத்துக்களுருவுடையவென்பது 32
எழுத்துக்களின் பிறப்பிற்குப் புறனடை 108
எழுத்துக்கள்பெறுஞ்சாரியை 138
எழுத்துக்களின் பிறப்பு 100

ஏ

ஏகாரவீற்றுப் பெயர் அல்வழியில் முடியுமாறு 235
ஏகாரவீறு வேற்றுமையில் முடியுமாறு 236
ஏயென் னிறுதி எகரம்பெறு 236
ஏழ், அன்சாரியை பெறுதல் 185
ஏழ், ஆயிரத்தொடு புணர்தல் 303
ஏழ், உயிர் முதன்மொழியொடு புணர்தல் 305
ஏழ், தாமரை முதலியவற்றொடு புணருமாறு 304
ஏழ், பத்தொடு புணருமாறு 303
ஏழனுருபுஅத்துச்சாரியைபெ 177
ஏழாம் வேற்றுமை இடப்பொருளுணரநின்ற இகர, ஐகாரவீற்றிடைச்சொற்களின் முன் வல்லினம் புணர்தல் 161
ஏழென்னுஞ் சொல் வேற்றுமைக்கட் புணருமாறு 302
ஏழென்னுஞ் சொல்லின் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் புணருமாறு 302
ஏறிய உயிர்நீங்கிய வழி மெய்கள் புள்ளி பெறுமென்பது 141

ஐ

ஐகாரத்திற்கு இகரமும் ஔகாரத்திற்கு உகரமும் இசைநிறைக்கும் எழுத்துக்களாய் நிற்றல் 73
ஐகாரம் ஒரு மாத்திரை ஒலிக்குமிடம் 87
ஐகார ஔகாரங்கள் கான்சாரியை பெறுதல் 139
ஐகாரவீற்றின் முன் இக்குச் சாரியை முதல் கெடுதல் 132
ஐகாரவீற்றுப் பெயர் முடியுமாறு 238
ஐகாரவீற்றுச் சுட்டுப்பெயர் முடியுமாறு 238
ஐகாரவீற்று நாட்பெயருந் திங்கட்பெயரும் முடியுமாறு 238
ஐந்திரம் இதுவென்பது 12
ஐ விலங்கலுடையது 103

ஒ

ஒகரம் நகரத்தோடு ஈறாதல் 93
ஒடுமரக்கிளவி முடியுமாறு 229
ஒருபஃது இருபஃது முதலியன பெறுஞ் சாரியை 187
ஒரு மொழியில் மாத்திரம் பகரம் உகரத்தோடு கூடி ஈறாதல் 95
ஒழியிசைஒகாரம் முடியுமாறு 244
ஒற்றிடை மிகப் பெறாத நெடிற்றொடர் உயிர்த்தொடர்களின் முன் வல்லினம் மிகாமை 317
ஒற்றிடை மிகப் பெறும் நெடிற்றொடர் உயிர்த்தொடர்களின் முன் வல்லினம் வந்து புணர்தல் 316
ஒன்பதன்முன் பத்துப் புணர் 335
ஒன்பதன்முன் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் புணர்தல் 342
ஒன்பதன் முன் நூறு புணர் 344
ஒன்பதன்முன் ஆயிரம் புணர் 347
ஒன்றின் முன் பெயர்களுள் உயிர் முதன்மொழியும் யா முதன் மொழியும் புணர்தல் 354
ஒன்று பலவாதலின் விளக்கம் 33
ஒன்று முதலியவற்றோடு பத்துப் புணர்தல் 332
ஒன்றுமுத லொன்பான்களோடு நூறு புணர்தல் 343
ஒன்று முதலியவற்றின் முன் நூறாயிரம் புணர்தல் 348
ஒன்று முதலிய பத்தூர் கிளவியொடு ஒன்று முதலிய எண்கள் புணருமாறு 351
ஒன்று முதலாகிய பத்தூர் கிளவியொடு ஆயிரம் புணர்தல் 351
ஒன்று முதலாகிய பத்தூர் கிளவியொடு அளவும் நிறையும் புணர்தல் 352
ஒன்று முதலிய ஒன்பதெண்களோடு பொருட்பெயர் புணர்தல் 353

ஓ

ஓகாரம் எதிர்மறைப் பொருளிலும் ஐயப்பொருளிலும் வந்து முடிதல் 243
ஓகாரவிறுதி ஒன்சாரியை பெறுதல் 177
ஓகாரவிறுதி அல்வழிக்கண் முடியுமாறு 243
ஓகாரவிறுதி வேற்றுமையில் முடியுமாறு 244
ஓரெழுத்து மூன்று மாத்திரை இசையாதென்பது 42
ஓரெழுத்து மொழிகள் 74

ஔ

ஔகாரம் ககரவகரங்களோடு மாத்திரம் கூடி ஈறாகுமென்பது 93
ஔகாரவீறு இருவழியும் முடியுமாறு 246

க

ககார ஙகாரம் பிறக்குமியல்பு 103
க ச த பக்களின் முன் தோன்றும் ஒற்றுக்கள் 144
க ச த பக்களை முதலாகவுடைய அளவுப்பெயர் வருங்கால் மூன்றனொற்றடையுந்திரிபு 337
க த ந ப ம என்னும் ஐந்து மெய்களும்மொழிக்கு முதலாதல் 88
கதம்பமுகுள நியாயம் 22

கலமென்னு மளவுப்பெயர் பெறுஞ்சாரியை 168
கழற் பெய்குடம் 3
களங்கடியப் பட்டோர் 5
கற்கப் படாதோரின் வகை 3
கற்கப்படுவோரின் வகை 2
கற்பிக்கப் படாதோரின் வகை 4
கற்பிக்கப் படாதோரினியல்பு 4
கற்பிக்கப்படுவோரின் வகை 4
கற்பிக்கப்படுவோரினியல்பு 4
கன் அகரச்சாரியைபெறுதல் 280

**கீ**

கீழ், வல்லினத்தோடுபுணருத 305

**கு**

குண்டிகைப் பருத்தி 3
குமிழென்னும் மரப்பெயர் புணருமாறு 301
குயின் என்பது புணருமாறு 274
குற்றிய லிகரம் புணர்மொழியிடத்தும் வருதல் 67
குற்றியலிகர மிதுவென்பது 66
குற்றிய லுகர மிதுவென்பது 67
குற்றிய லுகரம் அரைமாத்திரையிற் குறுகல் 69
குற்றியலுகரம்மொழிமுதலாத 91
குற்றியலுகர வீற்றளவுப் பெயர் இன்சாரியை பெறுதல் 167
குற்றியலுகரம் இன்சாரியை பெறல் 185
குற்றியலுகரம் குறுகுமிடம் 315
குற்றியலுகரம் இகரமாதல் 316
குற்றுகர எண்ணுப்பெயர்முன் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் புணர்தல் 335
குற்றெழுத்துக்கள் 41
குற்றெழுத்துக்கள் தனித்து மொழியாகாமை 74
குற்றெழுத்துக்கள் பெறுஞ்சாரியை 139
குற்றெழுத்தின் பின்வந்த ஊகாரமும் ஓரெழுத் தொருமொழி ஊகாரமும் வேற்றுமைக்கண் முடியுமாறு 231
குறியதன் முன்னின்ற ஆகார வீறும் ஓரெழுத்து மொழியாய ஆகாரவீறும் வேற்றுமைக்கண் முடியுமாறு 208
குறையென்பது அல்வழிக்கண் அளவுப்பெயர் முதலியவற்றின் முன் புணருமாறு 167

**கொ**

கொள்வோரின் வகை 4
கொழுதன்னூசி விளக்கம் 14

**கோ**

கோடன் மரபு 5
கோவென் பெயர்முன் இல் வந்து புணர்தல் 245

**ங**

ங, ஞ, ண, ந, ம, ன முன் மயங்குவன 58

**ச**

சகரம் அ, ஐ, ஔ என்னும் மூன்றுமல்லாத உயிர்களோடு மொழிக்கு முதலாதல் 89
சகார ஞகாரம் பிறக்குமியல்பு 103

**சா**

சார், காழோடு புணருமாறு 290
சார்த்தி யளத்தல் 46
சார்பெழுத்தின் வகை 39
சார்பெழுத்துக்கள் பெறும்மாத்திரை 50
சார்பெழுத்துக்களின் பிறப்பு 107
சாரியைகள் 126
சாரியை பெற்றும் பெறாதும் வருவன 189
சாவவென்னும் செயவெனச்சத்திறுதி கெடுதல் 196

**சி**

சிறப்புப்பாயிரத்திலக்கணம் 6
சிறப்புப்பாயிரத்தின்வகை 6
சிறப்புப்பாயிரம் செப்புமாறு 6





**சு**

சுட்டுச்சினை நீடிய மென்றொடர்க் குற்றியலுகரமும் யாவினா முதலிய மென்றொடர்க் குற்றியலுகரமும், வல்லெழுத்து மிகப்பெறுதல் 325
சுட்டுச்சினை நீடிய மென்றொடர்க் குற்றுகரமும் யாவினா முதன்மொழிக் குற்றுகரமும் மென்றொடராகாமை 326
சுட்டு முதல் வகரம் அல்வழிக்கண் ஆய்தமாதல் 298
சுட்டுமுதல்வகரத்தின்முன் இடையினமும் உயிரும் வந்து புணர்தல் 299
சுட்டுமுதல்வயினும் எகரமுதல்வயினும் புணருமாறு 274
சுட்டுமுதலாகிய ஆய்தத்தொடர்மொழிக்குற்றுகரம் உயிர்வருவழிக்கெடாமை 323
சுட்டுமுதலாகிய வையெனிறுதி வற்றுச்சாரியை பெறுதல் 175
சுட்டெழுத்துக்கள் 62
சுவைப்புளி உணாநின்றபெயர்வேற்றுமையில் முடியுமாறு 220

**சூ**

சூத்திர உரைவகை 13

**செ**

செய்யாவெனும்வாய்ப்பாட்டுவினையெச்சம் முடியுமாறு 205
செய்யுளாவது இதுவென்பது 9

**சே**

சேவென் மரப்பெயர் வேற்றுமையில் முடியுமாறு 237

**சொ**

சொற்சீரடியின்னதென்பது 23

**ஞ**

ஞகர நகர வீற்று மொழிகள் இன்சாரியை பெறுதல் 178
ஞகரமெய் ஒருமொழிக்கே யீறுதல் 98
ஞகரவீற்றுத் தொழிற் பெயர் வல்லினம்வரின் முடியுமாறு 247
ஞகாரம் ஆ-எ-ஒ என்னும் மூன்றுயிரொடு மொழிக்குமுதலாத 90
ஞகாரம் எகரஒகரங்களோடீறுகாமை 94
ஞகரவீற்றுத்தொழிற்பெயர்மெல்லினம்வரின் முடியுமாறு 248
ஞ, ந, ம, வ முன் யகரமயங்குமென்பது 59

**ட**

டகாரணகாரம் பிறக்குமியல்பு 103
ட ற ல ள வென்னும் புள்ளிமுன் மயங்குவன 57

**ண**

ணகரம் வேற்றுமையில் டகரமாதல் 250
ணகர வீற்றுக் கிளைப்பெயர்கள்புணருமாறு 253
ணகர வீற்றுத் தொழிற்பெயர்கள் புணருமாறு 252
ண ள முன்வருந் தகர நகரத்திரிபு 150
ணனக்களின்முன், மொழிக்கு முதலாமெழுத்து மொழிகள்வந்து புணர்தல் 149
ணனக்களின்முன் வல்லினமொழிந்தனவந்துபுணர்தல் 149
ண ன முன் மயங்குவன 59

**த**

தகார நகாரம் பிறக்குமியல்பு 104
தம்பெயர் கூறுமிடத்து மெய்கள் முதலில்நின்று மயங்குமாறு 78
தமிழ் அக்குப் பெறுதல் 300
தனித்துக் கூறினும் மொழியாகச் சேர்த்துக் கூறினும் எழுத்தின்றன்மை திரியாதென்பது 84
தனிமெய்க் ளகரத்தோடு கூடி இயங்குதல் 77

தா


தாய் என்னுஞ்சொல் மகன்வினையோடு புணர்தல் 287
தாய் என்னுஞ்சொல் வேற்றுமைக்கண் புணருமாறு 287
தாழ் கோலோடு புணருமாறு 300
தான் என்னும் விரவுப்பெயர் புணருமாறு 284
தான் முதலிய இயற்பெயர் புணருமாறு 283
தான் யான் என்பன முடியும் முடிபு 184


தி


திங்களை யுணரநின்ற பெயர்கள்முன்தொழிற்பெயர்வந்துபுண 222
திசைப்பெயர்கள் ஏழனுருபோடு புணர்தல் 189
திரிந்ததன்திரிபு அது 33
திரிந்ததன்றிரிபு அதுவும் பிறிதுமென்றல் 34
திரிந்ததன்றிரிபு பிறிது 34
திரிபு புணர்ச்சி மூன்று 116


து


துலாக்கோலின்றன்மை 2


தூ


தூணிக் கிளவி அல்வழியில் முடியுமாறு 217


தெ


தெவ் இன்சாரியை பெறுதல் 179
தெவ்வென்னும் வகரவீற்றுச்சொற்புணர்ச்சி 299
தெறித்தளத்தல் 46


தே


தேங்கமுகந்தளத்தல் 46
தேன், இறால் என்னும் வருமொழியொடு புணருமாறு 278
தேன், இறாலோடு புணருங்கால் தேத்திறால் எனவருமென் 279
தேன்என்பதன் ஈறுகெடுதல் 277
தேன் என்பதன்முன் மெல்லெழுத்து முதன்மொழி வந்து 278
தேன் என்னுஞ் சொல்லோடு வல்லினம் புணர்தல் 277


தொ


தொல்காப்பியப் பாயிரஞ் செய்தவர் 7
தொல்காப்பிய மரங்கேற்றியபோது கேட்டவர் 11
தொல்காப்பிய மரங்கேற்றிய அரசசபை 10
தொல்காப்பியர் நூல்செய்தகாலத்து வழங்கிய வேதங்களின் பெயர் 11


ந


நகர வகரங்கள் உகர ஊகாரங்களோ டீருகாமை 94
நகரமெய் ஈறுமாறு 98
நகாரவீற்று அல்வழிப்புணர்ச் 248
நகாரவீற்று வேற்றுமைப் புணர்ச்சி 248


நா


நாட்பெயர்கள் தொழிற் பெயர்களொடு புணர்தல் 221
நாயும் பலகையும் வருங்கால் வல்லென்கிளவி புணருமாறு 295


நி


நிலத்தின்றன்மை 2
நிலாவென்கிளவி வேற்றுமையில் முடியுமாறு 209
நிலைமொழி வருமொழிகள் அடையொடு நின்றுபுணர்தல் 117
நிலைமொழி யீற்றுமெய் அத்தின் முன்னும் வற்றின் முன்னும் கெடுதல் 137
நிலைமொழி யீற்றுமுன் வன்கணம் ஒழிந்தன புணருதல் 145
நிலைமொழி யீற்றுமுன் மென்கணம்புணர்தல் 147
நிலையாதென்றல் 35
நிலையிற்றும் நிலையாதுமென்ற 35
நிலையிற்றென்றல் 35
நிறுத்தளத்தல் 46


நீ


நீ-பீ-மீ என்பன முடியுமாறு 222
நீ. வேற்றுமைக்கண்முடியுமா 224


நு


நுட்பவுரை யின்னதென்பது 18
நும்மென்பது அல்வழிக்கண் புணருமாறு 269
நும்மென்பது வேற்றுமையிற்புணருமாறு 268
நும்மென்னும் மகரவீறு சாரியை பெறுமை 180


நூ


நூல்செய்தான் பாயிரஞ்செய்தலாகாதென்பது 7
நூல்செய்வோனிலக்கணம் 13
நூறன்முன் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் புணர்தல் 350
நூறன்முன் ஒருபஃது முதலியன புணர்தல் 350
நூறன்முன் ஒன்றுமுதலிய எண்ணுப்பெயர்கள் புணர்தல் 349
நூறு வருங்கால் மூன்றனொற்றடையுந்திரிபு 343
நூறு வருங்கால் நான்கும் ஐந்தும் ஒற்று மெய் திரியாமை 343


நெ


நெட்டெழுத்துக்கள் 41
நெட்டெழுத்துக்களின் முன்னர் மெய்கள் புணருமாறு 162
நெட்டெழுத்தின் பின்னின்றலகரம் இயல்பாதல் 292
நெட்டெழுத்தின் பின்னின்ற ளகாவிறுதி புணருமாறு 307
நெட்டெழுத்துப்பெறுத சாரியைகள் 138
நெடிற்றொடரும் வன்றொடரும் வல்லினத்தோடு புணருங்கால் அம்சாரியை பெறுதல் 320
நெல்-செல்-கொல் என்பன அல்வழியிற் புணருமாறு 293






ப


பகார மகாரம் பிறக்குமியல்பு 106
பத்தின்முன் ஆயிரம்புணர்தல் 330
பத்தின்முன் இரண்டுபுணர்த 330
பத்தின்முன் நிறைப்பெயரும் அளவுப்பெயரும் புணர்தல் 331
பத்தின்முன் எண்ணுப் பெயர் புணர்தல் 329
பத்துவரின் எட்டனொற்று ணகாரமாதல் 334
பத்துவரின் ஐந்தனொற்று மகாரமாதல் 334
பத்துவரின் ஒன்று மிரண்டு மடையுந் திரிபு 333
பத்துவரின் நான்கனொற்றடையுந் திரிபு 334
பல்லபல முதலியன வற்றுச்சாரியை பெறுதல் 175
பலசிலவென்பன இறுதிநீளு 200
பலசில வென்பன தம்முன்றாம் வந்து புணருதல் 202
பலபொருட்குப் பொதுவாகிய புணர்மொழிகள் புணர்க்கப்படுமாறு 143
பல, வேற்றுமையில் வற்றுப்பெறுதல் 205
பன்னீருயிரும் மொழிமுதலா 88
பனியென்னுங் காலப்பெயர் வேற்றுமையில் முடியுமாறு 218
பனை அவரை ஆவிரை முதலியன முடியுமாறு 239
பனைமுன் அட்டுமுடியுமாறு 240
பனைமுன் கொடிபுணருமாறு 240
பனையென் னளவுப்பெயரும், காவென் நிறைப்பெயரும் பெறுஞ் சாரியை 168


பா


பாயிரம் செய்வார் 7
பாயிரத்தின்வகை 2
பாயிரம் இன்னதென்பது 2
பாழ்வல்லினத்தொடு புணரு 302


பீ


பீர் அம்சாரியை பெறுதல் 290

பு
புணர்க்கப்படாத சொற்கள் 357
புணர்ச்சி நான்குவகைப்படுமென்பது 113
புணர்மொழி யகத்துச் சாரியை வருமென்பதூஉம் வாராதமொழிகளும் உளவென்பதூஉம் 135
புள், வள் என்பன உகரச்சாரியை பெறுதல் 308
புள்ளிமயங்கியலுள் முடிக்கப்படாத செய்யுள்முடிபு 356
புள்ளியீற்றின் புறனடை 310
புள்ளியீற்று முன்னும் குற்றுகரவீற்றுமுன்னும்உயிர்புணர் 139
புளிமரக்கிளவி வேற்றுமையில் முடியுமாறு 219
புறக்கருவி 36
புறச்செய்கை 37
புறப்புறக்கருவி 36
புறப்புறச்செய்கை 37

பூ
பூல் வேல் ஆல் என்பன புணருமாறு 296
பூவின்றன்மை 2

பெ
பெண்டு என்னுஞ்சொல் அன்சாரியை பெறுதல் 322
பெய்தளத்தல் 46
பெயர்களின் பின் சாரியை வருமென்பது 125
பெயர்ச்சொல் இத்துணையவென்பது 125
பெருந்திசை இரண்டு புணர் 328
பெருந்திசையோடு கோணத்திசை புணர்தல் 328
பெற்றத்தை உணர்த்தும்சேவென்னும் பெயர் முடியுமாறு 237

பொ
பொதுப்பாயிரத்தின் வகை 2
பொழிப்புரையின்னதென்பது 18
பொன் என்பது செய்யுளிற்புணருமாறு 286

ம
மக்கள் என்பது வேற்றுமையிற் புணருமாறு 308
மகப்பெயர் அத்துச்சாரியை பெறல் 205
மகப்பெயர்இன்சாரியைபெற 204
மகரக்குறுக்கத்தின் மாத்திரை 50
மகரவிறுதி வேற்றுமையிற் புணருமாறு 255
மகரமுன் வகரம் மயங்குதல் 60
மகரவீறு அல்வழிக்கண் புணருமாறு 257
மகரவீறு இன்சாரியை பெறுத்தல் 179
மகரவீறு பெறுஞ்சாரியைகள் 179
மகரவீற்றோடு மயங்காத னகரவீறுகள் 99
மகரவீறுகெட்டு மெல்லெழுத்துறழுமிடம் 256
மகரவீற்றுத் தொழிற்பெயர் புணருமாறு 269
மகரவீறு வகரம் வரும்வழிக் குறுகுதல் 271
மகரவீற்றுநாட்பெயர் புணருமாறு 272
மடற்பனை 3
மகரப்பெயர்க் குற்றியலுகரங்கள் அம்சாரியை பெறுதல் 319
மரப்பெயருள் மென்றொடராகாதன 319
மரூஉ மொழிகளும் பொருளியைபில்லனவும் புணர்ச்சி பெறுமென்றல் 118
மலையின்றன்மை 2
மழையென்கிளவிமுடியுமாறு 242

மா
மாத்திரையினளவு 45
மாணாக்கனுக்குரிய இலக்கணமில்லாதவன் பயன்பெறுனென்பது 6
மாமரக்கிளவி வேற்றுமைக்கண் முடியுமாறு 211

மி
மிக்கபுணர்ச்சியினிருவகை 120
மின் பின் பன் கன் என்பன உகரம் பெறுதல் 279

மீ
மீயென்னுஞ் சொல்லின் முன் வல்லெழுத்து மிகல் 223
மீன் என்னும்பெயர்வல்லெழுத்துமுதன் மொழியொடு புணர்தல் 276

மு
முடத்தெங்கு 3
முதலாகாதன தம் பெயர் கூறுமிடத்து முதலாதல் 90
முதலீரெண்ணின் முன் உயிர் முதன்மொழியாய அளவுப்பெயர் வந்து புணர்தல் 341
முந்து நூலிவையென்பது 9
முந்து, பண்டு, அன்று, இன்று என்பன இயல்பாதல் 327
முரண் என்னுந் தொழிற்பெயர் அல்வழியிற் புணருமாறு 254
முற்றவுணர்தல் 6
முன்னிலை வினைச்சொல் வன்கணம்வருமிடத்துமுடியுமாறு 151
முன் என்னுஞ் சொல்முன் இல் புணர்தல் 285

மூ
மூன்றன் முதனிலை உழக்குவருங்கால் நீளுமென்பது 341
மூன்றனொற்றுப் பகரமாதல் 334
மூன்றும் வேற்றுமைத்திரிபு புணர்ச்சி 156
மூன்றும்ஆறும்முதல்குறுகுத 333
மூன்றும் நான்கும் ஐந்தும் உழக்கு வருங்காலடையுந்திரிபு 341

மெ
மெய்கள் இயல்பாகவே புள்ளி பெறுதல் 51
மெய்களுக்குரிய மாத்திரை 49
மெய்களுள் மகரம் புள்ளிபெற்று வழங்கியதென்பது 51
மெய்யெழுத்துக்கள் 48
மெல்லெழுத்துக்கள் 54
மெல்லெழுத்துக்களின் பிறப்பிடம் 107
மென்றொடர் மொழியுள் அக்குப் பெறுவன 321

மொ
மொழிக்கீறாக வருந் தனி மெய்கள் 97
மொழிக்கு முதலிலும் இறுதியிலும் வருமெழுத்துக்கள் 110
மொழிகள்மூன்றுவகையவென் 75
மொழிபுணரியல்பு நான்கு என்பது 115
மொழியிறுதி மெய்கள் புள்ளிபெறல் 111
மொழியீற்றுக் குற்றுகரம் புள்ளி பெற்று நிற்குமென்பது 112

ய
யகரத்தோடு கூடிய உகரவீற்றுச் சொற்கள் முடியுமாறு 228
யகரம் ஆகாரத்தோடு மாத்திரம் மொழிக்கு முதலாகும் என்பது 90
யகரமும் இகரமும் மொழியிறுதியில் ஒத்துஒலிக்கும்என்பது 87
யகரவீறு அல்வழிக்கட் புணருமாறு 288
யகரவீறு மெல்லெழுத்தோடுறழ்தல் 288
யகரவீறு வேற்றுமைக்கண் புணர்தல் 287
யகரம்பிறக்குமியல்பு 106

யா
யாதெனிறுதியும், சுட்டுமுதலாய்தவிறுதிக் குற்றுகரமும் அன் பெறுமென்பது 322
யாதென்பதுபெறுஞ்சாரியை 188
யாமரக்கிளவி முதலியன வேற்றுமையில் மிகுதல் 210

யாமரக்கிளவியும், பிடாவுந் தடாவும் மெல்லெழுத்து மிகப்பெறுதல் 210
யாவரும் யாதும் மருவி வழங்குமாறு 148
யாவை என்பது வற்றுச்சாரியை பெறல் 176

ர

ரகாரவிறுதி வேற்றுமைக்கண் புணருமாறு 288
ரகார ழகாரம் குறிற்கீழொற்றாய் மயங்காமை 80
ரகார ழகாரம் பிறக்குமியல்பு 105
ரழவல்லன தம்முள் தாம் மயங்குமாறு 61

ல

லகாரவீற்றுத் தொழிற்பெயர் புணருமாறு 297
லகாரவிறுதி அல்வழிக்கட் புணருமாறு 291
லகாரவிறுதி ஆய்தமாகத்திரித292
லகாரவிறுதி மெல்லெழுத்தோடு புணர்தல் 291
லகாரவிறுதி வேற்றுமைக்கண் புணர்தல் 290
லகார ளகாரம் பிறக்குமியல்பு 105
லணமுன் வருந் தகர நகரத் திரிபு 150

வ

வகாரம் உ-ஊ-ஒ-ஓ என்னும் நான்கல்லாத உயிர்களோடு மொழிக்கு முதலாமென்பது 89
வகரமெய் நான்மொழிக்கண் மாத்திரம் ஈறுதல் 99
வகரவீற்றுச்சுட்டுப்பெயர் அற்றுச்சாரியை பெறுமென்பது 298
வகரவீற்றுச் சுட்டுப்பெயர்கள் பெறுஞ் சாரியை 178
வகாரம்பிறக்குமியல்பு 106
வட்டியென்னும் அளவுப் பெயர் வருங்கால் ஐந்தனொற்றடையுந் திரிபு 340
வண்டும் பெண்டும் இன்சாரியை பெறல் 322
வல்லெழுத்துக்கள் 54
வல்லென் கிளவி உகரம் பெறுதல் 294
வல்லெழுத்தை முதலாக உடைய உருபுகள் புணருமாறு 122
வழக்கு இதுவென்பது 9
வளியெனவரூஉம் பூதக்கிளவி முடியுமாறு 219
வற்றுச்சாரியை முதல்கெடுத,129
வன்றொடர் அல்வழியில் வருமென்பது 324

வா

வாழியவென்னும் வியங்கோள் முற்று ஈறுகெட்டுவருதல் 199

வி

விண் அத்துச்சாரியைபெறுத.251
விதியீறாய்வந்த எகர ஒகரம் முடியுமாறு 234
விரவுப்பெயருட் சில இயல்பாய் முடியுமாறு 155
விணவெழுத்துக்கள் 63

வீ

வீசிதரங்கநியாயம் 22

வெ

வெயில் அத்துப் பெறும் என்பது 297
"வெரிந்" என்னும் நகர ஈற்று மொழி வல்லினம் வருங்கால் முடியுமாறு 249

வே

வேட்கை என்னுஞ்சொல் அவாவரின் முடியுமாறு 242
வேற்றுமையுருபுகள் 121
வேற்றுமையுருபுகள் பெயரொடு புணருமாறு 124

ழ

ழகாரவிறுதி வேற்றுமைக்கண் புணருமாறு 300



ள

ளகாரவிறுதி அல்வழிக்கட்புண 306
ளகாரவிறுதி ஆய்தமாதல் 306
ளகாரவிறுதி மெல்லெழுத்தொடு புணர்தல் 306
ளகாரவிறுதி வேற்றுமைக்கட்புணர்தல் 305
ளகாரவீற்றுத் தொழிற்பெயர் புணருமாறு 307

ற

றகார னகாரம்பிறக்குமியல்பு 105

ன

னகரத்தின்முன் மகரம் குறுகுதல் 84
னகரவீற்று இடைச்சொற்களும் வினையெச்சச்சொற்களும் புணருமாறு 273
னகரவீற்று இயற்பெயர்களின் முன் தந்தையென்பது புணருமாறு 281
னகரவீற்றுக் கிளைப் பெயர்கள் புணருமாறு 275
னகாரவீற்றுச் சாரியை திரியுமாறு 130
னகாரமும் மகாரமும் ஈரொற்றாய் மயங்குமிடம் 83
னகாரவீறு வேற்றுமைக்கண் புணருமாறு 272

# பிழை திருத்தம்

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 9 | 12 | **78** | **79** |
| 15 | 1 | விருத்தியுட் | விருத்திப்பாயிர வுரையுட் |
| 16 | 5 | அவைதானுதலிய | அவைதா நானுதலிய |
| 16 | 17 | பொருந்துவன | பொருந்துவது |
| 20 | 34 | ௩௮௭ | ௭௯ |
| 21 | 29 | சொல்லுதல் | செல்லுதல் |
| 23 | 34 | காந்தருவம் | கந்தருவம் |
| 24 | 21 | உணர்த்தல் | உணர்தல் |
| 35 | 15-16 | பிறிதீறுக | பிறிதெழுத்தீறுக |
| 35 | 17 | புணராத தழாத்தொடர்ப் புணர்ச்சி | புணராதபுணர்ச்சி |
| 38 | 12 | என்து | என்பது |
| 46 | 33 | அளந்துகோடலால்அறியப் படுதல் | அளந்து கோடல் |
| 55 | சூ. ௨௨ | மருகின் | மருங்கின் |
| 57 | 27 | ஆண்டு | ஆண்டுக் |
| 58 | 30 | வழங்கப்படாவென்று | வழங்கப்படாதென்று |
| 72 | 15 | குன்றியை | குன்றிசை |
| 77 | 26 | நிலத்திணை | நிலைத்திணை |
| 77 | 17 | எழுதுக் | எழுதிக் |
| 79 | 8 | மெய்யுந் | மெய்யின் |
| 79 | 14 | லீரொற்றுகும் | வீரொற்றுகும் |
| 80 | 26 | ஆராய்ச்சியால் | ஆராய்ச்சியாதலால் |
| 86 | 27 | நன்னூலார் | நன்னூல்விருத்தியுரைகாரார் |
| 86 | அடிக் குறிப்பு | **21** | **22** |
| 104 | 16 (சூ.93) | தாமிது | தாமினிது |
| 116 | 25 | புணர்க்க | புணர்ந்த |
| 119 | 5 | என்ற | என்று |
| 120 | அ-குறி 10 | | 'ஆகரிது' என்றதன் பின் 'ஆபல்' என்றதையும் சேர்த்து வாசிக்கவும். |
| 122 | 29 | ஆண்டுஎன்றார். | ஆண்டு எட்டு என்றார். |
| 122 | 30 | ஈண்டு என்றார் | ஈண்டு ஆறு என்றார் |
| 135 | 25 | பூவினொடுவிரிந்தகூந்தல் | பூவினொடு விரிந்த கூந்தல் பூவொடுவிரிந்தகூந்தல் |
| 171 | 17 | அதுவாயாது | அதுயாவது |
| 175 | 30 | அன் இன்னக | அதன் அதின் என |
| 176 | 9 | ஓறுதி | னிறுதி |

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 176 | 17 | அவ் ஈற்றிடத்து | அவ்வீற்றிடத்து |
| 180 | 19 | ஆ எய் | ஆ - ஏ |
| 180 | 28 | ஆ எ | ஆ ஏ |
| 203 | 6 | தகரம்வரும்வழி ஆய்தம் | "தகரம் வரும் வழி ஆய்தம்" |
| 216 | 21 | மெய்ஞ் | மெஞ் |
| 221 | 27 | தொழிநிலை | தொழினிலை |
| 223 | 28 | கண்ணினதுமீ | கண்மீ |
| 245 | 29 | விளக்காமை | விலக்காமை |
| 275 | 27 | எயிறுகிய சேவல்-பண்புத் தொகை. | பண்புத்தொகையாங்கால் எயிறுகிய சேவலென விரியும். |
| 282 | 12 | துவரம்என்றதனுல் | துவரவென்றதனுல் |
| 294 | 25 | உர்ணக | உணர்க. |
| 295 | 32 | கஅ | கஅ |
| 331 | 28 | நிலையே | நிலை இய |
| 351 | 6 | கொழு | கெழு |
| அ.விளக்கம் | | | |
| 44 | 8 | மனவு - சோகி | மனவு - அக்குமணி |



## அநுபந்தம்

### அளபெடை

அளபெடை—அளபெடுப்பது; என்றது அளபெடுத்தலை யுடையதாய எழுத்தை அளபெடுக்குங்கால் நெட்டெழுத்தே ழும் அளபெடுக்குமென்றும், அவை இவ்வளவுமாத்திரை நீண் டனவென்பதை அவ்வவற்றிற் கினமாகிய குற்றெழுத்துக்கள் காட்டி அவற்றின்பின்னே நிற்குமென்றும் நன்னூலார் கூறுவர்.

தொல்காப்பிய உரையாசிரியர்களாய இளம்பூரணர், நச்சி னூர்க்கினியர் என்னு மிருவரும் நெடிலுங் குறிலுஞ் சேர்ந்து நின்று அளபெடுக்குமென்னும் பொருள்பட,

"நீட்டம் வேண்டின் அவ்வள புடைய
கூட்டி யெழூஉத லென்மனார் புலவர்"

என்னுஞ் சூத்திரத்திற்கு, முறையே "நீண்டமாத்திரையை யுடைய அளபெடையெழுத்துப் பெறவேண்டின், மேற்கூறிய ஓரளபும் இரண்டளபுமுடைய குறிலையும் நெடிலையும் பிளவு படாமற் கூட்டியெழூஉக என்று கூறுவர் ஆசிரியர்" என்றும், "வழக்கிடத்துஞ் செய்யுளிடத்தும் ஓசையும் பொருளும் பெறு தல்காரணமாக இரண்டுமாத்திரைபெற்ற வெழுத்து அம்மாத் திரையின் மிக்கொலித்தலை விரும்புவாராயின், தாங்கருதிய மாத்திரையைத் தருதற்குரிய எழுத்துக்களைக்கூட்டி அம் மாத் திரையை எழுப்புக; என்றுகூறுவா ராசிரியர்" என்றுங் கூறு வர். இவ்விருகூற்றுள் எக்கூற்றுப் பொருத்தமுடைத்தென் பதே யாம் ஈண்டு ஆராய்வது

அளபெடையென்பது குறில் நெடில் என்பதுபோல அள பெடுத்தலையுடையதாய ஓரெழுத்தையே புணர்த்தும். ஆதலின், ஓரெழுத்தே தன்னளபினும் எழுந்தொலிக்கு மென்பது துணி பாம். ஏனெனில், இரண்டெழுத்துக் கூடி ஒலிக்குங்கால் எவ் வளவொலிக்குமென்றும், எவ்வாறொலிக்குமென்றும் தெரிய வாராமையின். அன்றியும், இரண்டுகூடியொலிக்குங்கால் மூன்று

மாத்திரையின் மிக்கொலிக்குமென்பதூஉம் படும் ஆதலானும், அது பொருந்தாதென்பதே துணிபாம். இன்னும், நீட்டம் வேண்டி ஒரெழுத்தை நீட்டுங்கால் அதனையே வேண்டியஅளபு நீட்டலாமாதலின், மற்றோரெழுத்துக்கூட்டி நீட்டவேண்டுமென்னும் யாப்புறவின்மையானும், இன்னிசையளபெடையிற் குற்றெழுத்தொன்றே நெடிலாக நீண்டு பின்னளபெடுத்தல் கண்கூடாதலானும் ஈரெழுத்துக்கூடி நீளுமென்றல் பொருந்தாமை துணிபாம். மேலும், எழுத்துக்களே சேர்ந்தொலிக்குமென்பது கருத்தாயின் நெடிலுங் குறிலுங் கூடி எழுமென விளங்கக்கூறுவார்மன்; அங்ஙனங் கூறாமையானும் ஆசிரியர்க்கது கருத்தன்மை துணியப்படும். ஆதலின் "நீட்டம்வேண்டின்" என்னுஞ் சூத்திரத்துக்கு அவ்விருவருரையும் பொருத்தமுடையவல்லவென்பதே துணிபாம். அற்றேல் அச்சூத்திரத்துக்குப் பொருள் யாதோவெனின், கூறுதும். அவ்வுரை வருமாறு:—

நீட்டம்வேண்டின்—(ஒரெழுத்து முன்னையினும்) மாத்திரை மிக்கொலித்தலை விரும்பின், அவ்வளபுடையகூட்டி - விரும்பியமாத்திரையையுடைய எழுத்துக்களை (அளவின்பொருட்டு) அவ்வெழுத்தோடுகூட்டி, எழூஉதல்—(அவ்வளபாக) அவ்வெழுத்தினிசையை எழுப்புக, என்மனார்புலவர்—என்று சொல்லுவர் புலவர் என்பதே.

நீட்டம்—நீளல். அஃது "உரைப்பொருட் கிளவி நீட்டமும் வரையார்" என ஆசிரியர் பின்னுங் கூறுமாற்றான் அறியப்படும். இங்கே நீட்டம்வேண்டின் என்று கூறியதனையும், எழூஉதலென்பதனையும் உற்றுநோக்குமிடத்து ஒன்றே தன்னிசை நீண்டு ஒலித்தலன்றி இரண்டுகூடி நீண்டிசைத்தலென்பது பொருந்தாமை பெறப்படும். பிறுண்டும், "அளபிறந் துயிர்த்தலும்" எனவும், "ஒற்றிசைநீடலும்" எனவும், "நீட வருதல் செய்யுளு ளுரித்தே" எனவும், "உரைப்பொருட் கிளவி நீட்டமும் வரையார்" எனவும், யகார வுகாரம் நீடிட னுரித்தே" எனவும், "ஆறன் கிளவி முதனீ ளும்மே" எனவும், "முதனிலை நீடினு மான மில்லை" எனவும் ஆசிரியர் கூறிய சூத்திரங்களை நோக்கும்போது ஒரெழுத்தே நீளுமென்பதன்றி, இரண்டெழுத்துக்கூடி நீளுமென்பது ஆசிரியர்கருத்



தன்மை துணியப்படும். படவே, அவ்வளபுடையகூட்டுதல் அளவின்பொருட்டென்பது துணிபாம். துணியவே அவ்வெழுத்துக்கள் வரிவடிவில் அறிகுறியாய் வருமென்பதூஉம் பெற்றாம். அவை குறியாமாறு; வெண்பா இயற்றவிரும்பிய புலவன் ஓதல் வேண்டுமென இருசீரை எடுத்துக்கொண்டு அச்சீரிலுள்ள தளையை நோக்கியவிடத்து, ஓதல் என்பதன் இறுதியசையும், வேண்டுமென்பதன் முதலசையும் நேரசையும் நேரசையுமாயியைந்து நேரொன்றாசிரியத்தளையாக முடிந்தமைகண்டு, அதனை வெண்டளையாக்குமாறு ஓதல் என்னுஞ் சொல்லிலுள்ள ஓகாரத்தின்பின் ஒகாத்தைச் சேர்த்து அவ்வளபாக அவ்வோகாரத்தை யெழுப்பி இறுதியசையை நிரையசையாக்கி வெண்டளை கோடலானும், 'செறா அ அய்வாழிய' என்றவிடத்து ஈரெழுத்துக்கூட்டி அவ்வளபாக எழுப்பித் தளைசெய்துகோடலானும் அறிந்துகொள்க. ஈரெழுத்தும் அளவாகக்கொள்ளப்படும் என்பதற்கே அவ்வளபுடைய எனப் பன்மையாகக்கூறினர்.

இன்னும், இசைகுன்றியமொழியினிடத்து நெட்டெழுத்துக்குப் பின்னே அதனேடொத்த குற்றெழுத்து நின்று அவ்விசையை நிறைக்குமென்னும் பொருளமைய,

"குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத் திம்ப ரொத்தகுற் றெழுத்தே"

என ஆசிரியர்கூறியதனானும், குற்றெழுத்து இசைநிறைப்பதன்றி நெட்டெழுத்தோடுகூடி அளபெடாதென்பது நன்கு போதரும். அளபெடுக்குமேல் நெட்டெழுத்திம்பர் என்னாது நெட்டெழுத்துங் குற்றெழுத்துங்கூடி இசையை நிறைக்குமென விளங்கச் சூத்திரிப்பார்மன்; அங்ஙனஞ் சூத்திரியாமையானும் அவர்க்கது கருத்தன்றென்பது. அற்றேல், குற்றெழுத்து இசைநிறைக்குமென்றமையாற் குறியென்பது போதராதெனின், அது குறியாமாறு பின்னர்க்காட்டுதும்.

இனி, குற்றெழுத்துக்கள் குறியாயின் ஆகாரத்துக்கு அகரமன்றி இகரமுங் குறியாய் இடலாமே? அகர மேனிடுவானெனின்; அறியாது கடாயினாய். என்னை? ஆகாரம் ஒருமாத்திரைநீளுங்கால் அகரவடிவாயே நீடலின், அவ்வடிவையுங் குறித்துக்காட்டுவதற்கே அகரம் வரிவடிவில் எழுதுவதாயிற்று.

நச்சினார்க்கினியர் சந்தனக்கோல் குறுகினாற் பிரப்பங்கோலா காது; அதுபோல உயிரதுகுறுக்கமும் உயிரேயாம். என்று கூறிய மறுதலையுவமையை நோக்கும்போது ஓரொலி வேறோரொலியாகக் குறுகலும் நீடலும் அடையாதென்பது பெறப்படும். அற்றேல், இரண்டுமாத்திரைநீட்சிக்கு இரண்டுமாத்திரைபெறும் எழுத்தைக் குறியாக இடாது இரண்டுகுற்றெழுத்தையிடுவது என்னையோவெனின்? ஒருமாத்திரையுடைய எழுத்து நீளுங்காற் பின்னும் ஒருமாத்திரை மிக்கு இரண்டு மாத்திரையாய் நீண்டு நெடிலாயவாறுபோல நெடிலும் நீளுங்கால் ஒவ்வோர்மாத்திரைமிக்கே நீளுமாதலின் இரண்டுபுறில் குறியாக இட்டு ஆளப்படுமென்க. இக்கருத்து, "அளபெடை மிகூஉ மிகர விறுபெய—ரியற்கைய வாகுஞ் செயற்கைய வென்ப" என்னுஞ் (சொல் - கஉ௫-ம்) சூத்திரத்துக்குச் சேனாவரையருரைத்த உரையானும் நன்குபுலப்படும். இன்னும், நச்சினார்க்கினியரும் ஒன்றுநின்று அதனோடு பின்னரும் ஒன்று கூடியே இரண்டாவதன்றி இரண்டென்பது ஒன்று இன்றாகலின் என்றதனானும் அஃது உணரத்தக்கது. ஆகாரம் என்னும் நெட்டெழுத்து நீளுங்கால் ஒருமாத்திரை நீண்டு அகரமாய் நின்று ஒலிக்குமென்பதுபற்றியே,

"குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே"

என்று ஆசிரியர் கூறுவாராயினர். இச்சூத்திரத்தில் ஆசிரியர் குற்றெழுத்து இசைநிறைக்குமென்றதினால் அக்குற்றெழுத்து எழுத்தாகக் கொள்ளப்படாதென்பதூஉம், ஒலிவடிவில் அவ்வளபெடையோசை அவ்வவ் வினவெழுத்தாய் நீண்டொலிக்குமென்பதூஉம் கூறினாராயிற்று. ஆகவே, குற்றெழுத்து ஒலிவடிவில் நெட்டெழுத்தின்பின் நின்று இசைநிறைக்குமென்பதூஉம், வரிவடிவில் நெட்டெழுத்து அவ்வவ்வினமாய் நீண்டொலிக்குமென்பதற்கும், மாத்திரைக்கும் குறியாய்நிற்குமென்பதூஉம் தானேபோதருதலின் இசைநிறைக்கும் என்றதூஉம், குறி என்றதூஉம் தம்முள் முரணாமை உணர்ந்துகொள்க.

இக்கருத்தமையவே சிவஞானமுனிவரும் தாம் திருத்திய நன்னூல் விருத்தியுரையுள் "இசைகெடின்" என்னுஞ் சூத்தி



ரத்து வரும் 'குறியே' என்பதற்கு வரிவடிவில் அறிகுறியாம் என்றும், "குற்றுயிர் அளபினீறாம்" என்பதற்கு ஒலிவடிவினீறாமென்றும் உற்றுநோக்கிப் பொருந்தக்கூறியதூஉம் என்க.

அற்றேல், நெட்டெழுத்துக்கள் நீளுங்கால் நீண்ட அவற்றையும் ஓரெழுத்தாகக் கொள்ளலாமேயெனின், அவை மொழிக்குக் காரணமாய் வேறு எழுத்தோடு சேர்ந்தாயினும் தனித்தாயினும் பொருடாராமையின் அவை எழுத்தாகக்கொள்ளப்படா என்க. இக்கருத்தமையவே சிவஞானமுனிவரும், "இந்நெட்டெழுத்துக்கள் மொழிக்காரணமாய் வேறு பொருடந்து நிற்றலின், அதுபற்றி வேறெடுத்தெண்ணி உயிர் பன்னீரெழுத் தெனப்பட்டன. அளபெடை அந்நெட்டெழுத்தோடு குற்றெழுத் தொத்துநின்று நீண்டிசைப்பதொன்றாயினும், மொழிக் காரணமாய் வேறு பொருடாராது இசைநிறைத்தன்மாத்திரைப் பயத்ததாய் நிற்றலின் வேறெழுத்தெனவைத் தெண்ணப்படா தாயிற்றென்பது, நுண்ணுணர்வானோர்ந்துணர்க. 'குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்—நெட்டெழுத் திம்ப ரொத்தகுற் றெழுத்தே' என்றதூஉம் இக்கருத்துப்பற்றி யென்க." எனச் சூத்திரவிருத்தியிற் கூறுதல் காண்க.

இன்னும், நெடிலையுங் குறிலையுஞ் சேர்த்துச் சொல்லுங்கால் இரண்டுஞ்சேர்ந்து பிளவுபட் டொலிக்குமேயன்றிப் பிளவுபடா தொலிக்கமாட்டா. இதுபற்றியே சங்கரநமச்சிவாயரும் "இசைகெடின்" என்னும் நன்னூற் சூத்திரவுரையில் "எழுத்துப் பலவாயின ஒலிவேற்றுமையானன்றே அங்ஙனமாக நெடிலது விகாரமாய் ஓரொலியாகப்பிறக்கும் அளபெடையை இரண்டெழுத்துக்கூடி மூன்று மாத்திரையாயிற்றெனக் கொள்ளின் இரண்டெழுத்தொலி யங்ஙனமின்மையானும், அளபெடையென்னும் பெயர் ஏலாமையானும் அவ்வாறு கொள்ளாது அறிகுறியே என்று கோடற்குக் குறியே என்றார்" என்றுங் கூறினார்.

இனி, நெட்டெழுத்தே யளபெடுக்குமென்பது நச்சினார்க்கினியர்க்குங் கருத்தாதல், "நீட்டம் வேண்டின்" என்பதற்கு, "இரண்டுமாத்திரை பெற்ற வெழுத்து அம்மாத்திரையின் மிக்கு ஒலித்தலை விரும்புவாராயின்" என்றும், "ஆந்நெட்டெழுத்துக்

களை யளபெடுத்தலிற் சொல்லாதலெய்தின" என்றும் கூறுமாற்றானும் அவர்க் கது கருத்தாதல் பெறப்படும். அங்ஙனேல், நெடிலுங் குறிலும் கூடியகூட்டத்துப் பிறந்து பின்னர்ப் பிளவுபடா ஓசையை அளபெடையென்று ஆசிரியர் வேண்டினாரெனக் கூறியது என்னையோவெனின், குறில் நெடிலுக்குப் பின்னே நின்று ஒலிவடிவையும், அளவையும் காட்டிக் கூடிநின்றாலன்றி அவ்வளபெடை தோன்றாமையின் அவ்வொற்றுமைபற்றி அவ்வாறு கூறினார்போலும். அவர் "இவைகூட்டிச் சொல்லிய காலத்தல்லது பெறப்படா. எள்ளாட்டியவழியல்லது எண்ணெய் புலப்படாவாறுபோல" *எனக் கூறியதூஉம் இக்கருத்து நோக்கிப்போலும்.

இனி, "அவ்வளபுடையகூட்டி" யென்பதற்கு அவ்வளபுடைய ஓசைகளை அதிகப்படுத்தி எனப் பொருள் கூறலும் பொருந்தும். ஓசைகள் என்றது எழுத்தொலிகளை நான்குமாத்திரையுங் கோடற்குப் பன்மையாகக் கூறினார்.

இங்ஙனம் இச்சூத்திரத்திற்குப் பொருள்கூறாது நெடிலுங் குறிலுமாகிய இரண்டெழுத்துங்கூடியொலிக்குமெனப் பொருள் கூறின் ஆசிரியர் கருத்தொடு முரணுவதன்றி ஆசிரியரையும் பிழைபடுத்துவதாக முடியும். இரண்டெழுத்துக் கூடியொலிக்குமென்றல் தமதுகருத்துக்கு முரணுவதாற்றான் சிவஞானமுனிவரும் "எழுத்துப்பலவாயின ஒலிவேற்றுமையானன்றே. அங்ஙனமாதலின், நெடிலதுவிகாரமாய் ஓரொலியாய்ப்பிறப்பதே யளபெடையென்பார் நெடி லளபெழுமென்றும், 'அவற்றவற் றினக்குறில் குறியே' என்றுங் கூறினார்" என நன்னூலார் கருத்தை முற்கூறிப், பின், "ஆசிரியர் தொல்காப்பியனாரும் நீரு நீருஞ் சேர்ந்தாற்போல நெட்டெழுத்தோடு குற்றெழுத்து ஒத்து நின்று நீண்டிசைத்தலே யளபெடையென்பார், 'குன்றிசை.......குற்றெழுத்தே' யென்றும், நெடிலுங் குறிலும் என்றும், நெடிலுங் குறிலும் விரலும் விரலும் சேரநின்றாற்போல இணைந்துநின்று அளபெடுக்குமென்றல் பொருந்தாமைக்கு எழுத்தெடையென்னாது அளபெடை யென்னுங் குறியீடே சான்றாதலறிக" என்றும் கூறினார். இக்கருத்தை நாம் உற்று நோக்கும்பொழுது முனிவர் உரையாசிரியர்களுடைய உரைக்கியைய அவ்வாறுகூறினாரன்றித், தமது கருத்தொடுபடக் கூறினா



ரல்லர் என்பது நன்கு தெளிவாம். இன்னுஞ் சூத்திரவிருத்தியின்கண் வடநூலார் 'அ' என்னும் ஓரெழுத்தே ஒருமாத்திரையாய் உச்சரிக்குங்கால், குற்றெழுத்தென்றும், இரண்டுமாத்திரையாய்க் கூட்டியுச்சரிக்குங்கால் நெட்டெழுத்தென்றும், மூன்று மாத்திரையாய் உச்சரிக்குங்கால் அளபெடையெழுத்தென்றும், மூவகைப்படுமெனக் கூறியதனாலும் இரண்டெழுத்துக் கூடி அளபெடுக்குமென்றல் தங்கருத்தொடுபட்ட உரையன்றென்பது நன்கு தெளியப்படும்.

அங்ஙனேல், "மூவள பிசைத்த லோரெழுத் தின்றே" என்றதனோடு மாறுபடுமேயெனில், மாறுபடாது. என்னை? அச்சூத்திரத்திற்கு நெடிலுங் குறிலும்போல இயல்பாய வோரெழுத்து மூவளபிசைத்தலின்று என்பது பொருளாமன்றி, ஈரெழுத்துக்கூடி யொலித்தல் பொருளன்றாமாதலின். எனவே, விகாரமாய ஓரெழுத்து மூவளபிசைத்தலுண்டென்பது. விகாரம் என்றது ஈண்டு நீட்டலை. இந்நீட்டலை அனுவதித்தே பின் "நீட்டம்வேண்டி"னென ஆசிரியர் கூறினார். இதனானும் ஓரெழுத்தே நீடும் என்பது தெற்றெனப்படும். எழுத்துப் பேறளபெடைகளைப் புலுதசங்கு என்று வடநூலார் கூறுவர்.

இனி, பாணினியார் கூறிய "......................................" என்னுஞ் சூத்திரவுரையில், குறிலும் நெடிலும் அளபெடையும் முறையே ஒருமாத்திரையும் இரண்டுமாத்திரையும் மூன்று மாத்திரையும் உடையன வென்றும், இவற்றிற்கு மாத்திரை வரையறுக்குங்கால் உ, ஊ, ஊஉ என்னு மெழுத்துக்களின் மாத்திரையே அளவாகக்கொள்ளப்படுமென்றும், இவற்றை யளவுகருவியாகக்கொண்டது. (முறையே) ஒன்று இரண்டு மூன்று என்னும் மாத்திரைகளையுடைய கு, கூ, கூஉ என்னும் கோழியினுடைய அனுகரணவோசைபோலிருத்தல்பற்றி யென்றும் கூறுமாற்றானும் ஓரெழுத்தே நீண்டொலிக்குமென்பது வடநூலார்க்குங் கருத்தாதல் காண்க.

இனிச் சேனாவரையர்க்கும் நெட்டெழுத்தொன்றே நீளுமென்பது கருத்தாதல், சொல்லதிகாரத்து ௧௩௨-ம் சூத்திரவுரையில், "அளபிறந்தன வென்றது நெட்டெழுத்து அளபெ

டையாயும், அளபெடை மூன்று மாத்திரையினிறந்தும் செய்யுளிசைக்குத்தக்கவாறு நீண்டிசைக்குமென்றவாறு" என்பதனை லறிந்துகொள்க.

இதுகாறுங் கூறியவாற்றானே அளபெடுக்குங்கால் நெடிலுங் குறிலுங் கூடிநின்று அளபெடுக்குமென்றல் பொருந்தாதென்பதூஉம் நெட்டெழுத்தேழே அளபெடுக்குமென்பதூஉம், குற்றெழுத்துக்கள் குறியாய்வரும் என்பதூஉம் துணிபாதல் காண்க.

["செந்தமிழ்" தொகுதி—௨௬, பகுதி—௭]

# போலி எழுத்து

பன்னருஞ் சிறப்பிற் பவணந்தியார் செய்த நன்னூற் குரையுரைத்த உரையாளருட் சிலர்,

"அம்முனிகரம்யகரமென்றிவை
எய்தினையொத்திசைக்குமவ்வோ
டுவ்வும்வவ்வுமௌவோரன்ன"

என்னுஞ் சூத்திரத்தாற் பவணந்தியார் போலி எழுத்துணர்த்தினாரல்லர். எனவும், சந்தியக்கரமே புணர்த்தினாரெனவும் உரைத்தனர். அவருரை பொருந்துமா? என்பதே ஈண்டு யாம் ஆராய்வது.

அவருரைத்தவாறு பவணந்தியார் சந்தியக்கரமே புணர்த்தினாராயின், 'அம்முன் யகர மிகர'மென்றும், 'அவ்வொடு வவ்வும் உவ்வும்' என்றும், 'ஒத்துஎய்தின்' என்றும், 'ஐயிசைக்கும்' என்றுந் தாங்குறித்த பொருள் இனிது விளங்கச் சூத்திரித்திருப்பார்மன்; அவ்வாறு சூத்திரியாமையின் அவர்க்கது கருத்தன்றென்பது பெறப்படும்.

அங்ஙனமன்று; 'இவை' என்னுந் தொகைச்சொல்லானே இரண்டுங் கூடிவருமென்பது பெறப்படுதலின், ஏற்றவாறு மாற்றிப் பொருள்கோடலாமாகலானும் 'ஒத்து' என்பதை 'எய்தின்' என்பதனோடு கூட்டிப் பொருளுரைக்கலாமாகலானும், சந்தியக்கரமென்பதே யாசிரியர் கருத்தெனின், என்முன் சாத்தன் கொற்றனிருவரும் வந்தாரென்றால், இருவரும் வந்தாரென்பதல்லது கூடியேவந்தாரென்பது பெறப்படாமைபோல், இவை என்னுந் தொகைச்சொல்லானும் இரண்டும் வருமென்பது பெறப்படுமன்றிக் கூடியேவருமென்பது பெறப்படாமையின் மாற்றிப் பொருள்கோடலாமென்பது பொருந்தாமையானும், எய்தின் என்பதனோடு ஒத்து என்பதைக் கூட்டிப் பொருள்கோடல் வலிந்து கோடலாமாகலானும், அஃதவர் கருத்தாகாது. ஆகுமெனின், ஆசிரியர் சூத்திரம் யாத்தற்கறியாரென்பதுபடும்; ஆதலின் ஆகாதென்பதே துணிபாம். ஆகையால், ஆரியமொழியிற் கூறிய சந்தியக்கரத்தைத் தமிழ்மொழிக்கண்ணும் புகுத்தவேண்டி நன்னூலார் போலியுணர்த்திய சூத்திரத்தைச் சந்தியக்கர முணர்த்தியதெனக் கொண்டு வலிந்து பொருள்கோடல் உண்மைப்பொருளும் பொருத்தமுமன்றாம்.

பின் இதன் உண்மைப்பொருள் யாதெனிற் கூறுதும்:—

அகரத்தின் முன் இகரமும் யகரமுமென்று சொல்லப்பட்ட இவைகள் தனித்தனி வந்தால் (அஃதாவது அ இ; எனவும், அ ய்; எனவும் வந்தால்) ஐ போன்று ஒலிக்கும் என்பதும், அகரத்தின் முன் உகரமும் வகரமும் வந்தால் (அஃதாவது அ உ; எனவும், அ வ் எனவும் வந்தால்) ஔகாரம் போன்று ஒலிக்கும் என்பதுமே ஆசிரியர் கூறிய சூத்திர முறைக்கேற்ற உண்மைப்பொருளாம். எனவே போலி எழுத்தே கூறினாராயிற்று; இதுவே நன்னூற் பழையவுரையாசிரியர் மயிலைநாதர்க்குங் கருத்தாதல் அவருரைநோக்கி யுணர்க.

அன்றியும், சந்தியக்கரமே கூறினாராயின் எகர ஒகரங்களையு முடன் கூறியிருப்பார். அங்ஙனங் கூறாமையானும் போலி புணர்த்தினாரென்பதே துணிபாம்.

அங்ஙனேல், இங்ஙனங் கூறிய போலியெழுத்தால் வரும் பயன் யாதோவெனின், செய்யுளில் வரும் எதுகைக்கண் இவ்வாறு கொள்ள நிற்றலே.

அதனை, "ஐய னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்" என்பதன்கண்ணும், "கையகத் ததுவது பொய்யா காதே" என்பதன்கண்ணும், 'கையது வேலே காலன புனைகழன் — மெய்யது விபரே மிடற்றது பசும்புண்" என்பதன்கண்ணும், "ஔவிய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான் — கேடு நினைக்கப் படும்" என்பதன்கண்ணும் வரு மெதுகைத் தொடைகளில், 'மெய்பெற' என்பதற்கியைய, 'ஐயென்' என்பதை 'அய்யென்' எனவும், 'பொய்' என்பதற்கியையக் 'கை' என்பதைக் 'கய்' எனவும், 'மெய்' என்பதற்கியையக் 'கை' யென்பதைக் 'கப்' எனவும், 'செவ்வியான்' என்பதற்கியைய, ஔவியம்' என்பதை 'அவ்வியம்' எனவும் கொள்ளநிற்றல் காண்க.

இவ்வாறு எதுகைக்கட் போலியாகக்கொள்ள நிற்றல்பற்றியே, "ஆயிரு தொடைக்குங் கிளையெழுத் துரிய" என்னுஞ் சூத்திர வுரையின்கண் நச்சினார்க்கினியரும் "ஐகார ஔகாரங்கள் போலிவகையாற் கிளையெழுத்தெனப்படு" மென்றார்.

இனி, ஆசிரியர் தொல்காப்பியரும் "அகர விகர மைகார மாகு" மென்றும், "அகர வுகர மௌகார மாகும்" என்றும்,



இகர உகரங்களை முன்னர்க் கூறிப், பின்னர் "அகரத் திம்பர் யகரப் புள்ளியு — மைய னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்" என யகரத்தை வேறுவைத்துக் கூறியதும் போலியெழுத்தாமாற்றை நன்கு புலப்படுத்தற்கேயாம். அன்றி, நன்னூலுரையாளர் சிலர் கூறியவாறு அகரவிகரங்களுக்கிடை யகரங் கலந்து ஐகாரமாகும் என்பதே தொல்காப்பியர் கருத்தாயின் 'அகர விகரநடுவண் யகரம் கலந்து ஐகாரந் தோன்றும்' என்பதமையச் சூத்திரித்திருப்பார்; அங்ஙனஞ் சூத்திரியாமையின் அவர்க்கது கருத்தன்றாதல் தெள்ளிதிற் பெறப்படும். அன்றியும், யகரப்புள்ளியும் என இறந்தது தழீஇய எச்சவும்மை கொடுத்துக் கூறினமையானு மது தெளிவாம்.

இன்னும், 'ஐய னெடுஞ்சினை' என்றதனானும் சந்தியக்கரமென்பார் கருத்து முழுதும் தூரம்போய்த் துச்சமாமாறுணரலாம். எங்ஙனமெனின், அஃது அதன் பொருளை ஆராயவே பெறப்படும்.

'ஐய னெடுஞ்சினை' என்பதற்கு உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் கூறிய பொருள் ஐ யென்னு நெட்டெழுத்தென்பது. சினை என்பது எழுத்துக்குப் பரியாயப் பெயராகாது. ஆதலால், சினையென்பது உறுப்பென்னும் பொருளை யுணர்த்தி, ஆகுபெயராய் எழுத்தை யுணர்த்தும். எனவே சினை என்பதற்கு உறுப்பெழுத்தென்பது பொருளாம். அது:—

தொல்காப்பியர்,

"குற்றிய லுகர நிற்றல் வேண்டும்
யாவென் சினைமிசை யுரையசைக் கிளவிக்
காவயின் வரூஉ மகர மூர்ந்தே" (௩௪) என்றும்,

"சுட்டுச்சினை நீடிய வையெ னிறுதியும்" (௧௫௧) என்றும்,

"குறியத னிறுதிச் சினைகெட வுகர
மறிய வருதல் செய்யுளு ளுரித்தே' (௨௩௪) என்றும்,

"நூறென் கிளவி யொன்றுமுத லொன்பாற்
கீறுசினை யொழிய வினவொற்று மிகுமே" (௪௭௨) என்றும்,

கூறிய சூத்திரங்களில் வரும் 'சினை' என்னுஞ் சொற்களின் பொருளை ஆராயவே நன்கு விளங்கும். சுட்டுச்சினை என்பதற்குச் சுட்டாகிய சினையெழுத்தென்று நச்சினார்க்கினியர்

பொருளுரைத்தமையானு மஃதுணரலாம். அங்கே சினையெழுத்
தென்றுரைத்தவர், இங்கே எழுத்தெனப் பொருளுரைத்த
தென்னையெனின், சந்தியக்கர முணர்த்திய திதுவெனப் பிறர்
கூறுவார் என்ப துணர்த்தியதெனப் பிறருரைப்பாரென்ப
துணர்ந்திராமையின் அவ்வாறு சுருக்கிக் கூறினார். உணர்ந்
திருப்பாராயின் சினையெழுத்தென்றே விரித்துரைத்திருப்பார்.
உரையாசிரியரு மவ்வாறே கூறியிருப்பார். சினை எழுத்தென்
பதே அவர்கள் கருத்தாதல் அவர்கள் காட்டிய உதாரணங்களா
னுணரலாம். ஆகையால் 'ஐயெ னெடுஞ்சினை' என்பதற்கு,
ஐயென்னும் நெடிய உறுப்பெழுத்தென்பதே பொருளாகி, ஐயன்
கையன் என்பனபோன்ற சொற்களின் முதற்கண், அவற்றிற்
குறுப்பாகநிற்கும் ஐ யென்னும் நெட்டெழுத்தென்பது
போதருமன்றித் தனி ஐ என்பது போதராது. போதராமை
யின் அகரமும் யகரமுஞ் சேர்ந்து சந்தியக்கரமாமா றுணர்த்
தினாரல்லர் என்பது நன்கு உணரக்கிடத்தல் காண்க

அற்றேல், ஐ என்பது பலவெழுத்துக் கூடியதாதலின்,
சினை என்பதற்கு ஐயின் சினை என்றாலென்னையெனின், அவ்வா
றுரைத்தற்கு 'ஐயெனெடிலின்சினை'' என்றிருத்தல்வேண்டும்.
அவ்வாறின்மையின் அதன் சினையென உரைக்கலாகாதென்பது.

அற்றேல், மொழிக் குறுப்பாதல்பற்றிச் சினையென எழுத்
தைக் கூறினாரென்றாலென்னையெனின், "ஐஔ வென்னு
மாயீ ரெழுத்திற்" கெனவும், "நெட்டெழுத் திம்ப ரொத்த
குற் றெழுத்தே" எனவும், "வல்லெழுத் தென்ப கசட தபற"
எனவும், இவ்வாறே யாண்டும் எழுத்தென்றே ஆசிரிய ராளுவ
ராதலின் அதுவும் பொருந்தாதென்பது.

இன்னும், ஆசிரியர் தொல்காப்பியர் "இகர யகர மிறுதி
விரவும்" என இறுதிப்போலி கூறியதனானே, இது முதற்
கண் வரும் போலியெழுத்தென்பது கொள்ளவைத்தமையா
னும், இது சந்தியக்கரமுணர்த்திய தன்மை தெளியலாம்.
"இகரயகர மிறுதிவிரவு" மென்ற சூத்திரம் இறுதிப்போலி என்
றல் பொருந்தாது. அது: 'அகரத்திம்பர் யகரப்புள்ளியு'மென்
புழி இம்பர் என்பது பின் எனப் பொருள்படுமேனும், காலம்
பற்றிவந்தபின்னோ இடம்பற்றிவந்தபின்னோ என்பது தெளியப்
படாமையின் அதனை விளக்கியவந்ததென்றாலென்னையெனின்,—



"நெட்டெழுத்திம்பருந் தொடர்மொழியீற்றும்" (௩௬) என்றும்,
"நெட்டெழுத்திம்ப ரொத்தகுற்றெழுத்தே" (௪௧) என்றும்,
"நெட்டெழுத்திம்பர்" (௧௧௬) என்றும்,
"குற்றெழுத்திம்பரும்" (௨௬௭) என்றும்

ஆசிரியர் கூறியவிடங்களிலெல்லாம் அவ்வாறு விளக்கல்வேண்டு
மென்பதுபட்டு ஆசிரியர்மேற் குற்றம்பற்றுமாதலானும், ஆசிரி
யர் இம்பர் என்று கூறிய இடங்களிலெல்லாம் அச்சொல் காலம்
பற்றிய பின்னாகவே பொருள்படுதலானும் அது பொருந்தா
தென்பது.

இனி, 'அகரத்திம்பர்............தோன்றும்' என்னுஞ்
சூத்திரத்து வரும் 'மெய்பெறத் தோன்று' மென்பதனால் அகர
யகரம்போல, அகரஇகரம் ஐயின்வடிவு நன்கு புலப்பட வாரா
தென்பது பெறப்படுதலினாலும், செப்புட்கட் பயின்றுவாரா
மையானும், நச்சினார்க்கினியர் 'அகரவிகர மைகாரமாகும்' 'அகர
வுகர மௌகாரமாகும்' என்னும் இரண்டு சூத்திரவுரையின்கண்
ணும் அது கொள்ளற்க என விலக்கி, செப்புட்கட்பயின்று
வருதலானே, 'அகரத்திம்பர்.......தோன்றும்', என்பதனுரை
யின்கண் 'அது கொள்ளற்க' என விலக்காது பின் இறுதிப்
போலிகூறும் 'இகரயகர மிறுதிவிரவும்' என்னுஞ் சூத்திரவுரை
யின்கண் செய்யுள்வழக்கன்மையின், அதுகொள்ளற்க என விலக்
கினாரெனினும், ஆசிரியர் கூறியதனால் அவை அக்காலத்துப்
போலியெழுத்தாகப் பயின்றுவந்தனவென்பதே துணிபாம்.
இனி, அகர இகரம் அகர உகர இகரம் என்னும் மூன்றும்,
முறையே ஐ ஔ ய் என்னும் மூன்றற்கும் போலியாக, இக்
காலத்துப் பயின்றுவாராமையின் அவற்றை நச்சினார்க்கினியர்
விலக்கினாரெனினு மமையும்; பிரயோகவிவேகநூலார்க்குமிதுவே
கருத்தாதல், "அ இ, அ உ என்பனவும், இக்காலத்துப் பயன்
படாமலே நின்றனவெனினுமமையும்" எனவுரைத்தமையானறிக.

இனி உரையாசிரியர், 'அகர விகர மைகாரமாகும்' என்ப
தனுரையின்கண்மாத்திரம் விலக்கி ஏனையவற்றினுரையிற் கூறாது
ஒன்றற்குக் கூறியதே ஏனையவற்றிற்கும் அமையுமென விடுத்
தாராதலின், அவ்வாறே நச்சினார்க்கினியரும் விடுத்தாரெனல்
அமையுமெனின், அங்ஙனமன்று; 'உரையாசிரியர் அதுகொள்
ளற்க என விலக்காமை அவருரையிற் காண்க எனப் பிரயோக

விவேகநூலார் கூறினமையானே உரையாசிரியர் அது கொள்ளற்க எனக் கூறினாரல்லர் என்பது பெறப்படுதலினாலும், நச்சினார்க்கினியர் முன்னும் பின்னும் விலக்கினமையானும், அவர் அகர யகரத்தையும் அகரவகரத்தையும் செய்யுட்கண் வழங்கல் பற்றி விலக்காதொழிந்தனர் என்பதே துணிபாம். அங்ஙனேல் உரையாசிரியருரையில் ஓரிடத்திற் காணப்படுத லென்னை யெனின், அது எழுதுவோரால் நேர்ந்த வழூஉப்போலும்; அன்றி, 'அகர உகர மௌகார மாகும்' என்னுஞ் சூத்திரஉரைக்கண் விடப்பட்டதெனினுமமையும்.

மேலும், முதியோர் சிலர், ஐயன் என்பதற்கு அய்யன் என்றும், ஔவை என்பதற்கு அவ்வை என்றும் எழுதலை யாம் இக்காலத்தும் கண்கூடாகக் கண்டிருக்கின்றேம். ஆதலின் அக்காலத்தும் அவ்வாறு எழுதி வழங்கினமைகண்டு ஆசிரியர் தொல்காப்பியர் சூத்திரஞ் செய்தாரென்பதே துணிபாம். அவர்வழி யாத்தமையின் நன்னூலாரும் அவ்வாறே செய்தார். இந்நூலார் வடமொழி மதத்தை மேற்கொண்டவராதலின், இச்சூத்திரத்தையு மவ்வாறே கொண்டு கூறினாரென்றா லென்னை யெனின், அவ்வாறு கொண்டிலரென்பது யாங்கூறிய சூத்திரப்பொருளானும் இது சந்தியக்கரமுணர்த்தியதெனப் பிறர்கூறிய கூற்றை யாம் மறுத்துரைத்தமையானு மினிதுணரலாமாதலின் அது பொருந்தாதென்பது.

இனி, வடமொழியில் வரும் ஏ, ஓ, ஐ, ஔ என்னும் எழுத்துக்களையும் சந்தியக்கரமென்று கூறுவதினும், அவைபோல அகரவிகர முதலிய எழுத்துக்கள் சேர்ந்து ஒலிக்குமென்பதே பொருத்தம்போலும். எங்ஙனமெனின்:— சந்தியிலே (புணர்ச்சியிலே) பதத்தினிறுதியில்வரும் அகரத்திற்கும், பதமுதலில்வரு மிகரத்திற்கும் அவ்விரண்டன் பிறப்பிடத்தையும் தனக்குப் பிறப்பிடமாகக்கொண்ட ஏ என்னு மெழுத்து ஆதேசமாக வருதலின், அவ்விரண்டனொலியும் அமைந்தமை பெறப்படுமாதலின், ஏனையவுமிவ்வாறே யமைந்தமை வடமொழிச் சந்தியிலக்கணம்நோக்கியுணர்க. அன்றி, இரண்டெழுத்துக் கூடியவெனில், அவற்றைத் தனி எழுத்தாகவைத்து மகேசுரர் சூத்திரஞ் செய்யார். அவ்வாறே தமிழிலக்கணநூலாசிரியர்களாகிய தொல்காப்பியர் முதலியோரும் ஐ ஔ என்பவைகள் சந்தி எழுத்தாயின் அவற்றைத் தனியெழுத்தாகவைத்துச் சூத்திரஞ் செய்யார். ஆதலின், ஐ ஔ என்பவைபோல, அ இ, அய்; அஉ, அவ் என்பவை ஒலிக்குமென்பதே அவ்வாசிரியர்கள் கருத்தென்பது துணிவாதல் காண்க.

["செந்தமிழ்" தொகுதி—உஉ, பகுதி—௬]